# தமிழ் இலக்கிய வரலாறு

ஆசிரியர்:

புது. ச. சோமசுந்தரம், எம்.ஏ., டிப். மானிடவியல்

தமிழ்த்துறைத் தலைவர்,

து. கோ. வைணவக் கல்லூரி, சென்னை-29.

வே. தா. கோபாலகிருஷ்ணன், எம். ஏ.

(பூவண்ணன்)

தமிழ் விரிவுரையாளர்,

து. கோ. வைணவக் கல்லூரி, சென்னை-29.

வாணி பதிப்பகம்

6, முதல் மெயின் தெரு,

போஸ்டல் காலனி :: சென்னை-33

மதுரைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர், பல்கலைச் செல்வர்
பேராசிரியர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் அவர்களின்

# முன்னுரை

தமிழ் இலக்கிய வரலாறே இல்லை என்ற காலம் இருந்தது. ஆனால் இப்பொழுதோ பல வரலாறுகள் வெளிவருகின்றன. இது இப்பொழுது பி. ஏ. மாணவர்களுக்கும் எம். ஏ. மாணவர்களுக்கும் உள்ள பாடத்தில் ஒரு பகுதியாதலின் பல நூல்கள் வெளிவருவதும் இயல்பே. தமிழ் இலக்கிய வரலாற்றினைக் கற்பிக்கும் பேறு எனக்குக் கிடைத்தது உண்டு. என் மாணவர்கள் பலர் இப்போது தமிழ் வரலாறு எழுதி வருகின்றனர். இதோ திரு. சோமசுந்தரனாரும் பூவண்ணனாருடன் சேர்ந்து இந்த நூலை எழுதி வெளியிட்டுள்ளார். இவர்களுக்குத் தங்கள் உள்ளத்தையெல்லாம் திறந்து காட்ட முடியவில்லை. மரபினைப் பாராட்டுவது இன்றியமையாததுதான். ஆனால் உண்மையைக் காணத் துடிதுடிக்கும் உலகத்தில் சான்று காட்ட முடியாதவை இவை எனவும் நாம் காட்ட முன் வருதல் வேண்டும். வரலாற்றுப் பகுதிகளிடையே விளங்கும் ஒற்றுமையையும் அந்த ஒற்றுமையிடையே காலத்துக்குக் காலம் தமிழின் இலக்கியக் கோலம் மாறி வருதலையும் மாணவர்கள் காண முற்படவேண்டும். இங்கே தரப்பெற்றவை அந்த முயற்சிக்கு உதவலாம். ஆகையால் இந்த நூலைத் தந்த ஆசிரியர்களைப் பாராட்டாமல் இருக்க முடியாது. அடுத்த பதிப்பில் மேலும் மிகச்சிறந்த எடுத்துக்காட்டாக அமையும் வகையில் இந்த நூல் வெளிவரும் என எதிர்பார்க்கிறேன்.

மதுரை
12-6-66.

தெ. பொ. மீ.

பேராசிரியர் C. ஜெகந்நாதாசாரியார்
M.A.(Hist); M.A.(Tamil); L.T., P.O.L; Dip-in-Geog., Vidwan
(தமிழ்த்துறைத்தலைவர், விவேகானந்தர் கல்லூரி, சென்னை)

அவர்களின்

# அணிந்துரை

இனிமையும் நீர்மையும் தமிழெனலாகும். ஆதலின் எந்நூல் தமிழில் எழினும் இப்பண்புகள் அதனிடை மிளிர்தல் வேண்டும். தமிழிலக்கியமோ தொன்று தொட்டுத் திகழ்ந்து வருவதொன்று. அதன் வரலாற்றுப் போக்கினையறிய உறுதுணை நூல்கள் எழுதல் இன்றியமையாதது. அத்தகைய நூல்களுள் இதுவும் ஒன்றாகும். இந்நூலின் விழுமிய சிறப்பு யாதெனில், கல்லூரி மாணவர்களிடையே தமிழ்த் தொண்டாற்றிவரும் புலவரிருவோரால் யாக்கப்பட்டுள்ளமையே. இருவரும் பண்பட்ட உள்ளத்தினர்; தமிழ்த் தாயினை அநவரதமும் போற்றுங் கடப்பாட்டினர். இத்தகையோர் 'தமிழ் இலக்கிய வரலாறு' எழுதப் புகின் அந்நற்செயல் வரவேற்கத் தக்கதே. நமது கல்லூரிகளிற் பயிலும் பி. ஏ. பி.எஸ்ஸி. மாணவர்க்கேயன்றித் தமிழொழுக்கை யறிய அவாவும் அனைவர்க்கும் வழிவிளக்காகும் இது. இந்நூல் நுதலும் பொருளடைவும், எடுத்துக்காட்டுகளும், மேற்கோட் செய்யுட்களும் சிறப்புற அமைந்துள்ளமை பாராட்டற் பாலது. சுருங்கச் சொல்லி விளங்கவைக்குந் திறம் மெச்சத் தகுந்தது. சுருங்கக் கூறின் தமிழ் பயில்வோர் கற்கவேண்டிய நூல். இதனை இயற்றிய ஆசிரியப் பெருந்தகையாளர் இருவரும் இங்ஙனே மேன்மேலும் தமிழ்த்தொண்டு புரிதலைக் காணும் அவாவுடையேன். முயற்சி தன்மெய் வருத்தக் கூலி தரும்.

திருவல்லிக்கேணி
8—6—66

இங்ஙனம்,
C. ஜெகந்நாதாசாரியார்

# நன்றியுரை

தமிழ் இலக்கியம் தொன்மைச் சிறப்பும் சீரிளமைத் திறனும் வாய்ந்தது. கடந்த இருபத்தைந்து நூற்றாண்டுகளாக இடையறாது ஒழுகிவரும் தமிழ் இலக்கியப் பேராறு பொங்கிப் பெருக்கெடுத்து மணிகொழித்த காலங்களும் உண்டு; சுழியிட்டு மயங்கித் தேங்கி நின்ற காலங்களும் உண்டு. அதன் கவின் மிக்க கரை வழியே நடந்து வந்து, அதன் ஒழுக்கை, ஓட்டத்தை, ஆர்ப்பரிப்பை, அலைவீச்சை உற்றுநோக்குவோர் பெரும் பயன் அடைவர். அதன் நீண்ட நெடும் வரலாற்றைத் தமிழ்மாணவர்களுக்குச்சுருக்கமாகக்காட்ட வேண்டும் என்ற பெருவிருப்போடு எழுந்ததே இந் நூல். வரலாற்றுக் கண்களுக்குச் சங்க இலக்கியங்களைப் போலவே இன்றைய இலக்கியமும் சிறப்புடையதாகும். ஒன்றனுக்குச் சிறப்புக் கொடுத்து மற்றதை அசட்டை செய்து விடாமல் இருக்கவேண்டும் என்ற நோக்கத்துடன் நானும், எனது அருமை நண்பர் திரு. கோபாலகிருஷ்ணனும் இந்நூலை எழுதி முடித்தோம். தொடக்கத்திலிருந்து கி. பி. 15-ஆம் நூற்றாண்டின் இறுதிமுடிய நான் எழுதினேன். நண்பர் கோபாலகிருஷ்ணன் அதற்குப் பிற்பட்ட பகுதியை எழுதியுள்ளார். இருவருடைய நோக்கமும் இந்நூல் பி. ஏ., பி. எஸ்ஸி மாணவர்களுக்கும், தமிழைச் சிறப்புப் பாடமாக எடுத்துப் பயிலும் மாணவர்களுக்கும் பிறருக்கும் பயன்பட வேண்டும் என்பதாகும்.

தமக்கு இருக்கும் பல்வேறு அலுவல்களுக்கிடையில் இந்நூலைப் படித்து இதற்கு அரியதொரு

முன்னுரையை வழங்கியுள்ளார்கள், எனதுபேராசிரியர், மதுரைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர், பல்கலைச் செல்வர் திரு. தெ. பொ. மீனாட்சி சுந்தரனார் அவர்கள். நன்றியுணர்வால் கசிந்துருகும் இதயமல்லாமல் அவர்களுக்கு வேறு எதனை நான் காணிக்கையாகக் கொடுக்க முடியும்?

செந்தமிழ் என்னும் பொழுதினிலே, மெய்யெல்லாம் புல்லரிக்க, கண்களில் நீர்மல்க, துள்ளி எழுந்திடும் தூராத அன்புடையவர் விவேகானந்தா கல்லூரிப் பேராசியர் திருவாளர் ஜெகந்நாதாசாரியார் அவர்கள். அன்னார் இந்நூலைப் பரிசீலித்துக் குற்றங்களைய உதவி செய்ததுடன் அணிந்துரை தந்து இதனை அழகு செய்துள்ளார்கள். அவர்களுக்கு எஞ்ஞான்றும் நன்றிக்கடன்பூண்டுள்ளேன். அவ்வண்ணமே, இந்நூல் வெளிவரப் பல்லாற்றானும் பக்கம் நின்று உதவிய நண்பர் திரு. சா. ப. சபாரத்தினம், M. A. அவர்களுக்கும் மிக்க நன்றி உடையவனாகின்றேன்.

மிகக் குறுகிய கால அளவில் இந்நூல் அச்சேற வேண்டிய நெருக்கடியால், ஒரு சில அச்சுப் பிழைகளைத் தவிர்க்க முடியாமற் போய்விட்டது. தமிழன்பர் அவற்றைப் பொறுத்தருள வேண்டுகிறேன். பக்கம் 286-இல் 'சுந்தரபாண்டியம்' என்னும் நூல் அச்சேற வில்லை என்று குறித்துள்ளேன். ஆயின் அந்நூல் சென்னை அரசாங்க ஓரியண்டல் எழுத்துப் பிரதி நூல் நிலையத்தாரால் பத்தாண்டுகளுக்கு முன்னர் அச்சிடப்பட்டுவிட்டது என்பதைப் பின்னரே அறிந்ததால் அதனையும் இங்கு மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

சென்னை
14-6-66

சோமசுந்தரம்

# பொருளடக்கம்

# தோற்றுவாய்

'என்று முள தென்றமிழ்', என்று பிறந்தது என்று அறிஞராலும் அறுதியிட்டுரைக்க முடியாத தொன்மை நலம் சார்ந்தது; பரந்து பட்ட கால எல்லையில் வளர்ந்து முதிர்ந்த இலக்கியச் செல்வத்தை உடையது. இதனுடைய அகலத்தையும் ஆழத்தையும் உணர்ந்துதான் 'தமிழென்னும் அளப்பரும் சலதி' என்றும், 'தென் சொற் கடல்' என்றும் கவியரசன் கம்பன் பாடினன்.

கம்பன் காலத்திலேயே தமிழ் இலக்கியம் கடலென விரிந்து கிடந்திருக்கவேண்டும்; அவற்றையெல்லாம் கற்றுத்தான் அவன் கல்வியிற் பெரியவனுய்த் திகழ்ந்திருத்தல்வேண்டும். அவன் காலத்தில் வழங்கிய நூல்களில், காலத்தின் கையிலும் கரையான் வாயிலும் விழுந்து தப்பிப்பிழைத்தவைகளே இன்று நமக்குக் கிடைத்துள்ளன. இவற்றுள் அறிஞரால் மூத்த நூல்கள் என்று கருதப் பெறுபவை சங்க நூல்களாகிய பாட்டும் தொகையுமாகிய பதினெட்டு

நூல்கள்.¶ இச் சங்க நூல்கள் எழுந்த காலம் தமிழன் வாழ்வில் ஒரு பொற்காலம் என்றே கொள்ளவேண்டும். சங்க காலத்தின் கீழ் எல்லை கி. பி. இரண்டாம் நூற்றுண்டின் இறுதி அல்லது மூன்ரும் நூற்ருண்டின் முற்பகுதி என்று ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். ஆயின் மேல் எல்லையை யாரும் முடிந்த நிலையில் உறுதி செய்யவில்லை. இந்தக் காலத்தில் தமிழகம் எல்லாத்துறைகளிலும் மாண்புற்றிருந்தது. அசோகனது பேரரசு தமிழகத்தின் எல்லைவரை பரந்து கிடந்தது என்று அவன் கல்வெட்டுக்கள் கூறுகின்றன. அதாவது, பாய்ந்து பரவிவரும் அவனது பேரரசினைத் தடுத்து நிறுத்தும் அளவிற்குத் தமிழரது அரசியல் நிலை வலுவுற்றிருந்தது. ‘கோள் நிலை திரிந்து கோடை நீடினும், தானிலை திரியாத் தண்டமிழ்ப் பாவை’யாம் காவிரி ஆறும், ‘வையை என்னும் பொய்யாக் குலக் கொடி’யும் போன்ற ஆறுகள் பாய்ந்து வளம் பெருக்கியதால் தமிழ் நிலம் பொன்னைக் கொழித்தது. வாணிபத்துறை மாபெரும் ஏற்றத்தைக் கண்டிருந்தது. உள்நாட்டு வாணிபத்தில் தமிழ் நாட்டுப் பொருள்கள் வடபுலத்தில் கங்கைக் கரைவரை சென்று விலையாயின. மதுரையில் நெய்யப்பட்ட பருத்தி ஆடைகளும், நுண்வினைக் கலிங்கமும், பிறவும் மகதநாட்டிற்குச் சென்

¶ இவையனைத்தும் ஒரு குறிப்பிட்ட காலத்தவை அல்ல; பரந்துபட்ட கால எல்லையில் வாழ்ந்த பல்வேறு புலவர்களால் பாடப் பெற்றவை; அவர்கள் பல்வேறு வாழ்க்கைத் துறைகளைச் சார்ந்தவர்கள்; முடியுடை வேந்தர்கள் பலர்; அறுவை வாணிகரும், கூலவாணிகரும், பாணரும், கூத்தரும் உள்ளிட்ட பொதுமக்கள் பலர்; பறம்பிற்கோமான் பாரிமகளிர் முதல் வெண்ணிக் குயத்தியார் உள்ளிட்ட குடிப்பெண்கள் பலர்.

றன என்பதைச் சாணக்கியரின் அர்த்த சாத்திரத்தால் அறிகிறோம்.

தமிழகம் மேற்கே கிரேக்க, ரோம நாடுகளுடனும் எகிப்தினுடனும் வாணிபத் தொடர்பு கொண்டிருந்த மைக்குப் பல்வேறு சான்றுகள் கிடைக்கின்றன. ஏறத்தாழக் கி. மு. 1000 இல் வாழ்ந்த சாலமன் என்னும் அரசனுடைய காலத்திலேயே தங்கம், வெள்ளி, தந்தம் போன்ற பொருள்களும், குரங்குகள், மயில்கள் போன்றவையும் தமிழகத்திலிருந்து நாவாயிற் சென்றன என்பர்.† இதனால் 'கவி', 'தோகை' என்ற தமிழ்ச்சொற்கள் Kapim, Tukim என்று யூதர் மொழியில் உள்ள விவிலிய நூலில் இடம் பெற்றன. கி. பி. முதல் நூற்றாண்டைச் சார்ந்த ஸ்டிராபோ என்ற மேல் நாட்டினர் ஆண்டுதோறும் 125 கப்பல்கள் செங்கடல் நாடுகளிலிருந்து இந்தியாவிற்குச் சென்றன என்று கூறுகிறார். இந்திய வாணிகர்கள் அல்லது அராபியர்கள் கூறும் செய்திகளைத் துணையாகக் கொண்டு ஹிப்பாலஸ் (Hippalos) என்ற கிரேக்கர் முதன்முதலாகத் தமிழ் நாட்டுடன் கடல்வழித் தொடர்பு கொண்டார் என்று வரலாற்று ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர்.

இந்தியாவிலிருந்து, குறிப்பாகத் தமிழகத்திலிருந்து, ஏற்றுமதியான முத்துக்கள், மிளகு போன்ற நுகர் பொருள்களுக்கு ரோம் நாட்டில் மிகுந்த மதிப்பு இருந்தது. அந்நாட்டு மக்கள் ஒன்றிற்கு நூறு பங்கு விலை கொடுத்து அப்பொருள்களை வாங்கிக் கொண்டனர். இதனால் ஆண்டுதோறும் 55,000,000 ரோமத் தங்க நாணயங்கள் (4,86,979 பவுன்கள்) தம் நாட்டி

† The Tamils 1800 years Ago.
—By V. Kanakasabai Pillai. P. 31.

லிருந்து இந்தியா உறிஞ்சிக் கொண்டது என்று கி. பி. இரண்டாம் நூற்றாண்டவரான 'பிளைனி' (Pliny) என்பார் புலம்புகின்றார்.‡ ரோம் நாட்டு மகளிர் இம் முத்துக்களிடத்துத் தம் மனத்தைப் பறி கொடுத்தவராய் அவற்றை மேனியெங்கும் பூட்டி அழகு பார்த்தனர். இதனால் பெரும் பொருள் நாட்டை-விட்டுப் போவதை உணர்ந்த பிளைனி அவர்களிடம் குறைபட்டுக் கொள்கின்றார். இதுபற்றி அவர்கூறுவதை நோக்குவோம்: 'Our ladies glory in having pearls suspended from their fingers or two or three of them dangling from their ears, delighted even with the rattling of the pearls as they knock against each other and now, at the present day, the poorer classes are in the habit of saying that a pearl worn by a woman in public is as good as a lictor (an officer of the magistrate) walking before her. Nay, even more than this, they put them on their feet, and that not only on the laces of their sandals but all over their shoes!"§ மேலும் நீரோ என்ற மன்னனது அரண்மனையில், யானைக்கோடுகளைக் கால்களாகக் கொண்ட 500 மேசைகள் இருந்தன என்றும் அவன் காலணிகளில் முத்துக்கள் பதிக்கப்பெற்றிருந்தன என்றும் கூறுவர்.*

---

‡ "The subject is one worthy of attention, there being no year in which India does not drain our Empire of atleast 55,000,000 sesterces (4,86,979 Puonds) sending us in return wares which are sold for a hundred times their original value."

§ Pliny, chapter IX. 54 et seg.

* History of India—Sri Sathyanatha Iyer.

கால்டியா நாட்டவருடனும் தமிழர் வாணிபத் தொடர்பு கொண்டிருந்தனர். 'ஊர்' (ur), பாபிலோன் போன்ற நகரங்களின் சிதைவுகளில் காணப்படும் தேக்குமரங்கள் தமிழ்நாட்டைச் சார்ந்தவைகளாகும்.†

இவ்வாறு வெளிநாட்டுக்குப் பொருள்களை ஏற்றிச் சென்ற கப்பல்கள் ஏராளமான பொன்னுடன் பெயர்ந்தன. கம்பனும் 'கலம் சுரக்கும் நிதியம்' என்ருன். வெளிநாட்டு வாணிபத்தொடர்பால் யவனர்கள் என்று அழைக்கப்பட்ட கிரேக்க, ரோமர்கள் தமிழ்நாட்டிற்கு வந்து தமிழருடன் கலைத் தொடர்பு கொண்டனர். அவர்கள் தந்த 'தேட்கடுப்பன்ன நாட்படு தேறலும்' பாவைவிளக்குகளும், அன்ன வடிவுள்ள விளக்குகளும், புலித்தொடர்புகளும் தமிழ்நாட்டு நாகரிகத்துடன் கலந்தன. காவிரிப்பூம்பட்டினத்தில் ஒரு யவனச் சேரி இருந்தமையைச் சிலப்பதிகாரம் குறிப்பிடுகின்றது.* மதுரையில் அவர்களது தாமிர நாணயங்களை அச்சிடும் சாலை ஒன்றும் இருந்ததாகக் கூறுவர்.§ தமிழ் வேந்தர்கள் அவர்களைத் தம் மெய்க்காப்பாளராக வைத்துக்கொண்டனர் என்பதை முல்லைப்பாட்டாலும் பிறவாலும் உணரலாம். கி. மு. முதல் நூற்ருண்டில் பாண்டிய மன்னன் ஒருவன் அகஸ்டஸ் சீசரின் நட்பை நாடி அவனது நாளோலக்கத்திற்கு இரண்டு முறை (B.C. 26 and B.C. 20) அரசியல் தூதுவர்களை அனுப்பி

---

† 'The teak found in the ruins of Ur—the sea port and Capital of Babylon grows in Southern India close to Malabar and no where else.'—Regozin—in Vedic India.p. 806.

* சிலம்பு, இந்திர. 10.

§ Tamil India—By M. S. Puranalingam Pillai. p. 75

வைத்தான் என்று ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர்.§ சிலப்பதிகார ஊர்காண் காதையால் மதுரை மாநகரின் கடிமதில் வாயிலைக் காவலிற் சிறந்த அடல்வாள் யவனர் காத்து நின்ற செய்தியையும் அடைக்கலக் காதையால் மதுரை மதிற்புறத்து வைக்கப்பட்ட பல் வேறு கருவிகளைப் பற்றியும் அறிகிறோம். அக்கருவி கள் 'ஆர்கிமிடீஸ்' என்பவரால் கண்டு பிடிக்கப் பட்டவை என்றும், யவனர்களுடைய தொடர்பினால் அவை தமிழ் நாட்டிற்குப் போந்து மதுரை மதிலில் இடம் பெற்றன என்றும் பேராசிரியர் தெ. பொ. மீ. அவர்கள் கூறுவர். இவ்வெளிநாட்டுத் தொடர்பு குறித்துப் பல சான்றுகள் சங்க இலக்கியத்தில் இருப் பதுடன், அரிக்கமேடு, ஆதிச்சநல்லூர் என்னும் இடங்களிலிருந்து தொல்பொருள் ஆராய்ச்சியாளரால் கண்டெடுக்கப்பட்ட கிரேக்க, ரோம நாணயங்கள் சிறந்த சான்றுகளாக விளங்குகின்றன.

இவ்வாறு பெருகி வந்த பொருள் ஆக்கத்தை மக் கள் யாவரும் நுகருமாறு கட்டிக்காப்பதற்கு அரசர் கள் செங்கோல் ஓச்சினர். அதனால் 'நெல்லும் உயி ரன்றே நீரும் உயிரன்றே, மன்னன் உயிர்த்தே மலர் தலை உலகம்'‡ என்று அரசனை மக்கள் மதித்தனர். அவன் தன்னாட்டின் காவலை, 'குழவி கொள்பவரின்' ஓம்பினான்;¶

**'மழை வளங் கரப்பின் வான்பே ரச்சம்,**
**பிழையுயி ரெய்திற் பெரும்பே ரச்சம்**
**குடிபுர வுண்டுங் கொடுங்கோ லஞ்சி**
**மன்பதை காக்கும் நன்குடிப் பிறத்தல்**
**துன்ப மல்லது தொழுதக வில்லென'***

---

§ The Tamils 1800 years Ago.—p. 37.
‡ *புறம். 186.* ¶ *புறம். 5.* * *சிலம்பு-காட்சி-100-104*

நினைத்துக் காவல் செய்தான். இத்தகைய நேர்மையான அரசியல் அடிப்படையில் கல்விநிலை உயர்ந்தது.¶ 'உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும், பிற்றை நிலை முனியாது கற்றல் நன்றே' என்றும், 'அறிவுடையோன் ஆறு அரசுஞ் செல்லும்' என்றும் கல்வியை அரசியல் மதித்தது.† 'பெருமகன்' என்ற மன்னன் முதல் சமுதாயத்தில் பெண்டிர் உள்ளிட்ட அனைவரும் கல்வியறிவு பெற்றனர். கற்றறிந்த புலவர் 'செந்நாப் புலவராய்', வரிசைக்கு வருந்துபவராய், வாணிகப் பரிசிலராகப் பாடாதவராய், மன்னர்க்கு இடித்துரைக்கும் கேளிராய், மக்களுக்கு நன்மை நாடும் சான்றோராய், சந்து செய்து போர்தடுக்கும் செந்தண்மை மிக்கவராய் வாழ்ந்தனர்.

இதுகாறும் கூறியவற்றால், இந்தக் குறிப்பிட்ட கால எல்லையில் தமிழகம் அரசியல், கல்வி, பொருளாதாரம், வாணிபத்துறைகளில் பெற்றிருந்த ஏற்றமும் சிறப்பும் பற்றி ஓரளவு உணரலாம். இக்காலத்தில் தோன்றியவைதாம் பாட்டும் தொகையுமாகிய பதினெட்டு நூல்கள். திருக்குறளும் சிலம்பதிகாரம், மணிமேகலை போன்ற காவியங்களும் இக்காலத்திலோ இதன் அண்மையிலோ தோன்றின என்பர் ஆராய்ச்சியாளர்கள். இக்காலமே தமிழ் வரலாற்றில் ஒரு பொற்காலமெனப் போற்றப்படும் காலம்.

---

¶ Honest Government is impossible without honest schools for honest schools are illegal under dishonest Government—G. Bernardshaw-Everybody's Polical What's what, P. 169.

† *புறம். 183.*

# தமிழர் யாவர்?

‘கல்தோன்றி மண்தோன்ருக் காலத்தே வாளோடு முன்தோன்றி மூத்த குடி’ என்ற பழந்தமிழ்ச் செய்யுள் ஒன்று (புறப்பொருள் வெண்பாமாலே) தமிழரின் தொன்மைக்குச் சான்ருய்த் திகழ்கின்றது. தமிழகத்தைத் தொன்னெடுங் காலமாக ஆண்டுவந்த முடியுடை வேந்தர் மூவரும் படைப்புக் காலந்தொட்டே இத் தொன்னிலத்தை அளிசெய்து வந்தனர் என்பதை உரை வேந்தர் பரிமேல்அழகியார் கூறிப் போந்தார்.‡

இன்னேரன்ன கூற்றுக்கள் தமிழர் இப் பழம் பெரும் நிலத்தில் பன்னெடுங்காலமாக வாழ்ந்து வருகின்றனர் என்பதை உணர்த்தி நிற்கின்றன. இக்கூற்றுக்கள் பொருந்துமாற்றை இனி ஆராய்வோம்.

தமிழ் நிலத்திற்கு எல்லே கூறவந்த பனம் பாரனர்,

> “வடவேங்கடம் தென்குமரி
> ஆயிடைத்
> தமிழ்கூறு நல்லுலகம்”

என்று கூறிப்போந்தார். இனி, இவர் குறிப்பிடும் தென் குமரி என்பது தற்பொழுதுள்ள குமரிமுனே அன்று என்றும், இந்துப் பெருங்கடல் கடலாவதற்கு முன்

---

‡ ஒழிபியலில் குடிமை என்னும் அதிகாரத்துள் ஐந்தாவது குறளில் தொன்று தொட்டு வருதல் என்னும் சொற்றொட ருக்கு உரை கூறுங்கால், ‘சேர சோழ பாண்டியர் என்ருற் போலப் படைப்புக் காலந்தொடங்கி மேம்பட்டு வருதல்’ என்று அன்னர் கூறுவதை நோக்குக.

பிருந்த தொன்னிலத்தில் இருந்த குமரியாறும் கோடு மேயாம் என்றும் பல ஆராய்ச்சியாளர் சான்றுடன் நிறுவிக்காட்டியுள்ளனர்.

"பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் கோடுங் கொடுங் கடல் கொள்ள"
(சிலம்பு: மதுரை: நாடுகாண்: 19-20)

என்ற சிலப்பதிகார வரிகள் இன்றைய இந்துப் பெருங் கடல் நிலவியுள்ள பகுதி பண்டு ஒரு பெரு நிலமாக இருந்ததெனவும், அந்நிலப் பகுதியுள் பஃறுளியாறு, குமரியாறு, குமரிக்கோடு என்னும் யாறுகளும் மலைகளும் இருந்தனவெனவும், பின்பு அவை கடற்கோளால் நீருள் புகுந்தன வென்றும் அறிவிக்கின்றன. "மலி திரை யூர்ந்துதன் மண்கடல் வௌவலின்" என்ற கலித்தொகை (104) அடியும் இக்கூற்றை வலியுறுத்துகின்றது. பஃறுளியாற்றின் உண்மையைப் புறப்பாட்டும் (9) உணர்த்தா நிற்கின்றது.

இனி, இத்தொன்னிலப் பரப்பு நாற்பத்தொன்பது நாடுகளாகப் பிரிக்கப்பட்டுத் தமிழ் நாட்டின் தென் பகுதியாய்த் திகழ்ந்தமையை அடியார்க்குநல்லார் அறிவிக்கின்றார்.

இத்தொன்னில உண்மையை மேனாட்டு நில நூல் வல்வராகிய ஸ்காட் எலியட், ஏர்னஸ்டுஹெக்கல் போன்றாரும் வலியுறுத்துகின்றனர். இக்குமரி நாட்டினை அன்னார் 'இலமூரியா' என்று அழைக்கின்றனர். இந் நிலப்பகுதி நீருக்குள் புகாமுன் விந்திய மலைக்கு வடக்கே அமைந்த நிலப்பகுதி இமயம் உள்பட நீருள் புதைந்து இருந்தது என்று அறிஞர் உரைப்பர். இமயத்தின் சிமையத்தில் இன்று காணப்படும் கடல்

விலங்குகளின் எலும்புக்கூடுகளின் கற்பதிவுகள் (Fossils) இவ்வுண்மைக்குச் சான்றுகளாகக் காட்டப் படுகின்றன.

எனவே, தென்னாடு-தமிழகம், வடநாடு தோன்றாத காலத்தே தோன்றி மேம்பட்டிருந்த தென்றும், இம் மேட்டுப் பகுதியுள்தான் முதன்முதல் மனித இனம் தோன்றிப் பின் உலக நாடுகளிற் சென்று குடியேறி இருக்க வேண்டும் என்றும் மேற்கூறிய மேனாட்டு ஆசிரியர்கள் அறுதியிட்டுக் கூறுகின்றனர்.

ஒரு சில தொன்மை வரலாற்று ஆசிரியர்கள் நைல் நதியின் மடியில் தவழும் எகிப்துதான் உலகத் தின் முதற் குழந்தை என்றும் அது வளர்ந்து ஈன்றவர் தாம் ஆதி மக்கள் என்றும் கூறுவர். ஆயின் ஸ்காட் எலியட் தமது 'இழந்த இலமூரியா' (Lost Lemoria) என்னும் நூலில், தமிழ்நாடு இலமூரியாவின் பகுதியாக இருந்த காலத்திற்கான நிலப்படத்தைக் காட்டுகையில் எகிப்து நாடு நீருள் இருந்தமையைக் காட்டுகின்றார்.‡ இதனால் எகிப்து தோன்றுவதற்குப் பன்னெடுங் காலத்திற்கு முன்பே தமிழகம்—இலமூரியா—தோன்றி யிருக்க வேண்டும்.

இனி, இத்தொன்னிலத்தில் தமிழர் வாழ்ந்து வந்த மையைச் சிலப்பதிகாரம், புறம், கலித்தொகை ஆகிய நூல்களால் உணரலாம். மேலும் தமிழகத்தில் உள்ள ஆறுகள், அருவிகள், குன்றுகள், நகரங்கள், சிற்றூர் கள் ஆகிய அனைத்திற்கும் நல்ல தமிழ்ப் பெயர்கள் வழங்குவதை மொழிநூற்படி நோக்குங்கால் தமிழ் கூறும் மாந்தர் இந்நிலத்தில் நெடிது வாழ்ந்து

‡இலக்கிய வரலாறு—கா. சு. பிள்ளை. பக். 7. முதற்பகுதி.

வந்திருக்க வேண்டும் என்ற உண்மை விளக்க மடைகின்றது.

இத்தமிழர்கள் ஒரு காலத்தில் இந்திய நாடு முழுதும் பரவி வாழ்ந்திருக்கவேண்டும் என்ற கருத்தும் வழங்கி வருகின்றது. பலுஜிஸ்தானத்தில் வழங்கும் ''பிராகுவே'' (Brahui) என்ற மொழியும், கீழ்க்கரையில் உள்ள வங்காளத்தில் ராஜ்மஹல் மலையில் வாழும் பழங்குடி மக்கள் பேசும் 'ராஜ்மஹல்' மொழியும் திராவிட மொழிக் குடும்பத்தைச் சார்ந்தவை என்பதை டாக்டர் கால்டுவெல் கூறுகின்றார். மேலும் 'மொஹஞ்சோதாரோ' என்ற புதைந்த தொல் நகரத்தில் ஏறக்குறைய ஏழாயிரம் ஆண்டுகட்டு முன்னர் வாழ்ந்த நாகரிக மக்கள் பேசி வந்த மொழி தமிழுடன் மிகவும் நெருங்கிய தொடர்புகொண்ட, தமிழ்ச் சொற்களை மிகுதியாகக் கொண்ட திராவிட மொழி என்று ஹீராஸ் பாதிரியார் கூறுகின்றார்.†

இனி, இவ்வாறன்றித் தமிழர்கள் வேற்று நாடுகளிலிருந்து வந்து தமிழ் நிலத்தில் குடியேறியவர்கள் என்றும், இவர்கள் வருவதற்கு முன்னர் வாழ்ந்த ஆதி மக்களின் வழித்தோன்றல்கள்தாம் இன்றைய தோதர்கள் முதலான மலைவாழ் மக்கள் என்றும் உரைப்பாரும் உளர். இது ஆராய்ச்சிக்குரிய செய்தியாகும்.

---

† Being Dravidians, the inhabitants of Mohanjo Daro in Northern India naturally spoke a Dravidian language in which the largest proportion of the words used are found in Tamil. This confirms the belief that Tamil is the oldest of the present languages.—Father Heras.

# தமிழென்னும் தெய்வத் தொன்மொழி

'தமிழென்னும் அளப்பருஞ் சலதி' (கம்பன்) என்றும் ''வானமளந்தது அனைத்தும் அளந்திடும் வண் மொழி, (பாரதி) எனவும் புலவோர் நாவில் பொருந்திய பூங்கொடியாம் தமிழ் மனிதன் முதன்முதலில் பேசிய பழம் பெரும் மொழிகளுள் ஒன்ருகும். தமிழ் இலக்கியத்தைப் பயிலுங்கால் இது இறைவனுல்—சிவ பெருமானுல் உணர்த்தப்பட்டது என்ற வழக்கு வழங்கி வருவதைக் காணலாம். சிவபெருமான் ஆதி யில் தமிழ் நூல்களை அகத்திய முனிவர்க்கு உணர்த் தினன் என்று கூறப்படுகிறது.

**'ஆதியிற் றமிழ்நூல் அகத்தியற் குணர்த்திய**
**மாதொரு பாகனை வழுத்துதும்'** (பழம் பாட்டு)

**''தழற்புரை நிறக் கடவுள் தந்த தமிழ்''** (கம்பன்)

**''இருமொழிக்குங் கண்ணுதலார் முதற்குரவர்''**
(காஞ்சிப் புராணம்)

மேற்கூறிய செய்யுள் அடிகள் இவ்வுண்மையை விளக்கா நிற்கின்றன. மேலும் தமிழ் நெடுங்கணக் கின் முதலில் பஞ்சாட்சரமே பண்டைக் காலத்தில் சுவடிகளில் எழுதப்பட்டுக் கற்பிக்கப்பட்டு வந்தது என்பதை டாக்டர் உ. வே. சாமிநாத அய்யர் அவர்கள் தமது 'சங்கத் தமிழும் பிற்காலத் தமிழும்' என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார்.

வேறு சில பெரியோர்கள் முருகனே தமிழ் உணர்த்திய பெருங் கடவுள் என்ற கருத்தினை வழங்கி ருள்ளனர்.

**"சிவனைநிகர் பொதியவரை முனிவனக மகிழவிரு**
**செவிகுளிர இனியதமிழ் பகர்வோனே"** —திருப்புகழ்.

**"குறுமுனிக்குந் தமிழுரைக்குங் குமர"** —திருப்புகழ்.

மேலும் தலைச் சங்கத்தில் திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளும், குன்றம் எறிந்த முருகவேளும் வீற்றிருந்து தமிழ் ஆராய்ந்த வரலாற்றைக் களவியல் உரை கூறுகின்றது.

இவ்வாறு தமிழ் இறைவனால் படைக்கப்பட்டது என்பதும், தமிழ் நூல்களை இறைவனே அகத்திய முனிவருக்கு உணர்த்தினான் என்பதும், அகத்தியரே முதலில் தமிழுக்கு இலக்கணம் வகுத்துத் தமிழை வளர்த்தார் என்பதும் தமிழ் நூல்களால் அறியக் கிடைக்கின்றன.

**"ஆதிசிவன் பெற்றுவிட்டான்—என்னை**
**ஆரிய மைந்தன் அகத்தியன் என்றோர்**
**வேதியன் கண்டு மகிழ்ந்தே—நிறை**
**மேவும் இலக்கணம் செய்து கொடுத்தான்"**
—பாரதி.

**"தமிழென்னும் அளப்பரும் சலதி தந்தவன்"**
—கம்பன்.

என்று அகத்தியனே தமிழ் இலக்கணம் வகுத்தமை கூறப்படுகின்றது. மேலும் முதல், இடைச் சங்கங்களுக்கு அகத்தியமே இலக்கண நூலாக அமைந்திருந்தது என்றும், அவர்தம் மாணவருள் ஒருவராகிய தொல்காப்பியர் இயற்றிய தொல்காப்பியம் அவரது வழி நூல் எனவும் களவியலுரை போன்ற நூல்கள் கூறுகின்றன.

இன்னோரன்ன கூற்றுகள் யாவும் உண்மையென நம்ப மறுப்பாரும் ஒன்றை ஒப்புக்கொண்டுதான் ஆக

வேண்டும். தமிழின் தொன்மையையே இக் கூற்றுக் கள் வலியுறுத்துகின்றன என்பதே அது.

மேலும், சிவபெருமான் அகத்தியனுருக்குத் தமிழ் இலக்கணத்தைக் கற்பிப்பதற்கு முன்னேயே, அகத் தியர் தமிழ் இலக்கண நூல் இயற்றுவதற்கு முன் பேயே, தமிழ் மொழி இந்நிலத்து மாந்தரால் பேசப் பட்டு இலக்கிய வளங்களுடன் இருந்தது என்பதை டாக்டர் ஐயர் அவர்கள் தமது 'சங்க காலத் தமிழும் பிற்காலத் தமிழும்' என்ற நூலில் கூறியிருக்கிறார்.

இவையாவும் தமிழ் ஒரு மூத்த மொழி என்ற கருத்தினை வலியுறுத்துகின்றன.

# தமிழ் - பெயர் ஆராய்ச்சி

"தமிழ்" என்ற சொல் நம்தம் மொழியின் பெயராக இலங்குகிறது. ஆயின், டாக்டர் கால்டுவெல் போன்றார் 'திராவிடம்' என்பதே இம்மொழியின் ஆதிப் பெயராக இருத்தல் வேண்டும். என்றும் அது நாளடை வில் தமிழென்று ஆகியிருத்தல் வேண்டும் என்றும் கருதுகின்றனர். ஏறக் குறைய 2000 ஆண்டுகட்கு முன்பு உஜ்ஜெயினி நகரில் நடைபெற்ற நாடகமொன் றில் 'திராவிடம்' என்ற சொல்லால் இம்மொழியின் பெயரை வழங்கியிருப்பதாக டாக்டர் கால்டுவெல் குறிப்பிடுகின்றார். எனினும், இக்கருத்து ஏற்புடைத் தன்று.

தமிழ் என்ற சொல்லே திராவிடம் என்று வடமொழியில் திரிந்து வழங்கியிருத்தல் கூடும். இத்துணைத் தொன்மையான மொழிக்கு இயற்கையி

லேயே ஒரு தமிழ்ப் பெயர் இல்லாமல் வேற்றுமொழிச் சொல்லொன்று பெயராக அமைதல் அறிவிற்கு உடன் பாடன்று என்று டாக்டர் ஐயர் அவர்கள் கருதுகின் றனர்.

திரு. பி. டி. சீனிவாச அய்யங்கார் ஆரியர் வருகைக்கு முன்பே தமிழுக்கு அப்பெயர் இருந்தது என்று குறிப்பிடுகிறார்.§

இனித் 'தமிழ்' என்று சொல்லைப் பல அறிஞர் பலவாறு ஆராயுமாற்றை நோக்குவோம்.

1. 'தமிழ்' என்ற சொல்லில் 'த்' என்ற வல்லின மும், 'ம்' என்ற மெல்லினமும், 'ழ்' என்ற இடையின மும், 'அ' 'இ' என்ற உயிர் எழுத்துக்களும் ஆக நான்கு தமிழின எழுத்துக்களும் அமைந்து இருக் கின்றன. இவ்வமைதி ஒன்றே 'தமிழ்' என்பது தமிழுக்கு அமைந்த முது பெயர் என்பதனை வலியுறுத்துகின்றது என்பதை டாக்டர் ஐயர் அவர்கள் காட்டுகின்றார்.†

2: 'தமிழ்' என்ற சொல் தமி+ழ் என்று பிரிக்கப் படின் தமி என்பது தனித் தன்மை என்ற பொருளில் வருகின்றது. 'ழ்' இம்மொழியின் சிறப்பெழுத்து. எனவே தமிழாவது தனித்தன்மை வாய்ந்த ஒரு மொழி என்ற பொருளில் வருகிறது. இவ்வாறு பேரா சிரியர் இரா. இராகவ அய்யங்கார் கருதுகின்றார்.

3. தமம் + இல் = தமிழ்.

தமம் எனில் அறியாமை. எனவே அறியாமையை இல்லாமையாக்குகின்ற தமிழ் மொழி.

---

§History of the Tamils by P. T. S.

†சங்க காலத் தமிழும் பிற்காலத் தமிழும்—பக்கம்-4.

இது ஓர் ஆராய்ச்சி.

4. தமிழ்—திமில் என்பது இதன் வேர்ச்சொல் (Root). திமில் எனில் கப்பல், படகு என்று பொருள்.

கப்பலேறிக் கடல் வாணிபம் செய்வோரது மொழி என்பது கருத்து.

5. இனி Tripolis என்ற மத்தியதரைக் கடல் நாட்டிலிருந்து இவ்வினத்தார் வந்தமையால் அவர் மொழியின் பெயர் தமிழாயிற்று என்பாரும் உளர்.

இவ்வாறு பலவாறு ஆராய்ச்சிகள் இருப்பினும் தமிழ் நூல்களின் துணை கொண்டு ஆயுமிடத்துத் தமிழ் என்ற சொல்லுக்கு இனிமை, அழகு என்ற பொருள்கள் அமைந்து அவை காரணமாக இப்பெயர் ஏற்பட்டிருக்கலாம் என்று உணரலாம்.

**'இனிமையும் நீர்மையும் தமிழ் என்பதாகும்'**

என்று பிங்கல நிகண்டு தமிழுக்குப் பொருள் உணர்த்துகின்றது.

**'தமிழ் வையைத் தண் நன் புனல்'**

என்று வரும் பரிபாடல் அடியில் தமிழ் என்பது நீர்மை என்ற பொருளில் வருவது காண்க.

**'தமிழ் பாட்டிசைக்கும் தாமரையே'**

என்ற கம்பன் பாடலில், இனிமை என்ற பொருள் வருகிறது.

இனிச் 'சீவகசிந்தாமணி' ஆசிரியர் திருத்தக்க தேவர் தமிழை அழகு என்ற பொருளில் வழங்குகின்றார்.

**'தமிழ் தழீஇய சாயலவர்'**

கி. பி. ஆறும், ஏழாம் நூற்றுண்டுகளுக்குப் பின் தெய்வத்தன்மை என்ற பொருளிலும் 'தமிழ்' வழங்கி வருகிறது.

"ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய்"

"செந்தமிழோ டாரியனை"

"தமிழ்ச்சொல்லும் வடசொல்லுந் தாணிழற்சேர"

என்பன தேவாரம்.

திருமங்கையாழ்வார் திருப்புல்லாணி எனும் தலத்தில் எழுந்தருளியுள்ள திருமாலை,

"புல்லாணித் தென்னந் தமிழை"

என்று குறிப்பிடுகின்றுர்.

இனித் தமிழின் இனிமையையும், அழகினையும் கடவுளரும் விரும்புவதாக நூல்கள் கூறுகின்றன.

"தமரநீர்ப் புவன முழுதொருங் கீன்றுள் தடாதகைத்
தேவியென் றொருபேர்
தாங்கி வந்ததுவும் தனிமுத லொருநீ சௌந்திர
மாறனு னதுவும்
குமரவேள் வழுதி யுக்கிர னெனப்பேர் கொண்டதும்
தண்டமிழ்ப் பெருமை
கூட்டுண வெழுந்த வேட்கையா லெனினிக்
கொழிதமிழ்ப் பெருமையா ரறிவார்"

"பாதஞ் சிவக்கப் பசுந்தமிழ் வேண்டிப் பரவை தன்பாற்
தூதன்று சென்ற தென்னுரூர்த் தியாகர்"

"பைந்தமிழ்ப் பின்சென்ற பச்சைப் பசுங்கொண்டலே"
--குமரகுருபரர்

'மொய்தார் அணி குழல் வள்ளியை வேட்டவன் முத்தமிழால்
வைதா ரையும் அங்கு வாழவைப்போன்......"
—கந்தரலங்காரம்

# முச்சங்க வரலாறு

இன்னமுதாம் தென்றமிழை இயம்பி இசை கொண்ட பாவாணர்களைப் போற்றி வளர்த்த பெருமை பண்டை முடிகெழுவேந்தர் மூவருக்கும், குறுநில மன்னர் பல்லோருக்கும் பொதுவான சிறப்பாக இருந்தமை, பண்டைத் தமிழ்நூல்களை ஒரு முறை பயில்வாருக்கும் எளிதிற் புலப்படும்.

'பட்டினப்பாலை' என்ற நூலினை இயற்றிய கடியலூர் உருத்திரங்கண்ணனூர் என்ற புலவர் பெருமகனுக்குத் திருமாவளவன் நூறுயிரம் பொற்காசுகளை வழங்கிப் பெருமைப் படுத்தியதாகக் கலிங்கத்துப் பரணி, சங்கரசோழன்உலா போன்ற நூல்கள் கூறுகிற்கின்றன.

சேரவேந்தருள் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் என்பான், குமட்டூர்க் கண்ணனூர் என்ற புலவருக்கு உம்பற்காட்டு ஐந்நூறு ஊர் பிரமதானம் கொடுத்து, முப்பத்துஎட்டு யாண்டு தென்னாட்டுள் வருவதனிற் பாகம் கொடுத்தான்.

இவன் மகன் கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன், பரணருக்கு உம்பற்காட்டு வாரியையும், தன் மகன் குட்டுவன் சேரலையும் கொடுத்தான். புலன் அழுக்கற்ற அந்தணரான கபிலருக்குச் செல்வக்கடுங்கோ வாழியாதன் என்ற சேரவேந்தன், சிறு புறம் என நூறுயிரம் காணம் கொடுத்து, 'நன்று' என்னும் குன்று ஏறி நின்று, தன் கண்ணிற்கண்ட நாடு எல்லாம் காட்டிக் கொடுத்தான்.

தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை என்பான், அரிசில் கிழாருக்குத் தானும் கோயிலாளும் புறம்

போந்து நின்று, 'கோயில் உள்ளன எல்லாம் கொண்மின்' என்று காணம் ஒன்பது நூறாயிரத்தோடு, அரசு கட்டில் கொடுப்ப, அவர் 'யான் இரப்ப இதனை ஆள்க' என்று அமைச்சுப் பூண்டார்.

இன்னோரன்ன செய்திகளை நாம் பதிற்றுப்பத்தின் பதிகக் கட்டுரைகளினால் அறிகின்றோம்.

இனி, முடிகெழு வேந்தரேயன்றிக் குறுநில மன்னர்களும் தமிழ்ப்புலவர்களை ஆதரித்த செய்திகளையும் நோக்குவோம்.

பறம்பிற்கோமான் பாரி முதல் நளிமலை நாடன் நள்ளி ஈறாக உள்ளிட்ட எழுவரும் குறுநில மன்னரே யாவர் என்பதை எண்ண, அன்னோரது பெருமை வியக்கத்தக்கதாக உள்ளது. இவர்களால் ஆதரிக்கப்பட்ட புலவர்களையும், அவர்களை இவர்கள் போற்றிப் புகழ் கைக்கொண்ட வள்ளன்மையையும் உள்ளுவார் உள்ளம் இறும்பூதடையும்.

இவ்வாறு முடிவேந்தரும் குறுநிலமன்னரும் தமிழை வளர்க்கப் பாடுபட்டோராயினும், தமிழை வளர்த்த பெருமை பாண்டியருக்கே சிறப்பாகக் கூறப்பட்டு வருகின்றது. இதற்குக் காரணம், பாண்டியர் புலவர்களைக் கூட்டிச் சங்கம் வைத்துத் தமிழை வளர்த்தமைதான் எனின் பொருந்தும்.

சங்கமென்பதற்குக் கூட்டம், இணைப்பு என்று பொருள். ஈண்டுத் தமிழ்ப்புலவர்களின் கூட்டம் சங்கமெனப்படுகிறது. தமிழ்ப்புலவர்கள் தமிழ் நாட்டிலுள்ள ஊர்களிலும், நகர்களிலும் ஆங்காங்கே கூடியிருந்து தமிழ் ஆராய்ந்திருப்பினும், சிறப்பாக மதுரையில் இருந்ததையே தமிழ்ச்சங்கம் என்று

அறிஞர் குறிப்பர். சங்கம் என்ற சொல், ஒரு வட மொழிச் சொல்லாக இருப்பதால் அது பிற்கால வழக்கு என்பதும், ஆதியில் புலவர் கூட்டத்தைக் குறிக்க வேறு சொல் வழங்கியிருத்தல் கூடும் என்பதும் ஆராய்ச்சியாளர் சிலர்தம் கருத்துகளாகும்.

மதுரையில் சங்கம் இருந்தமைக்குச் சங்க நூல்களில் அகச்சான்றுகள் பல இருக்கின்றன.

1. "இமிழ்குரல் முரசம் மூன்றுட னாளுந்
தமிழ்கெழு கூடல் தண்கோல் வேந்தே!"
—புறம். 58 : 12—13

2. "ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் தலைவ னாக
உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற்
புலவர்" —புறம். 72 : 13—16.

3. "நிலனாவில் திரிதரூஉம் நீண்மாடக் கூடலார்
புலனாவிற் பிறந்தசொல் புதிதுண்ணும் பொழுதன்றோ"
—கலி. 35.

4. "மதிமொழி யிடன்மாலை வினைவர்போல் வல்லவர்
செதுமொழி சீத்த செவிசெறு வாக
முதுமொழி நீராப் புலனா வுழவர்
புதுமொழி கூட்டுண்ணும் புரிசைசூழ் புனலூர"
—கலி. 68.

5. "தொல்லாணை நல்லாசிரியர்
புணர்கூட்டுண்ட புகழ்சால்சிறப்பின்
நிலந்தருதிருவின் நெடியோன்"
—மதுரைக் காஞ்சி. 761—73

6. "தென்தமிழ் நன்னாட்டுத் தீதுதீர் மதுரை"
—சிலப்பு. 10 : 58

7. ''தென்தமிழ் மதுரைச் செழுங்கலைப் பாவாய்''
—மணிமேகலை 25 : 139.

இனிச் சின்னமனூர்ச் செப்பேடுகள்,

'மகாபாரதம் தமிழ்ப்படுத்தும் மதுராபுரிச்
சங்கம் வைத்தும்'

என்று, பாண்டியர் மதுரையில் சங்கம் வைத்து வளர்த்தமையைக் குறிக்கின்றன.

இதுகாறும் கண்டவற்றால், தமிழ்ப் புலவர்களை வைத்து முடிகெழு வேந்தரும், குறுநில மன்னரும் ஆதரித்துப் போற்றி வந்தாலும், மதுரையில் பாண்டிய மன்னர்களால் நிறுவப்பட்டு ஆதரிக்கப்பட்ட புலவர் கூட்டமொன்றே சங்கமென வழங்கப் பட்டமை தெள்ளிதின் விளங்கும்.

இனி, இச் சங்கத்தைப் பற்றிய வரலாற்றைக் கூறும் ஆதி நூல்கள் களவியலுரைக்குப் பாயிரமாக அமைந்த பகுதியும், அடியார்க்கு நல்லார் உரையுமே யாம்.

**களவியலுரை கூறும் முச்சங்க வரலாறு:**

பாண்டியர் தலைச்சங்கம், இடைச்சங்கம், கடைச் சங்கம் என மூன்று சங்கங்களை நிறுவினார்கள். அவற்றுள், தலைச்சங்கத்தில் அகத்தியனாரும், திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளும், குன்றெறிந்த முருக வேளும், முரஞ்சியூர் முடிநாகராயரும், நிதியின் கிழவரும் ஆகியோர் 549 பேர் வீற்றிருந்து தமிழாய்ந்தனர். அவருள்ளிட்டு 4449 புலவர்கள் பாடினர். அவர்களால் பாடப்பட்டன எத்துணையோ பரிபாடல், முதுநாரை, முதுகுருகு, களரியாவிரை என்பன பல. அவர்கள் சங்கம் இருந்த காலம் 4440 ஆண்டுகள்.

இவர்களைச் சங்கத்தில் வைத்து ஆதரித்தவர்கள் காய்சினவழுதி முதல் கடுங்கோன் ஈறாக 89 பாண்டியர். இவருள் எழுவர் கவியரங்கேறினர். இவர்கள் சங்கமிருந்து தமிழாய்ந்த மதுரை கடலால் கொள்ளப் பட்டது. இவர்களுக்கு நூல், அகத்தியம்.

இனி, இடைச்சங்கத்தில் அகத்தியனார், தொல்காப்பியனார், இருந்தையூர்க் கருங்கோழி மோசியார், வெள்ளூர்க்காப்பியன், சிறுபாண்டரங்கன்; திரையன் மாறன், துவரைக் கோமான், கீரந்தை என ஐம்பத் தொன்பதின்பர் வீற்றிருந்தனர். இவருள்ளிட்ட 3700 புலவர்கள் பாடினர். இவர்களால் பாடப்பட்டன கலியும், குருகும், வெண்டாளியும், வியாழமாலைஅகவலும் என்பன. இவர்களுக்கு நூல் அகத்தியமும், தொல்காப்பியமும், மாபுராணமும், பூதபுராணமும், இசைநுணுக்கமும் என்ப. 3700 யாண்டுகள் சங்கமிருந்த இவர்களை ஆதரித்த பாண்டியர், வெண்தேர்ச்செழியன் முதலாக முடத்திருமாறன் ஈறாக 59 பேர் என்ப. இவருள் கவியரங்கேறினார் ஐவர் என்ப. இச்சங்கம் இருந்த கபாடபுரமும் கடலால் கொள்ளப்பட்டது.

இனி, கடைச்சங்கத்தில் சிறுமேதாவியார், சேந்தம்பூதனார், அறிவுடையரனார், பெருங்குன்றூர்க் கிழார், இளந்திருமாறன், மதுரை ஆசிரியர் நல்லந்துவனார், மதுரை மருதனிள நாகனார், கணக்காயனார் மகனார் நக்கீரனார் முதலிய நாற்பத்தொன்பதின்பர் வீற்றிருந்து தமிழாய்ந்தனர். இவருள்ளிட்டு நூற்று நாற்பத்து ஒன்பதின்மர் பாடினர். இவர்களால் பாடப் பட்டன நெடுந்தொகை நானூறும், குறுந்தொகை நானூறும், பதிற்றுப்பத்தும், நூற்றைம்பது கலியும், எழுபது பரிபாடலும், கூத்தும், வரியும், சிற்றிசையும்,

பேரிசையும் என்று பலவாம். இவர்களுக்கு நூல் அகத்தியமும் தொல்காப்பியமுமேயாம். இவர்கள் 1850 ஆண்டுகள் சங்கமிருந்து தமிழாய்ந்தனர் என்ப. இவர்களைச் சங்கத்தில் இருத்தி ஆதரித்த பாண்டியர், முடத்திருமாறன் முதலாக உக்கிரப் பெருவழுதி ஈருக நாற்பத்தொன்பதின்மர். அவருள் மூவர் கவியரங் கேறினர். இவர்கள் சங்கமிருந்து தமிழாய்ந்தது தற் பொழுதுள்ள உத்தர மதுரை என்ப.

இனி, இச் சங்க வரலாற்றைப் பற்றிப் பல அறிஞர்கள் ஆராய்ச்சிகள் நிகழ்த்தியுள்ளனர். அன்னோர் ஆராய்ச்சிகளையெல்லாம் மூன்று பிரிவு களாகப் பிரித்துவிடாலாம். அவை வருமாறு: 1. தமிழ்ச் சங்கம் என்ற ஆராய்ச்சி அமைப்பு எப்பொழுதுமே இருந்ததில்லை. முச்சங்கங்களைப் பற்றிய செய்திகள் யாவும் கற்பனையே. இவ்வாறு கூறுவோர், திரு. K. M. சிவராஜபிள்ளை போன்றோர். 2. முதல் இரண்டு சங்கச் செய்திகள் யாவும் கட்டுக் கதைகளே. எனவே அவ்வாரய்ச்சியில் பயனில்லை. கடைச் சங்கங்களைப் பற்றிய சில செய்திகள் உண்மை யானவை; பல, கற்பனைகள். (திரு. சேஷகிரிசாஸ்திரி யார்—Essays on Tamil Literature. திரு. வையாபுரிப் பிள்ளை—இலக்கியச்சிந்தனைகள் ) 3. முச்சங்கங்களும் இருந்தன என்று களவியலுரை கூறும் செய்திகள் பல உண்மையானவை; சில புனைந்துரை. (திரு. கா. சுப்பிர மணியபிள்ளை, திரு. K. S. சீனிவாசப்பிள்ளை, திரு. இரா. இராகவய்யங்கார்.)

இனி, இவர்களது ஆராய்ச்சிகளைக் காண்போம்.

முதலவர் காட்டும் சான்றுகள்:

1. சங்கம் என்ற சொல் சிலப்பதிகாரம், மணி மேகலை காலம் வரை தமிழ் இலக்கியங்களில் எங்கும் காணப் பெறுமை; சங்கங்களைப்பற்றிய செய்திகள் முதன் முதலில் களவியலுரையில்தான் காணப்படு கின்றன; அதற்கு முன்பு தமிழகத்தில் அச்செய்திகள் வழக்கில் வாராமை.

2. தமிழ் நாட்டில் பொதுமக்களுக்கு அச்செய்தி கள் தெரியாமலிருத்தல்.

3. சங்க இலக்கியங்கள் என்று பாராட்டப் பெறும் நூல்களிலிருந்து அறியக் கிடைக்கும் அரசியல், சமூகவியல் கருத்துக்கள், சங்கங்களின் வாயிலாக அவற்றின் வளர்ச்சிக்குத் தொண்டாற்றி வந்தன என்று உய்த்துணரவும் துணை செய்யாமை.

4. முச்சங்கங்களும் ஏறக்குறைய 10,000 ஆண்டு கள் நடைபெற்று வந்தமையும், புலவர், அரசர் எண் ணிக்கையும் பகுத்தறிவிற்குப் பொருந்தாமை.

5. சேர சோழர்கள் சங்க வளர்ச்சிக்குத் துணை செய்யாமல் பாண்டியர்கள் மட்டுமே சங்கம் வைத்த னர் என்னும் செய்தி.

6. கடவுளரும் முனிவரும் சங்கம் மருவித் தமிழ் வளர்த்தமை இயற்கைக்கு முரணாக உள்ளது.

7. தலை, இடைச் சங்கங்கள் நடந்து வந்த தென் மதுரையும், கபாடபுரமும் அழிந்து போனதால், வட மதுரையில் மூன்றுவது சங்கம் நடந்தமை வரலாற் றிற்குப் பொருந்தாது.

8. மதுரை என்ற வடமொழிப் பெயர் மிகப் பழமையில் வழங்கியிருக்கும் என்பதை நம்ப முடியாது.

9. தலை, இடைச்சங்க நூல்கள் காணப் பெறுமை. பெயர்கள் சிலவும், செய்திகள் சிலவும் மட்டிலும் உலவி வருகின்றமை.

10. சங்கங்களைப் பற்றிய கருத்துக்கள், காலத்திற்குக் காலம் வளர்ந்து வாராமல் அருகி வருகின்றமை. பொற்றாமரைப் பொய்கை, சங்கப் பலகை பற்றிய செய்திகள் முதன்முதல் பெரும்பற்றப் புலியூர்த் திருவிளையாடற் புராணத்தில்தான் கிடைக்கின்றன. களவியல் உரையில்கூட இல்லை. சமணச் சங்கங்களைக் கண்டு மேற்கூறிய முச்சங்கக் கருத்துக்கள் கற்பிக்கப்பட்டிருக்கலாம்.

இக்கருத்துக்களைப் பலர் பின்வருமாறு மறுக்கின்றனர்:

முச்சங்கங்கள் இருந்தன எனவும், அவ்வச் சங்கங்களில் இன்னின்ன புலவர், இன்னின்ன அரசர் இருந்தனர் எனவும், அவர்கள் இன்னின்ன நூல்களை ஆக்கித் தந்தனர் எனவும், கற்பனையாகவே இடைநாட் போந்தவர்கள் கற்பித்துக் கூறிவிட்டார் என அவற்றைத் தள்ளுவது தவறேயாகும்.

—தமிழ் இலக்கியம். ஞா. சா. துரைசாமிப் பிள்ளை

தமிழ் நாட்டில், முச்சங்கங்கள் வெவ்வேறு காலத்தில் இருந்தன என்பதை நம்பாமல் இருப்பதற்கு இடமில்லை.

—கா. சு. பிள்ளை.

மேலும், தமிழ்ச் சங்கங்களின் உண்மைக்குச் சங்க காலத்திற்குச் சற்றே பிற்பட்ட காலத்து நூல்களும், சைவ, வைணவக் குரவர்களின் பாடல்களும் சான்று பகர்கின்றன.

"மதுரைத் தொகை ஆக்கினன்"

—சம்பந்தர்.

"நன்பாட்டுப் புலவனாய்ச் சங்க மேறி
நற்கனகக் கிழிதருமிக்கு அருளி னேன்காண்"

—நாவுக்கரசர்.

"பொய்யடிமை யில்லாத புலவர்"

என்ற சுந்தரரது வாக்கு, சங்கப் புலவரைத் தொடர்பு கொண்டது.

"உறைவான் உயர்மதில் கூடலின் ஆய்ந்தஒண்
தீம் தமிழின்
துறைவாய் நுழைந்தனையோ"

—திருக்கோவையார்.

'சங்கத் தமிழ்' —திருப்பாவை.

'சங்க முகத் தமிழ்' —பெரிய திருமொழி.

இன்னோரன்ன கூற்றுக்கள், சங்கத்தின் உண்மையை உறுதிப்படுத்துகின்றன. இனிச் சங்கத்து நூல்களில் 'சங்கம்' என்ற சொல் வழங்காமை ஒன்றை வைத்துக்கொண்டே, சங்கத்தின் உண்மையை மறுக்கலாகாது. தேவாரம் முதலிய நூல்களில்தான் முதன் முதலில் 'சங்கம்' என்ற சொல் காணப்படுகிறது. வேத காலத்து வடமொழி இலக்கியத்தில் சங்கம் என்ற ஒரு சொல் இல்லையென அறிஞர் கூறுகின்றனர்.

இதிகாசங்களில் சங்கம் என்ற சொல் ஒரு சாதாரணக் கூட்டத்தைக் குறிக்கின்றது. பின்பு, சமண பௌத்தர் காலத்தில்தான் சங்கம் 'சத்சங்கம்' என்ற பொருளில் வழங்கப்பட்டிருக்கிறது.

உரையாசிரியர் எல்லோரும் சங்க உண்மையை உடன்படுகின்றனர்.

இதனால், பண்டைக் காலத்தில் மதுரையில் தமிழாய்வதற்கு ஒரு புலவர் கூட்டம் இருந்தது என்பதும், பின்னர் அதற்குச் சங்கம் என்று பெயர் வந்து வாய்த்திருக்கக்கூடும் என்பதும் தெரிய வருகின்றன. மேலும், முதல், இடைச் சங்க நூல்கள் இன்று வழக்கில் இல்லாத ஒரு காரணம் பற்றியும் சங்க உண்மையை மறுப்பதற்கில்லை. "பெருங் கதை" அல்லது உதயணன் கதையை இயற்றிய 'கொங்கு வேள்' என்பவருடைய தமிழ்க்கல்வியின் பெருமையை விளக்க வந்த உரையாசிரியர் அடியார்க்குநல்லார், சிலப்பதிகார உரைப்பாயிரத்தில், "இரண்டாம் ஊழிய தாகிய கபாடபுரத்தில் இடைச் சங்கத்துத் தொல்காப் பியம் புலப்படுத்திய மாகீர்த்தியாகிய நிலந்தருதிரு விற் பாண்டியன் அவைக்களத்து அகத்தியனாரும், தொல்காப்பியனாரும், சிறுபாண்டரங்கனாரும், மதுரை ஆசிரியர் மாறனாரும், துவரைக் கோமானும், கீரந்தை யாரு மென்றித் தொடக்கத்தார் ஐம்பத்தொன்பதின் மர் உள்ளிட்ட மூவாயிரத்து எழுநூற்றுவர் தம்மாற் பாடப்பட்ட கலியும், குருகும், வெண்டாளியும் முத லிய செய்யுளிலக்கிய மாராய்ந்து செய்த உதயணன் கதையுள்ளும்" என்று எழுதி யிருப்பதை நோக்க, அக் கொங்குவேள் காலத்தில் இடைச் சங்க நூல்களிற் சில இருந்தன என்பதும், அவை அவராலும், அக்காலத்தி லிருந்த ஏனையோராலும் ஆராயப் பெற்று வந்தன என்பதும் தெரிகின்றன. "அவை கொங்கு வேளிரால் ஆராயப் பெற்றதற்கு மேற்கூறிய உதயணன் கதை யிற் காணப்படும் சில அரும்பதங்களுக்கும், இனிய வாக்கியங்களுக்கும், அரிய பழைய நூல்களின் கருத் துக்களுக்கும் இக்காலத்தில் வழங்கிவரும் கடைச் சங்க நூல் முதலியவற்றில் ஆதாரம் கிடையாமையே

தக்க சாட்சியாகும்'' என்று டாக்டர் ஐயர் அவர்கள் தமது 'சங்ககாலத் தமிழும் பிற்காலத் தமிழும்' (பக்கம்–8) என்ற நூலிற் கூறிப் போந்தமையைக் காண்க.

**கடைச் சங்க காலம்**

கடைச்சங்கத்தின் காலத்தை இது என்று முடிவாக இதுகாறும் யாரும் வரையறுக்கவில்லை. எனினும், இதுபற்றிப் பலர் ஆராய்ச்சிகள் நிகழ்த்தியுள்ளனர். அவ்வாறு ஆராய்ந்த எல்லோரும் கடைச் சங்கத்தின் இறுதியைப் பல்வேறு காலங்களில் வைத்துக் கொள்கிறார்கள். கடைச் சங்க காலம் கி.பி. பத்தாம் நூற்றாண்டாக இருக்குமென்று டாக்டர் கால்டுவெல் கருதியுள்ளார். கி.பி. எட்டாம் நூற்றாண்டு தான் என்று திரு எல். டி. சாமிக்கண்ணுப் பிள்ளை அவர்கள் துணிந்து கூறுகின்றார்கள். இனி, திரு வெங்கையா, திரு மு. இராகவய்யங்கார் ஆகியோர் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டு என்று அறுதியிட்டுக் கூறுகின்றனர். கி. பி. இரண்டாம் நூற்றாண்டே கடைச் சங்கத்தின் இறுதிக்காலமெனத் திரு.வி. கனக சபைப் பிள்ளை அவர்களும், டாக்டர். கிருஷ்ணசர்மி அய்யங்கார் அவர்களும் வரையறுத்துள்ளார்கள். கி.பி. முதல் நூற்றாண்டு என, திரு. எம். எஸ். பூரண லிங்கம் பிள்ளை கூறுகிறார். இனிக் கடைச் சங்க காலம் கி.மு. 300 முதல் கி.பி. 200 வரை அல்லது கி.மு. 200 முதல் கி.பி. 300 வரை என்று த. ச. துரைசாமிப் பிள்ளை கூறுகிறார். கி. பி. முதல் நூற்றாண்டாகவே இருக்க வேண்டுமென்று கா. சுப்ரமணியபிள்ளை, வி. ரா. இராமச்சந்திர தீட்சிதர், டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் போன்றோர் கூறுகின்றனர். இவ்வாறு

கடைச் சங்க காலத்தைப் பற்றிய பல முடிவுகள் உள்ளன.

இவற்றுள், டாக்டர் கால்டுவெல் கூறிய கருத்தினை ஏற்பதற்கில்லை. அவ்வாறெனில், கி. பி. ஏழாம் நூற்றாண்டு தொடர்ந்து செல்வாக்குப் பெற்ற சைவக் குரவர் நால்வருக்கும், கி. பி. ஆறும் நூற்றாண்டுக்கு முன்பு சிறப்புப் பெற்றிருந்த முதல் மூன்று ஆழ்வார்களுக்கும், ஏனைய ஆழ்வார்களுக்கும் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகிய மேற்கணக்கு நூல்கள் தெரிந்திருக்க இயலாது. அவர்கள் மேற்கணக்கு நூல்களில் இருந்து பல மேற்கோள்களை எடுத்தாண்டுள்ளார்கள். அந்நூல்களின் கருத்துக்களையும் எழுத்துக்களையும் தனித்தனிப் பாசுரங்களிலும் பதிகங்களிலும் அமைத்துக் கொண்டுள்ளார்கள். அவர்கள் சங்க வரலாற்றினையும் எடுத்துக் குறிப்பாகவும், வெளிப்படையாகவும் பொறித்துள்ளனர். எனவே, இவை நோக்கிய விடத்து, கால்டுவெலின் கருத்துப் பொருந்தாது.

> **“ஆடித் திங்கள் பேரிருட் பக்கத்து**
> **அழல்சேர் குட்டத்து அட்டமி ஞான்று**
> **வெள்ளி வாரத்து ஒள்ளெரி உண்ண”**

என்று சிலப்பதிகாரத்தில் வரும் சில வானநூற் குறிப்புக்களைக் கொண்டு திரு. எல். டி. சாமிக்கண்ணுப் பிள்ளை அவர்கள் கி. பி. எட்டாம் நூற்றாண்டே (கி. பி. 756 ஜூலை 23ஆம் நாள்) என்று குறிப்பிடுகின்றார். பிள்ளை அவர்கள் கூறிய கால வரையறை பொருந்தாதென்று திரு. கே. ஜி. சங்கரய்யர் அவர்கள் அந்த சோதிடக் குறிப்புக்களையே ஆராய்ந்து பார்த்து மறுத்துள்ளார்.

மேலும், அப்பர் தனது தேவாரத்தில் "நன் பாட்டுப் புலவனாய்ச் சங்கமேறி" எனப் பாடியுள்ளார். எனவே, அப்பர் பெருமானுக்கு நக்கீரர் வரலாறு தெரிந்திருக்கிறது. அப்பரும் சம்பந்தரும் சிறுத் தொண்டரும் ஒரே காலத்தவர். அவருள் சிறுத் தொண்டர் வாதாபிப் போர் நடத்தியவர். அப்போர் நடந்த காலம் கி. பி. 642 என்பது வரலாற்றுத் துணிவு. எனவே அப்பர் காலம் கி. பி. 642 தான். அப்பர் நக்கீரர் வரலாற்றைத் தெரிந்திருப்பதால், சங்க காலம் கி. பி. 642க்கு முற்பட்டதாக இருக்க வேண்டும் என்று புலனாகின்றது. இதனால் சாமிக்கண்ணுப் பிள்ளையின் கருத்தையும் ஒப்புக்கொள்ள இயலாது.

நந்தர்கள் தம் பெரிய நிதியத்தைக் கங்கை யில் ஒளித்திருந்தமை, மௌரியர்தம் தென்னாட்டுப் படையெடுப்பு ஆகிய வரலாற்றுச் செய்திகள் அகநானூற்றில் வருகின்றன. அவைகளை ஆதார மாகக் கொண்டு கடைச்சங்க காலம் கி. பி. ஐந்தாம் நூற்றாண்டு எனத் திரு. மு. இராகவய்யங்கார் குறித் துள்ளார். இவை புராணச் செய்திகளாக வேண்டும் என்றும், வரலாற்றுச் செய்திகள் ஆகா என்றும் திரு. வையாபுரிப் பிள்ளை தனது "இலக்கியச் சிந்தனைகள்" என்ற நூலில் கூறுகின்றார். மௌரியர் ஓரியர் என்று பாடப் பட்டுள்ளதாக அவரே கூறு கின்றார். மு. இராகவய்யங்கார் மௌரியர் படை யெடுப்பைக் குப்தர் படையெடுப்பெனக் கொண்டு சேரன் செங்குட்டுவனது காலத்தைக் கி. பி. ஐந்தாம் நூற்றாண்டு என்றும், அவனைப்பாடும் பதிற்றுப் பத்தும் அக்காலத்து நூலே என்றும் கூறுகின்றார். இனித் திரு. அய்யங்காரின் கருத்துப்படி, சிலப்பதி காரமும் ஐந்தாம் நூற்றாண்டு என்று கொள்ளல்

வேண்டும். அவ்வாறெனின், செங்குட்டுவன் காலத்தவனான கடல்சூழ் இலங்கைக் கயவாகு வேந்தனும் ஐந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்திருக்க வேண்டும். ஆனால் இலங்கை "மகாவம்சம்" கயவாகு என்ற பெயரால் சிங்கள நாட்டிலே இரு மன்னர்கள் இருந்ததாகக் கூறுகின்றது. முதலவர் இரண்டாம் நூற்றாண்டையும், பின்னவர் பன்னிரண்டாம் நூற்றாண்டையும் சார்ந்தவர்கள். முன்னே கூறிய கருத்துப்படி சிலப்பதிகாரத்தில் காணப்படும் கயவாகுவாக இருந்திருக்க முடியாது. ஐந்தாம் நூற்றாண்டில் வேறு எந்தக் கயவாகுவும் இலங்கையை ஆண்டதாக வரலாற்றுச் சான்றுகள் இல்லை. எனவே, திரு. அய்யங்கார் அவர்களின் கூற்றை ஏற்பதற்கில்லை.

மேலும் சங்க நூல்களும், சிலப்பதிகாரம், மணிமேகலை முதலியவையும் பல்லவர்களைப் பற்றி யாதொன்றும் குறிப்பிடவில்லை. பல்லவர்கள் கி. பி. மூன்றாம் நூற்றாண்டின் இடையில் தொண்டை நாட்டையும் நடு நாட்டையும் கைப்பற்றிப் பேரரசர்களாக ஆண்டு வந்தனர்.* மூவேந்தர்களையும், வேளிர்களையும், மோரியர், நந்தர் போன்ற வட நாட்டு மன்னர்களையும் பாடிய சங்கத்துப் புலவர்கள், பல்லவர் தமிழ் நாட்டில் ஆண்ட செய்திகளைப் குறிப்பிடாதது சிந்திக்கத் தக்கதாகும். எனவே சங்கப் புலவர்கள் பல்லவர் வருகைக்கு (கி. பி. 300) முன்னர் வாழ்ந்தவராதல் வேண்டும். எனவே கடைச்சங்கத்தின் காலமும் கி. பி. 300க்கு முற்பட்டதேயாம்.

---

* அவர்கள் அவ்வாறு தமிழ் நாட்டின் வடபகுதியைக் கைப்பற்றுவதற்கு முன்னர் பல போர்களை நிகழ்த்தியிருத்தல் வேண்டும்.

# அகத்தியனார்

"ஓங்க லிடைவந்து உயர்ந்தோர் தொழவிளங்கி
ஏங்கொலிநீர் ஞாலத் திருள் அகற்றும்—ஆங்கவற்றுள்
மின்னேர் தனியாழி வெங்கதிரொன் றேனையது
தன்னே ரிலாத தமிழ்"

என்ற தண்டியலங்கார உரை மேற்கோள் செய்யுளும்,

'பொதிய மலைப் பிறந்த மொழி'

என்று கவியரசன் பாரதியும் தமிழைப் பற்றிக் கூறியிருப்பதற்குக் காரணம் என்னவெனில், அப் பொதிய மலையின்கண் அகத்தியனார் வீற்றிருந்து தமிழ் ஆய்ந்து அதனை வாழவைத்தமையேதான். தென்னாடு தமிழ் கூறும் நல்லுலக மாதலால், அந் நாட்டு மக்களுடன் இனிது பழகத் தமிழ் இலக்கணத் தைக் கற்பிக்குமாறு இறைவனை வேண்ட, சிவ பெருமான் அவ்வாறே தமிழ்நூலை அகத்தியருக்கு அருளிச் செய்ய, அன்னவர் தமிழ்நாடு போந்து தமிழ் இலக்கணம் செய்தார் என்று பழைய திருவிளை யாடற் புராணம் கூறுநிற்கும். மேலும், 'தமிழொடு பிறந்து பழ மதுரையில் வளர்ந்த கொடி' என்று குமரகுருபரர் அங்கயற்கண்ணியைப் பரவுகிறார். இவற் றால் அகத்திய முனிவர் தமிழ் நாட்டிற்கு வந்து தமிழ் இலக்கணத்தை இயற்றி அருளுதற்கு முன்னமேயே இத்தொன்னிலத்தில் தமிழ் பேசப்பட்டிருந்தது என் றும், தமிழ் மொழியின் நலிவினை அகத்தியரே நீக்கி வாழவைத்தார் என்றும், அதனால்தான் அகத்தியனார் தமிழைப் படைத்தார் என்றும், தமிழ் அவர் வாழ்ந்த பொதியமலையிற் பிறந்தது எனக் கூறுவர் என்றும் டாக்டர் ஐயர் அவர்கள் கருதுகின்றனர்.

அகத்தியர் இயற்றிய இலக்கண நூல் அகத்தியம் எனப்படும். இது முத்தமிழுக்கும் உரிய நூலாகத் திகழ்ந்தது என்பர். அகத்தியம் முதல் இரண்டு சங்கங்களுக்கும் இலக்கண நூலாக விளங்கியது என்று களவியலுரை கூறுகிறது. இவ்வாறு முத்தமிழ் இலக்கணத்தையும் படைத்துப் பரவச் செய்த அக்குறு முனியைத் தமிழ்ப்புலவர் யாவரும் ஆதி ஆசிரியராகக் கருதிப் போற்றுகின்றனர்.

**"தமிழெனும் அளப்பரும் சலதி தந்தவன்"**

**"தழற்புரை நிறக்கடவுள் தந்ததமிழ் தந்தான்"**

**"தமிழ் மாமுனி"**

**"என்றுமுள தென்றமிழை இயம்பிஇசை கொண்டான்"**

இவ்வாறெல்லாம் கம்பநாடர் அகத்தியரைப் போற்றுகின்றார்.

சமண சமயத்தைச் சார்ந்த யாப்பருங்கலக் காரிகை ஆசிரியர் குணசாகரரும்,

**"கானார் மலயத் தருந்தவன் சொன்ன கன்னித் தமிழ்நூல்"** என்று குறிக்கின்றார்.

பௌத்த சமய நூலாகிய வீரசோழியம்,

**"ஆயுங் குணத்தவ லோகிதன் பக்க லகத்தியன்கேட்**
**டேயும் புவனிக் கியம்பிய தண்டமிழ்"**

என்று பாடுகிறது.

தண்டியலங்காரஉரை மேற்கோள் செய்யுளும்,

**"மூவாத் தமிழ்பயந்த முன்னூன் முனிவாழி"**

என்று இசைக்கின்றது.

வைணவப் பெரியாராகிய வில்லிபுத்தூரார்,

"அகத்தியன் பயந்த செஞ்சொல் ஆரணங்கு"

என்று அவரைப் பெருமைப் படுத்துகின்றார்.

அகத்திய முனிவரிடம் முத்தமிழும் பயின்றாருள், இயற்றமிழ் பயின்றவர்கள் தொல்காப்பியர் உள்ளிட்ட பன்னிருவர் என்பர்.

இதனைப் புறப்பொருள் வெண்பா மாலைச் சிறப்புப் பாயிரம் பின்வருமாறு கூறுவது காண்க:

"மன்னிய சிறப்பின் வானோர் வேண்டத்
தென்மலை யிருந்த சீர்சால் முனிவரன்
தன்பால் தண்டமிழ் தாவின் றுணர்ந்த
துன்னருஞ் சீர்த்தித் தொல்காப் பியன்முதற்
பன்னிரு புலவரும்"

இனி,இசைத் தமிழைக் கற்று இலக்கணம் இயற்றியவர்கள் சிகண்டி முதலியோர் என்றும், முறுவல், சயந்தம் முதலிய நூலுடையோர் நாடக இலக்கணத்தை இயற்றினரென்றும், தொல்காப்பியத்திற்கு முன்பாகவே அவிநயம் என்றதொரு நூல் இயற்றப் பட்டதென்றும், தண்டலங்கிழவன் இராசபவித்திரப் பல்லவதரையன் என்பான் அந்நூலுக்கு மிகச் சிறந்ததோர் உரை செய்தான் என்றும் நன்னூல் மயிலைநாதர் உரை தெரிவிக்கின்றது.

இனி, அகத்தியர் பொதிய மலையில் மிகச் சிறந்த தமிழ்ச்சங்கம் ஒன்றை நிறுவித் தமிழ் ஆராய்ந்த செய்தியும் பல நூல்களில் பேசப்படுகின்றது.

சீதையைத் தேடுதற்காகச் செல்லும் வானர வீரர்களை நோக்கிச் சுக்கிரீவன்,

"தென்றமிழ்நாட் டகன்பொதியில் திருமுனிவன்
தமிழ்ச்சங்கம் சேர்கிற் பீரேல்
என்றும் அவண் உறைவிடமாம்"

என்று கூறியதாகக் கம்பர் கிட்கிந்தா காண்டத்தில் நாடவிட்ட படலம் 31ஆம் செய்யுளில் குறித்தமை காண்க.

இன்னோரன்ன கூற்றுக்களால், தமிழ்கூறும் இத்திருநாட்டிற்கு வடநாட்டிலிருந்து போந்தவர் அகத்தியர் என்றும், அவர் தமிழை ஆய்ந்து அதனுக்கு ஓர் இலக்கணத்தை இயற்றித் தந்தார் என்றும், அவரது நூலின் வழியிலேயே தொல்காப்பியர் இலக்கணம் செய்து தந்தார் என்றும் தெரியவருகின்றன. எனினும், கடைச்சங்க நூல்களுக்குத் தொல்காப்பியமே இலக்கண நூலாகக் கருதப்பட்டது என்று களவியலுரை கூறுவதை நோக்குங்கால், அக்காலத்திலேயே அவரது நூல் கிடைத்திலது என்று தெரிகிறது. எனவே, இன்று அந்நூல் காணப் பெறுமையில் வியப்பொன்றுமில்லை. கிடைக்கும் ஒரு சில சூத்திரங்களும் உண்மையில் அந்நூலைச் சார்ந்தனவா என்ற ஆராய்ச்சிக்குரியவையாக இருக்கின்றன. இப்பெரு நூல் அழிந்தமை தமிழுக்கொரு பேரிழப்பேயாகும்.

## தொல்காப்பியம்

"ஒல்காப் புலமைத் தொல்காப்பியர்" என்று புலவர் பெரு மக்களால் பாராட்டப் பெற்றவர் தொல்காப்பியர். அன்னார் இயற்றிய 'தொல்காப்பியம்' என்ற இலக்கண நூலே, இன்று தமிழிற் கிடைக்கும் நூல்கள் யாவற்றினும் மிகப் பழமையானதாகும். ஆசிரியரைப் பற்றியும் அவர்தம் மாண்புறு நூலைப்

பற்றியும் இதுகாறும் நிகழ்ந்த ஆராய்ச்சிகள் பல. ஈண்டு, அவற்றுள் இன்றியமையாதன சிலவற்றை நோக்குவோம்.

"வட வேங்கடம் தென்குமரி
ஆயிடைத்
தமிழ்கூறும் நல்லுலகத்து
வழக்கும் செய்யுளும் ஆயிரு முதலின்
எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி
செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு
முந்துநூல் கண்டு, முறைப்பட எண்ணி,
புலம்தொகுத் தோனே போக்கறு பனுவல்
நிலம்தரு திருவின் பாண்டியன் அவையத்து
அறங்கரை நாவின் நான்மறை முற்றிய
அதம்கோட்டு ஆசாற்கு அரில்தபத் தெரிந்து
மயங்கா மரபின் எழுத்துமுறை காட்டி,
மல்குநீர் வரைப்பின் ஐந்திரம் நிறைந்த
தொல்காப் பியன்எனத் தன்பெயர் தோற்றிப்
பல்புகழ் நிறுத்த படிமை யோனே"

என்பது, தொல்காப்பியத்திற்குப் பனம்பாரனுர் எழுதிய சிறப்புப்பாயிரம். தொல்காப்பியரைப் பற்றிய ஒரு சில முக்கியச் செய்திகளை அறிவதற்கு உதவும் முதற்சான்றென இதனைச் சொல்லுவர் அறிஞர்.

இப்பனம்பாரனுர் தொல்காப்பியருடன் பயின்ற ஒரு சாலை மாணவர் என்பர். எனவே இவர்தம் கூற்று தொல்காப்பியரைப்பற்றிய உண்மை வரலாற்றுக்குறிப்பாக உதவும் எனக் கொள்வதில் தவறேதுமில்லை. இனிப் பனம்பாரனுர் கூறுவதை நோக்குவோம்.

'தமிழ் கூறும் நல்லுலகத்து
வழக்கும் செய்யுளும் ஆயிரு முதலின்
எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி'

என்றமையால், தொல்காப்பியர் தமிழகத்தில் வழக்காற்றில் வழங்கிவந்த பேச்சுமொழியையும், செய்யுள் மரபுகளையும் நன்கு ஆராய்ந்து, எழுத்தும் சொல்லும் பொருளும் நாடித் தம் நூலை யாத்தனர் என்பது விளங்கும். "முந்து நூல்கண்டு முறைப்பட எண்ணி" என்பதால், தொல்காப்பியம் எழுதுவதற்கு முன்னரே தமிழகத்தில் எழுத்து, சொல், பொருள் பற்றிக்கூறும் விரிவான இலக்கணநூல் இருந்தது என்றும், அதன் வழியே தம் கருத்தையும் மிடைந்து தொல்காப்பியர் தம் நூலை யாத்திருக்கவேண்டும் என்பதும் தெளிவாகும்.

அந்த நூல், அகத்தியரின் இலக்கண நூலாகத்தான் இருத்தல்வேண்டும். ஏனெனில், அகத்தியரின் பன்னிரு மாணவர்களுள் தொல்காப்பியரும் ஒருவர். இவ்வாறு பலர் கருதுகின்றனர். ஆயின், தொல்காப்பியர் அகத்தியரின் மாணவர் என்பதற்குச் சான்றுகள் அதிகமில்லை. பனம்பாரனாரின் சிறப்புப்பாயிரத்தில் கூட அகத்தியர்தம் பெயர் குறிப்பிடப்படாதது நோக்கத் தக்கது. எனினும் முந்துநூல் என்றமையால், அகத்தியமோ வேறு எந்த நூலோ ஒன்று இருந்தது என்பது தேற்றம். அந்த நூலையும், தொல்காப்பியர் காலத்தில் பேச்சு வழக்காக இருந்த தமிழ்மொழியையும் நுண்ணியதின் ஆய்ந்து தொல்காப்பியம் இயற்றப்பட்டது. இனித் தொல்காப்பியர் தம் நூலை நிலந்தருதிருவிற் பாண்டியன் அவைக்களத்தில் அரங்கேற்றினர் என்றும், அறம்கரை நாவின் நான்மறை முற்றிய அதங்கோட்டு ஆசானுக்கு அரில்தப (ஐயமற, தெளிவுற)எடுத்துரைத்துத் தம் போக்கறு பனுவலை நிலைநாட்டினர் என்பதும் அறியக் கிடக்கின்றன.

அகத்தியமும் தொல்காப்பியமும் இடைச்சங்கத்தாருக்கு நூல்களாக விளங்கின எனக் களவியலுரை கூறும். எனவே அந் நிலந்தருதிருவிற் பாண்டியன் இடைச்சங்க காலத்தைச் சார்ந்தவன் ஆவான் என்பர்.

இனி, 'ஐந்திரம் நிறைந்தவர்' எனத் தொல்காப்பியரைப் பனம்பாரனுர் குறிப்பிடுகின்ருர். ஐந்திரம் என்பது வடமொழி இலக்கணங்களுள், இந்திரனுல் செய்யப்பட்டதொன்ருகும். இது பாணினிக்கு முற்பட்டதென்று பலரும் கொள்வதால், தொல்காப்பியர் பாணினிக்கு–கி.மு. 5ஆம் நூற்ருண்டிற்கு முற்பட்டவர் என்று அறிஞர் கூறுவர். 'தொல்காப்பியன் எனத் தன் பெயர் தோற்றி' என்றமையால் அவரது இயற்பெயரே அதுதான் என்பர். ஆயின், இக்கூற்றிற்கு நச்சினர்க்கினியர் 'ஐந்திரவியாகர்ணத்தை நிறைய அறிந்த பழைய காப்பியக்குடியிலுள்ளோன் எனத் தன் பெயரை மாயாமல் நிறுத்த' என்று பொருள் கூறுவர். நச்சினர்க்கினியரைத் தவிர ஏனைய உரையாசிரியர்களும் தொல்காப்பியரைப் பழைய காப்பியக்குடியில் வந்தோர் என்பர். 'குறுக்கையர் குடி', 'சேக்கிழார் மரபு' என்பன போலக் காப்பியக்குடியும் ஒரு மரபாக இருந்தது, என்பர் பேராசிரியர் கா. சு. பிள்ளையவர்கள். எனவே, அவர் இயற்றிய நூல் அவரது பெயரைத் தாங்கித் தொல்காப்பியர் என்று அழைக்கப்படுகிறது. ஒருசிலர் தொல்காப்பியம் என்பது தொல்—காப்பு—இயம் என்னும் மூன்று சொற்களால் ஆயதெனக் கொண்டு, பழமையான மொழிப் பாதுகாப்பு நூலென்று பொருள் கூறுவார் என்பர் அன்னுர்.

இனித் தொல்காப்பியரைச் சமண சமயத்தைச் சார்ந்தவர் என்று அச்சமயத்தார் கூறுவர். பனம்

பாரனுர் அவரைப் 'பல்புகழ் நிறுத்த படிமையோன்' என்பதாலும், உயிர்களை அறிவு நிலைபற்றி அவர் ஆறுக வகுத்திருப்பதாலும், தமிழ் நெடுங்கணக்கினை அகரமுதலாக னகராஈருக அமைத்திருப்பதாலும், மாத்திரையின் இலக்கணத்தைச் சமணநூல் முறைப்படி விளக்குவதாலும், தாமரை, வெள்ளம், ஆம்பல் என்ற பேரெண்களைச் சமணர்நூல் முறைப்படியே எடுத்து இலக்கணம் விதித்திருப்பதாகக் கருதுவதாலும், வேறு பல காரணங்களாலும் தொல்காப்பியரைச் சமணர் என்று கூறுவர் அன்னுர். ஆயின், தொல்காப்பியர் கூறவந்தது தமிழ் இலக்கணமே; சமண சமயம் அன்று. தொல்காப்பியர் காலத்தில் சமண சமயம் தமிழ்நாட்டில் பரவியிருந்ததால் அச்சமயத்தாருக்கு உடன்பட்ட சில கருத்துக்கள் தமிழில் வழங்கியிருக்கலாம். எனவே, மொழி ஆராய்ச்சி செய்த தொல்காப்பியர் வழக்கையும் செய்யுளையும் நாடி இலக்கணம் அமைத்தாரே அன்றிச் சமண சமயக் கருத்துக்களை மட்டிலும் கூறவரவில்லை. அதனுல் இக் காரணங்களை மட்டிலும் கொண்டு அவர் சமண சமயத்தவர் என்று துணிவதற்கில்லை. ஆயின், 'தொல்காப்பியர் சைனரென்று உறுதி கூற முடியாமற் போனுலும், அவர் நூல் கொண்டு தமிழ் வழக்கில் சமணக் கொள்கைகள் பரவியதனைத் தெளிவாக அறியலாம்' என்று பேராசிரியர் தெ. பொ. மீனுட்சி சுந்தரனுர், தமது 'சமணத் தமிழ் இலக்கிய வரலாறு' என்ற நூலில் கூறிப் போந்தனர்.

தமிழில் உள்ள நூல்கள் யாவற்றிலும் மிகப் பழைமை வாய்ந்தாய் இன்று நம் கைக்குக் கிடைப்பது தொல்காப்பியமே. தொல்காப்பியருடைய விதிகள் பல சங்ககாலத்திலேயே வழக்கொழிந்து வீழ்ந்தன.

உவம உருபுகளினிடையே அவர் காணும் வரையறை, மரபியலில் அவர் கூறும் சில சிறப்பு வழக்குகள், வியங்கோள் படர்க்கையிலன்றி வாராதென்று அவர் கூறுதல், சகரம் அகரத்தோடு மொழி முதலாகாது என்னும் விதி, செல், வா என்ற பகுதிகளின் சிறப்பு வழக்கு என்ற இவை சங்கநூல்களில் விதியாக் அமையாமையை உரையாசிரியர்களே எடுத்துக் காட்டு கிறார்கள். எனவே, 'தொல்காப்பியம்', கி.பி. இரண்டாம் நூற்றாண்டினை ஒட்டியவை என வழங்கும் சங்க நூல் களுக்கும் முந்திய நூலென முடிவு கட்டலாம்' என்று பேராசிரியர் தெ. பொ. மீனாட்சி சுந்தரனார் அவர்கள் கூறுவது காண்க. (சமணத் தமிழ் இலக்கிய வரலாறு.)*

இந்நூல் ஓர் இலக்கண நூலாகும். வடமொழியில் வியாகரணம் சொல்லை மட்டிலுமே ஆராய்கின்றது; ஆனால் தொல்காப்பியர் எழுத்துக்களையும் ஆராய்கின்றார்; செய்யுளின் இலக்கணத்தையும், அதன் உயிர் நிலை போன்ற மெய்ப்பாடு, இறைச்சி, உள்ளுறை, உவமை, மரபு ஆகியவற்றையும் விளக்குகின்றார். மேலும் செய்யுளில் வரத்தக்க பொருள்களையும் பழைய தமிழ் மரபிற்கிணங்கத் தொல்காப்பியம் அறிவுறுத்துகின்றது.

இனி, இந்நூல் எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரம் என்று முப்பெரும் பிரிவுகளையுடை

---

* ஆயின் நச்சினார்க்கினியர் போன்றவர்கள் வேத வியாசர் வேதத்தை நான்காக வகுப்பதற்கு முன்பே தொல் காப்பியர் தமது நூலை யாத்துவிட்டனர் என்ப. இதனால் தொல்காப்பியத்தின் தொன்மை விளங்கும்.

யது. ஒவ்வோர் அதிகாரமும் ஒன்பது உட்பிரிவு களாக, இயல்களாக விரியும்.

**எழுத்ததிகாரம்:** நூல்மரபு, மொழிமரபு, பிறப்பியல், புணரியல், தொகைமரபு, உறுப்பியல். உயிர்மயங்கியல், புள்ளிமயங்கியல், குற்றியலுகரப் புணரியல் என்று ஒன்பது உட்பிரிவுகளைக் கொண்டது இவ்வதிகாரம். இப்பகுதியில் தமிழ் மொழிக்கு இன்றியமையாத முதல் எழுத்துக்களையும், சார்பு எழுத்துக்களையும் பற்றிக் கூறப்பட்டுள்ளது. மொழிக்கு முதலிலும் ஈற்றிலும் வரும் எழுத்துக்கள் எவை எவை என வரையறுக்கப்பட்டுள்ளன. அவ்வெழுத்துக்களின் பிறப்பும், புணர்ப்பும், வரிசையும், வகுப்பும் விளக்கப்பட்டுள்ளன. நன்னூலார் கூறுவதுபோல் 10 சார்பெழுத்துக்களைத் தொல்காப்பியர் காட்டாது குற்றியலுகரம், குற்றியலிகரம், ஆய்தம் என்ற மூன்றையே சார்பெழுத்துக்களாகக் குறிப்பது நோக்கற்பாலது.

தமிழ் எழுத்துக்களின் ஒலிவடிவின் பிறப்புக்களைப் பற்றித் தொல்காப்பியர் செய்துள்ள ஆராய்ச்சி, இன்றைய மொழி நூல் அறிஞர்களையும் திகைக்க வைக்கின்றது.

**சொல்லதிகாரம்:** இப்பகுதியின்கண் கிளவியாக்கம், வேற்றுமையியல், வேற்றுமை மயங்கியல், விளிமரபு, பெயரியல், வினையியல், இடையியல், உரியியல், எச்சவியல் என்று ஒன்பது இயல்கள் அடங்கியுள்ளன. இவற்றுள், திணை, பால், எண், இடம் முதலியனவும், வேற்றுமை வகைகளும், அவற்றின் மயக்கமும், தெரிநிலை, குறிப்பு, ஏவல், வியங்கோள் ஆகிய வினை வகைகளும், சொல்லின் முதல்.

று, இடைநிலை, சந்தி, சாரியை, விகாரம் என்ற ஆறு உறுப்புக்களும், பெயர், வினை எச்சங்களும், இடை, உரிச் சொற்களும் விளக்கப்பட்டுள்ளன. இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என்ற நான்கும், ஆறு தொகை வகைகளும், பத்துவகை எச்சங்களும், சொல் மரபுகளும், ஆட்சியும் விரித்துக் கூறப்பட்டுள்ளன. தொல்காப்பியரின் பகுத்தறிவிற்குட்பட்ட திணைப்பாகுபாட்டு அமைப்பினை டாக்டர் கால்டுவெல் போன்றவர்கள் பாராட்டி வியக்கின்றனர்.

**பொருளதிகாரம்:** இவ்வதிகாரமும் ஒன்பது இயல்களைக் கொண்டு திகழ்கிறது. அவை அகத்திணையியல், புறத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல், மெய்ப்பாட்டியல், உவமவியல், செய்யுளியல், மரபியல் என்பனவாம்.

பொருள் என்ற சொல் பல்வேறு நிலைகளில் பல்வேறு பொருள் படும். சுருக்கமாக வாழ்க்கையே அதனுள் அடங்கும் எனலாம். வாழ்க்கை—மக்கள் வாழ்க்கை இருவேறு நிலைகளில் நிகழ்கின்றது. துணையோடு இணைந்து, அன்பாற் பிணைந்து வாழும் அன்பு வாழ்க்கை ஒன்று; உறவோடுஒன்றிச் சுற்றமாக வாழும் புற வாழ்க்கை மற்ருென்று. முன்னதை அகம் என்றும், பின்னதைப் புறம் என்றும் தொல்காப்பியம் கூறுகிறது. அகத்திணை இயலும் புறத்திணை இயலும் இவற்றையே பேசுகின்றன. குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல், பெருந்திணை, கைக்கிளை என்ற எழும் அகத்திணைக்குரிய ஒழுக்கங்கள். திணையாவது ஒழுக்கமே. முன்னவை ஐந்தும் காதலர் இருவர் கருத்தொருமித்து வாழும் வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டதனுல், அன்பின் ஐந்திணை எனப்படும். பெருந்திணை

என்பது பொருந்தாக் காமம். கைக்கிளை என்பது ஒருதலைக்காமம். அன்பு வாழ்க்கை களவு, கற்பு என இருவகைப்படும். வரைவிற்கு—திருமணத்திற்கு முன்னர்த் தலைவனும் தலைவியும் பிறர் அறியாமல் மறைவாகக்—களவாகச் சந்தித்து அன்பை வளர்த்துக் கொள்வதே களவெனப்படும். திருமணத்திற்குப் பின்னர் அவ்விருவர் கூடியும் ஊடியும் வாழும் வாழ்க்கை கற்பெனப்படும். இரண்டிற்கும் அன்பே அடிப்படை. இதனை அகத்திணையியல் இயற்கையின் பின்னணியுடன்காட்டுகின்றது. முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்ற மூன்று உறுப்புக்களும் காட்டுவன அவையே. நிலமும் பொழுதும் முதற்பொருளாம். தெய்வம், உணவு, விலங்கு, மரம், பறவை, பறை, தொழில், யாழ் என்பன கருப்பொருள்கள். புணர்ச்சி, பிரிவு, இருத்தல், இரங்கல், ஊடல் என்பன முறையே குறிஞ்சி, பாலை, முல்லை, நெய்தல், மருதத் திணைகளுக்குரிய உரிப்பொருள்களாகும்.

அறம், பொருள், இன்பம் என்ற மூன்றனுள் இன்பம் அகத்திணைக்குரியது என்றும், ஏனைய இரண்டும் புறத்திணையின் பாற்படும் என்றும் உரையாசிரியர் முதலானோர் கூறுவர். இது, வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் என ஏழு வகைப்படும். இவற்றைப் புறத்திணையியல் விரித்துப் பேசுகின்றது.

உள்ளத்துணர்வுகள் உடலில் பல்வேறு குறிகளாக விளங்கித் தோன்றுதல் மெய்ப்பாடாகும். இதனை,

> **"நகையே அழுகை இளிவரல் மருட்கை**
> **அச்சம் பெருமிதம் வெகுளி உவகை என்று**
> **அப்பால் எட்டே மெய்ப்பாடு என்ப"**

என்று மெய்ப்பாட்டியல் வியக்கத் தக்க முறையில் விளக்கிக் கூறுகிறது.

இனி, இப்பொருளைப் பற்றிப் பேசும் செய்யுளின் அழகினைக் காட்டும் அணிகளில்எல்லாம் தலையாய உவமை அணியினையே தொல்காப்பியர் உவமவியலில் கூறுகின்றார். பிற்காலத்தில்தான் இவ்வுவமை அணியைப் பல்வேறு பிரிவுகளாகப் பிரித்து அணியிலக்கணம் என்று செய்தனர். தொல்காப்பியர் ஆசிரியப்பா, வெண்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்ற நால் வகைப் பாக்களையும், பரிபாடல், மருட்பா போன்றவற்றையுமே பற்றிப் பேசுகிறார். அவற்றின் பாவினங்களைப்பற்றி யாதும் கூறவில்லை. பேச்சு வழக்கிலும் புலனெறி வழக்கிலும் பயின்று வந்த பல்வேறு மரபுகளைப்பற்றிப் பேசுகிறது மரபியல்.

தொல்காப்பியர் அமைத்துள்ள அதிகார, இயல் பாகுபாடுகளும், அவற்றின் பெயர், அமைப்பு, பொருள் அடைவு, நூற்பா அடைவு முதலியனவும் சிறந்த கட்டுக்கோப்புடையன. மொழியைப் பற்றி இவர் நிகழ்த்திய ஆராய்ச்சி, இன்றையமொழியில் கூறினால், மிகவும் அறிவியற் சார்புடையதாக அமைந்திருப்பது நுண்ணறிவுடையோருக்கு நன்கு புலனாகும். மொழி என்பது உயிர்ப்பண்புள்ளது. அதற்கு வளர்ச்சி என்பது தவிர்க்க முடியாதது. எனவே காலந்தோறும் பல மாறுபாடுகள் ஏற்படுவது இயல்பு. இதனை மனத்திற் கொண்டு தாம் கூறிய முடிவுகள் காலத்திற்குத் தகுந்தாற் போல் மாறுபடின் அறிவுடையோர் அவற்றைக் கடியாது ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கூறிப் போந்தார். 'கடிசொல் இல்லைக் காலத்துப் படினே' என்ற அக்கூற்று சிந்திப்பார்தம் சிந்தனையைத் தூண்டவல்லது.

இனி, இத்தொல்காப்பியத்திற்கு உரை கண்ட சான்றோர்கள் பற்றிய செய்திகளைப் பின்னர்க் கூறுவோம்.

# மறைவுற்ற தமிழ் நூல்கள்

**சான்று நூல்கள்:** சங்க நூல்கள் என்று பொங்கும் புகழ்பெறும் பாட்டும் தொகையும் ஆகிய நூல்களுக்கு முன்னரும் அடுத்தும் தோன்றிய பல்வேறு தமிழ் நூல்கள், இயற்கையாலும், அரசியல் மாற்றங்களாலும், மக்கள்தம் சமயக் கருத்து வேற்றுமைகளாலும், கால வெள்ளத்தை நீந்தமாட்டாமையாலும் மறைவுற்றழிந்தன. இறையனார் களவியலுரை, யாப்பருங்கல விருத்தி, வீரசோழிய உரை, அடியார்க்கு நல்லார் உரை, புறத்திரட்டு, தொல்காப்பிய உரைகள் ஆகியவைகள் அவ்வாறு மறைவுற்றழிந்த நூல்களைப் பற்றிக் குறிப்பிடுகின்றன. அவ்வாறு குறிப்பிடாது இருந்திருப்பின் அந்தகைய நூல்களின் தோற்றமும் மறைவுமே நமக்குத் தெரியாதொழிந்திருக்கும்.

**மறைந்த நூல்கள் :** அகத்தியம், காக்கைப் பாடினியம், எத்துணையோ பரிபாடல்கள், முதுகுருகு, களரியாவிரை, குருகு, வெண்டாளி, வியாழமாலை அகவல், மாபுராணம், பூத புராணம், இசை நுணுக்கம், சிற்றிசை, பேரிசை, "நூல்", இளந்திரையம், பன்னிரு படலம் போன்ற நூல்கள் இறையனார் களவியலில் எடுத்தாளப்பட்டுள்ளன.

**பஞ்ச பாரதீயம்** என்ற நூல் அடியார்க்கு நல்லார் உரையில் காணப்படுகிறது. இதுவும், பிறநூல்களும்

அவர் காலத்திலேயே அழிந்தமை, "இனி இசைத் தமிழ் நூலாகிய பெருநாரை பெருங்குருகும், பிறவும், தேவ இருடி நாரதன் செய்த பஞ்ச பாரதீயம் முதலாவுள்ள தொன்னூல்களும் இறந்தன" என்ற அடியார்க்கு நல்லார் கூற்றுலேயே புலப்படும். மேலும், அவர் சிலப் பதிகார வேனிற் காதை உரையில் பஞ்ச பாரதீயத்தி லிருந்து ஒரு செய்யுளை மேற்கோளாகக் காட்டியுள்ள னர். ஆயின், அந்நூல் காரிகையாகவும் மகடூஉ முன்னிலையாகவும் இருப்பதால், அது ஒரு தொன்னூல் என்று ஒப்புக்கொள்ள முடியாத நிலையில் இருக்கிறது.

பெருநாரை, பெருங்குருகு ஆகிய இரண்டும் இசைத் தமிழ் நூல்கள். இவற்றையும் அடியார்க்கு நல்லார் தம் உரைப்பாயிரத்தில் குறித்துப் போந்துள்ளனர்.

**இசை நுணுக்கம்:** இந்நூல் அடியார்க்கு நல்லாரா லும் களவியலுரையாலும் பேசப்படுகிறது. இதனை இயற்றியவர் சிகண்டி என்பவர். இவர், தேவ இருடியா கிய குறுமுனிவரின் மாணவருள் ஒருவர். அனுதுல பாண்டியன் தெய்வமங்கை திலோத்தமையுடன் கூடிப் பெற்ற சாரகுமாரனுக்காக இவர் இந்த நூலை யாத் தனர். இந்நூலின் யாப்பு வெண்பா.

# சங்க காலம்

## அகம் - புறம் - விளக்கம்

இலக்கியம் என்பது இயற்கையை—வாழ்க்கையை—காலத்தைக் காட்டும் ஒரு வெற்றுக் கண்ணாடியன்று. இயற்கை யென்னும் பேரொளி கவிஞன் இதயத்தி னூடே புகுந்து வெளியில் விழும்பொழுது அங்குள்ள

கலை உணர்ச்சிகளாகிய பல்வேறு வண்ணக் கலவைகளில் அளைந்து, தட்பவெப்பங்களில் மாறுபட்டுப் புதுமையானதொரு வண்ணத் திருக்கோலத்தை அடைகின்றது. சங்க இலக்கியங்களை ஊன்றிப்படிப்பாருக்கு இவ்வுண்மை விளங்கும். அவை, தாம் பிறந்த காலத்தின் போக்கை, ஒழுக்கைக் காட்டுவன. அதே தருணத்தில், கவிஞன் நெஞ்சில் புடம் போடப் பட்டவை. வண்ணக் கண்ணாடியினூடே பாய்ந்து வரும் ஒளி அவ்வண்ணத்தைப் பூசி வந்தாலும் அடிப்படையில் ஒளி ஒளிதானே. அதுபோன்று கவிஞனின் உணர்ச்சியுடன் பொலிந்தாலும், அதன் அடிப்படை இயற்கையைக் காட்டுவதே ஆகும்; வாழ்வைப் பிரதிபலிப்பதே ஆகும்.

இந்தக் கண்களுடன் சங்க இலக்கியத்தை நோக்குங்கால் அவை காட்டுவன இரண்டே. ஒன்று அகம்; இரண்டாவது புறம். அறம், பொருள், இன்பம், வீடு என்ற உறுதிப் பொருள் நான்கனுள் அறமும், பொருளும், அவை வழி வந்த வீடும் புறத்தைச் சார்ந்தன என்றும், இன்பமே அகமாகும் என்றும் அறிஞர் உரைப்பர். இயற்கையின் மடியிலே தலைவனும் தலைவியும் அன்பினால் பிணைந்து அடையும் இன்பத்தைக் காட்டுவது அக இலக்கியம். அற வழியிலே அமைந்த அரசியல், சமுதாய, பொருளாதார, வீர வாழ்க்கையை விளக்கிக்காட்டுவது புற இலக்கியம். இவர் இன்னார் என்று சுட்டிக் காட்டாது. அன்பால்-காதலால் நிறைந்த உள்ளத்தின் உணர்ச்சியை இயற்கைப் பின்னணியுடன் காட்டுவது அகம். அதன் உணர்ச்சி ஒன்றையே எடுத்துக் கொள்ளின், அது காலம், தொலைவு, இனம், நிறம், மொழி ஆகிய அனைத்தையும் கடந்தது; மனித

சமுதாயம் முழுமைக்கும் பொதுமையானது. இதுவே தமிழ் இலக்கியத்தின் தனிச் சிறப்பாகும்.

இனி, அகம் ஏழு திணைகளாக—ஒழுக்கங்களாக வகுக்கப்பட்டுள்ளது. அவை பெருந்திணை, குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல், கைக்கிளை என்பன. அவற்றுள் இடைப்பட்ட ஐந்து ஒழுக்கங்களும் அன்பின் ஐந்திணை என்று பெரியோரால் போற்றப்பட்டு வருவன. பெருந்திணை என்பது பொருந்தாக் காதல். கைக்கிளை என்பது ஒருதலைக் காமம்; காமஞ்சாலா இளமையோள்வயின் ஏமஞ்சாலாக் காளையோன், அவளது மனத்தை அறியாது தானே பிதற்றுவது என்பர்.

அகத்தைப் போன்றே, புறமும் ஏழு திணைகளைக் கொண்டது. அவை வெட்சி, வாகை, வஞ்சி, உழிஞை, தும்பை, காஞ்சி, பாடாண் என்பன.

பகைவர்தம் புலம் சென்று ஆனிரைகளைக் கவர்தல் வெட்சி; பகைவரைப் புறமுதுகிட்டு ஓடச்செய்து ஆர்த்தல் வாகை; பகைவர் மீது போருக்கு எழுதல் வஞ்சி; அரண்களைத் தாக்கிப் போர் நிகழ்த்துதல் உழிஞை; களம் குறித்துப் போர் செய்தல் தும்பை; புறத்திணைக்குரிய இவ்வைந்தும், முறையே குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய அகத்திணைப் பகுதிகளுடன் தொடர்புடையன. இனி, பல்வேறு நிலையாமைகளைப் பற்றிப் பேசுவது காஞ்சி. இது பெருந்திணையுடன் தொடர்புடையது. ஓர் அரசனது புகழ், ஆற்றல், ஒம்பாஈகை, கருணை போன்ற பல்வேறு பண்புகளைப் பாடுவது பாடாண் திணை. இது கைக்கிளையுடன் தொடர்புடையது என்பர்.

ஒவ்வோர் அகத்திணைக்கும் (அன்பின் ஐந்திணைக்கும்) முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என மூன்று உறுப்புக்கள் உண்டு.

முதல் என்பது நிலமும் பொழுதும் ஆகும். மாயோன் மேய காடும் காடுசார்ந்த இடமும் முல்லைக்கு நிலமாம்; கார்காலமும் மாலைப் பொழுதும் அதன் பொழுதுகள். சேயோன் மேய மலையும் மலைசார்ந்த இடமும் குறிஞ்சியின் நிலம்; கூதிர் காலமும் யாமப் பொழுதும் அதன் பொழுதுகள். வேந்தன் (இந்திரன்) மேய வயலும் வயல்சார்ந்த இடமும் மருதத்தின் நிலம்; வைகறையும், விடியலும் அதன் பொழுதுகள். வருணனுக்குரிய கடலும் கடல் சார்ந்த இடமும் நெய்தலுக்குரிய நிலம்; எற்பாடு என்பது அதன் பொழுது. கொற்றவைக்குரிய வறண்ட நிலம் பாலைக்குரியதாகும்; வேனிலும், பின் பனியும், நண் பகலும் அதன் பொழுதுகள். கடவுள், பறவைகள், விலங்குகள், பூ, மரம், உணவு, பறை, யாழ், தொழில் ஆகியவை கருப்பொருள்கள். ஒவ்வொரு திணைக்கும் கருப்பொருள்கள் வேறுபட்டு அமையும்.

இனி, புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் என்பனவும் அவற்றின் நிமித்தங்களும் முறையே குறிஞ்சி, பாலை, முல்லை, நெய்தல், மருதம் ஆகிய திணைகளுக்குரிய உரிப் பொருள்களாம்.

## சங்க நூல்கள்

சான்றோர் தந்த சங்கத்தமிழ் நூல்கள் என்று இன்று காணக் கிடைப்பன, பாட்டும் தொகையுமே யாம். பதினெண் கீழ்க் கணக்கு நூல்களையும் சிலம்பு,

மேகலை முதலியவைகளையும் சங்க மருவிய நூல்கள் என்பர். இவை தவிர, எண்ணிறந்த நூல்களும் பாக்களும் தமிழர்தம் தவக் குறைவால் மறைந்தொழிந்தன. எனினும் இருப்பதைப் போற்றி இன்பமும் பயனும் கொள்வது அறிவுடைமையாகும்.

## எட்டுத்தொகை

**'நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூ**
**றொத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்**
**கற்றறிந்தா ரேத்தும் கலியோ டகம்புறமென்**
**றித்திறத்த வெட்டுத் தொகை'**

என்ற பழைய வெண்பா ஒன்று நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு என்ற எட்டு நூல்களை நிறுத்த முறையானே எட்டுத் தொகை நூல்களாகக் குறிப்பிடுகின்றது.

இவை எட்டும் தொகை நூல்களேயாம். பல்வேறு கால எல்லைகளுள் வாழ்ந்த பல திறப்பட்ட புலவர் பெருமக்களால் பாடப்பட்ட பாடல்களைப் பின் வந்தோர் முறைப்படுத்தித் தொகுத்து எட்டு நூல்களாக ஆக்கித் தந்தனர்.

இவற்றுள் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு என்பன அகப்பொருள் பற்றியனவாகவும், பதிற்றுப்பத்து, பரிபாடல், புறநானூறு என்பன புறப்பொருள் பற்றியனவாகவும் அமைந்துள்ளன.

### நற்றிணை

எட்டுத்தொகை அகத்திணை நூல்களுள் நற்றிணையும் குறுந்தொகையும் நெடுந்தொகையும் (அகநானூ

றும்) ஒரு திறப்பட்டன என்று கூறுதல் அமையும். இவை மூன்றும் தனித்தனியே நானூறு பாடல்களைக் கொண்டு திகழ்வனவாகும். 'திணை' என்பது அகப் பொருள் நூல்களின் பெயராக அமைந்து வந்துள்ளது. "திணை எழுபது", "திணைமாலை நூற்றைம்பது" என்ற நூல்களின் பெயர்களைக் காண்க.

இம் மூன்றனுள் அளவால் குறுகியது குறுந் தொகையே. இது நாலடிச் சிற்றெல்லையும் எட்டடிப் பேரெல்லையும் உடையது. அதனால்தான் இதற்குக் குறுந்தொகை என்ற பெயர் வாய்த்தது என்று அறிஞர் உரைப்பர். ஒன்பதடிச் சிற்றெல்லையும் பன்னிரண்டடிப் பேரெல்லையும் உடையது நற்றிணை. அகநானூறு பதின்மூன்றடிச் சிற்றெல்லையும் முப்பத்தோரடிப் பேரெல்லையும் வாய்க்கப் பெற்றது.

நெடுந்தொகை எனும் அகநானூற்றுப் பாடல்கள் போல மிகப்பெரியன அல்ல நற்றிணைப் பாடல்கள்; பொருள் முடிபு காண வருந்த வேண்டுவதில்லை; குறுந்தொகைப் பாடல்களைப் போன்று மிகச்சிறியன அல்ல இவை; இடை நிகரனவான பாடல்களே இந் நற்றிணையில் உள்ளன; இரண்டின் அழகும் இதனிடை உண்டு. தொகுத்த காலத்திலேயே (இந்நூலின் சிறப்புப் பற்றி) நல் என்ற அடை இந்நூலுக்குக் கொடுக்கப் பட்டிருப்பது ஒன்றே, இந்நூலின் பெருமைக்குச் சான்றாகும் என்று அறிஞர் உரைப்பர். இம் மூன்று தொகைநூல்களும் ஆசிரியப்பாவால் இயன்றவை. ஒவ்வொன்றும் நானூறு பாடல்களைக் கொண்டுள்ளது. அது பற்றியே நற்றிணை நானூறு, குறுந்தொகை நானூறு, நெடுந்தொகை நானூறு (அகநானூறு) என்று இவை அழைக்கப் பெறுதலும் உண்டு.

இன்னோரன்ன காரணங்கள் பற்றி இம் மூன்றையும் தொகுப்பித்தார் ஒருவராதல் வேண்டும் என்று ஆராய்ச்சியாளர் பலர் கொள்வதுண்டு.

இவற்றுள், முதற்கண் நற்றிணையின் பெற்றியினைச் சிறிது நோக்குவோம்.

'நற்றிணை' என்று இத்தொகை நூலுக்குப் பெயர் வாய்த்தமையை முன்னமேயே கண்டோம். இதன் அளவும், எண்ணும், பாவும் அறிந்தோம்.

இந்நூலைத் தொகுப்பித்தான் பன்னாடுதந்த பாண்டியன் மாறன்வழுதி என்பர். தொகுத்தான் பெயர் தெரியவில்லை. நெடுந்தொகையைப் பாண்டியன் உக்கிரப் பெருவழுதி தொகுப்பித்தான் என்றும், உப்பூரிகுடிகிழான் மகனுவான் உருத்திரசன்மன் தொகுத்தான் என்றும் அறியக் கிடைக்கின்றன. பாண்டியன் பன்னாடு தந்த மாறன்வழுதியும், பாண்டியன் உக்கிரப்பெருவழுதியும் ஒருவராதல் கூடும் என்றும், பூரிக்கோவும் உப்பூரி குடிகிழான் மகனுவான் உருத்திரசன்மனும் ஒருவனே என்றும் கொள்வதற்கு இடம் இருக்கின்றது. எனினும் இது ஆராய்ச்சிக்குரிய செய்தியாகும்.

இனி, இந்நூல் கடவுள் வாழ்த்து உள்பட 401 செய்யுட்களைக் கொண்டது. பாரதம் பாடிய பெருந்தேவனார் இந்நூலுக்குக் கடவுள் வாழ்த்து இயற்றியுள்ளார். பின்னத்தூர் திரு. நாராயணசாமி அய்யர் என்ற தமிழ் அறிஞர் இந்நூலை வெளியிட்டதோடன்றி இதற்கு அழகியதோர் உரையும் அளித்துள்ளார்.

இனி, இந்நூலின் நயத்தினை நுகர்வோம். நற்றிணை என்ற தன் பெயர்க்கு ஏற்ப, இந்நூல் நலன்கள் பல

பெற்றுத் திகழ்வதைக் காண்கிறோம். திருக்குறளின் கால ஆராய்ச்சிக்கு இந்நூல் ஓரளவு துணை செய்கிறது. திருக்குறட் கருத்துக்களும், சொற்றொடர்களும் தாங்கிய சில பாடல்கள் இந்நூலுள் காணப்படுவதால், திருக்குறள் சங்க நூல்களுக்கு முற்பட்டதாகவோ அன்றி ஒரே காலத்து நூலாகவோ மதிக்கப் படக் கூடும் என்று ஆராய்ச்சியாளர்கள் கருதுவர்.

> "பெயக் கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க
> நாகரிகம் வேண்டு பவர்"

என்பது திருக்குறள். இதே கருத்தினை, ஏறத்தாழ இதே சொற்களைக் கொண்டு,

> "முந்தை இருந்து நட்டோர் கொடுப்பின்,
> நஞ்சும் உண்பர் நனிநாகரிகர்"

என்று நற்றிணை விளக்குகிறது. இதைப் போன்றே,

> "நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின்,
> வீடில்லை நட்பாள் பவர்க்கு"

என்ற குறட் கருத்து, நற்றிணையில் 'நாடி நட்பின் அல்லது, நட்டு நாடார் தம் ஒட்டியோர் திறத்தே' என்று காணப்படுகிறது.

நற்றிணையில் காணப்பெறும் தலைவியரின் தகைசால் பண்புகள் நம் உள்ளத்தை உருக்குவனவாகும்.

தேன் கலந்த பாலடிசிலைப் பொற்கலத்து ஏந்தியவாறு எவ்வளவோ மன்றாடிக் கேட்டும் உண்ண மறுத்தோடும் ஒரு பெண், பருவம் வந்து, தலைவனைக் கொண்டபின் அறிவும் ஒழுக்கமும் நிறைந்தவளாக மாறி விடுகிறாள். செல்வத்தில் பிறந்த அவள் தன் கணவனுடைய குடி வறுமை எய்திய காலத்தில் காட்டுகின்ற தன்மான உணர்ச்சியும் செம்மையும் கண்டு

அவளை வளர்த்த செவிலித் தாய் வியக்கின்றாள். வறுமையில் வருந்தும் தனக்குத் தன் தந்தை அனுப்பிய கொழுஞ் சோற்றினை மறுத்துவிட்டுக் கணவனுடைய குடிப்பெருமையைக் காப்பதற்காக ஒரு பொழுது உண்டு உயிர் வாழத் துணிகிறாள், அத்தலைவி.

இதற்கிடையில் அவள் பருவமுற்று மணந்து மகவையும் ஈன்றாள். அப்பொழுதும் அவள் அப்புன்னைச் சேயை மறக்கவில்லை. தான் பெற்ற பெண்ணிற்கு அதனை அவளது அக்கையாகவே அறிமுகப் படுத்தி வைக்கின்றாள். அதே எண்ணத்துடன் வளர்ந்த அப்பெண் பருவமடைந்து காதலனையும் பெற்று விட்டாள். ஒரு நாள் அவளை அணைக்க வருகிறான் தலைவன். அப்பொழுது அவர்கள் முன் அவளது அக்காள்—அப்புன்னை மரம் நிற்கிறது. தனக்கு மூத்தவளான அப்புன்னையின் முன்னர்த் தன் காதலனுடன் உறவாடுவதற்கு நாணுகின்றாள் தலைவி.

**''நும்மினும் சிறந்தது; நுவ்வை ஆகும்'' என்று**
**அன்னை கூறினள், புன்னையது நலனே.**
**அம்ம! நாணுதும், நும்மொடு நகையே!'**

என்று கூறி, அணைக்க வந்த தலைவனை விலக்கி விடுகின்றாள். தலைவன் பொருள் வயிற் பிரிகையில் பொதுவாகத் தலைவியர் வருந்துவர்; தலைவனுடன் ஊடி அவனைச் செலவழுங்கச் செய்வர். ஆயின், நற்றிணையில் ஒரு தலைவி பொருள் வயிற் பிரியும் தலைவனுக்கு நலங்கூறி வழி யனுப்பும் செய்தியைக் காண்கின்றோம்.

**''வெள்ளில் வல்சி வேற்றுநாட்டு ஆரிடைச்**
**சேறும் நாம்''**

எனத் தலைவன் கூறக்கேட்ட தோழி 'நன்று' எனக் கூறி உடன்பட்டாளாக, அதனைத் தலைவி பாராட்டி,

"நன்றெனப் புரிந்தோய் நன்றுசெய் தனையே
செயல்படு மனத்தர் செய்பொருட்கு
அகல்வர் ஆடவர் அதுவதன் பண்பே"

(நற் : 24)

என்று கூறுகிருள்.

இன்னும் பல்வேறு சுவையான செய்திகளை இந்நூலிற் காணலாம்.

**குறுந்தொகை**

முன்னரே கூறியாங்கு இந்நூல் நானகு அடிச் சிற்றெல்லையும் எட்டடிப் பேரெல்லையும் உடையது.* (மொத்தம் கடவுள் வாழ்த்து உள்பட) 402 செய்யுட்களை உடையது. குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு ஆகிய மூன்றனையும் தொகுப்பித்தார் ஒருவராதல் வேண்டும் என்று முன்னரே கண்டோம். அவற்றுள்ளும் இக்குறுந்தொகையே முதற்கண் தொகுக்கப்பட்டிருத்தல் வேண்டும் என்பது பல ஆராய்ச்சியாளர்தம் முடிவாகும். குறுந்தொகையில், தாம் கூறிய உவமைகளால் பெயர் பெற்ற புலவர்கள் சிலர், அப்பெயராலேயே பிற தொகை நூல்களிலும் குறிக்கப்படுகின்றனர். இவ்வுண்மையே மேற்கூறிய ஆராய்ச்சியாளருக்குச் சிறந்த சான்ருக அமைகின்றது எனலாம். இனி, இந்நூலின் நயத்தை நுகர்ந்தே இதனை நல்ல குறுந்தொகை என்று அழைக்கின்றது பழம் பாட்டு. இதற்குக் கடவுள் வாழ்த்து எழுதியவர்

* ஆயின் 307, 391 என்னும் இரண்டு செய்யுட்களும் ஒன்பதடி பெற்றுள்ளன.

பாரதம் பாடிய பெருந்தேவனுர். பாடப்பட்ட கடவுள் சேயோன்.

'நன்பாட்டுப் புலவனுய்ச் சங்கமேறி நற்கனகக்
கிழிதருமிக் கருளியோன்'

என்று நாவரசால் போற்றப்பட்ட விரிசடைக் கடவுள்—இறையனுர் எழுதிக் கொடுத்த 'கொங்குதேர் வாழ்க்கை' என்ற தெய்வப் பாடல் இந்நூலுக்குத் தோரணவாயிலாக (இரண்டாவது பாட்டாக) அமைந்துள்ளது. இந்நூலைத் தொகுத்தான் பூரிக்கோ என்பதும், தொகுப்பித்தான் பெயர் தெரியவில்லை என்பதும், இதனைப் பாடிய புலவர்கள் திப்புத்தோளார் முதல் அம்மூவனுர் இறுதியாக இருநூற்றைவர் என்பதும் நூலினிறுதியில் காணப்படும் குறிப்பால் அறியலாம்.* உரையாசிரியர்கள் ஏனைய தொகை நூல்களைவிட இந்நூலிலிருந்தே மிகுதியாக மேற்கோள்கள் காட்டுவது, இந்நூலின் பெருமைக்கு ஓர் எடுத்துக் காட்டாகும்.† இதைத் தவிர, இந்நூலின் முதல் 380 பாடல்களுக்குப் பேராசிரியரும், இறுதி 20 பாட்டிற்கு நச்சினுர்க்கினியரும் உரைகண்டிருப்பதாக அறிகிறேம். ஆயின், அவ்வுரைகள் கிடைத்தில. தலைவியின் காமம்—அன்பு ஒரு பலாப்பழம் போலவும் அதனைத் தாங்கும் அவளது உயிர் அப்பழத்தைச் சுமக்கும் சிறு கோடு போலவும் கபிலர் வருணித்துள்ளார்.

* இவர்களுள் இயற்பெரும் சிறப்புப் பெயரும் ஒருங்கே அமையப் பெற்ற புலவர்களாக ஐவரும் உவமை நயத்தால் பெயர் பெற்ற புலவர் பதினெண்மரும் அடங்குவர்.

† ஏறத்தாழ 237 செய்யுட்களை உரையாசிரியர்கள் கையாண்டுள்ளனர்.

"சிறுகோட்டுப் பெரும்பழம் தூங்கி யாங்கிவள்
உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே."

(குறுந்தொகை : 18)

என்னும் அடிகள் நம் நெஞ்சை உருக்குபவை. ஒருவரையொருவர் முன்பின் அறியாத தலைவனும் தலைவியும் ஊழ்வலியால் எதிர்ப்பட்டு மனம் கலந்து ஒன்றாகி விடுவதை,

'செம்புலப் பெயல்நீர் போல
அன்புடை நெஞ்சம் தாம்கலந் தனவே.'

(குறுந்தொகை : 40)

என்று, ஒரு புலவர் நயமிக்க உவமை காட்டுகிறார். அதனால், இப்புலவரது இயற்பெயர் மறைந்து 'செம்புலப் பெயல் நீரார்' என்றே அழைக்கப்படுகிறார்.

'இம்மை மாறி மறுமை யாயினும்
நீயா கியர்என் கணவனை
யானா கியர்நின் நெஞ்சுநேர் பவளே'

என்ற தலைவியின் கூற்று, அவள் தலைவன்பாற் கொண்ட பேரன்பினைக்காட்டும்.

ஐங்குறுநூறு 3-6

எட்டுத் தொகை நூல்களுள் மூன்றாவது ஐங்குறுநூறாகும். இது ஓர் அகத்திணை நூல். பாரதம் பாடிய பெருந்தேவனார் சிவபெருமான் மீது பாடிய கடவுள் வாழ்த்து உட்பட 501 பாடல்களைக் கொண்டது. பாடல்கள் மூன்றடிச் சிற்றெல்லையும், ஆறடிப் பேரெல்லையும் உடையவை. அன்பின் ஐந்திணையாகிய மருதம், குறிஞ்சி, பாலை, முல்லை, நெய்தல் ஆகியவற்றுள் ஒவ்வொரு திணைக்கும் 100 பாடல்கள் உள்ளன.

'மருதம்ஓ ரம்போகி நெய்தல்அம் மூவன்
கருதும் குறிஞ்சி கபிலன்—கருதிய
பாலைஓதல் ஆந்தை பனிமுல்லை பேயனே
நூலைஓ(து) ஐங்குறு நூறு'

என்ற பழம்பாட்டின்படி, முதல் நூறு மருதம்; பாடியவர் ஓரம்போகியார். இரண்டாவது நூறு நெய்தல். பாடியவர் அம்மூவன். மூன்ருவது நூறு குறிஞ்சி; பாடியவர் கபிலர். நாலாவது நூறு பாலை; பாடியவர் ஓதல் ஆந்தை. ஐந்தாவது முல்லை, பாடியவர் பேயனுர் என்பன புலப்படும்.

இப்பாடல்களைத் தொகுத்தார் கூடலூர் கிழார்; தொகுப்பித்தார், யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை. இந்நூலில் காணப்படும் ஐந்திணை வைப்பு முறை தொல்காப்பிய முறையினின்றும் மாறுபட்டது. ஒவ்வொரு நூறும் பத்துப் பத்துப் பாடல்கள் கொண்ட பத்துப் பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

ஒவ்வொரு பத்திற்கும் தனித்தனித் தலைப்புக்கள் உண்டு. அப்பெயர்களிற் சில உரிப்பொருளை அடிப்படையாகக் கொண்டு அமைந்துள்ளன. அவை வேட்கைப் பத்து, புலவிப்பத்து, நெய்தற்பத்து போல்வன. பிற, பெரும்பாலும் அவ்வப் பத்துக்களில் மிகுதியாகப் பயின்றுவரும் கருப்பொருளை அடிப்படையாகக் கொண்டுவரும். (எ—டு) கள்வன் பத்து, வெள்ளாங்குருகுப் பத்து, குரக்குப் பத்து.

இப்பாடல் ஒவ்வொன்றன் பின்னரும் தனித் தனியே கருத்துரையும் பழைய உரையும் உள்ளன. இவற்றை இயற்றினர் பெயர் தெரியவில்லை.

இனி, இந்நூலின் சுவைக்கு ஓர் எடுத்துக் காட்டுக் காண்போம்.

தலைவன் அன்பற்றவன் என்று புலந்த தலைவி, வாயிலாக வந்த பாணர் முதலோர்க்கு இகழ்ந்து கூறுவதாக அமைந்துள்ள ஒரு பாட்டு உணர்ந்து இன்புறற்பாலது.

**"தன்பார்ப்புத் தின்னும் அன்பில் முதலையொடு**
**வெண்பூம் பொய்கைத்து அவனூர்என்ப; அதனால்**
**தன்சொல் உணர்ந்தோர் மேனி**
**பொன்போல் செய்யும் ஊர்கிழ வோனே"**

*(ஐங் : 41)*

**பதிற்றுப் பத்து**

இது, எட்டுத் தொகை நூல்களுள் நான்காவதாக வரும் புறத்திணை நூலாகும். சங்க காலத்தில் வாழ்ந்த சேர வேந்தர் பதின்மருள் ஒவ்வொருவரைப் பற்றியும் பத்துப் பத்தாகப் பத்துப் புலவர்கள் பாடிய பாடல்களின் தொகுதியே இந்நூலாகும். இதன் பெயர்க் காரணமும் அதுவேயாம். இத் தொகைக்கண் அமைந்த 100 பாடல்களும் பாடாண் திணையையே பொருளாக உடையன. ("பதிற்றுப் பத்து நூறும் இவ்வாறே வருதலின் பாடாண் திணையே ஆயிற்று"—தொல்—புறத்திணையியல் — 25 ஆவது சூத்திரம், நச்சினார்க்கினியர் உரை).

**பதிற்றுப்பத்தினைப் பாடியவர்கள்—பாடப்பட்டவர்கள்:**

பதிற்றுப்பத்தில், முதற்பத்தும் ஈற்றுப்பத்தும் இன்று கிடைத்தில. இடைப்பட்ட எட்டுப் பத்துக்களே கிடைத்துள்ளன.

**இரண்டாம் பத்து:** குமட்டூர்க் கண்ணனார்—இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்.

**மூன்றும் பத்து :** பாலைக்கௌதமனர் — பல்யானைச் செல்கெழு குட்டுவன்.

**நான்காம் பத்து:** காப்பியாற்றுக் காப்பியனர்—களங் காய்க்கண்ணி நார்முடிச் சேரல்.

**ஐந்தாம் பத்து :** பரணர்—கடல்பிறக்கோட்டிய செங் குட்டுவன்.

**ஆறும் பத்து :** காக்கை பாடினியார் நச்செள்ளையார்— ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்.

**ஏழாம் பத்து :** கபிலர் — செல்வக்கடுங்கோ வாழி யாதன்.

**எட்டாம் பத்து :** அரிசில் கிழார் — தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை.

**ஒன்பதாம் பத்து :** பெருங்குன்றூர் கிழார் — இளஞ் சேரல் இரும்பொறை.

இப்பாடல்களைத் தொகுத்தோர் ஒவ்வொரு பாட லுக்கும் பிற தொகைநூல்களைப் போல் திணை, துறை அமைதி கூறவில்லை; துறை, வண்ணம், தூக்கு, பெயர் என்பவையே குறித்துள்ளார்.

ஒருகுடியிற் பிறந்த வேந்தர் பலரைக் குறித்துத் தொடர்ச்சியாகப் பாடப்பெற்ற செய்யுட்கள், கால முறை தவருது இத்தொகை நூல் ஒன்றிலேயேதான் தொகுக்கப் பெற்றுள்ளன. அவை சங்க காலச் சேர வேந்தர் வரலாற்றைத் தொடர்ந்து எழுதுவதற்குப் பெரிதும் உதவுகின்றன. இதனல், சோழர், பாண்டியர் என்பவர்களைப் பற்றிய பாடல்களைத் தொகுத்த வேறு தொகை நூல்களும் இருந்திருக்கக் கூடுமென உய்த் துணர முடிகின்றது. எனினும், அவை இன்று கிடைக்க

வில்லை. (மூவேந்தருக்கும் உரிய முத்தொள்ளாயிரம் காண்க.) இப்பதிற்றுப் பத்துக்குப் பழைய உரை உளது. இதனை இயற்றியவரைப் பற்றி ஏதும் தெரிய வில்லை. ஒருகால், இதன் தொகையாசிரியரே உரை எழுதியிருத்தல் கூடும் என ஒரு சிலர் கருதுகின்றனர்.

பதிற்றுப் பத்தில் உள்ள ஒவ்வொரு பத்திற்கும் ஒவ்வொரு பதிகம்பாடி அவ்வப் பத்துக்களின் இறுதிக் கண் யாரோ சேர்த்துள்ளனர். அவ்வாறு தொகுத்தவர் அதன் பழைய உரையாசிரியரோ அன்றித் தொகை ஆசிரியரோ ஆதல் கூடும் என்பர்.

பதிகத்தில் பாட்டுடைத் தலைவன் பெயர், அவன் அருஞ்செயல்கள், பாடிய புலவர் பெயர் போன்ற வரலாற்றுச் செய்திகள் சொல்லப்பட்டுள்ளன. பதிகத்தைச் சார்ந்த உரைநடைப் பகுதிகளில் அப்பத்தினைப் பாடிய புலவர் பெற்ற பரிசிலும், வேந்தன் வீற்றிருந்து ஆண்ட ஆண்டின் தொகையும், பாட்டுக்களின் பெயர்களும் கூறப்பட்டுள்ளன. அப்பதிகங்கள் வரலாற்று ஆராய்ச்சிக்குப் பயன்படுவன. அப்பதிகங்கள் பிற்காலச் சோழர்களின் மெய்க்கீர்த்தியை ஒருவாறு ஒத்திருக்கின்றன எனலாம். கி. பி. 989 முதல் சேர நாட்டின் தொடர்பினைப் பெற்றிருந்த முதலாம் இராஜராஜன், சேர வேந்தர்களின் வீரச் செயல்களைப் பதிற்றுப் பத்துப் பதிகத்தில் கண்டு அவற்றைப் பின்பற்றித் தன் கல்வெட்டுக்களில் மெய்க்கீர்த்திகள் அமைத்திருக்கக்கூடும் என்று திரு. சதாசிவப் பண்டாரத்தார் அவர்கள் கருதுகின்றனர்.

கிடைத்துள்ள எட்டுப் பத்துக்களை ஆராயுங்கால், சங்க காலத்தில் சேரப்பெருநாட்டை உதியன் மரபி

னர், இரும்பொறை மரபினர் என்ற இரு தாயமரபினர் தனித்தனிப் பகுதிகளில் இருந்து அரசாண்டனர் என்பது தெரியக் கிடக்கின்றது. இமையவரம்பன் நெடுஞ்சேரலாதன், பல்யானைச் செல்கெழுகுட்டுவன், களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரல், கடல்பிறக் கோட்டிய செங்குட்டுவன், ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் ஆகிய ஐவரும் உதியன் மரபினர். செல்வக் கடுங்கோவாழியாதன், தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை — இளஞ்சேரல் இம்மூவரும் இரும்பொறை மரபினர் ஆவர். பதிற்றுப்பத்துப் பாடல்களுக்கு இடப்பட்ட பெயர்களெல்லாம், ஒவ்வொரு பாட்டிலும் காணப்படும் பொருள்நயம் பொருந்திய அருந்தொடர்களாக உள்ளன. (எ—டு) **புண்ணுமிழ் குருதி, பூத்த நெய்தல், சான்றோர் மெய்ம்மறை, சீர்சால் வெள்ளி, சிறுசெங்குவளை** என்பன.

பதிற்றுப்பத்தில் வாழ்க்கை முன்னேற்றத்திற்கும், அரசியல் முன்னேற்றத்துக்கும் இன்றியமையாதவையான அடிப்படைக் கருத்துக்கள் மிகுதியாக உள்ளன. அரசியல் முன்னேற்றத்திற்குத் தடையாக இருப்பன இவை இவை என்று 'கயிறு குறுமுகவை' என்னும் தலைப்பு அமைந்த பாடல் (பத்து 3, பாட்டு 2) நிரல் படுத்திக் கூறியுள்ளது. அவை: அளவிகந்த சினம், கையிகந்த காமம், கழிபெருங் கண்ணோட்டம், அச்சம், பொய்ச்சொல், அளவிறந்த அன்பு, வரையிகந்த தண்டம் முதலாயின.

> **" சினனே காமம் கழிகண் ணோட்டம்**
> **அச்சம் பொய்ச்சொல் அன்புமிக உடைமை "**

இந்நூலின் நான்காம் பத்து அந்தாதித் தொடையில் அமைந்திருப்பது அறிந்து இன்புறத் தக்கது.

## பரிபாடல்

எட்டுத் தொகையுள் ஐந்தாவது நூல் பரிபாடலாகும். இதன்பெருமை பற்றி "ஓங்கு பரிபாடல்" என்று அழைக்கிறது பழம்பாட்டு. பரிபாடல் என்பது பாவகையில் ஒன்று. பரிந்து வருவது பரிபாடல். இது பரிபாட்டு என்றும் வழங்கப்பெறும். பரிபாடல்களால் ஆன தொகைக்கும் அப்பெயரே அமைந்தது. மதுரை, வையை, திருமருதந்துறை, திருப்பரங்குன்றம், திருமாலிருஞ்சோலைமலை என்பனவற்றின் பண்டைக் கால நிலைமையையும், அந்தக் கால நாகரிக, தெய்வ வழிபாட்டு, பழக்க வழக்கங்களையும் இதன் மூலம் அறியலாம்.

**பரிபாடலின் இலக்கணம் :** நாற்பொருளிலும் இன்பத்தையே பொருளாகக்கொண்டு, கடவுள் வாழ்த்து, மலைவிளையாட்டு, புனல் விளையாட்டு முதலியவைகளுக்கு இப்பாட்டு வரும் என்பர் பேராசிரியர். (தொல். பொருள். சூ. 12. பேராசிரியர் உரை.) தெய்வ வாழ்த்து உள்பட காமப்பொருள் குறித்து உலகியலே பற்றி வரும் என்பர் நச்சினார்க்கினியர். 'காமம் கண்ணிய நிலைமைத்து ஆகும்' என்பர் தொல்காப்பியர். இதில் தெய்வம் குறிக்கப்பெறவில்லை. இந்த ஒரு காரணம் பற்றி இந்நூல் தொல்காப்பியத்திற்குப் பிந்தியது என்பர்.

இந்நூல் 70 பரிபாடல்களைக்கொண்டது.

**"திருமாற் கிருநான்கு செவ்வேட்கு முப்பத்**
**தொருபாட்டு காடுகாட் கொன்று—மருவினிய**
**வையைஇரு பத்தாறு மாமதுரை நான்கென்ப**
**செய்யபரி பாடல் திறம்"**

என்னும் பழைய வெண்பா இந்நூலின் செய்திகளைக் கூறும்.

இப்பொழுது 22 பாடல்கள்தான் தொடர்ச்சியாக இருக்கின்றன. உரைநூல்களில் இரண்டு முழுப் பாடல்களும், புறத்திரட்டில் சில பாடல்களும் கிடைத்திருக்கின்றன. கிடைத்த பாடல்களை 13 புலவர்கள் பாடியுள்ளனர். தொகுத்தோரும் தொகுப்பித்தோரும் தெரியவில்லை. இந்நூலில் 20 ஆம் பாடல் வரை ஒவ்வொரு பாடலிலும் துறையும், இயற்றிய ஆசிரியர் பெயரும், அதற்குரிய இசை வகுத்தோர் பெயரும், பண்ணின் பெயரும் குறிக்கப்பட்டுள்ளன. கண்ணகனார், கேசவனார், நாகனார், நல்அச்சுதனார் முதலிய பதின்மர் பரிபாடலுக்கு இசை வகுத்துள்ளனர். பாலையாழ், பண்ணுப் பாலையாழ், நோதிறம், காந்தாரம் முதலிய பண்வகைகள் தெரியவருகின்றன. இதனால் இந்நூற் பாடல்கள் தேவாரம் போலவே பண்முறையால் தொகுக்கப்பெற்று உரிய பண்புகளுடன் பாடப்பெற்று வந்துள்ளன என்று தெரியவருகின்றது. தலைச்சங்கத்தில் எத்துணையோ பரிபாடல்கள் இருந்ததாகக் களவியல் உரை கூறும். எனினும் அவற்றில் ஏதும் இத்தொகையில் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது.

கடவுள் கண்ணிய இப்பரிபாடல்களில் உயர்ந்த தத்துவக் கருத்துக்கள் காணப்படுகின்றன.

"மறுபிறப் பில்எனும் மடவோர் சேரார்
நின்னிழல் அன்னோர் அல்லது இன்னோர்
சேர்வார் ஆதலின் யாஅம் இரப்பவை
பொருளும் பொன்னும் போகமும் அல்ல நின்பால்

அருளும் அன்பும் அறனும் மூன்றும்
உருளிணர்க் கடம்பின் ஒலிதா ரோயே!"

(பரிபாடல்—5)

"அழல்புரை குழைகொழு நிழல்தரும் பலசினை
ஆலமும் கடம்பும் நல்யாற்று நடுவும்
கால்வழக் கறுநிலைக் குன்றமும் பிறவும்
அவ்வவை மேவிய வேறுவேறு பெயரோய்
எவ்வயி னோயும் நீயே; நின் ஆர்வலர்
தொழுதகை அமைதியின் அமர்ந்தோயும் நீயே
அவரவர் ஏவ லாளனும் நீயே
அவரவர் செய்பொருட்கு அரணமும் நீயே"

(பரிபாடல்—4)

என்ற பரிபாடற் கருத்துக்கள், பாரதி வரையில் வாழ்வதைக் கண்டு நம் நெஞ்சம் வியக்கின்றது.

திருமாலின் திருத்தாளைப் புகழும்பொழுது 'நின்னிற் சிறந்தநின் தாளிணை அவை, நின்னிற் சிறந்த நிறை கடவுளவை' என்னும் 4 ஆவது பாட்டில், சரணகதித் தத்துவம் விளக்கப்பட்டுள்ளது.

**கலித்தொகை**

எட்டுத் தொகையுள் பரிபாடலைப் போன்றே பாவகையான் பெயர் பெற்ற மற்றொரு தொகை நூல் கலித்தொகையாகும். பரிபாடலும் கலிப்பாவும் அன்பின் அகன் ஐந்திணையையும் பாடும் தகுதி பெற்றவை என்பது தொல்காப்பியர் கருத்து.

'நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கம்
கலியே பரிபாட்டு ஆயிரு பாங்கினும்
உரிய தாகும் என்மனார் புலவர்'

(தொல். அகத்—53)

இதனுல் தொல்காப்பியர் காலத்திற்கு முன்பேயே இவ்விரு பாவகைகளும் அகப்பொருள் துறையில் சிறப்புற்றிருந்தமை புலப்படும். அமைப்பிலும் இவ்விரண்டும் ஒற்றுமை உடையன என்பர்.

சங்கத்துச் சான்ஞேர் தொகுத்த கலிப்பாட்டு நூற்றைம்பது என்று பேராசிரியரும் களவியலுரையாசிரியரும் குறித்துள்ளனர். இந்நூற்றைம்பதும் இன்று சிதைவின்றிக் கிடைப்பது தமிழர் தம் தவப்பயனேயாகும். இவற்றுள் முதல் பாட்டு கடவுள் வாழ்த்து. ஏனையவற்றுள் பாலை—35, குறிஞ்சி—29, மருதம்—35, முல்லை—17, நெய்தல்—33.

**"பெருங் கடுங்கோன் பாலை ; கபிலன் குறிஞ்சி ;**
**மருதன் இளநாகன் மருதம் — அருஞ்சோழன்**
**நல்லுருத்திரன் முல்லை ; நல்லந்துவன் நெய்தல்**
**கல்விவலார் கண்ட கலி."**

என்ற பழம் பாட்டு ஐந்திணைப் பாடல்களையும் ஐந்து புலவர்கள் பாடியமையைக் கூறும். இதனைத் தொகுத்தார்—தொகுப்பித்தார் பற்றிய செய்தி நூலிறுதியில் காணப்படவில்லை. ஆயின், இதற்கு உரை எழுதி வழங்கிய ஆசிரியர் நச்சிஞர்க்கினியர் நெய்தற் கலியைப் பாடிய நல்லந்துவனரே கடவுள் வாழ்த்துப் பாடலையும் பாடி இந்நூலைத் தொகுப்பித்தார் என்று குறித்துள்ளார். இந்நூலை முதலில் அச்சிட்டு வெளியிட்ட திரு. தாமோதரம் பிள்ளையவர்கள் இந்நூலுக்கு 'நல்லந்துவனர் கலித்தொகை' என்றே பெயரிட்டுள்ளார். பேராசிரியர் வையாபுரிப்பிள்ளையவர்களும் நல்லந்துவனரே ஐந்து கலிகளையும் பாடியிருத்தல்

வேண்டும் எனச் சான்று காட்டி வாதிடுகின்றார். † இது ஆராய்ச்சிக்குரிய பொருளாகும்.

ஒவ்வொரு பாடலுக்குக் கீழும் அப்பாடலைப் பற்றிய அடிக்குறிப்பு உள்ளது. இந்நூல் முழுமைக்கும் நச்சினார்க்கினியர் உரை எழுதியுள்ளார்.

'கற்றறிந்தார் ஏத்தும் கலி', 'கல்வி வலார் கண்ட கலி' என்ற பழம்பாட்டடிகள் இந்நூலின் பெருமைக்குச் சான்று பகர்கின்றன.

ஆங்கிலத்தில் Dialogue என்பது போன்ற இலக்கிய வடிவம் கலிப்பாடல்களில் மிகுந்திருப்பதைக் காண்கிறோம்.

இராவணன் கைலைமலையைப் பெயர்த்த செயல்,

**'இமயவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்**
**உமையமர்ந்து உயர்மலை இருந்தனனாக**
**ஐயிரு தலையின் அரக்கர் கோமான்**
**தொடிப் பொலி தடக்கையின் கீழ்ப் புகுந்து அம்மலை**
**எடுக்கல் சொல்லாது உழப்பவன் போல'**

என்று குறிஞ்சிக்கலியில் (2) கூறப்பட்டுள்ளமை காண்க.

**அகநானூறு**

அகச்செய்யுட்கள் 400 கொண்டமையால் இந்நூல் இப்பெயர் பெற்றது. 13 அடிச் சிற்றெல்லையும் 31 அடிப் பேரெல்லையும் உடையன இச்செய்யுட்கள். எனவே இத்தொகை நூல் நெடுந்தொகை என்று அழைக்கப்படுகிறது. அகம் என்று ஆகு பெயராகவும்

---

† History of Tamil Language and Literature pp. 26—27.

அழைக்கப் பெறும். இந்நூலுக்குப் பாரதம் பாடிய பெருந்தேவனாரின் பாடல் கடவுள் வாழ்த்துப் பாட்டாக அமைந்துள்ளது. தொகுப்பித்தார் உக்கிரப் பெருவழுதி. தொகுத்தார் உப்பூரி குடிகிழார் மகனார் உருத்திர சன்மனார் ஆவர். இந்நூல் களிற்றியானை நிரை, மணிமிடை பவளம், நித்திலக் கோவை என்று மூன்று பகுதிகளாகச் செய்யுட்களின் தகுதி பற்றிப் பிரிக்கப்பட்டுள்ளது. களிற்றியானை நிரையில் 120 பாடல்களும், மணிமிடை பவளத்தில் 180 பாடல்களும், நித்திலக் கோவையில் 100 பாடல்களும் உள்ளன. ஓர் ஒழுங்கு முறையில் இப்பாடல்கள் தொகுக்கப் பெற்றுள்ளமை அறிந்து இன்புறற்பாலது.

'இம்மை உலகத் திசையொடும் விளங்கி
மறுமை உலகமும் மறுவின் றெய்துப
செறுநரும் விழையுஞ் செயிர்தீர்க் காட்சிச்
சிறுவர்ப் பயந்த செம்மலோர்'

என்ற அகப்பாட்டு,

'மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக்குறை யில்லைதாம் வாழு நாளே!'

என்ற புறப்பாட்டு அடிகளை நினைவுறுத்துகின்றது. பல பாடல்களில்,

'பெயரும் பீடும் எழுதி அதர்தொறும்
பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்'

பற்றிய செய்திகள் காணப்படுகின்றன.

இராமபிரான், காட்டில் ஆலமரத்தடியின் கீழிருந்து மறையை ஆய்ந்தமையை ஒரு பாட்டுச் சுட்டுகின்றது.

**'வெல்போர் இராமன் அருமறைக் கவித்த
பல்வீழ் ஆலம் போல'** *

பழந்தமிழர் திருமண முறையை **'உழுந்து தலைப்பெய்த'** என்ற அகனூற்றுப் பாடல் § குறிக்கின்றது.

தலைவனுடைய அருளுள்ளத்தைக் காட்ட ஒரு பாடல்,

**"பூத்த பொங்கர்த் துணையொடு வதிந்த
தாதுண் பறவை பேதுறல் அஞ்சி
மணிநா ஆர்த்த மாண்வினைத் தேரன்"**

**—அகம். 4**

வரலாற்றுச் செய்திகள் பல இந்நூலுள் காணப் படுகின்றன.

**புறநானூறு**

புறம், புறப்பாட்டு என்று அழைக்கப்படும் இத்தொகை நூல் 400 பாக்களைக் கொண்டு திகழ்வது; ஆசிரியப் பாக்களால் இயன்றது. பண்டைத் தமிழகத்தின் கலை, பண்பாடு, அரசியல், பொருளியல், வாழ்வியல், கல்வி நிலை போன்ற அனைத்தையும் காட்டும் காலக் கண்ணாடி போன்றது இந்நூல் என்று சுருக்கமாகக் கூறலாம்.

'புறமாவது...ஒத்த அன்புடையாராலேயே அன்றி எல்லோராலும் அனுபவித்து உணரப்பட்டு, இஃது இவ்வாறு இருந்ததெனப் பிறர்க்குக் கூறப்படும் பொருள்; அதில் அறனும் பொருளும் அடங்கும். அறனும் பொருளும் பற்றிப் புறத்தே நிகழும் ஒழுக்கத்

---

* அகம் : 71

§ அகம் 86.

தைப் புறம் என்றது ஆகு பெயர்' என்று டாக்டர் ஐயர் அவர்கள் விளக்கம் கூறுவர். இந்நூல் மேற்கூறிய புறத்தின் பகுதிகளாகிய வெட்சி, கரந்தை முதலிய திணைகளுக்குரிய துறைப் பொருளமைந்த பாக்களைக் கொண்டது. முரஞ்சியூர் முடி நாகராயர் முதல் கோவூர் கிழார் இறுதியாகவுள்ள பல புலவர்கள் இப்பாடல்களை இயற்றியுள்ளனர். இவர்கள் ஒரே காலத்தவரல்லர்; ஒரே சமய, இனத்தவரல்லர்; பல்வேறு காலத்தில் வாழ்ந்த பல்வேறு சமுதாய நிலைகளில் இருந்த பேரரசர்கள் முதல்வண்ணுர் உட்படப் பலராகிய புலவர்கள், இவர்கள். வெண்ணிக்குயத்தியார், ஔவையார், மாறோக்கத்து நப்பசலையார் போன்ற பல பெண்பாற் புலவர்களும் உளர்.

இந்நூலைத் தொகுத்தாரும் தொகுப்பித்தாரும் யாரென்று தெரியவில்லை. ஒவ்வொரு பாட்டின் இறுதியிலும் பாடியவர் பெயரும் பாடப்பட்டவர் பெயரும், திணையும், துறையும் கூறப்பட்டுள்ளன. அத்திணைகளும் துறைகளும் இப்பாடல்கள் பலவற்றுக்குப் பொருந்தவில்லை யென்றும், தொல்காப்பியப் புறத்திணைத் துறைகளே இவற்றிற்குப் பொருந்தும் என்றும் நச்சினார்க்கினியர் கூறுவர். இந்நூலுக்கு ஒரு பழைய உரை உள்ளது. இவ்வுரை அடியார்க்கு நல்லார் உரைக்கும் பழமையானது என்பதற்கு அகச்சான்றுகள் உள.

இந்நூலில் அறியக் கிடக்கும் செய்திகளை யெல்லாம் திரட்டிச் சுருக்கிக் கூறுதல் சாலவும் அரிதாகும்.

கடையெழு வள்ளல்களைப் பற்றிய செய்திகள், அவர்களின் மாரியன்ன வண்மை, அவர் தம் நாடுகளின் வளப்பம், புலவர் வாழ்க்கை, அவர்தம் வறுமையிற்செம்மை, போரும் தீதும் மூளாமல் அவர்கள் சந்து

செய்து இவ்வுலகை அளித்த பெருமை, அரசோர்க்கு அவர்கள் கூறும் அறவுரைகள், அவர்களைப் புரந்த புரவலர்களின் அன்பு நிலை, கோப்பெருஞ்சோழன்—பிசிராந்தையார் நட்பு, பாரதப்போரில் பெருஞ்சோறு அளித்த உதியஞ்சேரலாதனைப் பற்றிய வரலாற்றுக் குறிப்பு, இன்ன பிற வரலாற்றுக் குறிப்புகள், முடியுடை வேந்தர்கள், குறுநில மன்னர்கள், வேளிர்கள் பற்றிய செய்தி, அவர்களிடையே மூண்ட போர்கள், போர்ச்செய்திகள், அவற்றை ஒட்டிய வரலாற்றுக் குறிப்புகள் ஆகிய பல்வேறு செய்திகளை இப்புறநானூறு நமக்கு உணர்த்துகின்றது. எனவே தமிழ் நாட்டின் பண்டைய சமுதாய, அரசியல் வரலாறுகள் எழுதுவதற்கு ஒரு சிறந்த துணைநூலாக வரலாற்று ஆசிரியர்கள் இதனைக் கொள்கின்றனர். காலஞ்சென்ற ஜி. யூ. போப் அவர்கள் தமிழில் பற்றுக் கொள்வதற்கு இந்நூல் ஒரு காரணம் என்பர். உரையாசிரியர்கள் அனைவரும் இந்நூற் செய்யுட்களை மேற்கோள் காட்டியிருப்பது இந்நூலின் பெருமையை உணர்த்தும்.

'நெல்லும் உயிரன்றே; நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகம்' (186)

'உண்டாலம்ம இவ்வுலகம் ... ...
... ... ...
தமக்கென முயலா நோன்றாள்
பிறர்க்கென முயலுநர் உண்மை யானே' (182)

'யாதும் ஊரே யாவரும் கேளிர்' (192)

'கீழ்ப்பா லொருவன் கற்பின்
மேற்பா லொருவன் அவன்கட் படுமே' (183)

'ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்
மூத்தோன் வருக என்னாது, அவருள்,
அறிவுடையோன் ஆறு அரசுஞ் செல்லும்' (183)

'மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக்குறை இல்லை தாம்வாழு நாளே' (188)

—இவ்வடிகள் புறநானூற்றின் சுவையைக் காட்டுபவை.

பாரதம் பாடிய பெருந்தேவனார் சிவபெருமான்மீது கடவுள் வாழ்த்துப் பாடியுள்ளார்.

## பத்துப்பாட்டு

சங்கத்துச் சான்றோர் எண்மரால் இயற்றப்பெற்ற திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, முல்லைப் பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப் பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம் என்ற பத்தும் பத்துப் பாட்டென்று வழங்கப் பெறுகின்றன. "ஆன்றோர் புகழ்ந்த அறிவினிற்றெரீந்து சான்றோருரைத்த தண்டமிழ்த் தெரியல் ஒருபது பாட்டும்" (நச்சினார்க்கினியர் உரைச் சிறப்புப் பாயிரம்) என்று இந்நூல் புகழப்படுகிறது. இவை பாட்டெனவும் பாவெனவும் வழங்கவும் பெறும். இவற்றுள் முல்லைப் பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை என்பன மூன்றும் அகப்பாட்டுக்கள்; நெடுநல்வாடை அகமாகவும் புறமாகவும் கருதப்படுகின்றது. ஏனைய புறப் பாட்டுக்கள். அவற்றுள் ஆற்றுப்படைகள் ஐந்து.

ஆற்றுப்படை யென்பது 'ஆடன் மாந்தரும் பாடற் பாணரும் கருவிப்பொருநரும் இவருட் பெண் பாலராகிய விறலியுமென்னும் நாற்பாலாரும் தாம் பெற்ற பெருஞ் செல்வத்தை, எதிர்வந்த வறியோர்க்கு அறிவுறுத்தி அவரும் ஆண்டுச் சென்று தாம் பெற்றவையெல்லாம் பெறுமாறு கூறிய கூறுபாடு' என்பர். ஆறு—வழி; படை—படுத்தல்.

**திருமுருகாற்றுப்படை:** இதற்குப் புலவராற்றுப் படை, முருகு என வேறு பெயர்களும் உண்டு; 317 அடி களையுடைய ஆசிரியப்பாவால் இயன்றது. இது சிறந்த சைவ நூலாகக் கருதப்படுவதால் இந்நூல் பதினோராம் திருமுறையில் இடம் பெற்றுள்ளது. இதனைப் பாடு வோர் முருகனின் அருளைப் பெறுவர் என்பது அடியார் களின் நம்பிக்கை.

> **'நக்கீரர் தாமுரைத்த நன்முருகாற் றுப்படையைத்**
> **தற்கோல நாடோறும் சாற்றினால்—முற்கோல**
> **மாமுருகன் வந்து மனக்கவலை தீர்த்தருளித்**
> **தாநினைத்த வெல்லாம் தரும்'**

—என்பது பழம் பாட்டு.

முருகாற்றுப்படை யெனின், 'வீடுபெறுதற்குச் சமைந்தானோர் இரவலனை வீடுபெற்றானொருவன் முருக னிடத்தே ஆற்றுப்படுத்தவது' என்று நச்சினார்க் கினியர் பொருள் கூறுவர். ஏனைய ஆற்றுப்படைக்கும் இதற்கும் சில வேறுபாடுகள் உள.

பிற ஆற்றுப்படைகள் ஆற்றுப்படுத்தப் படுவோர் பெயர்களுடன் சார்ந்து வரும் (உ-ம். சிறுபாணாற் றுப்படை, பொருநராற்றுப்படை.) ஆனால் இ.·.தோ வெனின் பாட்டுடைத் தலைவனது பெயரால் வழங்கப் பெறுகிறது. ஏனைய ஆற்றுப்படைகளின் துறை களெல்லாம் இதில் வெளிப்படையாக வாராமல் உய்த் துணரப்படுகின்றன.

இது முருகப்பெருமான் வீற்றிருக்கும் ஆறுபடை வீடுகளையும்பற்றிக் கூறுவதால் ஆறுபகுதிகளாக அமைந்துள்ளது.

திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவா வினன்குடி, திருவேரகம், குன்றுதோறாடல், பழமுதிர்

சோலை என்பன முருகனின் ஆறுபடை வீடுகளாம். முதற்பகுதியில் முருகக்கடவுளுக்குரிய திருவுருவச் சிறப்பும், அவரணியும் மாலை விசேடங்களும், சூரர மகளிர் செயல்களும், முருகபிரான் மாறுபடு சூரனை வதைத்த திறலும், மதுரை, பரங்குன்றம் ஆகியவற்றின் வளனும் பெருமையும் கூறப்பட்டுள்ளன. இரண்டாவது பகுதியில் முருகவேள் ஊர்ந்து வரும் பிணிமுகம் என்ற கடகளிற்றின் இயல்பும் அவருடைய அறு முகங்களின் தோற்றமும் அவற்றிற்கிசைய அவர்தம் பன்னிரு கரங்கள் ஆற்றும் திருவருட் செயல்களும், திருச்சீரலைவாய்த் தலத்தின் பெற்றியும் பேசப்படுகின்றன. மூன்றும் பகுதியில் முனிவரர் மாண்பும் தேவர் வரலாறுகளும் கூறப்படுகின்றன. நான்காவது பகுதியில் அந்தணர் இயல்பும் அவர்கள் முருகனை வழிபடுமாறும் கூறப்படுகின்றன.

ஐந்தாவது பகுதியில் குன்றக்குரவையும், ஆடுகள மகளிர் பாடுகள மகளிர் தம் செயல்களும் பேசப்படுகின்றன. ஆருவது பகுதி அவர் எழுந்தருளியுள்ள இடங்களையும், தேவராட்டி அவரிடத்து ஆற்றுப்படுத்தும் முறையையும் அவர் பாற் சென்று வழிபடும் வழியையும், பழமுதிர்சோலை அருவியின் வளத்தையும் கூறுகின்றது. ‘பழமுதிர் சோலை’ என்ற பகுதியில்,

“நெடும்பெருஞ் சிமையத்து நீலப் பைஞ்சுனை
ஐவருள் ஒருவன் அங்கை ஏற்ப
அறுவர் பயந்த ஆரமர் செல்வ
ஆல்கெழுக் கடவுட் புதல்வ, மால்வரை
மலைமகள் மகனே, மாற்றோர் கூற்றே,
வெற்றி வெல்போர் கொற்றவை சிறுவ”

என்று 24 அடிகள் (253—276) முருகனின் திருநாமங்களை நாமாவளிபோல் போற்றிப் பரவுகின்றன.

**பொருநராற்றுப்படை :** வஞ்சி அடிகள், இடையில் விரவிவந்த 248 அடிகளைக்கொண்ட இப்பாட்டு ஆசிரியப்பாவால் இயன்றது. திருமாவளவனை கரிகாற் பெருவளத்தானை முடத்தாமக்கண்ணியார் பாடியது. பரிசில் பெறக் கருதிவரும் பொருநனைப் பரிசில் பெற்ற வேறொரு பொருநன் அவனிடத்தே ஆற்றுப்படுத்துவதாகப் புலவர் பாடியிருக்கிறார். பொருநருள் ஏர்க்களம் பாடுநர், போர்க்களம் பாடுநர், பரணி பாடுநர் எனப் பலர் இருந்தனர். அவருள் இப்பாட்டில் வருபவன் தடாரிப்பறை கொட்டிப் போர்க்களம் பாடுபவன். (''கைக்கச டிருந் தவென் கண்ணகன் றடாரி'')–70.

பொருநர்கள் விழாவிற்கூடித் தங்கள் இசைத் திறனைக் காட்டி வேற்றூர் செல்வதாக இப்பாட்டு தொடங்குகிறது.

> **''மணங்கமழ் மாதரை மண்ணி யன்ன**
> **வணங்கு மெய்ந்நின்ற அமைவரு காட்சி**
> **ஆறலை கள்வர் படைவிட வருளின்**
> **மாறுதலை பெயர்க்கும் மருவின் பாலை''**

என்ற அடிகள் பாலையாழ் ''மைத்தடங்கண் மணமகளிர் கோலம்போல் வனப் பெய்தி''‡ யிருந்தமையைக் காட்டுவதுடன் ஆறலை கள்வர்கள் தம் கையிலுள்ள படைக்கலங்களைக் கைவிடும்படியாக அவர்களிடத்திலுள்ள மறத்தை நீக்கும் தன்மை வாய்ந்ததாகக் கூறப்பட்டிருப்பது நோக்கத்தக்கது. இப்பாட்டில் விறலி

‡சிலம்பு

யின் கேசாதி பாத வருணனை காணப்படுகிறது, கரிகாற் பெருவளத்தானின் மாரியன்ன வண்மையும் பொருநர் பொற்றாமரையும் விறலியர் பொன்னரி மாலைகளும் பெறுதலும், திருமாவளவன் வெண்ணிப்பறந்தலையில் சேர பாண்டியரை வென்ற செய்தியும், பிறவும் கூறப் பட்டுள்ளன.

**சிறுபாணாற்றுப்படை:** பாணருள், சிறுபாணர், பெரும்பாணர், மண்டைப்பாணர் என்று பலர் இருந் தனர். சிறுபாணாற்றுப்படையில் "இன்குரற் சீறியாழ் இடவயிற் றழீஇ" (85) என்றும் பெரும்பாணில், "இடனுடைப் பேரியாழ் முறையுளிக் கழிப்பி" என்றும் வருதலால் இவர்களுக்குள் இருந்த வேறுபாடு யாழ் பற்றி வந்ததாகக் கருத இடம் உண்டு.

இவருள் பரிசில் பெறக் கருதிய சிறுபாணனொரு வனைப் பரிசில் பெற்ற வேறொருவன் ஓய்மா நாட்டு நல்லியக் கோடனிடத்தே ஆற்றுப்படுத்தியதாக அவனை இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனார் பாடியது. இப்பாட்டு 269 ஆசிரிய அடிகளால் இயன் றது. சிறுபாணன் ஆற்றுப்படுத்தப் படுவதால் இது இப்பெயர் பெற்றது எனவும் அளவால் இது பெரும் பாணினும் சிறியதாகையால் இது சிறுபாணாற்றுப் படையெனப் பட்டது என்றும் கொள்ளலாம்.

இப்பாட்டுள்ளும் விறலியரின் கேசாதி பாத வரு ணனை காணப்படுகிறது.

> "கொழுமீன் குறைய வொதுங்கி வள்ளிதழ்க்
> கழுநீர் மேய்ந்த கயவா யெருமை
> பைங்கறி நிவந்த பலவின் னீழல்
> மஞ்சள் மெல்லிலை மயிர்ப்புறந் தைவர

விளையா இளங்கள் நாற மெல்குபு பெயராக்
குளவிப் பள்ளிப் பாயல் கொள்ளும்''

என்ற வஞ்சி நகர வளனின் வருணனையும்,

''தமிழ்நிலை பெற்ற தாங்கரு மரபின்
மகிழ்நனை மறுகின் மதுரை''

என்ற மதுரை நகர வருணனையும்,

''நாடா நல்லிசை நற்றேர்ச் செம்பியன்
ஓடாப் பூட்கை உறந்தை''

என்ற உறையூரின் வருணனையும் அழகாகக் கூறப் பட்டுள்ளன. அத்துடன் கடையெழு வள்ளல்களைப் பற்றிய செய்திகளும் இச்சிறுபாணாற்றுப் படையில் பேசப்படுகின்றன. இவ்வெழுவரும் பூண்ட ஈகைச் செந்நுகத்தைத் தான் ஒருவனே தாங்கிய நல்லியக் கோடனின் வண்மையைப் புலவர் சுவைபடக் கூறுகிறார்.

நல்லியக்கோடனின் வேலூர், ஆமூர், பழைய ஊர் ஆகியவையும், அங்குப் பரிசிலர் பெரும் பொருள் களும் அழகுறக் காட்டப்பட்டுள்ளன.

பாணரது அட்டில் வறுமையையும், நெஞ்சச் செம் மையையும் உலக இயற்கையையும் இந்நூல் சித்திரித் துக் காட்டுகிறது:

''திறவாக் கண்ண சாய்செவிக் குருளை
கறவாப் பால்முலை கவர்தல் நோனது
புனிற்றுநாய் குரைக்கும் புல்லென் அட்டில்
காழ்சோர் முதுசுவர்க் கணச்சிதல் அரித்த
பூழி பூத்த புழற்கா ளாம்பி
ஒல்குபசி யுழந்த ஒடுங்குநுண் மருங்குல்
வளைக்கைக் கிணைமகள் வள்ளுகிர்க் குறைத்த

குப்பை வேளை உப்பிலி வெந்ததை
மடவோர் காட்சி நாணிக் கடை அடைத்து''
(சிறுபாண் : 130—138)

பெரும்பாணாற்றுப்படை

பரிசில் பெறக் கருதிய பெரும்பாணன் ஒருவனைப் பரிசில் பெற்றவன் காஞ்சியை ஆண்ட தொண்டைமான் இளந்திரையனிடத்தே ஆற்றுப்படுத்தியதாக அவனைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடிய பாட்டே இது வாகும். 500 அடிகளைக்கொண்ட ஆசிரியப்பாவாலானது. இப்பாட்டு பாணாறு எனவும் வழங்கப் பெறும். பெரும்பாணர் மீட்டிய பேரியாழ் இப்பாட்டில் சிறப்புடன் வருணிக்கப்படுகிறது. திரையனுடைய நாட்டில்,

“அத்தஞ் செல்வோ ரலறத் தாக்கிக்
கைப்பொருள் வௌவுங் களவேர் வாழ்க்கைக்
கொடியோ ரின்றவன் கடியுடை வியன்புல
முருமு முரரு தரவுந் தப்பா
காட்டு மாவு முறுகண் செய்யா''

என்று கூறும் அடிகள்

“கோள்வல் உளியமும் கொடும்புற் றகழா
வாள்வரி வேங்கையும் மான்கண மறலா
அரவுஞ் சூரும் இரைதேர் முதலையும்
உருமுஞ் சார்ந்தவர்க் குறுகண் செய்யா
செங்கோல் தென்னவன் காக்கும் நாடு''

என்ற சிலம்படிகளை நினைவூட்டுகின்றன.

எயினர், எயிற்றியர், மறவர், ஆயர் ஆகியவர்தம் வாழ்க்கை முறைகள் இப்பாட்டின் இடையிடையே படம் பிடித்துக் காட்டப்படுகின்றன. அந்தணர் மடமகள் ஊறுகறி அமைக்கும் திறன், நீர்ப்பெயற்றென்னும் ஊரின் பெருமை, பரதர் தெருவில் நிகழ்வன

திருவெ.:.காவில் திருமால் பள்ளி கொண்டு கிடந்தருளு தல், இளந்திரையனின் வீரமும் கொடையும் இன்னோ ரன்ன பல செய்திகளைப் பாணாறு எடுத்தியம்புகிறது.

**முல்லைப்பாட்டு:** பத்துப்பாட்டினுள் ஐந்தாவ தாவதாகிய இந்நூல் 103 அடிகளைக் கொண்ட ஆசிரி யப்பாவால் ஆனது; அளவால் மிகச் சிறியது. எனினும் இ:.தளிக்கும் சுவையும் நயமும் ஓர்ந்து இன்புறத் தக்கவையாகும். வினைவயிற் சென்ற தலைவனின் பிரிவினை ஆற்றமாட்டாது வருந்திய தலைவியினது துயர்கண்ட பெருமுது பெண்டிர் விரிச்சி கேட்டுவந்து தலைவன் தப்பாது வருவான் என்று எடுத்துக் காட்ட வும் தேறாது, தலைவி தன்னுடைய பூப்போல் உண் கண்ணில் புலம்பு முத்துறைப்ப, தலைவன் வினை முற்றித் தன் தேரில் திரும்புவதைத் தோழிகள் கூறுவதுபோல் கூறுகிறது இப்பாட்டு. இது முல்லை யெனவும் வழங்கப் படுகிறது. இதனைப் பாடிய புலவர் நப்பூதனார் என்பாராவர்.

தலைவனைப் பிரிந்த தலைவி எய்தும் பெருந் துயர நிலையும், பெருமுது பெண்டிர் விரிச்சி கேட்டு வந்து அவளை ஆற்றுவிக்கும் பரிவும், வினைக்களத்தில் ஒரு கான்யாற்றின் கரையினிலே பாடிவீடு அமைக்கும் முறையும், அங்கு யவன வீரர்கள், ஊமையராய் அரச னது மெய்க்காப்பாளராகக் காத்து நிற்கும் நிலையும், போர்க்களங்களிலும் வீர மங்கையர் பகல் செய்யும் கூர்வாளுடன் பணிபுரியும் காட்சியும், போரில் வீழ்ந்து உறுகணையுற்ற மாவையும் கரியையும் சிந்தித்துத் தலைவன் பரிவு கொள்ளுதலும், தலைவன் வினைமுற்றி மீள்கையில் செம்புலவழியில் காணப்படும் இயற்கை அழகும் பயிலப் பயிலப் பாகாய் இனிக்கும் தன்மையன.

"செறியிலைக் காயா அஞ்சனம் மலர
முறியிணர்க் கொன்றை நன்பொன் காலக்
கோடல் குவிமுகை அங்கை அவிழத்
தோடார் தோன்றி குருதி பூப்பக்
கானம் நந்திய செந்நிலப் பெருவழி
வானம் வாய்த்த வாங்குகதிர் வரகின்
திரிமருப் பிரலையொடு மடமான் உகள
எதிர்செல் வெண்மழை பொழியும் திங்களில்
முதிர்காய் வள்ளியங் காடுபிறக் கொழிய"

(93—101)

தேரோடுங் காட்சி நம் சிந்தனைத் திரையில் கிளர்ச்சியை உண்டாக்கும்.

**மதுரைக் காஞ்சி:** இப்பாட்டு, பத்துப் பாட்டினுள் அளவாலும் மிகப் பெரியது; 781 அடிகளையுடையது; வஞ்சியடிகள் விரவிவந்த ஆசிரியப்பாவால் ஆனது. இப்பாட்டைத் தலையாலங்கானத்துச் செரு வென்ற பாண்டியன் நெடுஞ்செழியனுக்கு, வீடுபேறு நிமித்தம் பலவகை நிலையாமையைச் செவியறிவுறுத்துவதற்கு மாங்குடி மருதனார் பாடியுள்ளார். மதுரைக் காஞ்சி என்ற தொடரை, மதுரையினிடத்து அரசற்குக் கூறிய காஞ்சியென விரிப்பர். "காஞ்சித்திணை யென்பது வீடுபேறு நிமித்தமாகப் பல்வேறு நிலையாமையைச் சான்றோர் கூறும் குறிப்பினது" என்பர். "கொன்னொன்று கிளக்குவல் அடுபோரண்ணல், கேட்டிசின் வாழி கெடுகநின் னவலம்" என்று புலவர் கூறுவதால் (207–208) வீடுபேற்று நிமித்தம் கூறப்பட்டது. (கொன் எனின் கந்தழி—கடவுள் என்பர் நச்சினார்க்கினியர்) "அன்னாய் நின்னொடு முன்னிலை எவனோ" (ஐம்பொறிகளுக்கும் நுகரப்படுவனவாய் முன்னிற்கப் படுவனவாகிய இந்நுகர் பொருள்கட்கு நின்னோடு நின்

ஆன்மாவோடு என்ன உறவுண்டு - 206) என்றும், 'திரையிடு மணலினும் பலரே யுரைசெல, மலர்தலை யுலக மாண்டுகழிந் தோரே' (236–7) என்றும் வரும் வரிகள் பல்வேறு நிலையாமையைக் குறிக்கும்.

அடுபோர் புரிந்து பகைவர்களை வெல்வதிலேயே தன் வாழ்நாள் முழுவதையும் கடத்திய பாண்டியன் நெடுஞ்செழியனுக்குப் பல்வேறு நிலையாமைகளை அறிவுறுத்துவதற்காக ஆசிரியர் கையாளும் முறை போற்றுதற்குரியதாகும். முதற்கண் அவனுடைய முன்னோர்தம் நல்லியல்புகளையும், அவனுடைய கொடை, வீரம், நற்பண்பு முதலியவற்றையும் கூறிப் பின்னர்த் தம் கருத்தைச் சில அடிகளாலே புலப் படுத்தி, மதுரையின் பெருவளத்தையும் பரக்கக் கூறு கின்றார், புலவர் மாங்குடி மருதனார். மதுரையைப் பற் றிய வருணனையைப் படிக்குந்தோறும் சிலப்பதிகாரத்து மதுரைக்காண்டம் நினைவிற்கு வருதல் இயல்பு. மதுரை யில் திருப்பரங்குன்ற விழா, மதுரைக் கோயில்களில் நடைபெற்ற விழாக்கள், அந்திவிழா, ஏழுநாள் நடை பெறும் விழா, மாயோன் மேய ஓணநன்னாள், நன்னன் பிறந்தநாள் விழா போன்ற விழாக்களைப் பற்றிய செய்திகள் காணக்கிடக்கின்றன. அழும்பில், மோகூர், மதுரை, சாலியூர், முதுவெள்ளிலை, கொற்கை, தலையா லங்கானம் முதலிய ஊர்களைப் பற்றிய வரலாறுகளும் பேசப்படுகின்றன.

"விழுச்சூழிய விளங்கோடைய
கடுஞ்சினத்த கமழ்கடா அத்து
அளறுபட்ட நறுஞ்சென்னிய
வரைமருளும் உயர்தோன்றல
வினைநவின்ற பேர்யானை
சினஞ்சிறந்து களனுழக்கவும்

6

மாவெடுத்த மலிகுரூஉத்துகள்
அகல்வானத்து வெயில்கரப்பவும்
வாம்பரிய கடுந்திண்தேர்
காற்றென்னக் கடிதுகொட்பவும்
வாள்மிகு மறமைந்தர்
தோள்முறையான் வீறுமுற்றவும்''

(43—54)

என்ற வரிகள் கலிங்கத்துப் பரணியை நினைவூட்டு கின்றன.

எழுநாள் விழாவில், ஏழாம்நாளில் தீர்த்தநீர் ஆடும்பொழுது அத் தீர்த்தத்தின் அளவு மிகுதியைக் குறிப்பிடுங்கால்,

"மழைகொளக் குறையாது புனல்புக மிகாது
கரைபொருது இரங்கும் முந்நீர் போலக்
கொளக்கொளக் குறையாது தரத்தர மிகாது
கழுநீர் கொண்ட எழுநாள் அந்தி''

(424—427)

என்று உவமை காட்டி விளக்குவது, ஓர்ந்து இன்புறத் தக்கது.

**நெடுநல்வாடை:** பத்துப் பாட்டினுள் ஏழாவது, தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ் செழியனை, மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் பாடிய நெடுநல்வாடையாகும். "தலைவனைப் பிரிந்தி ருந்து வருந்தும் தலைவிக்கு ஒருபொழுது ஒருழிபோல நெடிதாகிய வாடையாகி, அகத்தொடுங்கி போகம் நுகர்வார்க்குச் சிறந்த காலமாயினும், அரசன் போகம் வேண்டிப் பொதுச்சொற் பொருளைப் அப்போகத்தில் மனமற்று வேற்றுப்புலத்துப் போந்திருக்கின்ற இருப் பாகலின், அவற்கு நல்லதாகிய வாடையாகி நெடு

நல் வாடை என்ற பெயர் பெற்றது" என்பர் நச்சினார்க்கினியர். இது 188 அடிகளையுடைய ஆசிரியப்பாவால் ஆனது. பகை மேற்சென்ற பாண்டியன் நெடுஞ்செழியனைப் பிரிந்து வருந்தும் தலைவிக்கு, அவ்வருத்தம் தீரும்படி அவன் பகையை வென்று விரைவில் வருவானாக என்று கொற்றவையைப் பரவுவாள் கூறுவதாக இப்பாட்டு அமைந்துள்ளது. இப்பாட்டு அகப்பொருட்குரியதாக அமைந்திருப்பினும், "வேம்புதலை யாத்த நோன்கா ழெ.:கம்" (176) எனப் பாண்டியனது அடையாளப் பூவாகிய வேம்பைக் கூறினமையின், அகத்தின்பாற்படாது புறத்திணையாயிற்றென்பர்.

முதற்கண் கூதிர்காலத்தில் மக்களும், மாவும், புள்ளும் குளிரால் வருந்தியமை கூறப்படுகிறது.

"மாமேயன் மறப்ப மந்தி கூரப்
பறவை படிவன வீழக் கறவை
கன்றுகோள் ஒழியக் கடிய வீசிக்
குன்றுகுளிர்ப் பன்ன கூதிர்ப் பானாள்"

என்ற அடிகள் கூதிர்காலத்தின் கொடுமையை விளக்குவன. அத்தகைய காலத்தில் தலைவனைப் பிரிந்து வருந்தும் தலைவி வதியும் அரண்மனையின் அமைப்பும் அதனுடைய வாயிலும் அழகாக வருணிக்கப்பட்டுள்ளன. அவ்வாயில், கொடிகொண்டு நடக்கும் யானை புகுமாறு பெரிதாக இருந்தது என்பதை,

"ஐயவி அப்பிய நெய்யணி நெடுநிலை
வென்றெழு கொடியொடு வேழஞ் சென்றுபுகக்
குன்றுகுயின் றன்ன வோங்குநிலை வாயில்"

என்னும் அடிகள் (86—88) காட்டுகின்றன. பின்னர் அரசி துயில் கொள்ளும் கட்டிலின் அழகும் புனைவும் விரித்துரைக்கப்படுகின்றன. அக்கட்டிலின் விதானத்

தில் வரையப்பெற்ற ஓவியங்களில் வானநூற் செய்திகள் அமைந்துள்ளமை அக்காலத் தமிழரின் வானநூல் அறிவிற்குச் சான்ருகத் திகழ்கின்றது. இறுதிப் பகுதியில், அரசன் போரில் புண்பட்ட வீரர்கள்பால் அன்பு கொண்டு, நள்ளிரவென்றும் மழையென்றும் பாராமல் சென்று அவர்களை முகமலர்ச்சியுடன் ஆற்றுவிக்கும் செய்தி கூறப்படுகிறது. முல்லைப்பாட்டில் வரும் பாசறைக் காட்சியிலும் இச்செய்தி வருதல் காண்க. இந்நெடுநல்வாடையுள் பண்டைக் காலச் செய்திகள் பல காணப்படுகின்றன.

"செவ்வி யரும்பின் பைங்காற் பித்திகத்
தவ்வித ழவிழ்பதங் கமழப் பொழுதறிந்து"

என்ற (40—41) அடிகளால் பித்திகை மலர் மலர்வதைக் கண்டு பொழுதினை அறியும் வழக்கத்தையும்,

"விரிகதிர் பரப்பிய வியல்வாய் மண்டிலம்
இருகோற் குறிநிலை வழுக்காது குடக்கேர்பு
ஒருதிறஞ் சாரா அரைநா ளமையத்து
நூலறி புலவர் நுண்ணிதிற் கயிறிட்டுத்
தேஎங் கொண்டு தெய்வ நோக்கிப்
பெரும்பெயர் மன்னர்க் கொப்ப மனைவகுத்து".

என்ற அடிகளால் (73—78) அக்காலத்தோர் மனை வகுக்கும் முறையையும் அறியலாம்.

**குறிஞ்சிப்பாட்டு :** "பெருங்குறிஞ்சி" என்று சிறப்பிக்கப்பெறும் இப்பாட்டு, 261 அடிகளைக் கொண்ட ஆசிரியப்பாவால் இயன்றது. காப்பு மிகுதியால் காதல் மீக்கூரத் தலைவன் வரும் வழியின் ஊறஞ்சிய தலைவி தோழிக்கு அறத்தொடு நிற்க, அவள் செவிலித்தாய்க்கு அறத்தொடு நிற்கும் முறையில் இப்பாட்டு அமைந்துள்ளது.

"ஆரியவரசன் பிரகத்தனுக்குத் தமிழ் அறிவித்தற்குக் கபிலர் பாடிய குறிஞ்சிப்பாட்டு" என்று இக்குறிஞ்சிப்பாட்டிற்கு நச்சினார்க்கினியர் எழுதிய உரையின் இறுதியில் காணப்படும் குறிப்பினால், கபிலர் பெருமான் ஓர் ஆரிய அரசனுக்குத் தமிழின் மொழி நயமும் இலக்கிய மரபும் உணர்த்துவதற்காக இப்பாட்டினைப் பாடியிருக்க வேண்டும் என்பது உணரலாம். பிற திணைக்குரிய செய்திகள் பல இதனுள் காணப்படினும், புணர்தலும் புணர்தல் நிமித்தமுமே இதன் உரிப்பொருளாக அமைவதால் இது குறிஞ்சியாயிற்று என்பர்.

பழந்தமிழ் இலக்கிய மரபாகிய புலனெறி வழக்கின் களவொழுக்கத்தைப் பற்றிய செய்திகள் இதில் முறையாகக் கூறப்பட்டுள்ளன. குறிஞ்சி நிலத்துப் பெண்டிர் புனல்குடைதல், பூக்கொய்து சூடல் போன்ற களிமகிழ்வுற்ற செய்திகளும், தலைவியின் அன்பு நிலையும், தலைவனின் பீடுகெழு தோற்றமும், அவர்களது அன்பொழுக்கமும், தலைவியின் மேற்சென்று அச்சுறுத்திய தனது நாயைத் தலைவன் அடக்கியவாறும், களிறுதரு புணர்ச்சி புனல்தரு புணர்ச்சி ஆகிய துறை அமைதிகளும், மாலை வந்துற்ற பொழுதில் நிகழும் நிகழ்ச்சிகளும் மிக இனிய சுவை மிக்க செஞ்சொற்களால் பேசப்படுகின்றன.

தலைவியும் தோழியும் பனி உருக்குப்போன்ற சுனை அருவியில் கண்சிவக்க நீராடிவிட்டுப் பல்வகை மலர்களைத் தூய பாறையில் குவித்து வைப்பதாகக் கூறுகையில் 99 வகையான பூக்களைப் பற்றிக் கபிலர் குறிப்பிடுகின்றார். அவை யாவும் குறிஞ்சி நிலத்திற்குரிய பூக்களே என்று உணரும்பொழுது அவரது

இயற்கை நுண்ணறிவினை நினைந்து நம்மால் வியக்காமல் இருக்க வொண்ணாது. மேலும், ஆரிய அரசன் பிரகத்தனுக்குத் தமிழ் அறிவிப்பதற்காக இப்பாட்டுப் பாடப்பட்டதால், பல்வேறு இடங்களில் அரசர் பற்றிய செய்திகள் உவமையாகவும் வேறு நிலைகளிலும் கூறப்பட்டமை போற்றற்பாலது. தோழியின் நிலையைக் கூறுகையில் "இகன்மீக் கடவு மிருபெரு வேந்தர், வினையிடை நின்ற சான்ரோர் போல" என்று உவமையாகக் கூறப்பட்டமை காண்க.

**பட்டினப்பாலை :** பட்டினத்தைச் சிறப்பித்துக் கூறிய பாலைத்திணையாகையால் இது பட்டினப்பாலை என்ற பெயர் பெற்றது; 301 அடிகளையுடையது. பெரும்பாலும் வஞ்சியடிகளால் வந்து, ஆசிரிய அடிகளால் முடிவதால் இது வஞ்சிநெடும்பாட்டு எனவும் அழைக்கப்படுகிறது.

பொருள் ஈட்டுவதற்காக வேற்று நாட்டிற்குச் செல்லத் தொடங்கிய தலைவன் இடையில் தன் நெஞ்சை நோக்கி,

> **"முட்டாச் சிறப்பின் பட்டினம் பெறினும்**
> **வாரிருங் கூந்தல் வயங்கிழை ஒழிய**
> **வாரேன் வாழிய நெஞ்சே"**
>
> *(218-220)*

என்று கூறிச் செலவழுங்கியதாக இப்பாட்டு அமைந்துள்ளது. இதனைப் பாடியவன் கடியலூர் உருத்திரங்கண்ணனார். பாடப்பட்டவன் சோழன் கரிகாற் பெருவளத்தானாகிய திருமாவளவன் ஆவான். இப்பாட்டைப் பாடியதற்காகக் கரிகாற் பெருவளத்தான் கடியலூர் உருத்திரங்கண்ணனாருக்குப் பதினாறு நூறாயிரம் பொன் பரிசாகக் கொடுத்தான் என்பர்.

"தழுவு செந்தமிழ்ப் பரிசில் வாணர்பொன்
பத்தொ டாறுநூ றுயிரம்பெறப்
பண்டு பட்டினப் பாலைகொண்டதும்"

என்ற கலிங்கத்துப்பரணி (இராச. 21.) கூற்று இதனை உறுதிப்படுத்துவது காண்க.

இடைச்சுரத்தில், தலைவன் செலவழுங்கத் துணிவதற்கு அவன் கூறும் காரணம் நோக்கத்தக்கது.

"முட்டாச் சிறப்பிற் பட்டினம் பெறினும்
வாரிருங் கூந்தல் வயங்கிழை ஒழிய
வாரேன் வாழிய நெஞ்சே......
..........................
அரிமா அன்ன அணங்குடைத் துப்பிற்
திருமா வளவன் தெவ்வர்க் கோக்கிய
வேலினும் வெய்ய கானமவன்
கோலினும் தண்ணிய தடமென் றோளே"

"முட்டாச் சிறப்பின் பட்டினம்" என்ற (218) வரிவரையில் சோணுட்டு வளத்தையும், வாழ்வையும், அதன் திலகம் போன்ற காவிரிப்பூம் பட்டினத்தின் தலைமயங்கு வளத்தையும் புலவர் கூறுகின்றூர். "திருமாவளவன் தெவ்வர்க்கு ஒக்கிய" என்ற (299) அடி வரையில் சோழன் கரிகாற்பெருவளத்தானின் பீடும் பெருமையும் விரித்துப் பேசுகின்றூர்.

முதற்கண் சோணுட்டை வருணிக்கப் புகுமுன் காவிரியின் பீடுற்ற பெருநிலையைக் கூற வந்த புலவர்,

"வசையில்புகழ் வயங்குவெண்மீன்
திசைதிரிந்து தெற்கேகினும்
தற்பாடிய தளியுணவின்

புள்தேம்பப் புயன்மாறி
வான்பொய்ப்பினும் தான்பொய்யா
மலைத்தலைய கடற்காவிரி

(1—6)

என்று புகழ்ந்து, பின் அதன் "புனல் பரந்து பொன் கொழிக்கும்" காவிரி நாட்டைச் சிறப்பிக்கின்றார். சோழநாட்டின் பொருள் வளத்தைப்பற்றி அவர் காட்டும் குறிப்பு, போற்றி இன்புறத்தக்கது.

"அகனகர் வியன்முற்றத்துச்
சுடர்நுதன் மடநோக்கின்
நேரிழை மகளி ருணங்குணக் கவரும்
கோழி யெறிந்த கொடுங்காற் கனங்குழை
பொற்காற் புதல்வர் புரவியின் றுருட்டும்
முக்காற் சிறுதேர் முன்வழி விலக்கும்"

(20—25)

நெய்தல் நிலத்துப் பரதவர்கள், திங்கள் உவாவுற்ற காலத்தில் கடலில் மீன்வேட்டம் செல்லாது விழா அயர்வார்கள் என்றும், இரவில் கடலில் செல்கையில் அந்தக் 'கொடுந்திமில் பரதவர்,' கரையிலுள்ள நெடுங்கால் மாடத்து எரியும் ஒள்ளெரி நோக்கி எண்ணுவர் என்றும் கூறப்படுகின்றன. காவிரிப்பூம் பட்டினத்தில் அக்காலத்தில் சிறந்த கடல் வாணிகம் நடைபெற்றது. "அளந்தறியாப் பல பண்டம் வரம்பறியாமல் வந்து ஈண்டி", புகாரின் துறைமுகத்தில் "உல்கு" என்ற சுங்கம் வசூலிக்கப்படுவதற்காகக் குவிந்திருந்தனவாம்.

அவற்றில் அரசனது புலிப்பொறி இடப்பட்டு அவைகள் மலைபோல் குவிக்கப்பட்டன. அவற்றிற்கான சுங்கத்தை விதிப்பதற்காக அரசனது ஏவலாளர்கள் "காய்சினத்த கதிர்ச்செல்வன் தேர்பூண்ட மாஅ

போல்'' சோம்பர் இன்றி உழைத்தனர். மேலும்,

**''நீரின் வந்த நிமிர்பரிப் புரவியும்
காலின் வந்த கருங்கறி மூடையும்
வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்
குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்
தென்கடல் முத்தும் குணகடல் துகிரும்
கங்கை வாரியும் காவிரிப் பயனும்
ஈழத் துணவும் காழகத் தாக்கமும்
அரியவும் பெரியவும் நெரிய ஈண்டி
வளந்தலை மயங்கிய''**

*(185—193)*

நிலையில் பூம்புகார் விளங்கியது. பொன்னும், மணியும், பூவும், புகையும், கள்ளும், தேனும், பல்வேறு கூலவகைகளும் இன்னபிறவும் விற்போரின் கொடிகள் வானில் நுடங்கின. அவற்றுடன்,

**''பல்கேள்வித் துறைபோகிய
தொல்லாணை நல்லாசிரியர்''**

தங்களுக்குள் நிகழ்த்திய அறிவு வாதங்களுக்காகப் பட்டிமண்டபங்களில் எடுத்த கொடியும் வானளாவி நின்றது.

பின்னர், கரிகாலன் இளமையில் சிறையில் இருந்தமையும், இச்சிறையினின்றும் மீண்டு பகை வரை ஒழித்து அரசுகட்டில் ஏறியதும், ஒளியர், அருவாளர், வடவர், குடவர், பொதுவர், இருங்கோ வேள் முதலிய அரசர்களை வென்றமையும், உறையூரைத் திருத்தியமைத்துக் 'காடுகொன்று நாடாக்கிக் குளந்தொட்டு வளம் பெருக்கிய' செயலும் விரிவாகப் பேசப்படுகின்றன.

**மலைபடுகடாம் :** பத்துப்பாட்டின் பத்தாவதாகத் திகழ்வது மலைபடுகடாம். இது 583 அடிகளைக் கொண்ட ஆசிரியப்பாவால் இயன்றது. பரிசில் பெற வரும் கூத்தன் ஒருவனைப் பரிசில் பெற்ற கூத்தன் செங்கண்மாத்துவேள் நன்னன்சேய் நன்னனிடத்தே ஆற்றுப்படுத்தியதாக, அந்நன்னனை இரணியமுட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் பாடியது. இது கூத்தராற்றுப்படை யெனவும் வழங்கப்படுகிறது. எண்வகைச் சுவையும் புலப்பட அரங்கில் ஆடுவோரே கூத்தர் எனப்பட்டனர்.

"அலகை தவிர்த்த எண்ணருந் திறத்த
மலைபடு கடாஅம் மாதிரத் தியம்ப"

*(347—348)*

என்ற அடிகளால் யானையை மலைக்கு உவமையாக்கி, அம்மலையில் நிகழும் பல்வேறு ஓசைகளை யானையின் கடாத்திற்கு (மதநீர்) உவமைகாட்டிச் சிறப்பித்தமையால், இது மலைபடுகடாம் என்று பெயர் பெற்றது.

இப்பாட்டினுள் பலவகை இசைக் கருவிகளின் பெயர்களும், யாழைப்பற்றிய வருணனையும் காணப்படுகின்றன. மலையின் வளமும், அதன் சாரல்களில் வாழும் குன்றக்குறவர்களும் காடுகாக்கும் வேட்டுவர்களும் விருந்தினரை ஓம்பும் மாண்பும் சிறப்புறப் பேசப்பட்டுள்ளன. நன்னனது ஊரின் பெருமையும், அவன் கோயில் முன்றிலில் அவனுடைய செவ்விக்காகக் காத்து நிற்போர் கொண்டுவந்த கையுறைப் பொருள்களின் வகைகளும் அழகுறக் கூறப்பட்டுள்ளன. நன்னனுடைய மலையின் பெயர் நவிரமலை. அம்மலையின் காரியுண்டிக் கடவுளைப்பற்றிய செய்திகளும், சேயாற்றின் பெருமையும் சிறப்புறச் செப்பப்படுகின்றன.

"பதியெழ லறியாப் பழங்குடி கெழீஇ
வியலிடம் பெருஅ விழுப்பெரு நியமத்
தியாறெனக் கிடந்த தெருவிற் சாறென
இகழுநர் வெரூஉங் கவலை மருகிற்
கடலெனக் காரென ஒலிக்குஞ் சும்மையொடு
மலையென மழையென மாட மோங்கி"

(479—484)

நன்னனுடைய மூதூர் விளங்கும் என்று பாராட்டப் பட்டுள்ளது. குறமகளிர் தம் கணவர் புண்ணுற்படும் வேதனையைப் பாட்டுப்பாடித் தணித்தல், யானையைக் கட்டுத்தறிகளில் பிணிக்கும் பாகர் வடமொழி பயிற்றுதல், வழிக்கு அடையாளமாகப் புல்லை முடிந்து வைத்தல் போன்ற செய்திகளையும் இப்பாட்டில் காணலாம்.

கூத்தனை ஆற்றுப்படுத்துகையில், இன்ன இன்ன இடங்களில் எதை எதைச் செய்யவேண்டும் என்று கூறுகையில் அந்தந்த நிலங்களுக்குரிய பண்ணைப் பாடுமாறு சொல்வதும், நன்னன் நாட்டிற்குச் செல்லும் ஆற்றில் காணப்படுவனவற்றை யெல்லாம் முதலில் தொகுத்துக்கூறிப் பின்னர் விரித்துரைத்தலும் போற்றுதற்குரியனவாகும்.

# சங்கம் மருவிய காலம்

## திருக்குறள்

இனி, பாட்டும் தொகையும் பயின்ற காலத்தைச் சங்ககாலமெனின், சிலப்பதிகாரம், மணிமேகலை, பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் ஆகியவற்றைச் சங்க மருவிய நூல்கள் என்ப. அவற்றுள், திருக்குறள் பதினெண்கீழ்க் கணக்கினுள் அதனுடைய அளவு பற்றிச் சேர்க்கப்பட்டிருப்பினும், காலத்தால் ஏனைய வற்றைக் காட்டிலும் மூத்தது என்று ஆராய்ச்சியாளர் பலர் உரைக்கின்றனர். எனவே அவர்களது கூற்றை இசைவுடன் கொண்டு பாட்டிற்கும் தொகைக்கும் பின்னர்த் திருக்குறளை ஆராய்வோம்.

கடைச்சங்க காலத்தின் கீழ் எல்லையைப்பற்றி முன்பு பேசுகையில், அது கி. பி. 300 ஆதல் வேண்டும் என்று ஆராய்ச்சியாளர் கூறுவதைக் கண்டோம். இனி, மீண்டும் அதனைப்பற்றிச் சற்று நினைவு கூருவோம். தமிழ்நாட்டின் வடபகுதியாகிய தொண்டை நாட்டையும் நடுநாட்டையும் பல்லவர்கள் கி. பி. மூன்றும் நூற்றுண்டின் தொடக்கத்திலாவது அதற்குச் சற்று முன்பாவது கைப்பற்றியிருத்தல் வேண்டும்.

கி. பி. நான்காம் நூற்றுண்டின் இடைப்பகுதியில் வடநாட்டில் குப்தப்பேரரசனுக விளங்கிய சமுத்திர குப்தன் தட்சிணத்தில் படையெடுத்து வந்து பல்வேறு மன்னர்களே வென்று திரும்பினுன். அவ்வெற்றியின் சின்னமாக அலகாபாத்தில் தூண் ஒன்றினை நாட்டி அதில் தான் வெற்றிகொண்ட மன்னர்களது பெயர் களைப் பொறித்துவைத்தான். அக்கல்வெட்டிலிருந்து காஞ்சியை விஷ்ணுகோபன் என்ற பல்லவ மன்னன் ஒருவன் ஆண்ட செய்தி புலப்படுகிறது. அக்காலம் ஏறத்தாழக் கி.பி. 340-350 என்று கூறலாம்*. இதனுல் மூன்ரும் நூற்றுண்டின் இறுதியில் தமிழகத்தின் வட பகுதியாகிய தொண்டை மண்டலம் பல்லவர் என்ற அரசமரபினர் ஆட்சிக்கு உட்பட்டிருந்தது என்று அறியலாம் என்பர்.†

இப்படிப்பட்ட பல்லவர்களைப் பற்றிப் பாட்டிலும், தொகையிலுமேயன்றிச் சிலப்பதிகாரத்திலும் மணி மேகலையிலும்கூட எவ்வகைக் குறிப்பும் முற்றிலும் காணப்படாமையினுல், அவை காலத்தால் பல்லவருக்கு முற்பட்டிருத்தல் வேண்டும் என்று பலரும் உடன் படுகின்றனர். பல்லவர் காலம் கி. பி. 2ஆம் நூற்றுண்டின் இறுதி அல்லது 3 ஆம் நூற்றுண்டின் முதற்பகுதி எனில், சிலப்பதிகார மணிமேகலை காலம் அதற்கும் முன்னதாக இருத்தல் வேண்டும். அதற்குச் சிலப்பதிகாரத்தில் கிடைக்கும் அகச்சான்று ஒன்று துணை செய்கின்றது. வஞ்சிக் காண்டத்தில் வரந்தரு காதையில் கடல்சூழ் இலங்கைக் கயவாகு

*Pallavas of Kanchi—by R. Gopalan.

†Dr. M. Rajamanickam.—திருக்குறள் ஆராய்ச்சி உரை. பக்கம் 168.

வேந்தனைப் பற்றிய குறிப்பு வருகிறது. அவன் வஞ்சி மாநகரில் செங்குட்டுவன் கண்ணகிக்கு எடுத்த கோவிலுக்கு வந்து அவனது இசைவுடன் பத்தினித் தெய்வத்தைத் தன் ஊருக்கு எடுத்துச் சென்றதாக அக்காதை கூறுகிறது.

இலங்கையின் மகாவம்சம் இரண்டு கயவாகுகளைக் குறிப்பிடுகின்றது. அவருள் ஒருவன் கி. பி. 171—193 இல் வாழ்ந்தவன். மற்றவன் கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்தவன். பின்னவன் காலத்தால் மிகவும் பிந்தியவனாகக் காணப்படுகின்றமையால், சிலம்பு குறிக்கும் மன்னன் கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்தவனாதல்வேண்டும். எனவே, அவன் காலத்தவரான இளங்கோ அடிகளும் சீத்தலைச் சாத்தனாரும் அப்பெரு நூல்களை இயற்றியிருத்தல் வேண்டும். அவைகள் பாட்டிற்கும் தொகைக்கும் காலத்தால் பிந்தியவை என்பது அறிஞர் முடிவு.

இனி, திருக்குறளின் கால ஆராய்ச்சிக்கு மணிமேகலை ஒரு சான்றாகத் துணை செய்வதனைக் காண்போம். திருக்குறட் பாக்களுள் ஒன்றை மணிமேகலை அப்படியே எடுத்தாள்வது நோக்கத் தக்கது.

"தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் பெருமழை என்றஅப்
பொய்யில் புலவன் பொருளுரை தேராய்"

என்பன அவ்வடிகள். இவை எழுந்த சூழ்நிலையைக் கொண்டு ஆராய்கையில், திருக்குறள் மணிமேகலைக்கு வெகு காலத்திற்கு முன்பே வழங்கி வந்திருத்தல் வேண்டும் என்பது புலப்படுகின்றது.†

†Dr. ராஜமாணிக்கம்: "திருக்குறள் காலம்"—திருக்குறள் ஆராய்ச்சியுரை—பக்கம் 172.

மணிமேகலையைத் தவிர, சிலப்பதிகாரம், பாட்டு, தொகைகள் யாவற்றிலும் திருக்குறள் பயின்று வரப் பார்க்கின்றோம்.

"பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா
பிற்பகல் தாமே வரும்."

என்ற குறள்,

"முற்பகல் செய்தான் பிறன்கேடு தன்கேடு
பிற்பகல் காண்குறூஉம் பெற்றி காண்"

என்று சிலப்பதிகாரத்தில் மதுரைக் காண்டத்தில் வஞ்சின மாலை என்ற காதையுள் எடுத்தாளப்பட்டிருக்கிறது. மேலும் கட்டுரைக்காதை இறுதியின்கண் உள்ள வெண்பாவிலும் திருக்குறள் பொலிவது காண்க:

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுவாளைத்
தெய்வந் தொழுதகைமை திண்ணிதால்-தெய்வமாய்
மண்ணக மாதர்க் கணியாய கண்ணகி
விண்ணகமா தர்க்கு விருந்து."

"நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின்
வீடில்லை நட்பாள் பவர்க்கு"

என்ற குறளின் பொருளையும் வடிவத்தையும்,

"நாடி நட்பி னல்லது
நட்டு நாடார்தம் ஒட்டியோர் திறத்தே"

என்றும்,

"பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்."

என்ற குறளை,

"முந்தை யிருந்து நட்டோர் கொடுப்பின்
நஞ்சும் உண்பர் நனிநா கரிகர்"

என்றும் நற்றிணையில் வரக் காண்கின்றோம்.

"பேதைமை யொன்றோ பெருங்கிழமை என்றுணர்க
நோதக்க நட்டார் செயின்."

என்ற குறள்,

"பேதை மையாற் பெருந்தகை கெழுமி
நோதக்க செய்தொன் றுடையேன் கொல்லோ"

எனக் குறுந்தொகையில் பயின்று வருகின்றது.

பரிபாடல்:

"காமக் கணிச்சி யுடைக்கும் நிறையென்னும்
நாணுத்தாள் வீழ்த்த கதவு"

(குறள்)

"காமக் கணிச்சியாற் கையறவு வட்டித்துச்
சேமத் திரைவீழ்த்துச் சென்றமளி சேர்குவோர்"

—பரிபாடல் 10: 33—34

கலித்தொகை:

"காம முடிந்து வருந்தினார்க் கேமம்
மடலல்ல தில்லை வலி."

(குறள். 1131)

"காமக் கடும்பகையிற் றோன்றினேற் கேம
மெழினுத லீத்த விம்மா"

(கலி. 139)

புறநானூறு:

"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு"

(குறள். 110)

"நிலம்புடை பெயர்வ தாயினும் ஒருவன்
செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென
அறம்பா டிற்றே ஆயிழை கணவ"

(புறம். 34)

பத்துப்பாட்டு

"வித்தும் இடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி
மிச்சின் மிசைவான் புலம்."
(குறள். 85)

"விருந்துண் டெஞ்சிய மிச்சில் பெருந்தகை
நின்னோ டுண்டலும் புரைவதென் ருங்கு"
(குறிஞ்சிப் பாட்டு: 206—207)

மேற்கண்ட மேற்கோள்கள், பாட்டும் தொகையும் சிலம்பும் மணிமேகலையும் திருக்குறளை எடுத்தாளும் உண்மையை உணர்த்த வல்லன. இவ்வுண்மையைக்கொண்டு சீர்தூக்கின், திருக்குறள் இவற்றிற்குக் காலத்தால் முந்தியதாதல்வேண்டும் என்று பல ஆராய்ச்சியாளர் உரைப்பர். சிலப்பதிகார மணிமேகலை காலம் கி. பி. இரண்டாம் நூற்றாண்டெனின், சங்க நூல்களின் காலம் முதல் நூற்றாண்டு எனக் கொண்டு திருக்குறள் அதற்கும் முற்பட்டதென்பர் அன்னோர். ஆயின், மற்றொரு பொருளையும் கருத்திற்கொள்ளல் வேண்டும். திருக்குறள் சங்கப் பாடல்களுக்கு முன்னதாக இருப்பின், சங்கப் புலவர்கள் யாரும் தமது பாடல்களில் அதனைப் பற்றிக் குறிப்பிடாதது ஏன்? அக்காலத்தில் புலவர்கள் ஒருவரையொருவர் வியந்து நயந்து புகழும் பண்பினைக் காண்கின்றோம். எடுத்துக் காட்டாக, மாறோக்கத்து நப்பசலையார் என்பவர் கபிலரைப் "புலனழுக் கற்ற அந்தணாளர்" என்று புகழ்தல் காண்க. திருவள்ளுவமாலை முழுவதுமே வெண்பா யாப்பினால் ஒரே புலவரால், பல புலவர்களால் பாடப்பெற்றதுபோல், பாடப்பட்டிருக்கிறது என்று கா. சு. பிள்ளை போன்றோர் கூறுவர்.

புத்த, சமணக் கொள்கைகள் தமிழ் நாட்டினுள் கி. மு. மூன்றும் நூற்றாண்டிற்கு முன்பேயே புகுந்து

விட்டமையானும், திருக்குறளில் அச்சமயங்களின் கருத்துக்கள் மிடைந்து வந்திருப்பதாலும் திருக்குறளின் காலம் கி. மு. முதலாம் நூற்றாண்டு என்று திரு. மறைமலை அடிகள் போன்றோர் கூறுவர்.†

இவ்வாறு பலவாறு ஆராய்ச்சிகள் இருப்பினும், திருக்குறள் காலத்தால் சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய இரண்டிற்கும் முற்பட்டது என்பது மட்டில் மிகவும் உறுதியான செய்தியாகும்.

இனி, குறளைப் பற்றி ஆராய்வோம்.

தெய்வ வள்ளுவன் செய்த வான்மறையே திருக்குறளாகத் திகழ்வதாகும்.

> "ஓதற் கெளிதாய் உணர்தற் கரிதாகி
> வேதப் பொருளாய் மிகவிளங்கித்–தீதற்றோர்
> உள்ளுதொ றுள்ளுதொ றுள்ளம் உருக்குமே
> வள்ளுவர் வாய்மொழி மாண்பு"

என்று, சங்கத்துச் சான்றோரான மாங்குடி மருதனாரின் செந்நாச் சொல், வள்ளுவர்தம் குறளின் பெருமைக்குச் சான்றாக விளங்குகிறது. "அகர முதல எழுத்தெல்லாம்" என்று தொடங்கி "ஊடுதல் காமத்திற் கின்பம் அதற்கின்பம், கூடி முயங்கப் பெறின்" என்று நிறைவுறும் ஆயிரத்து முந்நூற்று முப்பது அருங்குறள்களையும் பாயிரத்துடன் பயில்வோர்,

> "அணுவைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக்
> குறுகத் தறித்த குறள்"

என்ற ஔவை வாக்கிற் கிணங்கத் திருக்குறள் பொலிவதை உணர்வர்.

---

†மாணிக்கவாசகர் கால ஆராய்ச்சி.

இத்தகைய மாபெரும் நூலை இயற்றிய திருவள்ளுவரது பிறப்பு வளர்ப்பைப்பற்றியும், வாழ்க்கையைப் பற்றியும் பல வகைக் கதைகள் வழங்கி வரினும், அவருடைய நூலே அவரது ஒப்பற்ற உள்ளத்தை உலகிற்குக் காட்டும் ஒளிக்கோயிலாக விளங்குகிறது. திருக்குறளை முழுதும் கற்றோர் இத்துணைக் கருத்துக்களையும் எழுதியவர் ஒருவரோ பலரோ என்று ஐயுறும் படியாக, அதன் ஆழமும் அகலமும் அமைந்துள்ளன. அதனாற்றான் பாரதியாரும், ''வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்ட தமிழ்நாடு'' என்று போற்றுகிறார்.

திருவள்ளுவர் வாழ்ந்த காலச் சூழலை வரலாற்றுக் கண்ணுடன் நோக்குவார்க்கு, வள்ளுவர் ஒரு பெரும் புரட்சிப் புலவராக விளங்குகிறார். புலனழுக்கற்ற அந்தணாளரான கபிலரும், ஔவையாரும், நக்கீரரும் கூடப் போற்றிவந்த மதுவுண்டு களித்தலையும், புலால் உண்ணுதலையும் எதிர்த்து ஒதுக்கியவர் வள்ளுவர். ''பரத்தையர் வாழ்வை'' மருதத்திணையின் கருவாக வைத்துப் பாடிய சங்கத்துச் சான்றோர்களுக்கு மாறாக, ''வரைவின் மகளிர்'' என்று பொருட்பாலில் கூறிக் கடிந்தவர்; காமத்துப் பாலில் மறந்தும் கூடப் பரத்தையரைப் பற்றிப் பேசாது கற்பு நெறியை வளர்த்த பேராண்மை படைத்தவர் அவர். தமிழ் வேந்தர்கள் எல்லாம் ''பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி'' என்றும், ''இராசசூயம் வேட்ட பெரு நற்கிள்ளி'' என்றும் அவிசொரிந்து, பலி பெய்து, வேள்வியைப் போற்றிய காலத்தே,

> **''அவிசொரிந் தாயிரம் வேட்டலின் ஒன்றன்**
> **உயிர்செகுத் துண்ணாமை நன்று''**

என்று பறை சாற்றிக் கொல்லாமை என்னும் பெருந் தவத்தை உலகிற்கு ஓதியவர் வள்ளுவர்.

"அறத்தினூஉங்கு ஆக்கமு மில்லை அதனை
மறத்தலி னூஉங்கில்லை கேடு"

என்று அறத்தை ஆணித்தரமாக நம்புபவர் அவர்.

"இறந்த மூப்பினர் ஆய இரு முதுகுரவரும், கற்புடை மனைவியும் குழவியும் பசியால் வருந்தும் எல்லைக்கண் தீயன பலவும் செய்தாயினும் புறந் தருக" என்பது அறநூல் (மனுநீதி) பொதுவிதி. ‡ ஆயின், வள்ளுவர்,

"ஈன்றாள் பசிகாண்பான் ஆயினும் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை"

என்று அதனை மறுக்கின்றார். இதேபோல்,

"இன்றி யமையாச் சிறப்பின வாயினும்
குன்ற வருப விடல்"

என்ற குறளிலும்,

"இறப்ப வருவழி இளிவந்தன செய்தாயினும் உய்க என்னும் வடநூல் முறைமையை (மனுஸ்மிருதி அத். 10. சு. 104) மறுத்து உடம்பினது நிலையின்மையையும், மானத்தினது நிலையுடைமையையும் தூக்கி அவை செய்யற்க என்பதாம்" என்று பரிமேலழகர் உரை கூறுவதையும் காண்க.

"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்"

என்பது, வள்ளுவரது சமதர்மம்.

---

‡பரிமேலழகர் உரை—குறள் 656.

இத்தகைய நேர்மைப் பண்புடன் அறம் கூறவந்த வள்ளுவரை அனைத்துச் சமயத்தாரும் ஏற்றுக் கொண்டு போற்றுகின்றனர்.

"ஒன்றே பொருளெனின் வேறென்ப வேறெனின்
அன்றென்ப ஆறு சமயத்தார் நன்றென
எப்பா லவரும் இயைபவே வள்ளுவனார்
முப்பால் மொழிந்த மொழி"

என்பது கல்லாடர் வாக்காகும்.

நாயனார், தேவர், முதற்பாவலர், தெய்வப் புலவர், நான் முகனார், மாதானுபங்கி, செந்நாப் போதார், பெரு நாவலர் என்பன திருவள்ளுவருக்கு மக்களிட்ட பல் வேறு பெயர்களாகும். இப்பெயர்கள், புலவர் பெரு மக்கள் நெஞ்சிலே வள்ளுவர் வீற்றிருந்த வரிசையை நன்கு புலப்படுத்துவனவாகும். இதுபோன்றே, இவர் யாத்த திருக்குறளும் முப்பானூல், உத்தரவேதம், தெய்வநூல், திருவள்ளுவர், பொய்யாமொழி, வாயுறை வாழ்த்து, தமிழ் மறை, பொதுமறை முதலிய பல்வேறு பெயர்களுடன் திகழ்கின்றது. "அறம் பாடிற்றே ஆயிழை கணவ" என்ற புறப்பாட்டின் அடியைக்கொண்டு இதற்கு, அறம் என்ற பெயரும் உண்டு என்பர்.

பல மொழிகளில் மொழிபெயர்க்கப் பெற்ற பெரு மையை உடையது இந்நூல். "பாரத நாட்டில் எழுந்த நூல்களில் பகவத்கீதைக்கு அடுத்தபடியாக இதுவே பன்மொழிகளிலும் ஏறியிருக்கும் சிறப்புடையதென்று சொல்லலாம்" என்பர்.‡ இவற்றைத்தவிர திருக் குறளைப் பற்றிய ஆராய்ச்சி நூல்கள் பல மேனாட்டு

‡ திருக்குறள் ஆராய்ச்சியுரை—திரு. கி.வா.ஜ.பக்கம் 19.

மொழிகளிலும் இந்திய மொழிகளிலும் தோன்றிக் கொண்டிருக்கின்றன. சங்கத்துப் புலவர்களும், இளங்கோவும், சாத்தனாரும், அவர்களுக்குப் பின்னால் பாரதியார் வரை வாழ்ந்த புலவர்களும் வள்ளுவரைப் போற்றி அவர் மொழிந்த பொருளையும், மொழியையும் பொன்னேபோலப் போற்றி வந்திருக்கின்றனர்.

மேலும், திருக்குறட் பாக்களைப் பிற்பகுதியில் வைத்து, முற்பகுதியில் அதற்கு விளக்கமாக வரலாறு களைக் கூறும் செய்யுட்களையுடைய நூல்கள் பல நந்தம்தமிழ் மொழியில் இருக்கின்றன. எடுத்துக்காட்டாக, சினேந்திர வெண்பா, சோமேசர் முதுமொழி வெண்பா என்பவற்றைக் குறிப்பிடலாம்.

திருக்குறளுக்குப் பதின்மர் உரை செய்திருக்கின்றனர். வேறு எந்த நூலுக்கும் இத்தனை உரைகள் தோன்றவில்லை எனலாம். தருமர், மணக்குடவர், தாமத்தர், நச்சர், பரிமேலழகர், பரிதியார், திருமலையர், மல்லர், பரிப்பெருமாள், காளிங்கர் என்பவர்களே அப்பதின்மர். இவர்களில் பரிமேலழகர் பிந்தியவர் என்பர். இப்பதின்மருள் மணக்குடவர், பரிதியார், பரிப்பெருமாள், காளிங்கர், பரிமேலழகர் ஆகிய ஐவர் உரைகளே இன்று கிடைப்பவை. அவற்றுள்ளும் பரிமேலழகர் உரை சிறந்தது என்பதைப் பரிமேலழகர் உரைச் சிறப்புப்பாயிரம்,

> "பரித்த உரையெல்லாம் பரிமே லழகர்
> தெரித்த உரையாமோ தெளி"

என்று கூறுவதால் உணர்க.

**நூலமைப்பு :**

இந்நூலின் அமைப்பினை நோக்குவோம். திருக்குறள் ஈரடியால் இயன்ற குறள்வெண்பாவினால் ஆன

ஒரு நூலாகும். இதன்கண் 1330 அருங்குறள்கள் அடங்கியுள்ளன. இவை அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்று முப்பெரும் பிரிவுகளாகப் பகுக்கப்பட்டுள்ளன. பத்துப்பத்துப் பாடல்கள் அதிகாரங்களாகத் தொகுக்கப்பட்டுள்ளன. அறத்துப்பாலில் 38 அதிகாரங்களும், பொருட்பாலில் 70 அதிகாரங்களும், காமத்துப்பாலில் 25 அதிகாரங்களும் அடங்கியுள்ளன.

அறத்துப்பால் இல்லறத்தையும் துறவறத்தையும் பற்றிப் பேசுகிறது. பொருட்பால் அரசியலேயும் அமைச்சியலேயும், பொருள் பற்றிய பொதுக் கருத்துக்களையும் விதந்தோதுகிறது. வள்ளுவர் கண்ட காமத்துப்பால் ஓர் இலக்கிய விருந்தாகும்.

தலைவியின் கண்கள் தலைவனை நோக்கி நெஞ்சத்தில் அன்பை உருவாக்கி விடுகின்றன. பின் அதே கண்கள் தலைவனது பிரிவினால் வருந்தி அழுகின்றன. அவற்றின் நிலையை ஆடியில் கண்ட தலைவிக்கு, ஏளனம் கலந்த ஒரு சிரிப்பு வருகிறது. தானாக ஓடிச் சென்று அடாது செய்த ஒரு குழந்தை, அதனால் தானே அவதியுற்று அலறுவதைப் போன்று, அவள் கண்களும் இருக்கின்றன.

> ''கதுமெனத் தாம்நோக்கித் தாமே கலுழும்
> இதுநகத் தக்க துடைத்து'
>
> (குறள்: 1173)

பெண்மை, குழந்தைமை இரண்டும் அன்பென்னும் தூய தேனில் நனைந்து ஒளிரும் பாடல் இது. இவ்வாறு அறம் பொருள் கூறும் அறிஞராகத் திகழும் வள்ளுவரைக் காமத்துப் பாலில் ஒரு கலைஞராகவும் காண்கிறோம்.

# சிலப்பதிகாரம்

தமிழ் மொழியில் ஐம்பெரும் காப்பிய வரிசையில் காலத்தால் முற்பட்டு விளங்குவன சிலப்பதிகாரமும் மணிமேகலையுமாம். 'நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரம்' என்று புலவர் தம் நாவில் பொருந்திய இந்நூல், தமிழ் மொழியில் தோன்றிய முதல் தனிக் காவியமாகும் எனலாம். இயல், இசை, நாடகம் ஆகிய முத்தமிழும் விரவி வரப்பெற்றமையால் இது முத்தமிழ்க் காப்பிய மெனவும், இடையில் உரைநடையும் கலந்துவருவ தால் உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள் என் றும், உரைப்பாட்டு என்றும் வழங்கப் பெறுகின்றது. இதனை இயற்றிய ஆசிரியர் இளங்கோ அடிகளாவர். அவர் சேரன் செங்குட்டுவனின் இளவல் என்பதும், குணவாயிற் கோட்டம் என்னும் சமணப்பள்ளி யில் அரசு துறந்து அறக்கள வேள்வி ஆற்றிவந்தவர் என்பதும்,

> "குணவாயிற் கோட்டத்து அரசுதுறந் திருந்த
> குடக்கோச் சேரல் இளங்கோ வடிகள்"

என்ற சிலப்பதிகாரத்தின் பதிகத்தால் உணர்கிறோம். "ஒரு முலை யிழந்த திருமாபத்தினி" செங்குன்றத்தின் உச்சியிலிருந்த வேங்கை மரத்தின் கீழ் வந்து நின்ற தையும் கோவலன் வானவர் புடைசூழ வானவூர்தியில் வந்து மலர் தூவி அவளை வானுலகம் அழைத்துச் சென்றதையும் கண்ட குன்றக்குறவர்கள், பேரியாற் றங் கரையில் வந்து தங்கியிருந்த சேரன் செங்குட்டுவ னிடத்தில்வந்து தாங்கள் கண்ட செய்தியைக்கூறினர். அப்பொழுது அவ்வேந்தனுடன் அவனுடைய அரசி இளங்கோவேண்மாளும் தண்டமிழ்ச் சாத்தனும்

இளங்கோ அடிகளும் இருந்தனர். குன்றக்குறவர் கூறுவதைக் கேட்ட சாத்தனார், தாம் அறிந்த கண்ணகியின் வரலாற்றைக் கூறினார் என்று 'குன்றக்குரவை' என்ற கதையால் அறிகின்றோம்.

கண்ணகியின் வாழ்க்கை வரலாற்றைச் சாத்தனார் தம் வாய்வழியாகக் கேட்டறிந்த இளங்கோ அடிகள் உள்ளம் அதில் பெரிதும் கவரப்பட்டிருக்க வேண்டும்.

> "அரசியல் பிழைத்தோர்க்கு அறங்கூற் றாவதூஉம்
> உரைசால் பத்தினிக்கு உயர்ந்தோர் ஏத்தலும்
> ஊழ்வினை உருத்துவந்து ஊட்டும் என்பதூஉம்"

என்று இம்மூன்று உண்மைகளைக் கண்ணகியின் வாழ்வில் கண்ட அடிகளார், "சூழ்வினைச் சிலம்பு காரணமாகச் சிலப்திகாரம் என்னும் பெயரால், நாட்டுதும்யாம் ஓர் பாட்டுடைச் செய்யுள்" என்று முடிவு செய்து இந்நூலைப் பாடித் தண்டமிழாசான் சாத்தனாருக்கு முன்னால் அரங்கேற்றினார்.

> "உரையிடை யிட்ட பாட்டுடைச் செய்யுள்
> உரைசால் அடிகள் அருள மதுரைக்
> கூல வாணிகன் சாத்தன் கேட்டனன்"

என்ற பதிகத்து அடிகள் (87—89) இதனை விளக்கும்.

அரசியல் பிழைத்தார்க்கு அறம் கூற்றுவதை நெடுஞ்செழியனது வாழ்வில் காண்கின்றோம். ஊழின் பெருவலியைப் பலவிடங்களில் இளங்கோ அடிகள் கிளத்திக் கூறுகிறார். கோவலன் மாதவியை 'மாயப் பொய் பலகூட்டும் மாயத்தாள்' என்று துறந்து வந்தமைக்குக் காரணம், "யாழிசைமேல் வைத்துத் தன் ஊழ்வினைவந் துருத்ததாகலின்" என்று இளங்கோ அடிகள் உரைக்கின்றார். அது போலவே, அவன்,

புகாரை விட்டு நீங்கி மதுரை புக்கதற்கும் அவ்வூழே காரணம் என்பதை,

> "வாழ்தல் வேண்டி ஊழ்வினை துரப்ப
> சூழ்கழல் மன்ன நின்னகர்ப் புகுந்து"
>
> (மதுரை: வழக்குரை: 59-60)

என்று கண்ணகியின் வாய் வழியே வலியுறுத்துகின்றார். அவ்வண்ணமே கோவலன் கொலையுண்டதற்கும் "வினைவிளை கால மாதலின் யாதொன்றும், சினைஅலர் வேம்பன் தேரா னாகி'யமையே காரணம் என்கிறார்.

இனி, திருமாபத்தினியைத் தெய்வமாக்கிக் காட்டுவதையே இளங்கோ அடிகள் தன் இலட்சியமாகக் கொண்டிருந்தார் என்று கூறத் தோன்றுகிறது. கண்ணகியின் பாத்திர அமைப்பைப் பார்க்கையில் அவளைக் கடவுளாக ஆக்குவதற்காக இளங்கோ அடிகள் படைக்கும் பண்பு நலன்கள் நம்உள்ளத்தைத் தொடுகின்றன. மங்கலவாழ்த்துக் காதை முதல் வரந்தரு காதை ஈறுக உள்ள 30 காதைகளிலும் கண்ணகியின் கடவுள் தன்மையை நாம் காண்கிறோம். பூம்புகாரில் பெருங்குடி வணிகனின் மடமகளாயிருந்தவளைக் கடல்சூழ் இலங்கைக் கயவாகு போன்ற வேந்தர்களும் பரவித் துதித்து வழிபடும் ஒரு பத்தினித் தெய்வமாக உயர்த்திவிட்ட கவிஞரின் உள்ளப் பாங்கைக் கண்டு நம் உள்ளம் அவருக்கு அஞ்சலி செய்கின்றது.

இம்மூன்று உண்மைகளைத் தவிர வேறுபல உண்மைகளையும் நாம் சிலப்பதிகாரத்தால் அறிய முடிகின்றது. தமிழ் மூவேந்தர்களுக்குள் நிலவி வந்த ஒற்றுமையின்மை இளங்கோ அடிகளின் மனத்தை வருத்தியிருத்தல் வேண்டும். தமிழ்கூறு நல்லுலகம் முழுதும் ஒன்றுபட்டு வாழ வேண்டும் என்றும், அதற்கு உறு

துணையாக இருப்பவை தமிழும் பத்தினி வழிபாடும் தாம் என்பதையும் நன்குணர்ந்த இளங்கோ அடிகள் தம் காப்பியத்தை மூவேந்தருக்கும் பொதுமையாக்கி, மூவர் புகழையும், அவர் தம் நாட்டின் சிறப்பையும் பாடுகின்றார். அவரது உயர்ந்த உள்ளத்தை உணர்ந்து தான்,

"முடிகெழு வேந்தர் மூவர்க்கும் உரியது
அடிகள் நீரே அருளுக"

(பதிகம் 61-62)

என்று சாத்தனார் இளங்கோ அடிகளை வேண்டிக்கொண்டதாகப் பதிகம் கூறுகின்றது.

மூவேந்தர் நாடுகளிலும் ஒன்றிய மனமுடைய அடிகள், சமயத் துறையிலும் சமரசமான இயல்புள்ளவராகக் காணப்படுகிறார். இளங்கோ அடிகள் குணவாயிற் கோட்டத்து அரசு துறந்திருந்தவர். இது ஓர் அருகன் கோயில் என்பது அடியார்க்கு நல்லார் கருத்தாகும். எனவே, இளங்கோ அடிகளும் சமண சமயவத்தவராதல் வேண்டும் என்பர். அடிகள் என்ற பெயர் பெரும்பாலும் சமணத்தாரையே குறிக்கும் என்பர். இவ்வாறு சமணத்தவரான இளங்கோ அடிகள் பிற சமயங்களையும் போற்றுபவராகத் திகழ்கின்றார்.

"பெரியவனை மாயவனைப் பேருலக மெல்லாம்
விரிகமல வுந்தியுடை விண்ணவனைக் கண்ணும்
திருவடியுங் கையும் திருவாயும் செய்ய
கரியவனைக் காணாத கண்ணென்ன கண்ணே
கண்ணிமைத்துக் காண்பார்தம் கண்ணென்ன
கண்ணே!"

என்ற ஆய்ச்சியர் குரவைப் பாட்டில் இளங்கோ அடிகளை ஓர் ஆழ்வாராகவே காண்கின்றோம்.

"ஆனைத்தோல் போர்த்துப் புலியின் உரியுடுத்துக்
கானத் தெருமைக் கருந்தலைமேல் நின்றாயால்
வானோர் வணங்க மறைமேல் மறையாகி
ஞானக் கொழுந்தாய் நடுக்கின்றி யேநிற்பாய்"

என்று வேட்டுவவரியில் பாடுகையில் ஒரு சிறந்த கொற்றவை பக்தராக விளங்குகிறார். இதுபோன்றே குன்றக்குரவையில் அவரை ஒரு முருக பக்தராகவும் காண்கின்றோம். "பிறவாயாக்கைப் பெரியோன்" என்றும் "பிறைமுடிக் கண்ணிப் பெரியோன்" என்றும் சிவபெருமானைக் குறிக்கின்றார். இவ்வாறு சமரச சமய மனநிலை உடையவராக அவர் விளங்கியபோதும் அவரது சமயம் சமணம் என்றே அறிஞர் பலரும் கூறுவர். கவுந்தியடிகளின் வாயிலாகச் சமணத்தின் கருத்துக்களை எடுத்துரைப்பதையே அன்னார் சான்றாகக் கூறுவர்.

இனிச் சிலப்பதிகாரத்தின் துணைகொண்டு பண்டைய தமிழ் நாட்டின் கல்வி, பொருளாதாரம், சமயம், சமுதாயம், அரசியல் போன்ற பல செய்திகளை நாம் உணர்கின்றோம். இந்நூலின் காலம் இரண்டாம் நூற்றாண்டு என்பதை முன்னரே கூறினோம்.

காவியத் தலைவர்களாக அரசர்களே இடம் பெற்ற காலத்தில், கண்ணகி என்ற ஒரு குடிமகளும் கோவலன் என்ற ஒரு குடிமகனும் காவியத் தலைவர்களாக இந்நூல் பெற்றிருப்பதால் இதனைக் குடிமக்கள் காப்பியம் (Democratic Epic) என்பர். சொற்சுவையும் பொருட்சுவையும் நிறைந்த இந்நூல், கற்போர் நெஞ்சைக் கவரவல்லது.

## மணிமேகலை

சிலப்பதிகாரமும் மணிமேகலையும் இரட்டைக் காப்பியங்கள் என்றே கருதப்படுகின்றன. மணிமேகலை என்ற தவப்பெருஞ் செல்வியைப் பாட்டுடைத் தலைவியாகப் பெற்றிருப்பதால் இந்நூல் அவளது பெயரையே தாங்கித் திகழ்கின்றது. கோவலனுக்கும் ஆடலங் கணிகை மாதவிக்கும் தோன்றிப் பின் போதித் தலைவன் பூங்கழலிற் பொலிந்தவளே இம்மங்கை நல்லாள். அவளுடைய வாழ்க்கையை விளக்கும் இந்நூல் கதைத் தொடர்பால் சிலப்பதிகாரத்துடன் மிகவும் நெருக்கமுற்றிருக்கிறது. "மணிமேகலை மேல் உரைப் பொருள் முற்றிய சிலப்பதிகாரம்" என்ற பதிகத் தொடர் இதனை விளக்கி நிற்கும். இளங்கோ அடிகள் சிலம்பையாத்த பிறகு அவர் கேட்க இந்நூலைக் கூல வாணிகன் சாத்தனார் பாடினார் என்ப.

> **"இளங்கோ வேந்தன் அருளிக் கேட்ப**
> **வளங்கெழு கூல வாணிகன் சாத்தன்**
> **மாவண் தமிழ்த்திறம் மணிமே கலைதுறவு**
> **ஆறைம் பாட்டினுள் அறியவைத் தனனென்"**

என்ற மணிமேகலைப் பதிகம் காண்க. இதனால் இந்நாலுக்கு "மணிமேகலை துறவு" என்ற பெயரும் நிலவியிருந்தமை உணர்க.

இந்நூலாசிரியர் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார் அல்லது மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார் என்பவராவர். இவர் எழுதியதாகச் சங்கத்துப் பாடல்கள் சில உள்ளன. ஒரு சிலர் இவர் அவரினும் வேறானவர் என்று உரைப்பர். இவரும் இளங்கோ அடிகளும் ஒருகாலத்தவர் எனப்தற்குச் சிலப்பதிகாரத்தில் பல சான்றுகள் உள. இவருடைய புலமையைப்

பாராட்டி இளங்கோ அடிகள் இவரைத் 'தண்டமிழ்ச் சாத்தன்' என்றும், "தண்டமிழாசான் சாத்தன்" என்றும் புகழ்வாராயினர்.

இந்நூல், விழாஅறை காதை முதலாகப் 'பவத் திறம் அறுகெனப் பாவை நோற்ற காதை' ஈருக முப்பது காதைகளாக விளங்குகிறது. இந்நூல் சிலப்பதிகாரம் போன்று அன்றி, ஒரு சமயச்சார்புள்ள நூலாக இருக் கிறது. மேலும் இளங்கோவைப்போல் அல்லாமல் சாத்தனுர் புறச்சமயத்தாரிடம் மதிப்பும் அன்பும் இன்றி அவரை இகழ்ந்தும் பழித்தும் உரைப்பதைக் காணலாம். எனவே அங்கிலேயில் பார்க்கையில் சமயப் பூசல்களுக்கு வித்திட்ட ஆதி நூலாக இதனைக் கருதலாம்.

இக்குறை ஒன்றைத் தவிர இந்நூல் பல்வேறு சிறப்புக்களால் ஒளிர்கின்றது. மஹாயான புத்த சமயம் தென்னுட்டில் இருந்த நிலையை விளக்குவதற்கு இந்நூல் பெரிதும் துணை செய்கிறது. இந்நூலைக் கற்பதால் புத்த சமயக் கருத்துக்களை நன்கு புரிந்து கொள்ள இயலுகின்றது. இந்நூலிற் காணப்படும் அறவுரைகள் கற்பார் நெஞ்சைக் கவரவல்லன. அவற்றுள் ஒரு சிலவற்றைக் காண்போம்.

உதயகுமரன் மணிமேகலையின்பால் கொண்ட வேட்கையை உணர்ந்த சுதமதி அவனது பெருமையை யும் மனித உடலின் களங்கத்தையும் எடுத்துக் கூறு கிருள்.

**"வினையின் வந்தது வினைக்கு விளைவாயது**
**புனைவன நீங்கின் புலால்புறத் திடுவது**
**மூத்து விளிவுடையது தீப்பிணி இருக்கை**

பற்றின் பற்றிடம் குற்றக் கொள்கலம்
.. ....................................
தவலா உள்ளம் தன்பால் உடையது
மக்கள் யாக்கை இது"

என்று சுதமதி கூறுவது நம் சிந்தையைக் கிளர்ப்ப தாகும். இனி,

"நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்"

என்னும் புறப்பாட்டுக் கருத்து,

"கோல்நிலை திரிந்திடிற் கோள்நிலை திரியும்
கோள்நிலை திரிந்திடின் மாரிவறங் கூரும்
மாரிவறங் கூரின் மன்னுயி ரில்லை
மன்னுயி ரெல்லாம் மண்ணாள் வேந்தன்
தன்னுயிர் என்னும் தகுதியின் றாகும்"

என்ற மணிமேகலை அடிகளில் காண்கிறோம்.

மேலும்,

"ஆற்றுநர்க் களிப்போர் அறவிலை பகர்வோர்
மேற்றே உலகின் மெய்நெறி வாழ்க்கை
மண்டிணி ஞாலத்து வாழ்வோர்க் கெல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே"

என்ற தீவதிலகையின் கூற்றும், உதயகுமரன் இறந்ததால் வருந்தும் இராசமாதேவிக்கு, மணிமேகலை,

"உடற்கழு தனையோ உயிர்க்கழு தனையோ
உடற்கழு தனையேல் உன்மகன் தன்னை
எடுத்துப் புறங்காட் டிட்டனர் யாரே
உயிர்க்கழு தனையேல் உயிர்புகும் புக்கில்
செயப்பாட்டு வினையால் தெரிந்துணர் வரியது
அவ்வுயிர்க் கன்பினை ஆயின் ஆய்தொடி
எவ்வுயிர்க் காயினும் இரங்குதல் வேண்டும்"

என்று கூறும் அறிவுரையும் உணர்ந்து கோடற்குரியன வாகும்.

இவ்வாறு அறக்கருத்துக்களையும் சமயக்கருத் துக்களையும் பெற்றிருப்பினும் இந்நூலின் கவிதை அழகு கற்றோர்க்கு இன்பம் குன்றாது அளிக்கவல்லது. இதனைக் கீழ்க்கண்ட மணிமேகலை அடிகள் உணர்த் தும்:

"குரவமும் மரவமும் குருந்தும் கொன்றையும்
திலகமும் வகுளமும் செங்கால் வெட்சியும்
நரந்தமும் நாகமும் பரந்தலர் புன்னையும்
பிடவமும் தளவமும் முடமுள் தாழையும்
குடசமும் வெதிரமும் கொழுங்கால் அசோகமும்
செருந்தியும் வேங்கையும் பெருஞ்சண் பகமும்
எரிமலர் இலவமும் விரிமலர் பரப்பி
வித்தகர் இயற்றிய விளங்கிய கைவினைச்
சித்திரச் செய்கைப் படாஅம் போர்த்ததுவே
ஒப்பத் தோன்றிய உவவனம்"

(3: 160—169)

## கீழ்க்கணக்கு நூல்கள்

பழந்தமிழ் நூல்களைக் குறிக்கையில் பத்துப் பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு என்று குறிப்பது வழக்கர்குப் †பத்துப்பாட்டும் எட்டுத் தொகையும் கடைச்சங்க நூல்கள். பதினெண் கீழ்க் கணக்கு நூல்களை ஒரு சிலர் சங்க நூல்கள் என்று கொள்ளினும் பெரும்பாலும் அவை சங்க மருவிய

† "...............மூத்தோர்கள், பாடியருள் பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும் கேடில் பதினெட்டுக்கீழ்க்கணக்கும்"

(தமிழ்விடு தூது: 55-56)

நூல்களாகவே கருதப்படுகின்றன. சிலப்பதிகாரமும் மணிமேகலையும் கூடச் சங்கமருவிய நூல்களாகவே உடன்வைத்து எண்ணப்படுகின்றன. பதினெண்கீழ்க் கணக்கு நூல்களுள் ஒன்றுகக் கருதப்படும் திருக்குறள் காலத்தால் மூத்ததால் அதனை முன்னரே கண்டோம். ஏனைய சிலப்பதிகாரமும் மணிமேகலையும் அக்கால அடிப்படையிலேயே முன்னரே கூறப்பட்டன.

கி. பி. மூன்றும் நூற்றுண்டின் முதற்பகுதி யிலேயே கடைச்சங்கம் கலைந்திருத்தல் வேண்டும் என்பதை முன்னர்க் கண்டோம். அவ்வாறு கடைச் சங்கம் கலைந்தமைக்குக் காரணம் பாண்டியநாட்டில் பன்னீராண்டு ஏற்பட்ட வற்கடமென்றும், திருக்குறள் அரங்கேற்றமென்றும் உரைப்பர் சிலர். அதற்குச் சான்றுகக் களவியலுரையை அன்னூர் சுட்டிக்காட்டு வார். ஆயின், பன்னீராண்டு வற்கடமுற்ற பாண்டி நாட்டில் மழைவளம் பெருகியதால் மீண்டுந் தழைத் துத் தமிழப்புலவர்களும் திரும்பவந்து சங்கம் இருந்த மையையும் அதன்வழிக் காண்கின்ருேம். ஆதலால், அக்காரணம் பற்றிச் சங்கம் அழியவில்லை என்பது தேற்றம்.

இனி, திருக்குறள் கடைச்சங்கப் புலவர்கள் பலரால் சொற்பொருளாக எடுத்தளாப் பட்டிருத்தலின், கடைச்சங்கம் அழிவதற்கு முன்னரே அது அரங்கேற் றப்பட்டிருத்தல் வேண்டும். எனவே கடைச்சங்கம் அழிந்தமைக்கு இவையல்ல காரணங்கள்.

கி. பி. மூன்றும் நூற்றுண்டின் முற்பகுதியில் களப்பிரர்களும் பல்லவர்களும் முறையே சோழ பாண்டிய நாடுகளேயும், நடுநாட்டையும் தொண்டை நாட்டையும் கைப்பற்றி விட்டனர் என்பதைப் பற்

பல வரலாற்றுச் சான்றுகளைக்கொண்டு துணிய முடிகின்றது.†

இக்களப்பிரர்களும் பல்லவர்களும் வேற்றுமொழிச் சார்பினராயும், புறச்சமயங்களைச் சார்ந்தவராயும் இருந்தனர். வடமொழி, பாலி, பிராகிருதம் போன்ற மொழிகளை மட்டிலும் இவர்கள் ஆதரித்தமையாலும் தமிழையும் தமிழக்கலைகளையும் பண்பாடுகளையும் வேற்று நாட்டவர்களாகிய இவர்கள் நசுக்கி விட்டமையாலும், தமிழ்நாடு அதுவரை தான் கண்டிராத ஒரு மாபெரும் வீழ்ச்சியை அடைந்தது. எனவே கி.பி. மூன்றும் நூற்றாண்டின் முதற்பகுதி முதல் கி. பி. ஆறும் நூற்றாண்டின் இறுதிவரைக்குட்பட்ட இக்காலப் பகுதியைத் தமிழ்நாட்டின் இருண்டகாலம் என்று வரலாற்றறிஞர் அழைக்கின்றனர்.

அந்நிய ஆட்சிபோல் தமக்கே உரிய கலைப்பண்புகளையும் ஒழுக்க முறைகளையும் இழந்த தமிழ் மக்கள் வாழ்விலும் பெரும் மாறுதல்கள் நிகழத்தொடங்குவது இயல்பன்றோ? அடிமைப்பட்ட நாடு ஒழுக்கத்தையும் தனிச் சிறப்பையும் இழந்துவிட்டதால் தமிழ்ச் சமுதாயம் சீர்ப்பட வேண்டிய அடிப்படைத் தேவை ஏற்பட்டது. இருண்ட கார்வானில் வெள்ளி மின்னல் கொடிவிட்டுக் கிளைப்பதைப் போன்று அந்த இருண்ட வாழ்வில் சிக்கித்தவிக்கும் தமிழ் மக்களுக்கு வழிகாட்டியாகச் சில நூல்கள் எழுந்தன. அவை ஒழுக்கத்தை அறிவுறுத்தும் நீதி நூல்களாகவும்,

† The Pallavas by G. J. Dubreuil. P 10; Adminstation and Social Life under The Pallavas by Dr. C. Meenakshi; வேள்விக்குடிச் செப்பேடுகள்.

இறைவனை நினைவூட்டும் சமய நூல்களாகவும் அமைந்துள்ளன. அவைதாம் கீழ்க்கணக்கு நூல்களும் திருமூலர்தம் திருமந்திரமும் காரைக்கால் அம்மையார் தம் பாடல்களும் போன்றவையாம். அவற்றுள் கீழ்க் கணக்கு நூல்களை இனி ஆராய்வோம்.

கணக்கு எனின் நூல் என்று பொருள். நூலுக்கு அடிப்படையாகிய அகர முதலாய எழுத்து வரிசையை நெடுங்கணக்கு என்பர். எழுத்தறிவிக்கும் இறை யோரைக் கணக்காயர் என்பர்.

முச்சங்கங்களுக்குப் பின்னர் நான்காவது சங்கமாக மதுரையின் கண் வச்சிரநந்தி என்பவரால் நிறுவப் பட்ட சமணத் தமிழ்ச் சங்கம் பாட்டும் தொகையுமா கிய சங்க நூல்களை மேற்கணக்கு நூல்கள் என்றும் பதினெட்டினைக் கீழ்க்கணக்கு நூல்கள் என்றும் வகுத் தது என்று கூறுவர். இரண்டடி முதல் ஆறடியீருக வுள்ள வெண்பாவிலேனும் அதனின் இனத்தினுலே னும் நாற்பது செய்யுள் முதல் பல நூறு செய்யுட்கள் வரை அறம், பொருள், இன்பம் என்ற முப்பொருள் களிலும் யாதேனும் ஒன்றினை எடுத்துக் கூறுவது கீழ்க்கணக்கு நூலின் இலக்கணமாகும்.

> "அடிநிமிர் பில்லாச் செய்யுள் தொகுதி
> அறம்பொருள் இன்பம் அடுக்கி யவ்வகைத்
> திறம்பட வுரைப்பது கீழ்க்கணக் காகும்."

என்பது பன்னிருபாட்டியல்.

கீழ்க்கணக்கைச் சார்ந்த நூல்கள் வருமாறு: (1) நாலடியார் (2) நான்மணிக்கடிகை (3) இனி யவைநாற்பது (4) இன்னுநாற்பது (5) களவழி நாற்பது (6) கார்நாற்பது (7) ஐந்திணை ஐம்பது

(8) ஐந்திணை எழுபது (9) திணைமொழியைம்பது (10) திணைமாலை நூற்றைம்பது (11) திருக்குறள் (முப்பால்) (12) திரிகடுகம் (13) ஆசாரக்கோவை (14) பழமொழி (15) சிறுபஞ்சமூலம் (16) முதுமொழிக் காஞ்சி (17) ஏலாதி (18) கைந்நிலை என்பனவாம்.

**நாலடியார் :** அறங்கூறும் திறத்தில் திருக்குறளுக்கு அடுத்தபடியாக வைத்துப்போற்றப்படுவது இந்நூலேயாகும். திருக்குறளுக்கு நிகராகவும் கருதப்படுவது உண்டு. "ஆலும் வேலும் பல்லுக்குறுதி, நாலும் இரண்டும் சொல்லுக்கு உறுதி" என்று வழங்கும் பழமொழியே இதற்குச் சான்ருகும். இந்நூல் நான்கு அடிகளைக் கொண்ட வெண்பா யாப்பினை உடைய 400 பாக்களின் தொகுதியே ஆதலால் இது நாலடி என்றும், "ஆர்" என்ற உயர்வு சிறப்பு விகுதி பெற்று 'நாலடியார்' என்றும் பெயர் பெற்றுள்ளது. இதனை "நாலடி நானூறு" என்றும் வழங்குவர்.

இந்நூலின் கூற்றுக்களையும், கூறும் முறையினையும் நோக்குவோர்க்கு, இது பல புலவர்களால் பாடப்பெற்றமை நன்கு புலனுகும். பல சமண முனிவர்களால் இயற்றப்பட்ட பாடல்களைப் பதுமனுர் என்ற சமணப் பெரியார் தொகுத்து வைத்தனர் என்ப. இவர் இந்நூலுக்கு ஓர் உரையும் செய்திருந்தார் என்பர். ஆயின் அவ்வுரை இன்று கிடைத்திலது.

பெருமுத்தரையர்களின் வள்ளன்மையை இந்நூல் குறிப்பிடுகிறது.† அவர்கள் பாண்டியர்களுக்கு அடங்கித் தஞ்சையைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட சிற்

‡ History of Tamil Language and Literature p. 89

றரசர் என்பர். மேலும் இவர்கள் முதலாம் பரமேச்சுர வர்ம பல்லவன் காலத்தில் சிறப்புற்றிருந்தார்கள் என்றும் அவனது காலம் கி.பி. ஏழாம் நூற்றாண்டாதலால் இந்நூலின் காலம் ஏறத்தாழ அந்நூற்றாண்டின் இடைப்பகுதியாகும் என்றும் திரு. வையாபுரிபிள்ளை கூறுகிறார்கள். ஆயின் 'முத்தரையர்கள்' என்ற பெயர் பாண்டியரையும் குறிக்குமென்றும் அதனால் இக்கருத்தை உடன்படுவது எளிதன்று என்றும் கூறுகிறார்கள்.

திருக்குறளைப் போன்றே இந்நூலும் அறத்துப் பால், பொருட்பால், காமத்துப்பால் என்று முப்பெரும் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது.

> **இன்றுகொல் அன்றுகொல் என்றுகொல் என்னாது**
> **பின்றை நின்றது கூற்றமென் றெண்ணி**
> **ஒருவுமின் தீயவை ஒல்லும் வகையால்**
> **மருவுமின் மாண்டார் அறம்** (36)

என்று குறளைப் போன்றே அறத்தின் வலிமையை உரைக்கின்றது இந்நூல். யாக்கை நிலையாமை, இளமை நிலையாமை ஆகியவற்றை இந்நூல் எடுத்துரைக்கும் பெற்றியினைச் சிறிது காண்க:

> **புல்நுனிமேல் நீர்போல் நிலையாமை என்றெண்ணி**
> **இன்னினியே செய்க அறவினை—இன்னினியே**
> **நின்றான் இருந்தான் கிடந்தான்தன் கேள் அலறச்**
> **சென்றான் எனப்படுத லால்.** (29)

> **கேளாதே வந்து கிளைகளாய் இல்தோன்றி**
> **வாளாதே போவரால் மாந்தர்—வாளாதே**
> **சேக்கை மரன் ஒழியச் சேண்நீங்கு புள்போல்**
> **யாக்கை தமர்க் கொழிய நீத்து** (30)

எனக்குத்தாய் ஆகியாள் என்னை ஈங்கிட்டுத்
தனக்குத்தாய் நாடியே சென்றாள்—தனக்குத்தாய்
ஆகி யவளும் அதுவானால் தாய்த்தாய்க்கொண்டு
ஏகும் அளித்திவ் வுலகு (15)

**நான்மணிக்கடிகை :** நான்கு மணிகள் மிடைந்து இயற்றப்பெற்ற அணிகலன் போன்று நந்நான்கு நீதிப் பொருள்களால் அமைந்த பாடல்களின் தொகையே நான்மணிக்கடிகை என்று பெயர் பெறுகிறது. கடவுள் வாழ்த்து உட்பட நூற்றுநான்கு வெண்பாக்களால் இந்நூல் யாக்கப்பெற்றுள்ளது. இதனை இயற்றியவர் விளம்பிநாகனார் என்னும் நல்லிசைப்புலவர் ஆவர்.

"மதிமன்னு மாயவன் வாள்முகம் ஒக்கும்
கதிர்சேர்ந்த ஞாயிறு சக்கரம் ஒக்கும்
முதுநீர்ப் பழனத்துத் தாமரைத் தாளின்
எதிர்மலர் மற்றவன் கண்ஒக்கும் பூவைப்
புதுமலர் ஒக்கும் நிறம்."

என்னும் இவரது கடவுள் வாழ்த்துப் பாட்டினைக் கொண்டு இவரது சமயம் வைணவம் என்பர். செய் தொழிலால் மாந்தர் சிறப்பெய்துவர் என்பது இவரது தேற்றம்.

கள்ளி வயிற்றின் அகில்பிறக்கும் மான்வயிற்றில்
ஒள்ளரி தாரம் பிறக்கும் பெருங்கடலுள்
பல்விலைய முத்தம் பிறக்கும் அறிவார்யார்
நல்லாள் பிறக்கும் குடி (5)

**இனியவை நாற்பது :** இனியபொருள்களை உரைக்கும் நாற்பது வெண்பாக்களால் இயன்றதொகை இனியவை நாற்பது என்று பெயர் பெறுகிறது. இதனை இயற்றியவர் மதுரைத் தமிழாசிரியர் மகனார் பூதஞ்

சேந்தனார் ஆவார். கடவுள் வாழ்த்துப்பாடலில் இவர் மும்மூர்த்திகளையும் போற்றுகிறார். அதனால் இவர் வேத ஒழுக்கினராதல் வேண்டும் என்பர். ஒரு சிலர், சினனை மும்மூர்த்திகளாகக் குறிப்பது சமண வழக்காதலால், இவர் சமணராதல் வேண்டும் என்பர்.

> **"பிச்சைபுக் காயினும் கற்றல் மிக இனிதே"**
>
> **"நில்லாத காட்சி நிறையில் மனிதரைப்**
> **புல்லா விடுதல் இனிது"**
>
> **"மானம் படவரின் வாழாமை முன்இனிதே"**

போன்றவை இவ்வாசிரியரின் கருத்துக்கள்.

**இன்னா நாற்பது:** இந்நூல் இனிமையல்லாத துன்பத்திற்குக் காரணமாகிய பொருள்களைக் கூறும் நாற்பது வெண்பாக்களின் தொகையாகும். இதனை இயற்றியவர் கபிலர் என்பர். இவர் சங்கத்துச் சான்றோர் ஆவர்.

"புலனழுக்கற்ற அந்தணாளன்" என்று மாறோக்கத்து நப்பசலையாரும்,

"உலகுடன் றிரிதரும் பலர்புகழ் நல்லிசை வாய்மொழிக் கபிலன்" என்று நக்கீரரும்,

"செறுத்த செய்யுட் செய்செந்நாவின் வெறுத்த கேள்வி விளங்கு புகழ்க் கபிலன்" என்று பொருந்திலிளங்கீரனாரும் இவரது புகழ்பாடியுள்ளனர். எனினும் இவர் சங்கத்துச் சான்றோராகிய கபிலரினும் வேறுபட்டவர் என்று கருதுவதற்குப் பல சான்றுகள் உள்ளன. இப்பெரும் மூதறிஞர் துன்பத்திற்கு மூலகாரணங்கள் இன்னின்ன என்று தம் பரந்த வாழ்வில் பட்டறிந்து உணர்ந்தவற்றையே இந்நூலிற் பெய்துள்ளார்.

அவலம் நீங்கிய வாழ்க்கையை வாழ விரும்புவோர்க்கு இந்நூல் நற்றுணையாகின்றது.

"பொருளுணர்வா ரில்வழிப் பாட்டுரைத்த லின்னு"

"வளமை யிலாளர் வனப்பின்ன இன்னா
இளமையுண் மூப்புப் புகல்"

"விழுத்தகு நூலும் விழையாதார்க் கின்னு"

என்பன சில இந்நூலின் மணிவாக்குகள்.

**களவழி நாற்பது :** இதனைப் பாடியவர் பொய்கை யார் என்ற சங்கத்துச் சான்றோர் ஆவர் என்பர். சோழன் கோச்செங்கணான் கழுமலம் என்ற இடத்தில் பெற்ற போர்க்கள வெற்றியைச் சிறப்பித்துப் பாடுவது இந்நூல். களவழி என்பது இருவகைப்படும். ஒன்று உழுவார்களத்துச் செய்திகளைக்கூறும் செய்யுளாகும். இரண்டாவது போர்க்களத்தில் நடைபெற்ற செய்திகளைக் கூறுவதாகும். இந்நூல் இரண்டாவது வகையைச் சார்ந்த களவழியாகும்.

இந்நூலைப் பொய்கையார் பாடியதற்கு உரிய காரணத்தை இதன் பழைய உரை பின்வருமாறு கூறுகிறது: "சோழன் செங்கணானும் சேரமான் கணைக் காலிரும்பொறையும் போர்ப்புறத்துப் பொருதுடைந் துழிச் சேரமான் கணைக்காலிரும்பொறையைப்பற்றிக் கொண்டு சோழன் செங்கணான் சிறை வைத்துழிப் பொய்கையார் களம்பாடி வீடு கொண்ட களவழி நாற்பது." இச்செய்தியை,

"களவழிக் கவிதை பொய்கையுரை செய்யவுதியன்
கால்வழித் தளையை வெட்டியர சிட்டவனும்"

என்னும் கலிங்கத்துப்பரணி (இராசபாரம்பரியம்: 18) அடிகளும்,

"மேதக்க பொய்கை கவிகொண்டு வில்லவனைப்
பாதத் தளைவிட்ட பார்த்திபனும்'

என்னும் விக்கிரம சோழனுலா அடிகளும் உறுதி செய்கின்றன. இனி, இதில் குறிப்பிடப்பட்டுள்ள சேரவேந்தன் புறம்பாடிய கணைக்கால் இரும்பொறையினும் வேறானவன் என்று திரு. ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள் கூறுகிறார்கள்.

சொற்சுவை பொருட்சுவை மிகுந்த இந்நூலில் யானைப்போர் நிகழ்ச்சி மிகவும் அழகுறக் கூறப்பட்டிருக்கிறது.

**கார் நாற்பது:** இந்நூலைப் பாடியவர் மதுரைக் கண்ணங்கூத்தனார் என்பவர். இன்பங்கண்ணிய அகத்தின் பகுதியாகிய முல்லைத்திணைக்குரிய நாற்பது பாடல்களையுடையது இந்நூல். இதிலுள்ள செய்யுட்கள் எல்லாம் தலைவி, தோழி, தலைவன் என்போரின் கூற்றுக்களாகவுள்ளன. ஒவ்வொரு செய்யுளிலும் "கார்' (மாரி) கூறப்பட்டமையால் இந்நூல் 'கார்நாற்பது' எனப்படலாயிற்று. இதில் முல்லைத் திணைக்குரிய உரிப்பொருள், முதற்பொருள், கருப்பொருள்கள் அழகுறக்கூறப்பட்டுள்ளன.

கார்த்திகைத் திங்களில் கார்த்திகைநாள் அன்று மனைதோறும் விளக்கிட்டு விழா எடுக்கும் வழக்கம் அக்காலத்திலேயே இருந்தமையை இந்நூலால் உணரலாம்.

"நலமிகு கார்த்திகை நாட்டவ ரிட்ட
தலைநாள் விளக்கிற் றகையுடைய வாகிப்
புலமெலாம் பூத்தன தோன்றி சிலமொழி
தூதொடு வந்த மழை" (26)

**ஐந்திணை ஐம்பது :** அன்பின் ஐந்திணைகளுக்குரிய ஐம்பது பாடல்களைக் கொண்டு இலங்குவது இந்நூல். ஒவ்வொரு திணைக்கண்ணும் பத்துப் பத்துப்பாடல்கள் உள்ளன. இந்நூலை இயற்றியவர் மாறன் பொறையன் என்பவராவர். கற்பிற்குச் சின்னமாகத் திகழ்கின்ற முல்லையை முதல்வைத்து, அடுத்து குறிஞ்சி, மருதம், பாலை, நெய்தல் என்ற திணைகளை வைத்து அமைக்கப் பெற்றுள்ளது இந்நூல்.

முல்லைத்திணையில், மாலைப் புன்பொழுதில் ஆயன் ஊதும் குழலோசை, பிரிவாற்ருமையால் வருந்தும் தலைவியின் செவிகளில் வேலாகப் பாய்கின்ற காட்சியைக் காண்கிறோம் பின்வரும் பாட்டில்:

**தேரோன் மலைமறைந்த செக்கர்கொள் புன்மாலை**
**ஆர்ஆன்பின் ஆயன் உவந்தூதும்—சீர்சால்**
**சிறுதழ லோசை செறிதொடி வேல்கொண்டு**
**எறிவது போலும் எனக்கு. (7)**

பாலை நெடுவழியில் நீரற்ற நெடுஞ்சுரத்தில் தான் இன்றி நீருண்ணுது என நினைத்துக் கலைமான் பெண் மானுக்காகப் பொய்யாக நீர் உறிஞ்சிப் பிணையை உண்ணச் செய்யும் அன்புக்காட்சியைக் காண்கின்ருேம்.

**சுனைவாய்ச் சிறுநீரை எய்தாதென் றெண்ணிப்**
**பிணைமான் இனிதுண்ண வேண்டிக்—கலைமாத்தன்**
**கள்ளத்தின் ஊச்சும் சுரமென்பர் காதலர்**
**உள்ளம் படர்ந்த நெறி. (38)**

**ஐந்திணை எழுபது :** திணைக்குப் பதினன்கு பாடல்களாக அன்பின் ஐந்திணைகளுக்கும் எழுபது பாடல்களைக் கொண்டு திகழ்வதால் இந்நூல் ஐந்திணை எழுபது என வழங்குகிறது. தொல்காப்பிய முறைப்படி,

குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல்என்ற திணை முறை வைப்பு இந்நூலின்கண் காணப்படுகிறது. இன்று கிடைப்பன கடவுள்வாழ்த்து உள்பட அறுபத்து ஏழாகும். இந்நூலை இயற்றியவர் மூவாதியர் என்பவராவர்.

**திணைமொழி ஐம்பது :** ஐந்திணைஐம்பதைப் போன்ற இந்நூலும் திணைக்குப் பத்துப்பாடல்களாக ஐந்திணைக்கும் ஐம்பது பாடல்களைக் கொண்டு விளங்குகிறது. இதன் திணை வைப்பு முறை குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்றபடி அமைந்துள்ளது. இதன் ஆசிரியர் சாத்தந்தையார் என்பாரின் மகரான கண்ணன் சேந்தனர் என்போராவர்.

**திணைமாலை நூற்றைம்பது :** திணைக்கு முப்பது பாடல்களாக ஐந்திணைக்கும் நூற்றைம்பது பாடல்கள் பெற்று இந்நூல் திணைமாலை நூற்றைம்பது என்ற பெயருடன் திகழ்கின்றது. இதனை இயற்றியவர் கணிமேதாவியார் ஆவர். இது தொல்காப்பிய அகத்திணையியற் துறைகளுக்கு இலக்கியமாகத் திகழ்வதுடன் கோவைத்துறைகள் சிலவற்றிற்கும் இலக்கியமாக அமையும் கூறுபாடுகளையும் கொண்டுள்ளது. குறிஞ்சி, நெய்தல், பாலை, முல்லை, மருதம் என்ற முறையில் இதன் திணைகள் அமையப் பெற்றுள்ளன.

திங்கள் போன்ற முகத்தில் வில்லாகிய புருவங்களையும் வேலாகிய கண்களையும் பெற்றுள்ள தலைமகளை அவளது பெற்றோர் திணைப்புனங் காப்பதற்காக வைத்துள்ளமை உண்மையில் தலைவனின் நெஞ்சத்தைக் காப்பதற்காகத்தான் என்ற கருத்துக் கொண்ட பாட்டின் கற்பனை வளம் நம் நெஞ்சை ஈர்க்கின்றது.

"திங்களுள் வில்லெழுதித் தேராது வேல்விலக்கித்
தங்களுளா ளென்னும் தாழ்வினு—லிங்கட்
புனங்காக்க வைத்தார்போற் பூங்குழலைப் போந்தென்
மனங்காக்க வைத்தார் மருண்டு" (30)

இப்பாட்டு,

'சிலையெழுதி வில்லெழுதிக் கயலெழுதிக் காமன்
செயலெழுதித் தீர்ந்தமுகம் திங்களோ காணீர்"

என்ற கானல்வரிப் பாட்டை நினைவிற்குக் கொண்டு வருகிறது.

**திரிகடுகம்:** சுக்கு, மிளகு, திப்பிலி ஆகிய மூன்றையும் திரிகடுகம் என்று அழைக்கின்றது பிங்கல நிகண்டு (சூத்திரம் 152). இம்மூன்று மருந்துப் பொருள்களால் ஆகிய கடுகம் எவ்வாறு உடற்பிணியைத் தீர்க்கவல்லதோ அதுபோன்று இந்நூலின் ஒவ்வொரு பாட்டிலுமுள்ள மூன்று கருத்துக்களும் மாந்தர்தம் உள்ள நோய்களை நீக்கவல்லனவாகையால் இந்நூலுக்குத் திரிகடுகம் என்ற பெயர் ஏற்பட்டது. இந்நூலின் முதற்பாட்டு:

"அருந்ததிக் கற்பினர் தோளும் திருந்திய
தொல்குடியின் மாண்டார் தொடர்ச்சியும் - சொல்லின்
அரில்அகற்றும் கேள்வியார் நட்புமிம் மூன்றும்
திரிகடுகம் போலு மருந்து"

என்று 'திரிகடுகத்'தைக் குறிப்பிடுவதால் அதுவே இந்நூலுக்குச் சிறப்புப் பெயராயிற்று என்பர். இந்நூலை இயற்றியவர் நல்லாதனர் ஆவர். காப்புச் செய்யுள் உட்பட 101 வெண்பாக்களை உடையது இது. இந்நூல் கூறும் ஒரிரு கருத்துக்களை நோக்குவோம்:

வைததனை இன்சொல்லாக் கொள்வானும் நெய்பெய்த
சோறென்று கூழை மதிப்பானும்—ஊறிய

கைப்பு அதனைக் கட்டியென் றுண்பானும் இம்மூவர்
மெய்ப்பொருள் கண்டுவாழ் வார்.

நல்விருந் தோம்பலின் நட்டாளாம் வைகலும்
இல்புறஞ் செய்தலின் ஈன்றதாய்—தொல்குடியின்
மக்கள் பெறலின் மனைக்கிழத்தி இம்மூன்றும்
கற்புடையாள் பூண்ட கடன்.

ஆசாரக்கோவை : ஆன்றோர் ஒழுக்கங்களைக் கூறுவது இந்நூல். ஆசாரம் எனின் ஒழுகலாறு என்று பொருள் கொள்ளலாம். இதனை இயற்றியவர் பெருவாயின் முள்ளியார் என்பாராவர். இவர் வண்கயத்தூர் என்ற ஊரைச்சார்ந்தவர். இந்நூலின் கண் நூறு வெண்பாக்கள் உள்ளன.

உண்ணல், உடுத்தல், உறங்கல், நீராடல் முதலியவற்றைப் பற்றிய விதிகளையும், இன்னின்ன செய்தால் நன்மைகள் உண்டாம் என்றும், விலக்கப்பட வேண்டியன இன்னின்ன என்றும், அவற்றை மீறிச் செய்யின் விளையும் கேடுகள் பற்றியும் இந்நூல் எடுத்தியம்புகிறது.

இந்நூலுக்கு மூலநூல் ஆரிடம் என்னும் வடநூல் என்று இதன் தற்சிறப்புப் பாயிரம் கூறுகிறது. இதன்கண் கூறப்பட்டுள்ள ஆசாரங்கள் சுக்ரஸ்மிருதியில் கூறப்பட்டவை என்று வடநூற்புலவர் கூறுவர். பல்வேறு ஆசாரங்களைத் தொகுத்துச் சொல்வதால் இது ஆசாரக் கோவை என்று பெயர் பெற்றுள்ளது. இது பலராலும் போற்றப்பட்டமை பத்துப்பாட்டு, சிந்தாமணி, நன்னூல், இலக்கண விளக்கம் ஆகியவற்றின் உரைகளில் மேற்கோள்களாக எடுத்தாளப்பட்டதால் விளங்கும்.

ஒழுக்கங்களுக்கு உரிய காரணங்கள் எட்டினை முதற்கண் தொகுத்துரைப்பதைக் காண்போம்:

**நன்றி யறிதல் பொறையுடைமை இன்சொல்லோ**
**டின்னாத எவ்வுயிர்க்குஞ் செய்யாமை கல்வியோடு**
**ஒப்புர வாற்ற அறிதல் அறிவுடைமை**
**நல்லினத் தாரோடு நட்டல் இவையெட்டும்**
**சொல்லிய ஆசார வித்து.** (1)

**பழமொழி:** ஆன்றோர்கள், தம் பட்டறிவிற்கண்ட உண்மைகளை ஈடும் எடுப்புமற்ற சொற்களால் குறித்துச் சென்றனர். அம்மந்திரச் சொற்கள் தொன்று தொட்டு இன்று வரை வாழ்வில் பயின்றுவருவதால், பழமொழிகள் எனப்படும். அத்தகைய பழமொழி ஒவ்வொன்றும் ஈற்றடியில் அமைத்துப் பாடப்பட்ட 400 பாடல்களின் தொகுதியே 'பழமொழி' என்ற பெயருடன் திகழ்வதாகும்.

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் திருக்குறளுக்கும் நாலடியாருக்கும் அடுத்தபடியாகப் பெருமை பெற்றுத் திகழ்வது இந்நூல். இதனை இயற்றியவர் முன்றுறையரையனார் என்ற சீர்சால் புலவராவர். இவர் முன்றுறை என்னும் ஊரையாண்ட ஒரு குறுநிலமன்னர் என்பர். இவரது சமயம் சமணமாகும்.

இந்நூலின் கண் பழமொழிகளுடன் பல்வேறு வரலாற்றுச் செய்திகளும், கடையெழு வள்ளல்கள், கரிகாலன் நரைமுடித்து முறை செய்தல், இதிகாச புராணம் ஆகியவை பற்றிய செய்திகளும் கூறப்பட்டுள்ளன.

**சிறுபஞ்ச மூலம்:** மருத்துவ நூலிற் கூறப்பட்டுள்ள கண்டங்கத்தரிவேர், சிறுவழுதுணைவேர், சிறுமல்லிவேர், நெருஞ்சி வேர், பெருமல்லி வேர் ஆகிய பஞ்சமூலங்கள் (ஐந்து வேர்கள்) மக்கள் பிணிகளைத் தீர்ப்பதுபோல் இந்நூலின் ஒவ்வொரு செய்யுளின்

கண்ணும் அமைந்துள்ள ஐந்து கருத்துக்கள் மாந்தர் தம் உள்ள நோய்களைத் தீர்க்கவல்லவை. அக்காரணம் பற்றியே திரிகடுகத்தைப் போன்று இந்நூல் சிறுபஞ்ச மூலம் என்று பெயர் பெற்றுத் திகழ்கிறது. இந்நூலை இயற்றியவர் மாக்கயனார் என்பாரின் மாணவரான காரியாசான் என்ற நல்லிசைப் புலவராவர். இவர் சமணர்.

பாயிரச் செய்யுள் உட்பட இந்நூலில் 100 செய் யுட்கள் அடங்கியுள்ளன.

**முதுமொழிக் காஞ்சி:** காஞ்சியென்பது புறத்திணை களில் ஒன்று. "வீடுபேறு நிமித்தமாகப் பல்வேறு நிலையாமையைச் சான்றோர் சாற்றும் குறிப்பினது காஞ்சியாயிற்று", என்று நச்சினார்க்கினியர் இதன் பொருள் கூறுவர். முதுமொழிக் காஞ்சி என்பது காஞ்சித் திணையின் பல்வேறு துறைகளில் ஒன்று.

"பலர் புகழ் புலவர் பன்னினர் தெரியும்
உலகியல் பொருள்முடி புணரக் கூறின்று"

என்ற புறப்பொருள் வெண்பாமாலைக்கு இணங்க முது மொழிக் காஞ்சியெனில் அறிவுடையோர் குற்றம் நீக்கி ஆராயும் உலகத்தியலுள் முடிந்த பொருளாகிய அறம், பொருள், இன்பங்களை அறியச் சொல்லுவ தாகும்.

இந்நூல் இத்துறையின் பெயரையே தனது பெய ராகக் கொண்டுள்ளது. இதன்கண் பத்து அதிகாரங் கள் உள்ளன. ஒவ்வொரு அதிகாரத்திலும் பத்துப் பத்துச் செய்யுட்கள் உள்ளன.

இதன் ஆசிரியர் மதுரைக் கூடலூர் கிழார். இவர் புலத்துறைமுற்றிய கூடலூர்கிழார் என்றும் அழைக்

கப்படுவர். இவர்தாம் எட்டுத் தொகையுள் ஒன்ருன ஐங்குறு நூற்றைத் தொகுத்தவர் என்பர்.

**ஏலாதி :** ஏலம், இலவங்கப்பட்டை, நாககேசரம், மிளகு, திப்பிலி, சுக்கு ஆகிய ஆறுவகை மருந்துப் பண்டங்களும் பிணிதீர்க்கும் பெருமையுடையவை. அவை போன்று மாந்தர்தம் உள்ள நோய் தீர்க்கவல்ல ஆறு கருத்துக்கள் அடங்கிய செய்யுட்களால் ஆக்கப் பட்ட இந்நூல் ஏலாதி என்றே பெயர் பெற்று இலங்கு கிறது.

இதன் ஆசிரியர் கணிமேதாவியார். இவரே திணை மாலை நூற்றைம்பதனைப் பாடியவராவர். இந்நூலி னிறுதியில் இவர் 'மாக்காயனர்' என்பாரின் மாணுக்கர் என்று குறிக்கப்பெறுவதால் இவரும் காரியாசானும் ஒரு சாலை மாணுக்கர் எனக் கருதப்படுவர்.

சிறப்புப்பாயிரம், தற்சிறப்புப்பாயிரம் உட்பட இந்நூலில் 82 செய்யுட்கள் உள்ளன.

**இன்னிலை, கைந்நிலை :** பதினெண்கீழ்க் கணக்கு நூல்களுள் பதினெட்டாவது நூல் இன்னிலையா கைந்நிலையா என்ற ஐயப்பாடு எழுந்துள்ளது. அதற்குக் காரணம் பதினெண் கீழ்க் கணக்கு நூல்களை இவையிவை என்று தொகுத்துக் கூறும் 'நாலடிநான் மணி' என்று தொடங்கும் பழம் பாடலில் ஏற்பட்டுள்ள பாடபேதமேயாகும்.

சில ஏட்டுப் படிகளில்,

**"நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்**
**பால்கடுகம் கோவை பழமொழி—மாமூலம்**
**இன்னிலைய காஞ்சியுடன் ஏலாதி என்பவே**
**கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு"**

என்று இப்பாட்டுக் காணப்படுகிறது. இதன்படி, இன்னிலை ஒரு நூலாகக் காட்டப்பட்டுள்ளது. மற்றொரு படியில், "இன்னிலைய காஞ்சியுடன் ஏலாதி யென்பதூஉம், கைந்நிலையுமாங் கீழ்க்கணக்கு" என்று வேறுபடுகின்றது. இது கைந்நிலையை நூலாகக் காட்டுகின்றது.

முற்கூறிய பாடத்திற்கிணங்க திரு. வ. உ. சி. அவர்கள் இன்னிலையை ஒரு நூலாகப் பதிப்பித்துள்ளார். இரண்டாவது கொள்கைப்படி, திரு. அனந்தராம ஐயர் அவர்கள் கைந்நிலையைப் பதிப்பித்துள்ளனர். இருவருமே இந்நூல்கள் உரையாசிரியர்களால் எடுத்தாளப்பட்டமைக்குச் சான்று கூறுகின்றனர். இரு நூல்களும் இன்று கிடைத்திருக்கின்றன. உண்மையில் பதினெட்டாவது நூல் யாது என்று முடிவுகட்டும் பொறுப்பு ஆராய்ச்சியாளர்களுடையது. நாம் இவ்விருநூல்களைப் பற்றியும் தெரிந்துகொள்வோமாக.

**இன்னிலை :** இந்நூலை இயற்றியவர் பொய்கையார் ஆவர். இதில் கடவுள் வாழ்த்துச் செய்யுள் உட்பட 46 செய்யுட்கள் உள்ளன. அவையாவும் வெண்பாக்களே. இப்பாடல்களில் ஆற்றொழுக்காகப் பொருள் கொள்ளுவது அருமையினும் அருமையாம். கொண்டு கூட்டியே பொருள் கொள்ளவேண்டும். இதனைப் பதிப்பித்த திரு. வ. உ. சி. அவர்கள் இதனுக்கு நல்லதொரு விருத்திஉரை வரைந்துள்ளார்கள். இந்நூலின் கடவுள்வாழ்த்துச் செய்யுளை இயற்றியவர் பாரதம் பாடிய பெருந்தேவனார் என்று திரு. வ. உ. சி. கூறியுள்ளார்.

இந்நூல் அறப்பால், பொருட்பால், இன்பப்பால், வீட்டுப்பால் என நான்கு பிரிவுகளாகப் பிரிக்கப்

பட்டுள்ளது. அவற்றில் வீட்டுப்பால் "இல்லியல்" "துறவியல்" என்று இரு கூருய்ப் பிரிக்கப்பட்டுள்ளது.

**கைந்நிலை :** அன்பின் ஐந்திணைகளைப்பற்றிப் பேசும் இந்நூல் 60 வெண்பாக்களை உடையதாகும். ஒவ்வொரு திணைக்கும் பன்னிரண்டு பாடல்கள் உள்ளன. இதில் உள்ள பலபாடல்கள் சிதைந்துள்ளன. இந்நூலை இயற்றியவர் மாறோக்கத்து முள்ளி நாட்டு நல்லூர்க்காவிதியார் மகனுர் புல்லங்காடனுர் என்பார். மாறோக்கம் என்பது கொற்கையைச் சூழ்ந்துள்ள நிலப்பகுதியாகும் என்பர். இவர் அப்பகுதியில் உள்ள முள்ளிநாட்டு நல்லூரைச் சார்ந்தவராதல் வேண்டும்.

"இந்நூலில் பாசம், ஆசை, இரசம், கேசம், இடபம், உத்தரம் ஆகிய வடசொற்கள் பயின்று வருதலை நோக்குமிடத்து இது கடைச்சங்க காலத்திற்குப் பின்னர்த் தோன்றிய நூல் என்பது நன்கு துணியப்படும். ஆகவே இதன் ஆசிரியர் கி. பி. ஐந்தாம் நூற்றுண்டில் இருந்தவராதல் வேண்டும்" என்று திரு. சதாசிவப் பண்டாரத்தார் அவர்கள் கூறுவர்.

இந்தக் கால எல்லையில் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களைத் தவிர வேறு சில நூல்களும் தோன்றின. அவற்றில் குறிப்பிடத்தக்கவை காரைக்கால் அம்மையாரின் பாடல்களும், திருமந்திரம், முத்தொள்ளாயிரம், நரிவிருத்தம், கிளிவிருத்தம் எலிவிருத்தம் போன்றவையுமாம்.

## காரைக்கால் அம்மையார்

கீழைக் கடற்கரைப் பட்டினமாகிய காரைக்காலில் தோன்றிய புனிதவதியார் என்பவரே காரைக்கால் அம்மையார் என்று பக்தியுடன் அழைக்கப்படுவோர் ஆவர். இவ்வம்மையாரின் வரலாறு திருத்தொண்டர் புராணத்தில் 66 பாடல்களால் விளக்கமுறுகின்றது.

காரைக்காலில் பெருங்குடி வணிகனின் பெருமட மகளாக விளங்கிய புனிதவதியாரை மணந்த பரமதத்தன் என்பான் அவர்பால் இருந்த தெய்வத்தன்மையைக் கண்டு அஞ்சி அவரை நீத்து வேற்றுநாடு சென்று வேறொருத்தியை மணந்தானாக, புனிதவதியார் அவனிடம் சென்று தன்னை ஏற்குமாறு வேண்ட, அவன் இவர் அடிகளில் விழுந்து வணங்கினான். அதனால் நாணம் மீக்கூர்ந்த புனிதவதியார் வாழ்க்கையை முனிந்து, இறைவனை வேண்டிப் பேயுருப் பெற்றார். கைலைமலையில் கண்ணுதற் பெருமானைக் காணவேண்டிச் சென்று அவரால் 'அம்மையே' என்று அழைக்கப் பெற்றார். பின் வட திருவாலங்காட்டிற்குத்திரும்பி வந்து ஆடவல்லானின் குரைகழல் நீழலில் என்றும் தங்கியிருக்கும் பெரும் பேறு பெற்றார். இதுவே பெரியபுராணம் கூறும் செய்தி. இவர் பேயுருப் பெற்றமைக்கு இவரது பாடல்களிலேயே சான்றுகள் உள்ளன†

இவர் இயற்றியனவாக இன்று கிடைக்கப்பெறும் நான்கு நூல்களும் பதினோராம் திருமுறையில் அடங்கி

---

† "காடு மலிந்த கனல்வாய் எயிற்றுக் காரைக் காற்பேய்தன்
பாடல் பத்தும் பாடி யாடப் பாவ நாசமே"
(மூத்த திருப்பதிகம், 11)

யுள்ளன. அவை அற்புதத் திருவந்தாதியும், திரு விரட்டை மணிமாலையும் திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகங்கள் இரண்டுமாம்.

அற்புதத்திருவந்தாதி நூற்றியொரு பாடல்களை உடையது; வெண்பாவினால் இயன்றது. சிவபெருமான்பால் அம்மையார் கொண்ட ஆழ்ந்த பக்தியை வெளிப்படுத்துபவை இப்பாடல்கள்:

"வானத்தான் என்பாரும் என்கமற் றும்பர்கோன்
தானத்தான் என்பாரும் தாம்என்க - ஞானத்தான்
முன்னஞ்சத் தால் இருண்ட மெய்யொளிம்சர்
கண்டத்தான்
என்னெஞ்சத் தான்என்பன் யான்"

அற்புதத்திருவந்தாதி. 6

"அன்றும் திருவுருவம் காணாதே ஆட்பட்டேன்
இன்றும் திருவுருவம் காண்கிலேன் - என்றுந்தான்
எவ்வுருவோ நும்பிரான் என்பார்கட்
கென்னுரைக்கேன்
எவ்வுருவோ நின்னுருவம் ஏது"

ஷை 61

திருவிரட்டை மணிமாலை, வெண்பாவும் கட்டளைக் கலித்துறையுமாக உள்ள இருபது பாடல்களைக் கொண்டு திகழ்வது. அந்தாதித் தொடையில் அமைந்தது; சிவபெருமானின் பல்வகைச் சிறப்பினையும் பரக்கப் பேசுவது. திருவாலங்காட்டு மூத்த பதிகங்கள் இரண்டிலும் இருபத்திரண்டு பாடல்கள் உள்ளன. ஆலங்காட்டில் அண்டமுற நிமிர்ந்தாடும் இறைவனின் மீது பாடப் பெற்றவை இவை.

இவ்வம்மையார் தலையால் நகர்ந்து சென்று வழிபட்ட திருவாலங்காட்டிற்குள் கால்வைத்து நடக்க

அஞ்சிய திருஞானசம்பந்த அடிகளார் ஊர்ப்புறத்தே தங்கியிருந்தனர் என்று சேக்கிழார் கூறிப்போந்தமை யால் இவர் சம்மந்தருக்கு முற்பட்டவராதல் வேண் டும். இவரது காலம் கி. பி. ஐந்தாம் அல்லது ஆறும் நூற்றுண்டு என்பர் திரு. பண்டாரத்தார் அவர்கள்.

**திருமூலர் :** திருமந்திரம் என்ற நன்னூல் கண்ட பெருமான திருமூலர். இவர் திருக்கயிலையில் நந்தி யின் திருவருள் பெற்ற சிவயோகிகளுள் ஒருவர் என் றும், திருவாவடுதுறைக் கோயிலின் மேல்புறத்துள்ள அரசமரத்தடியில் மூவாயிரம் ஆண்டுகள் சிவயோகத்தி லமர்ந்து ஆண்டிற்கொரு பாடலாக மூவாயிரம் பாடல்களைப் பாடியருளினுர் என்றும் சேக்கிழார் தமது பெரிய புராணத்தில் கூறியுள்ளார். இச்செய்திகளுள் பலவற்றிற்குத் திருமந்திரத்தினுள்ளே அகச்சான்று கள் உள்ளன. இதோ ஒரு பாடல்:

> **"சேர்ந்திருந் தேன்சிவ மங்கைதன் பங்கனைச்**
> **சேர்ந்திருந் தேன்சிவ ளுவடு தண்துறை**
> **சேர்ந்திருந் தேன்சிவ போதியின் நீழலிற்**
> **சேர்ந்திருந் தேன்சிவன் நாமங்க ளோதியே"**

இவர் சிவயோக சித்தராக நெடுங்காலம் வாழ்ந்தி ருந்தமையை, **"இருந்தேன் இக்காயத்தே எண்ணில கோடி"** என்ற அவரது கூற்றுல் உணரலாம். பல பாடல்கள் இடைச் செருகலாகச் சேர்க்கப்பட்டிருப்ப தால் இப்பொழுது திருமந்திரத்தில் மூவாயிரத்து நாற் பத்தேழு பாடல்கள் காணப்படுகின்றன.

இவ்வாசிரியர் தம்முடைய திருமந்திரம் ஓர் ஆகம நூல் என்றும் அது சிவபெருமானின் அருளால் தம் மால் இயற்றப்பட்டதென்றும் '**நந்தியிணையடி**' என்று தொடங்கும் 73ஆம் பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

"ஆகவே இந்நூல் சைவசித்தாந்தக் கொள்கைகளை யுணர்த்தும் பழையதமிழாகம நூல் என்பதும் இதற்கு வடமொழியில் முதனூல் இல்லை என்பதும் அறியற் பாலவாம்" என்று திருவாளர். T. V. சதாசிவப்பண்டா ரத்தார் கூறுவர்.† திருமூலர் பழைய சிவாகமங்களை மனத்திற்கொண்டே தம் திருமந்திர நூலை ஒன்பது தந்திரங்களாக வகுத்துள்ளனர் என்பர். இவ்வொன்பது தந்திரங்களிலுமுள்ள சில அதிகாரங்கள் யாக்கை நிலையாமை, புலால் மறுத்தல், அன்புடைமை, வாய்மை போன்ற பொது அறக்கூறுகளை எடுத்துரைக் கின்றன. பிறவெல்லாம் சைவ சித்தாந்த உண்மை களையே கூறுகின்றன.

"நான்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்"

(பா. 85)

"ஆர்க்கும் இடுமின் அவரிவ ரென்னன்மின்"

(பா. 250)

"ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்"

(பா. 2104)

"நடமாடும் கோயில் நம்பர்க்கொன் றீயின்
படமாடக் கோயில் பகவர்க்க தாமே"

இவை திருமந்திரத்தின் பொதுமறை வாக்குகள்.

சம்மந்தப்பெருமாள் திருவாவடுதுறைக் கோயிலில் பலிபீடத்திற்கண்மையில் இந்நூல் புதைக்கப்பட்டி ருப்பதைக் கண்டுணர்ந்து எடுத்து உலகிற்கு நல்கினர் என்று பெரிய புராணம் கூறுகிறது. எனவே சம்மந்தர் காலத்திற்கு முன்னர் நிலவிய களப்பிரர் காலத்தில் இந்நூல் இயற்றப்பட்டு

† History of Tamil Literature. P. 81

அன்னியர் ஆட்சிக் கொடுமையால் செல்வாக்கிழந்து திருவாவடுதுறைக் கோயிலில் புதைபட்டிருத்தல் வேண்டும். மேலும் இவர் சிதம்பரத்தையும் அதிலுள்ள பொன்னம்பலத்தையும் தம் நூலிற் குறித்துள்ளார். தில்லையம்பலத்திற்கு முதன் முதல் பொன்வேய்ந்தவன் கி. பி. ஐந்தாம் நூற்றாண்டினனான சிம்மவர்மன் என்ற பல்லவவேந்தன் ஆவான். எனவே இவர் கி. பி. ஐந்தாம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டவராதல் வேண்டும் என்றும் சம்பந்தருக்கு (7ஆம் நூற்றாண்டு) நெடுங்காலம் முந்தியவராதல் வேண்டும் என்பதும் ஆராய்ச்சியாளர் கண்ட முடிவுகள்.

## முத்தொள்ளாயிரம்

இது தமிழ் வேந்தர் மூவரையும் குறித்து ஒருவருக்குத் தொள்ளாயிரம் பாடல்கள் வீதம் பாடப்பட்ட ஈராயிரத்து எழுநூறு பாடல்களைக் கொண்ட தொகை நூல். மூவேந்தர்களையும் பாடுகின்ற தொள்ளாயிரம் பாடல்களின் தொகையால் முத்தொள்ளாயிரம் எனப் பெயர் பெற்றது என்பாருமுளர். வெண்பா யாப்பிற்றாய் அறம் பொருள் இன்பங்களைக் கூறுவது. தொல்காப்பியர் கூறும் விருந்து என்னும் வனப்பிற்கு இலக்கியமாவது. ஆயின் இப்பாடல்கள் அனைத்தும் இன்று கிடைக்கவில்லை. புறத்திரட்டில் காணப்படும் 105 பாடல்கள்தாம் இன்று முத்தொள்ளாயிரம் என்ற பெயரில் உலவுகின்றன. இப்பாடல்களை இயற்றியவர் இன்னார் என்று இனம் கண்டுகொள்ள முடியவில்லை. ஆயின் இவர் கடைச்சங்கப்புலவர்கட்குப் பிற்பட்டவர் என்பது பேராசிரியரது உரையிலிருந்து உணர்ந்துகொள்ள முடிகிறது. இந்நூல் "பழமொழி"

யில் பயின்று வரும் சில சொற்றொடர்களை எடுத்து வழங்குகிறது. எனவே இது பழமொழியின் காலமாகிய கி. பி. ஐந்தாம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டது என்றும், முத்தொள்ளாயிரத்தில் வரும் சொற்றொடர்களைப் பெரியாழ்வார் எடுத்தாள்வதால் அவரது காலமாகிய கி. பி. எட்டாம் நூற்றாண்டிற்கு முற்பட்டதென்றும் திரு. T. V. சதாசிவபண்டாரத்தார் அவர்கள் கூறுவர்.†

இந்நூல் மூவேந்தர்களையும் பேர் குறித்துப் பாடாமல் அவர்தம் பொதுப் பெயர்களால் பாடுகின்றது. அவர்தம் நாடு, நகரம், யானை, குதிரை, வென்றி, கொடை முதலிய சிறப்புக்கள் இந்நூலில் சிறப்புறப் பேசப்படுகின்றன.

சோழனது யானையைப் பற்றிப் பாடும் ஒரு பாட்டினைக் காண்போம்.

> கச்சி யொருகால் மிதியா வொருகால்
> தத்துநீர்த் தண்ணுஞ்சை தான்மிதியா-பிற்றையும்
> ஈழ மொருகால் மிதியா வருமேநம்
> கோழியர்கோன் கிள்ளி களிறு

(பா. 21)

### கிளிவிருத்தம், எலிவிருத்தம், நரிவிருத்தம்

இம் மூன்று நூல்களையும் பற்றிய குறிப்பு வீரசோழிய உரையில் காணப்படுகின்றது. இவை கட்டளைக் கலித்துறையால் யாக்கப்பெற்றிருந்தன என்று அவ்வுரை கூறுகிறது. இந்நூல்கள் இன்று கிடைத்தில. ஆயின் இவை சமண சமயத்தைச் சார்ந்தவை என்றும்,

† History of Tamil Literature p.p. 86-87.

அவர்களால் மிகவும் போற்றப்பட்டு ஓதப்பட்டவை என்றும், சம்மந்தர், நாவரசர் வாக்கால் உணரலாம். எனவே இந்நூல்கள் அப்பெரியார்களது காலமாகிய கி. பி. ஏழாம் நூற்றுண்டிற்கு முந்தையன என்பது தெளிவு.

ஏறத்தாழ இக்கால எல்லையில் வாழ்ந்தவர்கள் தாம் வைணவத்தின் முதல் ஆழ்வார்களாகிய பொய்கையார், பூதத்தார், பேயார் என்னும் ஆழ்வார்கள். எனினும் இவர்களது பாடல்களை "ஆழ்வார்கள்" என்னும் தலைப்பின்கீழ் ஆராய்வோம்

# பல்லவர் காலம்

சங்க காலம் என்று வரையறுக்கப்பட்ட காலமே தமிழகத்தின் பொற்காலம் என்று போற்றப்படுகிறது. மூவேந்தர்களது ஆட்சியில் அசைக்கமுடியாத பேரரசாக விளங்கிய தமிழகம் கடைச்சங்க காலத்தின் இறுதியில் வடபகுதியில் பல்லவர்க்கும் தென்பகுதியில் களப்பிரர்க்கும் வீழ்ச்சியுற்றது. இதனால் விளைந்த தீமைகள் பல்லாயிரம். தமிழர்கள் தங்களது அரசியல், மொழி, சமயம் ஆகிய அனைத்தையும் இழந்தார்கள். தமிழர்களது பழம்பெரும் *

---

*சைவமும் வைணமும் தமிழகத்தின் பழம்பெருஞ் சமயங்கள் என்பதற்குப் பல சான்றுகள் உள்ளன. பிராகுவே என்ற திராவிடமொழி பேசப்படும் இடமாகிய 'ஊர்' (ur) என்னும் நகரத்தில், இறைவனை அம்மையப்பனாக வழிபடும் வழக்கமும் திருக்கல்யாணத் திருவிழா நடைபெறும் வழக்கமும் இன்றும் காணப்படுகின்றன. அவை திராவிடர்களின் சைவசமய நெறியைக் குறிக்கின்றன என்று வரலாற்றறிஞர்கள் கூறுவர். மேலும் திராவிட நாகரிகம் என்று பலரால் கருதப்படுகின்ற சிந்துவெளி நாகரிகத்து மக்கள் இலிங்க

சமயங்களாகிய சைவமும் வைணவமும புறச்சமய வாதிகளாகிய வேற்றரசர்களது ஆட்சியின் கீழ் செல்வாக்கிழந்து நின்றன. பௌத்தமும் சமணமும் செல்வாக்குப்பெற்று அதிகார வெறியால் தம் புனித அருட்தன்மைகளை இழந்து பல ஊறு விளைப்பவாயின. இசை, நாடகம் போன்ற அருங்கலைகள் புறக்கணிக்கப்பட்டன. கி. பி. ஆறும் நூற்றுண்டின் இறுதியில் இவ்விருண்ட காலம் விடிவைக் கண்டது. வடக்கே தொண்டை மண்டலத்தில் மகாபல்லவர்களும் தெற்கே பாண்டியர்களும் தோன்றிக் களப்பிரக் கொடுமையை ஒடுக்கி ஒழித்தனர்.

---

வழிபாட்டினை மேற்கொண்டிருந்தனர் என்பர் சர். ஜான்மார்ஷல் என்னும் தொல்பொருள் ஆராய்ச்சியாளர். அவற்றைப் போன்று திருமால் வழிபாடும் தமிழகத்தில் பண்டைக் காலத்தே பயின்று வந்தமை தமிழர் தம் மிகப் பழம் நூலான தொல்காப்பியத்தால் அறியக்கிடைக்கின்றது.

"மாயோன் மேய காடுறை உலகம்" என்றும் "பூவை நிலை" என்றும் தொல்காப்பியம் குறிப்பது காண்க. மேலும் தமிழர்கள் இறைவனுக்குக் கோயில் கட்டி அன்றுட வழிபாடுகளும் திருவிழாக்களும் புரிந்து வழிபட்டனர் என்ற செய்தியும் தொல்காப்பியத்திலும் திருக்குறள் போன்ற் நூல்களுள்ளும் காணக்கிடைக்கின்றது. தொல்காப்பியம் அகத்திணை இயலில் "மேவிய சிறப்பின் ஏனோர் படிமைய, முல்லை முதலாச் சொல்லிய முறையான், பிழைத்தது பிழையாது ஆகல் வேண்டியும், இழைத்த ஒண்பொருள் முடியவும்—பிரிவே" என்னும், சூத்திரத்திற்குப் பொருள்கூறும் இளம்பூரணர் மன்னவன், கோயில்களில் நடைபெறும் அறப்புறங்களுக்கு இடையூறு எற்படுங்கால் பிரிவதாகக் குறிக்கின்றனர்.

"சிறப்போடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு"

என்ற திருக்குறளையும் காண்க.

இந்நிலையில் அருமறைச் சமயங்களும் தெய்வத் தமிழும் தழைத்தோங்குவதற்காகத் திருவருட் தெய்வப்புலர்களாகிய பன்னிரு ஆழ்வார்களும் நாயன்மார் நால்வரும் தமிழகத்தில் தோன்றத் தலைப்பட்டனர். அவர்கள் தமிழர்களது ஆதிசமயங்களாகிய வைணவத்தையும் சைவத்தையும் இன்னிசைத் தமிழில் ஏற்றி நாடெங்கும் பரப்பினர். அவர்களது பண்சுமந்த பாடல்கள் தமிழகத்தின் மூலைமுடுக்குகளெல்லாம் சென்று கமழ்ந்தன. இதனால் இருட்டடி பட்டிருந்த தமிழன் இதயத்தில் அருள்ஒளி பெருகியது; சமய உணர்வு தலைப்பட்டது. அரசியல் நிலையிலும் தனிப்பட்ட மனிதன் வாழ்விலும் சமயத்தின் அருள்வெள்ளம் பாய்ந்தது. நால்வரும் பன்னிரு ஆழ்வார்களும் தோன்றிலரேல் தமிழர்தம் பண்பாடும் தமிழும் என்னாயிருக்கும் என்று எண்ணிப்பார்ப்பாருக்கு அவர்களது இன்றியமையாமை புலப்படும்.

திருவருட்திறத்தினை நினைந்து வியந்து "காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கிப்" பாடப்பட்ட அவர்தம் பாடல்கள் உலக இலக்கிய வரலாற்றிலே தமிழுக்கு ஒரு சிறப்பான இடத்தினைத் தேடித்தந்துள்ளன. நம்மாழ்வார் வாய்மொழியும் நாச்சியார் திருமொழியும் வடநாட்டையும் வளம் செய்தன; வங்கமொழி துங்கமுடன் திகழ்வதற்குக் காரணமான சைத்தன்யர் போன்றவர்களை உருவாக்கின.

## நாயன்மார்கள்

### 1. திருஞானசம்பந்தர் :

'வையம் மகிழ யாம் வாழ அமணர்வலி தொலைய' பிரமபுரம் என்று போற்றப்படும் சீர்காழியில் தோன்றி

யவர் திருஞான சம்பந்தர் ஆவர். இவர் "ஆளுடைய பிள்ளையார்" என்றும் "காழியர்கோன்" என்றும் "செம்பையர்கோன்" என்றும் அழைக்கப்படுவர். இவரது தந்தையார் எஞ்ஞான்றும் சித்தத்தைச் சிவன் பாலே வைத்திருந்த சிவபாதவிருதையர் என்னும் சைவமறையார். தாயார் பகவதியார். பையல்பருவத்திலேயே உமைமகிழ்ந்தூட்டிய ஞானப்பாலை உண்டு திருவருட் திறப்பெற்று 'நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தர்" என்று புகழப் பெறுவராயினர்; சிவத்தலங்கள் பலவற்றிற்கும் சென்று திருப்பதிங்கள் பாடித் தமிழை வாழவைத்தவர்; அமண் கோட்டையாய் விளங்கிய மதுரை சென்று, அங்கு அமணர் ஆருகதர் போன்ற புறச்சமயத்தினரை வாதில்வென்றார். கூன்பாண்டியனை நின்றசீர்நெடுமாறனாக ஆட்கொண்டருளினர்.

சிவனடித் தொண்டர்களைப் பாடவந்த "தொண்டர் சீர்பரவுவார்" தாம் பாடிய திருத்தொண்டர் புராணத்தில் ஏறத்தாழ பாதிப்பகுதியில் சம்பந்தப் பெருமானின் வரலாற்றை விளக்குகிறார். எனவே "பிள்ளைபாதி; புராணம்பாதி" என்ற பழமொழி வழங்குவது காண்க. அத்துவைதத் தத்துவத்தைப் பரப்ப வந்த ஆதிசங்கரர், தமது சௌந்தரிய லகிரியில் இவரைத் 'திராவிட சிசு' என்று குறிப்பிட்டுள்ளனர்.

திருஞான சம்பந்தப்பெருமான் பாடியன பதினாருயிரம் பதிகங்கள் என்பார் நம்பியாண்டார் நம்பி. ஆயின் இன்று கிடைப்பன முந்நூற்று எண்பத்து நான்கு பதிகங்களேயாகும். ஒவ்வொரு பதிகத்திலும் பதினொரு பாடல்கள் உள்ளன. இன்று கிடைத்துள்ள பதிகங்களைக் கொண்டு நோக்குகையில்

சம்பந்தர் பதிகம்பாடி வழிபட்ட தலங்கள் 220 என்பர் திரு. ஔவை துரைசாமிப்பிள்ளை யவர்கள்†

இயற்கை எழிலில் இதயம் களி கூர்ந்து இறைவனைப் பாடியவர் சம்பந்தப் பெருமான். இவரது பாடல்களில் இயற்கை பெற்றுள்ள சிறப்பினை ஓர்ந்து இன்புறல் வேண்டும். எடுத்துக்காட்டாக சிலவற்றைக் காணபோம்.

"செறியிதழ்த் தாமரைத் தவிசில் திகழ்ந்து
ஓங்கும் இலைக்குடைக்கீழ்ச் செய்யார் செந்நெல்
வெறிகதிர்ச் சாமரை இரட்ட இளவன்னம்
வீற்றிருக்கும் மிழலையாமே"

"கனைத்த மேதி காணாது ஆயன்கை மேற் குழலூத
அனைத்தும் சென்று திரளும் சாரல் அண்ணாமலை"

திருவீழிமிழலையிலும் திருவண்ணாமலையிலும் அடிகளார் இயற்கையில் இறைவனைக் காணும் காட்சிகள் இவைகள். முதலாம் நரசிம்மனுடன் வாதாபி சென்று வெற்றி கண்டவரான சிறுத்தொண்டரை "செங்காட்டங் குடிமேய சிறுத்தொண்டன்" என்று சம்பந்தர் புகழ்வதால் இவரது காலம் ஏழாம் நூற்றாண்டு என்பர். இவரது கால ஆராய்ச்சியில் பலரும் கூறிய முடிவுகளையெல்லாம் திரட்டிக் கூறும் பேராசிரியர் க. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள், "திருஞானசம்பந்தர் கி. பி. 609—642 வரையுள்ள காலத்தில் 16 ஆண்டு நிலவுலகில் வாழ்ந்து சைவத்தை நிலைநாட்டினர் என்க" என்று துணிந்துரைக்கின்றனர். *

† History of Tamil Literature-Saiva Literature-pp. 64

* திருஞானசம்பந்த சுவாமிகள் சரித்திரம் பக்கம் 273-274.

**திருநாவுக்கரசர் :** பெருகிய நலத்தால் மிக்க திருமுனைப்பாடி நாட்டினுள் திருவாதவூர் என்னும் திருப்பதியுள் வாழ்ந்து வந்த புகழனுர், மாதினியார் என்னும் சிவநேயச் செல்வர்க்குத் திருமகனுகத் தோன்றியவர் திருநாவுக்கரசடிகள் ஆவர். அன்னரது இயற்பெயர் மருள் நீக்கியார் என்பர். சிறுவயதிலேயே பெற்றோரை இழந்து விட்ட மருள் நீக்கியார் தமக்கையார் திலகவதியாரால் வளர்க்கப்பட்டுப் பல்கலைத் துறைகளில் மேம்பட்டவரானுர். இருப்பினும் சமணர் தம் தொடர்பு கொண்டு அச்சமயத்தால் பெரிதும் கவரப்பட்டுத் திரிப்பாதிரிப்புலியூராகிய பாடலி புரத்தில் தருமசேனர் என்ற பெயருடன் தலைமை சார்ந்து நின்றுர். தம்பியைப் புறச் சமயத்திர்குப் பறிகொடுத்த திலகவதியார் வேதனையுடன் சிவனடி சிந்தை வைத்து வழிபட்டு வரலாயினர். இதற்கிடையில் தருமசேனருக்குச் சூலை நோய் வர, அதனைச் சமணர் போக்கமாட்டாது இடர்ப்பட, அவர் தமக்கையாரை அணுகி,அவரது அறிவுரைப்படி, திருக்கெடிலத் துறை மேவிய கண்ணுதற் கடவுளை,"சுடுகின்றது சூலை தவிர்த்தருளீர்" என்று வேண்டிக் கொண்டு சூலைநோய் தீர்ந்து சிவனருள் பெற்றுர் என்பது இவர் தம் வரலாறு.

திருஞானசம்பந்தரைப் போலவே இவரும் ஒப்புயர்வற்றுத் திகழ்ந்தவராவர். அவரால் 'அப்பரே' என்று அழைக்கப் பெற்றவர். சமணச் சமயத்தவனுன முதலாம் மகேந்தரன் இவர் சைவத்தைத் தழுவியதற்காகப் பல்லாற்ருனும் கொடுமைகள் இழைத்த பொழுதும் "நாமார்க்கும் குடியல்லோம்" என்றும், "கற்றுணைப் பூட்டிக் கடலிற் பாய்ச்சினும் நற்றுணையாவது நமச்சிவாயவே" என்றும் இருந்தவர்.

மண்பாதலம் புக்கு மாகடல் மூடி மற்றேழுலகும்
விண்பால் திசைகெட்டு இருசுடர் வீழினும் அஞ்சல் நெஞ்சே
திண்பால் நமக்கொன்று கண்டோம் திருப்பாதிரிப்
புலியூர்
கண்பாவு நெற்றிக் கடவுட் சுடரான் கழலிணையே

என்று பாடும் அவரது நெஞ்சத்து உறுதியைக் கண்டு வியக்கின்றோம் நாம்.

திருவையாற்றில் எழுந்தருளியுள்ள அம்மையப்பனை—ஐயாறப்பனைக் காணுகையில் காதல் மடப்பிடியோடு களிறு வருவன போலவும், பெடையோடு சேவல் வருவன போலவும் கண்டு உருகினார்.

திருவாரூர்ப் பெருமானுக்கு அவர் ஆளான நிலையினைப் பற்றி அகத்துறைப் பொருளில் அவர் பாடிய பாடல் நம் நெஞ்சைத் தொடரவல்லது.

முன்னையவன் நாமம் கேட்டாள் மூர்த்தி
அவனிருக்கும் வண்ணம் கேட்டாள்
பின்னையவன் ஆரூர் கேட்டாள் பெயர்த்தும்
அவனுக்கே பிச்சி யானாள்
அன்னையும் அத்தனையும் அன்றே நீத்தாள்
அகன்றாள் அகலிடத்தார் ஆசாரத்தைத்
தன்னை மறந்தாள் தன்நாமங் கெட்டாள் தலைப்பட்டாள்
நங்கை தலைவன் தாளே!

திருநாவுக்கரசடிகள் பாடிய பதிகங்களின்மொத்த எண்ணிக்கை 4900 என்று சுந்தரர், நம்பியாண்டார் நம்பி போன்றவர்கள் குறித்துள்ளனர். § ஆயின் இன்று கிடைப்பன 313 திருப்பதிகங்களேயாகும்.

§ "இணைகொள் ஏழெழுநூறு இரும்பனுவல் ஈந்தவன் திருநாவினுக்கரையன்" சுந். தேவா. 65:2.

தாண்டகங்கள் பாடுவதில் வல்லவராகிய இவருக்குத் தாண்டக வேந்தர் என்ற சிறப்புப் பெயர் உண்டு.

இவர் சம்பந்தர் காலத்தவர் என்பது இவ்விருவரது வரலாற்ருல் அறிகின்ருேம். ஆளுடைப்பிள்ளையாரைக் காணவேண்டி அப்பர் பெருமான் சீர்காழிக்கு வருகையில் அவர் மிகவும் மூப்பினுல் தளர்ச்சியுற்றிருந்தார் என்பதனைச் சேக்கிழார் வருணித்துள்ளனர். இதனையும் முதலாம் மகேந்திரன், முதலாம் நரசிம்மன் ஆகியோரது வரலாற்றுக் குறிப்பையும் இன்னபிற சான்றுகளையும் வைத்துத் திருநாவுக்கரசர் தம் காலம் கி. பி. 550 முதல் 650க்குள் இருந்திருக்க வேண்டும் என்பர்.

**சுந்தரர்** (நம்பியாரூரர்)

தொண்டை நாட்டிற்கும் சோழ நாட்டிற்கும் இடைப்பட்ட பகுதி நடுநாடு என்றும் திருமுனைப்பாடி நாடு என்றும் அழைக்கப்பட்டு வந்தது. அத்திரு நாட்டில், திருநாவலூர் என்னும் திருப்பதியுள் வாழ்ந்து வந்த சடையனுருக்கும் இசைஞானியார்க்கும் மகனுகப் பிறந்து, தமிழையும் சைவத்தையும் வாழ்வித்தவர் நம்பியாரூரர். கைலைமலையில் கண்ணுதற் பெருமானுக்குத் தொண்டாற்றி வந்த ஆலால சுந்தரரே அவரது ஆணையால் தென்னுட்டில் பிறந்து தடுத்தாட்கொள்ளப்பட்ட நம்பியாரூரர் ஆவர் என்று பெரிய புராணம் கூறுகிறது. இளமைப் பருவத்தில் இவரது அறிவையும் திருவையும் கண்டு மனம் பறி கொடுத்த நரசிங்க முனையரையர் என்னும் மன்னவரால் எடுத்து வளர்க்கப்பட்டவர். இவர் இறைவனுடன் வாதிட்டுப் 'பித்தனே' என்று உரைத்தமையால் வன்தொண்டர் என்றும், கொண்ட உரிமையால் 'தம்பிரான் தோழர்' என்றும் சிறப்பிக்கப் பெற்றவர். இசை ஞானி சிறுவர்,

அம்மையப்பர் என்ற வேறு பல பெயர்களும் உண்டு. இவர் காளைப் பருவமெய்திப் புத்தூர்ச் சடங்கவி சிவாச்சாரியாரின் மடமகளை மணக்க முற்படுகையில் இறைவனால் ஆளோலை காட்டித் தடுத்தாட்கொள்ளப் பட்டார். அவன் அடியெடுத்துக் கொடுக்கப் 'பித்தா பிறைசூடி பெருமானே அருளாளா'' என்று பாடத் தொடங்கியவர். தில்லைப்பதியில் பரவை நாச்சியாரை யும் திருவொற்றியூரில் சங்கிலி நாச்சியாரையும் இறை யருளால் மணந்துகொண்டு இனிது வாழ்ந்தவர். இறைவனிடம் கொண்ட நெருக்கத்தின் உரிமை யால் தாம் வேண்டும் பொருள்களை வேண்டிப் பெற்றுக் கொண்டவர். இறுதியில் சேரமான் பெருமான் நாயனு ருடன் கடகளிற்றின் மீதமர்ந்து கைலையை அடைந்த வர்.

இவர் பாடிய திருத்தொண்டத் தொகை திருத் தொண்டர் புராணம் பாடுவதற்குச் சேக்கிழாருக்கு முதல் நூலாக உதவியது. இவரது 'பித்தாபிறைசூடி' என்று தொடங்கும் பாடலும், 'பொன்னார் மேனியனே' என்ற பாடலும் நாள்தோறும் ஓதப்பெறுபவையாகும். சம்பந்தரைப் போன்றே இவரது கவிதைகளிலும் இயற்கை சிறந்த இடத்தைப் பெறுவதைக் காணலாம். திருவெண்ணெய்நல்லூர் முதல் திருநொடித்தான் மலை ஈறாக உள்ள எண்பத்து நான்கு சிவத்தலங்களுக்கும் சென்று இசை கூட்டிய இவர் ஆங்காங்கே காணப் படும் இயற்கைக்கவினை அழியாத கலையாக்கியுள்ளார்.

''மிடுக்கிலாதானை வீமனே விறல்
விசயனே வில்லுக் கிவனென்று
கொடுக்கிலாதானைப் பாரியே யென்று
கூறினுங் கொடுப்பார் இல்லை

பொடிக்கொள் மேனியெம் புண்ணியன்புக
லூரைப் பாடுமின் புலவீர்காள்
அடுக்கு மேலம ருலகம் ஆள்வதற்
கியாதும் ஐயுற வில்லையே''

இப்பாட்டு, ''வம்மின் புலவீர்காள் நும் மெய் வருந்தக் கைசெய்து உய்ம்மினோ'' என்னும் நம்மாழ்வார் வாக்கை நினைவுறுத்துகின்றது.

இவர் பாடிய திருப்பதிகங்கள் முப்பத்தெண்ணுயிரம் என்றும் பண் முறையால் அவற்றைத் தொகுத்த போது கிடைத்தன நூறு பதிகங்களே என்றும் திருமுறை கண்ட புராணம் கூறுகிறது. எனினும் இவர் பாடியனவாக இன்று கிடைப்பன 1026 செய்யுட்களேயாகும். இவர் கி. பி. ஏழாம் நூற்ருண்டின் இறுதியிலும் எட்டாம் நூற்ருண்டிலும் வாழ்ந்தவர் என்று துணிந்துரைக்கின்றனர் திரு. ஔவை சு. துரைசாமிப் பிள்ளையவர்கள்.

**சேரமான்பெருமாள் நாயனர்:** சேரநாட்டை ஆண்டுவந்த செங்கோற்பொறையன் தவமேற்கொண்டு கான் அடையவும், அவனது நாடு ஆளுவோர் இன்றித் தவித்தது. அந்நிலையில் அச்சேரர் குடியில் தோன்றியவரான பெருமாக்கோதையார் அரசராக்கப்பட்டார். அவர் இளமையிலேயே சிவபக்தி நிறைந்த செல்வராய் விளங்கினர். அரசப்பொறுப்பு தம் சிவப்பணிக்கு இடையூறு ஆகுமோ என்று அஞ்சிய அவருக்கு இறைவனது இசைவு கிடைத்தது. பெருமாக்கோதையார் அரசை ஏற்றுக்கொண்டு சேரமான்பெருமாளாய் விளங்கினர். கழறிற்றறிவார் என்று ஒரு சிறப்புப் பெயரும் அவருக்கு உண்டு.

சேரமான் அன்ருடு சிவபூசை செய்துமுடித்தவுடன் தில்லையம்பலக் கூத்தனின் சிலம்போசை கேட்கப் பெறுவர். ஒருநாள் அவ்வோசை கேட்காது போகவே அதற்குக் காரணம் நம்பியாரூரர் தில்லையில் பதிகம் பாடுவதே என்பதை இறையருளால் உணர்ந்து அவரைக் காணச் சென்ருர். தில்லையில் அவர் பொன் வண்ணத்தந்தாதி என்னும் நூலைப்பாடினுர். நம்பியாரூரர் திருவாரூர் சென்றுவிடவே அங்கு சென்று, அவரைக் கண்டுமகிழ்ந்து திருவாரூர் மும்மணிக் கோவை பாடினுர். சுந்தரரும் சேரமானும் நெருங்கிய நண்பராயினர். சுந்தரர் சேரமானது தலைநகராகிய திருவஞ்சைக்களம் (வஞ்சிமாநகர்) சென்று வந்தார். முடிவில் ஆரூரர் இறைவனுல் அனுப்பப்பட்ட வெள்ளை யானையின் மீது ஏறிக் கைலை சென்ருர். அதனை அறிந்த பெருமாக்கோதையார் தனது குதிரையின் மீதேறிக் கைலை சென்று அடைந்தார். அங்கு கைலை நாதனின் திருமுன்பு தனது 'ஆதி உலா'வாகிய திருக் கயிலாய ஞான உலாவை அரங்கேற்றினுர். இவ்வாருகச் சேரமானின் வரலாற்றைப் பெரியபுராணத்தின் வாயிலாக உணர்கிருேம். சுந்தரமூர்த்தியின் காலம் கி. பி. ஏழாம் நூற்ருண்டின் பிற்பகுதியும் எட்டாம் நூற்ருண்டின் முற்பகுதியுமாதலால் இவரது காலமும் அதுவேயாகும். சேரமான் கைலைசென்றதை அடிப்படையாகக் கொண்டு கொல்லம் ஆண்டு கணிக்கப்படுகிறது என்பர்.

இனி சேரமான்பெருமாள் நாயனுரால் பாடப்பெற்ற நூல்கள் பொன்வண்ணத்தந்தாதி, திருவாரூர் மும்மணிக்கோவை, திருக்கயிலாய ஞானஉலா என்பன என்று முன்னர்க் கண்டோம். அவற்றை நோக்குவாம்.

**பொன்வண்ணத்தந்தாதி :** நூறு பாடல்கள் கொண்ட இந்தநூலில் இவரது சிவப்பற்றின் பல நிலைகளையும் காணலாம். அரசியல் வாழ்வு தன் சிவத்தொண்டு வாழ்விற்குத் தடையாகுமோ என்று அஞ்சும் அவர், 'நானிலம் ஆளினும் நான்மறைசேர் மையார் மிடற்றான் அடிமறவா வரம்வேண்டுவனே' என்று இறைவனை வேண்டுகிறார். தில்லையில் கூத்தனைக் கண்டு வியந்து, 'தன்னைக்கண்ட என்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணமாகிய ஈசனுக்குப் பொன் வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணம் மேனிபொலிந்து இலங்கும்' என்று பாடுகின்றார்.

**''சிந்தனை செய்ய மனம் அமைத்தேன்; செப்ப நா அமைத்தேன்;**
**வந்தனை செய்யத் தலையமைத்தேன்; தொழக் கையமைத்தேன்**
**பந்தனை செய்வதற்கு அன்பமைத்தேன்; மெய் அரும்பவைத்தேன்**
**வெந்த வெண்ணீறு அணி ஈசற்கு இவையான் விதித்தனவே'** (92)

என்னும் பாடல் அவரது சிவத்தொண்டு நெறியைக் காட்டுகின்றது.

**திருவாரூர் மும்மணிக்கோவை :** சுந்தரரைத்தேடிச் சென்று திருவாரூரிற் கண்டு மகிழ்ந்து அவர் முன்னர் இந்நூலைச் சேரமான் பாடியதாகப் பெரியபுராணம் கூறுகிறது. முப்பது பாடல்களைக் கொண்ட இந்நூல் அகப்பொருள் நெறியில் அமைந்துள்ளது. பிரிவால் வருந்தும் தலைவி ஊர் உறங்கும் வேளையில் கண்ணுறங்காது தவிக்கையில் புள்ளோசை கேட்டுப் புலம்புகின்றாள்:

'ஊரெலாம் துஞ்ச உலகெலாம் நள்ளென்று
பாரெலாம் பாடவிந்த பாயிருட்கண்—சீருலாம்
மாந்துறைவாய் ஈசன் மணிநீர் மறைக்காட்டுப்
பூந்துறைவாய் மேய்ந்துறங்கா புள்' (26)

**திருக்கயிலாய ஞானஉலா:** உலா என்னும் பிரபந்த நூல்களுக்கு இதுவே வழிகாட்டியாகத் தோன்றியதால் இது ஆதிஉலா என்றும் உலாப்புறம் என்றும் பாராட்டப்படுகிறது. இறைவன் தேவர்களது வேண்டுகோட்கிணங்கிக் கோலம் பூண்டு உலா வர, பேதை முதல் பேரிளம் பெண் ஈறுக உள்ள பெண்கள் அவனைக் கண்டு விரும்புவதாகப் பாடுவது இந்நூல். பேரிளம் பெண் ஒருத்தி இறைவனைக்கண்டு மயங்கி விடுகிருள். அவளது அன்பைப்பற்றிக் கூறவந்த புலவர்,

'கண்ணவனை அல்லாது காணு செவியவனது
எண்ணருஞ்சீர் அல்லது இசைகேளா—அண்ணல்
கழலடி அல்லது கைதொழா அஃதான்று
அழல் அங்கைக் கொண்டான்மாட் டன்பு,'

என்று ஒரு தீஞ்சுவைப்பாட்டிசைக்கின்ருர். அவளைப் பற்றி மேலும் பாடுகையில்

'கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே உளஎன்ற பண்டையோர்
கட்டுரையை மேம்படுத்தாள்'

என்று திருக்குறளைக் கையாளுவதைக் கண்டு நயக்கின்ருேம்.

**மாணிக்கவாசகர்:** இவர் பாண்டிவள நாட்டில் திருவாதவூர் என்னும் திருப்பதியில் சைவ அந்தணர் குலத்தில் தோன்றியவர். இவரது பிள்ளைப் பருவத்

துப் பெயர் திருவாதவூரர் என்பதாகும். இவர் இளமையிலேயே கல்வி கேள்விகளிற் சிறந்து சிவபெருமான்பால் தணியாத அன்புடையவரானுர். இவரது அறிவு ஒழுக்கங்களைக் கேட்டு வியந்த அரிமர்த்தன பாண்டியன் இவரைத் தனது தலைமை அமைச்சராக அமர்த்திப் பணிகொண்டான். தென்னவன் பிரமராயன் என்ற சிறப்புப் பெயரிட்டுப் பாராட்டினுன். ஒருமுறை குதிரைகள் வாங்குவதற்காக இவருக்கு நிறையப் பொன்னைக் கொடுத்துக் கீழைக்கடற்கரைக்கு அனுப்பினுன் பாண்டியன். இவர் வழியில் திருப்பெருந்துறை என்னும் தலத்தில் குருந்தமரத்தடியில் பல சிவநேயச் சீடர்கள் புடைசூழ வீற்றிருந்த மெய்ஞ்ஞான குருநாதர் ஒருவரைக் கண்டு கவரப்பட்டார்; அவருக்கே ஆட்பட்டார். அவர் சிவபெருமானே ஆவர். அவரது அறிவுரைப்படி குதிரை வாங்கக் கொண்டுவந்த பொன்னைக்கொண்டு ஓர் அழகிய கோவிலைக் கட்டினுர்; சிவனைச் சிந்தையில் இருத்தித் தங்கிலை மறந்திருந்தார். இதனைக் கேள்வியுற்ற பாண்டியன் அவரைச் சிறையிருத்தித்துன்புறுத்தினுன். இறைவன் நரியைப் பரியாக்கியும், பரியை நரியாக்கியும், பிட்டுக்கு மண்சுமந்தும் திருவாதவூரர் தம் அன்பு நிலையைப் பாண்டியனுக்கு உணர்த்தினுர். அதன்பின் இவர் அமைச்சுப்பணியைத் துறந்து கட்டற்ற பறவைபோல் சிவப்பெருவெளியில் பறந்து உள்ளம் நெக்குருகிப் பக்திச் சுவை நனி சொட்டச்சொட்டப் பாடல்கள் பாடுவாராயினர். அப்பாடல்களின் தொகுதியே திருவாசகம் என்னும் மணிவாசகமாகும். பின்னர் இறைவன், ஒரு புலவர் போல் தோன்றி 'பாவை பாடிய வாயால் ஒரு கோவையும் பாடுக' என வேண்ட, இவர் திருக்கோவை பாடினுர் என்பர், இறுதியில் தில்லையம்பலம் சென்று திருக்கோவையாருக்குப் பொருள்

இவரே!" என்று கூத்த பிரானைச் சுட்டிக் காட்டினர். அப்பொழுது ஒரு பேரொளி தோன்றியது. அத்திருவருள் ஒளியில் மாணிக்கவாசகர் கலந்து மறைந்தார். இதுவே இவரது வரலாறு.

இவர் இயற்றிய திருவாசகம், கற்பார் நெஞ்சை உருக்கவல்லது. 'திருவாசகத்திற்கு உருகார் ஒருவாசகத்திற்கும் உருகார்' என்ற மூதுரை காண்க. மணிவாசகரைப் போன்றே திருவருளின்பத்தில் திளைத்த இராமலிங்க அடிகளார் திருவாசகத்தின் சுவையைத் தீந்தமிழ்ப்பா ஒன்றில் காட்டுகின்றார்.

**வான்கலந்த மாணிக்க வாசகநின் வாசகத்தை**
**நான்கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே**
**தேன்கலந்து பால்கலந்து செழுங்கனித்தீஞ் சுவைகலந்தென்**
**ஊன்கலந்து உயிர்கலந்து உவட்டாமல் இனிப்பதுவே.**

சிவபெருமானிடம் அவர் கொண்டிருந்த உலப்பிலா அன்பும் நம்பிக்கையும் நம் நெஞ்சத்தைத் தொடுவனவாகும்.

**'உள்ளேன் பிறதெய்வம் உன்னையல்லாது**
**எங்கள் உத்தமனே'**

**(திருச்சதகம் : 2)**

**'நின்னலால் தேசனே ஓர்தேவருண்மை**
**சிந்தியாது சிந்தையே!'**

**(திருச்சதகம் : 78)**

"வைத்தநிதி பெண்டிர் மக்கள் குலம் கல்வியென்னும், பித்தவுலகில் பிறப்போடு இறப்பென்னும் சித்தவிகாரக் கலக்கம்" கொண்டிருந்த தன்னை, இறைவன் "காட்டாதன காட்டிச் சிவம் காட்டித் தாளாகிய தாமரை காட்டித் தன் கருணைத் தேன் காட்டி" ஆட்

கொண்டருளிய பேரருட்திறத்தை உணர்ந்து உருகிப் பாடுகிறார்.

தாம் பெற்ற திருவருளின்பத்தை உலகிற் கெல்லாம் தந்து உதவ நினைக்கின்றது மாணிக்க வாசகரின் அருள் உள்ளம்; அதிலும் மக்களுக்குப் புரியும் முறையில் உணர்த்த விரும்புகிறது. எனவே சாதாரண மக்கள் விளையாடும் அம்மானை, பொற் சுண்ணமிடித்தல், தும்பியூதுதல், பூவல்லி கொய் தல், தோணோக்கமாடல், பொன்னூசல் ஆடல் என்னும் விளையாட்டுப்பாடல்களில், சிறு மகளிர் கூற்றில், வைத்துப்பாடியுள்ளார்.

புறச்சமயத்தினரான ஜி. யூ. போப் அவர்கள்கூட இத்திருவாசகத்தில் தன் உள்ளத்தைப் பறிகொடுத்தி ருந்தார் எனின் இதன் மேன்மையைக் கூற ஒண்ணுமோ?

திருவாசகத்தைப் போன்றே மணிவாசகர் பாடிய தாகக் கருதப்படும் திருக்கோவையார் கோவை இலக்கி யங்களுக் கெல்லாம் தலையாயதாய் அறிஞர்களால் பாராட்டப்பெறுவதாகும். திருக்கோவையாருக்கு முன் னரே பாண்டிக்கோவை என்றதொரு நூல் இருப்பினும் அது முழுவடிவில் கிடைக்கப் பெறாததால் இதுவே இன்று கிடைக்கும் முதல் கோவை நூலாகும்.

## ஆழ்வார்கள்

சைவத்தைப்போன்றே வைணவமும் தமிழ்நாட்டில் பன்னெடுங்காலமாகப் பேணப்பட்டு வரும் பேரருட் சமயமாகும். "மாயோன் மேய காடுறை உலகமும்" என்று தொல்காப்பியர் குறிப்பிடுவது மாமைநிறத்தை (கருநீலம்) உடைய கண்ணனையேயாகும் என்று அறி

ஞர் கூறுவர். இக் கண்ணனே திருமால் ஆவான். திருமால் வழிபாடு வைணவத்தின் அடிப்படையாகும். தொல்காப்பியம் எழுத்ததிகாரப் பாயிரத்தில் ஆசிரியர் நச்சினார்க்கினியர், "அகத்தியனார் தென்திசைக்கட் போதுகின்றவர்—துவராபதிப் போந்து நிலங்கடந்த நெடுமுடியண்ணல் வழிக்கண் அரசர் பதினெண்மரை யும் பதினெண் குடி வேளிருள்ளிட்டாரையும் அருவாள ரையும் கொடுபோந்து காடு கெடுத்து நாடாக்கிப் பொதியிலின்கண் இருந்து...—" என்று எழுதியுள்ளார். இவ்வகத்தியர் இராமாயண காலத்தவர் என்று வான் மீகத்தால் உணருகிறோம்.

இம்மாபெரும் இருடி தென்திசைக்கண் போந்த போது நிலங்கடந்த நெடுமுடியண்ணலாகிய கண்ண னின் வழிவந்த அரசரைத் தென்னாட்டிற்கு அழைத்து வந்தார் என்று நச்சினார்க்கினியர் குறித்தலால் இவரே முதன்முதலில் திருமால் வழிபாட்டைத் தென்னாட்டிற் குக் கொண்டுவந்தார் என்று கூறுவர்‡

இச்சான்றுகளால் வைணவம் தமிழ்நாட்டின் தொல்லைச் சமயங்களில் ஒன்றென்று நன்கு விளங்கும். இனித் தொல்காப்பியத்திலும் சங்க இலக்கியங்களிலும் பல சான்றுகள் உள்ளன.

"மாயோன் மேய காடுறை யுலகமும்"

(தொல்; அகத் 5)

"மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பிற்
றுவா விழுப்புகழ்ப் பூவை நிலையும்"

(தொல்; புறத் 60)

---

† A History of Tamil Literature: by E. S. Varadaraja Iyer. p. 220

"கணங் கொள் அவுணர்க் கடந்த பொலந்தார்
மாயோன் மேய ஓணநன்னாள்"
(மதுரைக்காஞ்சி. 591)

"இருநிலங் கடந்த திருமறு மார்பின்
முந்நீர் வண்ணன் பிறங்கடை"
(பெரும்பாண். 29—31)

"புள்ளணி நீள்கொடிச் செல்வன்"
(திருகுருகு. 149)

"நாற்பெருந் தெய்வத்து நன்னகர் நிலைஇய
உலகம் காக்கு மொன்றுபுரி கொள்கை"
(திருமுருகு 160—61)

"வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை
நீர்செல நிமிர்ந்த மா அல் போல"
(முல்லைப்பாட்டு. 2—3)

"காந்தளம் சிலம்பிற் களிறுபடிந் தாங்குப்
பாம்பணைப் பள்ளி யமர்ந்தோ னுங்கண்"
(பெரும்பாண் 372-73)

"கடல்வளர் புரிவளை புரையு மேனி
அடல்வெந் நாஞ்சிற் பனைக்கொடி யோனும்
மண்ணுறு திருமணி புரையு மேனி
விண்ணுயர் புட்கொடி விறல்வெய் யோனும்"
(புறம். 56)

இச்சான்றுகளால் அகத்தியனாருடன் தென்னாட்டில் புகுந்து பரவிவிட்ட திருமால் வழிபாடு தொல்காப்பியர், சங்ககாலத்தில் நன்கு பயிலப்பட்டு வந்தமை தெள்ளிதின் விளங்கும்* எனினும் ஆழ்வார்கள்

† கி. பி. இரண்டாம் நூற்றாண்டைச் சார்ந்ததென்று கருதப்படும் மணிமேகலையுள் சமயக்கணக்கர் தந்திறங்கேட்ட காதையுள் வைணவ வாதம் கூறப்படுவது இங்கு நோக்கத் தக்கதாகும்.

தோன்றிய பிறகே திருமால் வழிபாடு தமிழ் மக்களின் வாழ்வில் இரண்டறக் கலந்துவிட்டது எனலாம்.

இவ்வாழ்வர்கள் பதின்மரென்றும் பதினொருவர் என்றும் பன்னிருவர் என்றும் பல கருத்துக்கள் உள்ளன. அவர்கள் வரிசை முறைகளும் பலவாக உள்ளன. எனினும் பெரும்பாலும் ஆழ்வார்கள் பன்னிருவர் என்றே கொள்ளப்படுகிறது. ஓரளவு இன்றைய ஆராய்ச்சியாளர்கள் ஒப்புக்கொண்டுள்ள வரிசை முறை பின்வருமாறு: 1. பொய்கையார், 2. பூதத்தாழ்வார், 3. பேயாழ்வார், 4. திருமழிசை யாழ்வார், 5. நம்மாழ்வார், 6. மதுரகவியாழ்வார், 7. பெரியாழ்வார், 8. ஆண்டாள், 9. தொண்டரடிப் பொடியாழ்வார், 10. திருப்பாணுழ்வார், 11. திருமங்கை யாழ்வார், 12. குலசேகர ஆழ்வார். இப்பெரியார் களின் வரலாறு கூறும் நூல்கள் பல. அவற்றுள் இராமானுசர் காலத்திருந்த கருடவாகன பண்டிதரின் திவ்விய சூரி சரிதையும், நம்பிள்ளை காலத்தவரான பின்பழகிய பெருமாள் ஜீயர் மணிப்பிரவாள நடை யிலியற்றிய ஆருயிரப்படி குருபரம்பரையும் காலத் தால் முற்பட்டவை. வேறுபல நூல்களும் உண்டு. இவ்வாழ்வார்கள் பன்னிருவரில் பொய்கையார், பூதத் தார், பேயார் ஆகிய மூவரும் ஏறத்தாழ இருண்ட காலப்பகுதியைச் சார்ந்தவர்கள் என்று பலராலும் கருதப்படுகின்றனர். இவர்கள் முதலாழ்வார்கள் என்றே அழைக்கப்படுகின்றனர். இனி இவர்களைப் பற்றி ஆராய்வோம்.

திருமாலின் பாஞ்சசன்யம் என்ற சங்கின் அவதாரமாகக் கருதப்பெறும் பொய்கையார் காஞ்சி யில் ஒரு பொய்கையிலிருந்த தாமரை மலரொன்றில்

தோன்றினர் என்றும் அதற்கு அடுத்தநாள் பூதத்தார் கடல் மல்லையிற் பிறந்ததாகவும் பேயாழ்வார் திருமையிலையில் பிறந்ததாகவும் குருபரம்பரை கூறும். இவர்கள் மூவரும் திருக்கோவலூரில் ஒரு நாள் கூடினர். அன்று பெருமழை பெய்தது. பொய்கையார் ஒரு வீட்டுத் திண்ணையில் ஒன்றிக்கொண்டிருந்தார். அங்கு பூதத்தாரும், பேயாரும் வந்து இடம் கேட்கவே பொய்கையார், 'ஒருவர் கிடக்கலாம், இருவர் இருக்கலாம், மூவர் நிற்கலாம்' என்று கூறி இடம் விட்டனர். அங்கு நான்காவது ஆள் ஒருவர் நிற்கவே இவர்கள் உற்று நோக்கி அவரை நெடுமால் என்று உணர்ந்து மகிழ்ந்து நூறு நூறு பாடல்கள் இயற்றி அருளினர். அவைகள் இயற்பாதிருவந்தாதிகள் என வழங்கும்.

**பொய்கையார் :** வைணவக் குரு பரம்பரைகள் இவர் கி.மு. 4303ல் வாழ்ந்தவர் என்று கூறும். இவரது குலம் அந்தணர் குலம். இவரும் சோழன் கோச்செங்கணானைப் பாடிச் சேரனைச் சிறைமீட்ட பொய்கையார் என்னும் சங்கத்துச் சான்றோரும் ஒருவர் என்பர் இராவ்சாகிப். மு. இராகவய்யங்கார் அவர்கள். இவர்கள் இருவரும் வேறுவேறானவர்கள் என்று மறுத்துரைப்பர் நாவலர் ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள்.

இவர் வையகமே தகழியாக, வார்கடலே நெய்யாக வெய்யகதிரோன் விளக்காகச் சுடராழியானுக்குச் சூட்டுகின்ற செஞ்சொற் பாடல்கள் சுவைமிகுந்தவை. திருமாலிடம் மாறாத அன்பு கொண்டிருப்பினும் அரியும் சிவனும் ஒன்றென்னும் கொள்கையுடையவர்.

**"அரன்நா ரணன்நாமம் ஆன்விடை புள்ளூர்தி,**
**உரைநூல் மறையுறையும் கோயில்-வரைநீர்**

கருமம் அழிப்பளிப்புக் கையதுவேல் நேமி
உருவமெரி கார்மேனி ஒன்று''

என்ற பாட்டால் இதனை உணரலாம்.

அதே தருணத்தில் இவர் மறந்தும் புறம் தொழாதவர் என்பதனைக் கீழ்வரும் பாடலால் நன்கு அறியலாம்.

''வாயவனை யல்லது வாழ்த்தாது கையுலகம்
தாயவனை யல்லது தாம்தொழா-பேய்முலைநஞ்
சூணாக வுண்டான் உருவொடு பேரல்லால்
காணாகண் கேளா செவி''

இவரது பாடல்கள் இயற்கையழகினையும் செவ்விதிற் காட்டுகின்றன.

''பெருவில் பகழிக் குறவர்கைச் செந்தீ
வெருவிப் புனந்துறந்த வேழம்-இருவிசும்பில்
மீன்வீழக் கண்டஞ்சும் வேங்கடம்''

பூதத்தாழ்வார் :

''அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக
இன்புருகு சிந்தை யிடுதிரியா-நன்புருகி
ஞானச் சுடர்விளக் கேற்றினேன் நாரணற்கு
ஞானத் தமிழ்புரிந்த நான்''

என்று பாடும் இப்பெரியார், 'ஒருவனல்லை ஒளியுருவம் நின்னுருவம், ஈருருவன் என்பர் இருநிலத்தார்' என்று சிவனும் மாலும் இணைந்த கோலத்தைக்காட்டும் பரந்த நோக்கமுடையவர். திருமாலைத் தன் தமிழ்மாலையால் பாடியதால் இவர் பெருமிதம் அடைகிறார்.

யானே தவஞ்செய்தேன் ஏழ்பிறப்பும் எப்பொழுதும்
யானே தவமுடையேன் எம்பெருமான்-யானே

இருந்தமிழ்நன் மாலை இணையடிக்கே சொன்னேன்
பெருந்தமிழன் நல்லேன் பெரிது.

பேயாழ்வார் :

'திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன் திகழும்
அருக்கன் அணிநிறமும் கண்டேன்—செருக்கிளரும்
பொன்னுழி கண்டேன் புரிசங்கம் கைக்கண்டேன்
என்னுழி வண்ணன்பால் இன்று'

என்று பாடும் இவர் திருவேங்கடத்தில் கண்ட காட்சியிலே சிவனும் மாலும் இணைந்த திருக்கோலத்தைக் காணும் சமநோக்குடையவராக விளங்குகிறார்.

"தாழ்சடையும் நீண்முடியும் ஒண்மழுவும் சக்கரமும்
சூழரவும் பொன்னுணும் தோன்றுமால்—சூழும்
திரண்டருவி பாயும் திருமலைமேல் எந்தைக்கு
இரண்டுருவும் ஒன்ருய் இசைந்து"

இவரது பாடல்களிலும் இயற்கை வருணனை விளங்கித் தோன்றுவதைக் காண்கின்றோம்.

"புரிந்து மதவேழம் மாப்பிடியோ டேடித்
திரிந்து சினத்தால் பொருது—விரிந்தசீர்
வெண்கோட்டு முத்துதிர்க்கும் வேங்கடம்"

இம் முதலாழ்வார்கள் மூவரது பாடல்களும் சிறந்த செம்பாகமான வெண்பாக்களால் அமைந்திருப்பதால் இவை சங்ககாலத்தை அடுத்து யாக்கப்பெற்றிருத்தல் வேண்டும் என்பர். இவர்களது பாடல்களில் திருமாலிடம் தாம் கொண்ட பக்தியும் அதேதருணத்தில் அது சிவநிந்தனையாக அன்றிப் பொது நோக்குடன் திகழ்வதையும் கண்டு மகிழ்கின்றோம்.

**திருமழிசையாழ்வார் :**

காஞ்சிக்கு மிக அணித்தாகவுள்ள திருமழிசை என்னும் திருப்பதியுள் பார்க்கவ முனிவர் என்பவர் வாழ்ந்துவந்தார். அவரது மனைவியார் கருத்தரித்து இறுதியில் உருவமற்ற ஒரு பிண்டத்தை ஈன்ருர். அதனுல் மனம் கலங்கி அப்பிண்டத்தினை ஒரு பிரப்பம் புதரில் விட்டுவிட்டுச் சென்றனர்.

பெருந்திருப்பிராட்டியும் மண்மகளும் அப் பிண்டத்தை அருளுடன் எடுத்து அணைக்க அது ஒரு குழந்தையாக உருவெடுத்து அழத்தொடங்கியது. அப்பொழுது திருமால் அதன் முன்னர்த்தோன்றி அதன் பசிதாகங்களை அமுதளித்து அடக்கியருளி ஞர். அதன்பின்னர் திருவாளன் என்ற பிரம்பறுப்ப வன் ஒருவன் அக்குழந்தையை எடுத்து வளர்த்தான். அவ்வூரில் வாழ்ந்த முதியவர் ஒருவரும் அவரது மனைவியாரும் அவ்வதிசயக் குழந்தைக்குப் பாலமுது கொண்டுவந்து கொடுத்துமகிழ்ந்தார்கள். அக்குழந்தை பருகிக் கொடுத்த எச்சத்தைத் தாம் இருவரும் பருகினர். அதனுல் இருவரும் இளமைப் பருவ மடைந்து ஓர் ஆண்மகவை ஈன்றனர். அக்குழந்தையே கணிகண்ணன் ஆவான். இக் கணிகண்ணன் மறந்தும் புறம் தொழாதவன்; நாக்கொண்டு மானிடம் பாடாத வன். இவரது திருவருட் திறங்களையெல்லாம் கேள்வி யுற்ற பல்லவ மன்னன் தன்னை இளமையாக்க வேண்டினன். கணிகண்ணன் மறுத்துவிடவே காஞ்சி நகரை விட்டுப் போகுமாறு பணித்தனன். கணி கண்ணன் காஞ்சி விட்டுப் போய்விட்டார். இதனைக் கேள்வியுற்ற திருமழிசைப்பிரான் காஞ்சியில் திரு வெ.்.காவில் பள்ளிகொண்ட பெருமானிடம் சென்று,

"கணிகண்ணன் போகின்றான் காமருபூங் கச்சி
மணிவண்ணா நீகிடக்க வேண்டா-துணிவுடைய
செந்நாப் புலவன்யான் செல்கின்றேன் நீயுமுன்றன்
பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்"

என்று பாடினர். இறைவனும் இவர் சொன்ன வண்ணமே செய்து இவர் பின் தொடர்ந்தார். இதனால் காஞ்சியில் உள்ள அனைத்துக் கடவுளரும் அவரைப் பின் தொடர்ந்தனர். தன் பிழையை உணர்ந்த அரசன் திருமழிசைப்பிரானைக் கண்டு அடி தொழுதான். அவரும் மீண்டு வந்து,

"கணிகண்ணன் போக்கொழிந்தான் காமருபூங் கச்சி
மணிவண்ணா நீகிடக்க வேண்டும்-துணிவுடைய
செந்நாப் புலவன் செலவொழிந்தேன் நீயுமுன்றன்
பைந்நாகப் பாய்படுத்துக் கொள்"

என்று முறையிட இறைவன் மீண்டும் அவர் சொன்ன வண்ணமே செய்தார். இதனால் அப்பெருமானுக்குச் சொன்னவண்ணம் செய்த பெருமாள் என்றே பெயர் வந்தது.

முதலாழ்வார்களைப் போன்று இவர் சைவ வைணவ இணக்கத்தில் ஈடுபாடு கொண்டவராகத் தோன்றவில்லை.

"அறியார் சமணர் அயர்த்தார் பௌத்தர்
சிறியார் சிவப்பட் டார்கள்"

என்ற இவரது கூற்று புறச் சமயங்களில் இவருக்கிருந்த வெறுப்பினைக் காட்டுகின்றது. ஆயின் இவர் புறச் சமயங்களை நன்கு அறிந்திருந்தார் என்பதும் வைணவமே இவரை இறுகப் பற்றிக்கொண்டது என்பதும் இவரது பாடல்களில் காணக்கிடக்கின்றன.

"சாக்கியங் கற்றோம் சமண்கற்றோம் சங்கரனார்
ஆக்கிய ஆகமநூல் ஆராய்ந்தோம்-பாக்கியத்தாற்
செங்கட் கரியானைச் சேர்ந்துயாம் தீதிலோம்
எங்கட் கரியதொன் றில்"

இப்பெரியார் பல சமய வாதங்களில் ஈடுபட்டிருந்தமைக்குப் பல அகச்சான்றுகள் உள. இவரைப்பற்றிய வரலாறுகள் இவரது 'மறந்தும் புறத்தொழாத் தன்மையை' விளக்கி நிற்கின்றன. இவரது பாடல்களின் தொகுதிகள் 'திருச்சந்த விருத்தம்' என்றும் "நான்முகன் திருவந்தாதி" என்றும் அழைக்கப்படுகின்றன. திருமாலின் ஏழு திருவிளையாடல்களை இவர் அழகுபெற ஓரே வெண்பாவில் அமைத்துக் காட்டியுள்ளார். அது பின் வருமாறு:

அடிச்சகடம் சாடி யரவாட்டி யானை
பிடித்தொசித்துப் பேய்முலை நஞ்சுண்டு-வடிப்பவள
வாய்ப்பின்னை தோளிக்கா வல்லேற் றெருத்திறுத்துக்
கோப்பின்னு மானான் குறிப்பு.

"வித்து மிடல்வேண்டுங் கொல்லோ" என்னும் திருக்குறளை,

"வித்து மிடல்வேண்டுங் கொல்லோ விடையடர்த்த
பத்தி யுழவன் பழம்புனத்து"

என்று எடுத்தாண்டிருக்கிறார்.

இவர் மகேந்திர பல்லலன் காலத்தவர் என்று திரு. மு. இராகவய்யங்கார் அவர்களும், முதலாம் நரசிம்மன் காலத்தவர் என்று டாக்டர் மா. இராஜமாணிக்கம் அவர்களும், கி. பி. ஆறும் நூற்றாண்டின் இறுதியில் (சிம்ம விஷ்ணுவின் காலத்தில்) வாழ்ந்தவர் என்று திரு. E. S. வரதராஜய்யர் அவர்களும்

கூறுவர். வைணவ குருபரம்பரை இவர் 700 ஆண்டு கள் வாழ்ந்ததாகக் கூறும்.

பெரியாழ்வார் :

இவர் பெரிய திருவடியின் அவதாரமாக ஸ்ரீவில்லி புத்தூர் என்னும் திருப்பதியில் தோன்றியவர் என்றும் ஸ்ரீவல்லபன் என்னும் பாண்டியன் காலத்தவர் என்றும் கூறுவர். இப்பாண்டியன் யாவன் என்பது பற்றி அறி ஞரிடையே பல கருத்து வேற்றுமைகள் இருக்கின்றன. திரு. கோபிநாதராவ் இவன் ஒன்பதாம் நூற்றாண்டின் இடையில் (835–862) வாழ்ந்த சீமாறன் சீவல்லபனு கவே இருத்தல்வேண்டும் என்று தக்க சான்று காட்டி நிறுவியுள்ளனர்.* இவனையே பெரியாழ்வார்,

**"கொன்னவில் கூர்வேற் கோன்நெடு மாறன்**
**தென் கூடற்கோன்**
**தென்னன்கொண் டாடும் தென்திரு மாலிருஞ்**
**சோலையே"**
*(செ. 7)*

என்று பாடியுள்ளார்.

இதனால் இப்பாண்டியன் சிறந்த வைணவனாக இருத்தல் புலப்படும். இவன் கூட்டிய சமயக் கணக் கர் கூட்டத்தில் திருமாலின் பரத்துவத்தை வாதிட்டு நிறுவிய காரணத்தால் இவன் பெரியாழ்வாரிடம் மிகுந்த ஈடுபாடு கொண்டு அவருக்குப் பொற்கிழி கொடுத்து, "பட்டர்பிரான்" என்று பட்டமும் சூட்டிப் பெருமைப் படுத்தினான். அவனது அவைக் களத்தில் அவனுக்கு ஞான குருவாகப் பெரியாழ்வார் மிகவும் செல்வாக்குடன் விளங்கினர்.

*R. Gopinatha Rao, History of Sri Vaishnavas. P. 237

பெரியாழ்வார்தம் இயற் பெயர் விஷ்ணுசித்தர் என்பது. விட்டு சித்தன், வேயர் கோன், வில்லிபுத்தூர் கோன் என்றும்கூறுவதுண்டு. இவர் வில்லிபுத்தூரில் நந்தவனம் அமைத்து, நாடோறும் நன்மலர் கொய்து மாலை தொடுத்து இறைவனுக்குச் சூட்டி ஆத்ம இன்பம் பெற்று வந்தார். ஒரு நாள் தோட்டத்தில் ஒரு பெண் மகவைக் கண்டெடுத்து அதனைப் பரிவும் பாசமும் தோற்ற வளர்த்து வந்தார். அக்குழந்தையே கோதை என்றும் ஆண்டாள் என்றும் அழைக்கப்பெறும் திருவளர் செல்வியாவாள். கோதை, பெரியார் கொய்து வந்து மலர்களை மாலை கட்டி முதலில்தான் சூடி அழகு பார்த்துப் பின் கோயிலுக்கு அனுப்பிவைத்து வந்தாள். ஒரு நாள் இதனைக் கண்ணுற்ற பெரியாழ்வார் துணுக்குற்று மானிடர் சூடிய மாலையை இறைவனுக்குச் சூட்ட அஞ்சி, வேறு மாலை கட்டி இறைவனுக்குச் சூட்டி வந்தார். அன்றிரவு அவரது கனவில் இறைவன் தோன்றி ஆண்டாள் சூடிக்கொடுத்த மாலையையே கொண்டு வருமாறு பணித்தார். தம் மகளின் பக்தி நலத்தை உணர்ந்த பெரியாழ்வார் கழிபேருவகை கொண்டு அவளைச் சூடிக்கொடுத்த சுடர்க் கொடி எனப் பீடுற அழைத்தார். தாம் செல்வமாக வளர்த்த ஒரே மகளைத் தக்க இடத்தில் மணம் முடித்து மனையறம் படுத்த விழைந்தது அவரது வளர்த்த பாசம். ஆயின் ஆண்டாளோ மானுடரைத் தேடாது மாயவனையே நினைத்து மயங்கினாள். இதனைக் கண்ணுற்ற பெரியாழ்வார்,

"பெருப்பெ ருத்தகண் ணாலங்கள் செய்து
பேணிநம் மில்லத் துள்ளே
இருத்துவா னெண்ணி நாமிருக்க
இவளுமொன் றெண்ணு கின்றாள்"

என்றும்,

"ஒருமகள் தன்னை யுடையேன்
உலகம் நிறைந்த புகழால்
திருமகள்போல வளர்த்தேன்
செங்கண்மால் தான்கொண்டு போனான்,"

என்று கூறிக் கண் கலங்குகின்றார்.

பெரியாருடைய பிள்ளைப் பாசம் கண்ணனைக் குழந்தையாக்கிக் காப்புப் பாடி, தாலாட்டி, அம்புலி காட்டி, அதன் செங்கீரையாட்டத்திலும், சப்பாணி கொட்டுதலிலும், தளர் நடையிலும், சிற்றில் சிதைத் தலிலும் கழிபேர் உவகை பெற்று அழகிய பாடல்களை உருவாக்கியுள்ளது. இப்பாடல்களே பிற்காலத்தில் தோன்றிய பிள்ளைத் தமிழ் என்னும் பிரபந்த வகைக்கு அடிகோலியாக விளங்கின என்பர். இவரது திருப் பல்லாண்டு வைணவர்களால் நாடோறும் ஓதப்பட்டு வருகின்றது.

"கிடக்கில் தொட்டில் கிழிய உதைத்திடும்
எடுத்துக் கொள்ளில் மருங்கை யிறுத்திடும்
ஒடுக்கிப் புல்கில் உதரத்தே பாய்ந்திடும்
மிடுக்கி லாமையால் நான்மெலிந் தேன்நங்காய்"

பெரியாழ்வார் பிள்ளைக் கண்ணனின் கொள்ளைக் குறும்பை யசோதையாக மாறி உணர்ந்து மகிழ்கிறார், இந்தப் பாட்டில்.

**ஆண்டாள் :** பெரியாழ்வார் நந்தவனத்தில் திருத் துழாய்க் காட்டில் கண்டெடுத்த தெய்வக் குழந்தையே கோதையென்றும், ஆண்டாள் என்றும், சூடிக்கொடுத்த சுடர்க்கொடியென்றும், நாச்சியார் என்றும் குவலயம் மெல்லாம் போற்றப்படும் அளவிற்குப் பெருமையுற்

றது. அவரது வரலாற்றை முன்னரே கண்டோம். சிவனடியார் திருக்கூட்டத்திலும் காரைக்கால் அம்மையார், மங்கையர்க்கரசியார் போன்ற பக்திச் செல்வியர் இருப்பினும் ஆண்டாளின் நிலை சற்று அவர்களிலும் மாறுபட்டது. 'கண்ணன் என்னும் கருந்தெய்வத்தையே' தன் கணவனாக வரித்துவிட்ட நிலை இவரது நிலை.

**"ஊனிடை யாழிசங் குத்தமர்க்கென்று**
**உன்னித் தெழுந்தவென் தடமுலைகள்**
**மானிட வர்க்கென்று பேச்சுப்படில்**
**வாழகில் லேன்கண்டாய் மன்மதனே!"**

என்று துணிந்தது அவரது நெஞ்சம்.

**"மென்னடை யன்னம் பரந்து விளையாடும்**
**வில்லிபுத் தூருறை வான்தன்**
**பொன்னடி காண்பதோ ராசையி னாலென்**
**பொருகயற் கண்ணிணை துஞ்சா."**

என்று வருந்தும் அவர்,

**"மைத்துனன் நம்பி மதுசூதன் வந்து என்னைக்**
**கைத்தலம் பற்றக்க னாக்கண்டேன் தோழீநான்"**

என்று தான் கண்ட கனவைக் கூறுகிறார்.

**"கருப்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ**
**திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித்தி ருக்குமோ"**

என்று வெண்சங்கை விளித்துக் கேட்கின்றார்.

ஆயின் தான் ஒரு மானுடப் பெண்; கண்ணனே பரம்பொருள் என்ற உணர்வினை ஆண்டாள் மறந்துவிடவில்லை. அதுவே

**"நல்லஎன் தோழி! நாகணைமிசை நம்பரர்**
**செல்வர் பெரியர் சிறுமா னிடவர்நாம் செய்வதென்"**

என்ற ஆற்ருமையாக வெளிவந்துவிடுகிறது.

காளிதாசரின் சகுந்தலை கண்ணுவரைவிட்டுப் பிரிந்து செல்கையில் அவரது ஆசிரமத்தில் தான் அது காறும் பழகி வந்த மரஞ் செடி கொடிகளேயும் மான் கன்றுகளேயும் தன் உடன்பிறப்புக்களாகக் கருதிப் பிரியாவிடை பெற்ருள். இந்த உள்ளப் பாங்கைக்கண்டு, சர். வில்லியம் ஜோன்ஸ் போன்ற மேல் நாட்டு இலக்கியத் திறனுய்வாளர்கள் பெரிதும் போற்றி வியக்கின்றனர். ஆயனுக்கு ஆளாகிய ஆண்டாளின் உள்ளம் அதனிலும் உயர்ந்து நிற்றலைக் காண்கின்ருேம். விட்டு சித்தன் வைத்த நந்தவனத்தில் தான் நாள்தோறும் நீருற்றி, எருப்பெய்து வளர்த்த மலர்ச்செடிகளில் பூத்திருக்கும் புதுமலர்களேக் காணுந்தோறும் திருமாலின் திப்பிய உருவமே அவள் கண்முன் தோன்றுகிறது.

> **"கருவிளை யொண்மலர்காள்!**
> **காயாமலர்காள், திருமால்**
> **உருவொளி காட்டுகின்றீர்!"**

என்று பாடுகின்ருர்.

அங்குள்ள மலர்களேயெல்லாம் "கோவை மணுட்டி", "முல்லைப்பிராட்டி", என்று செல்லப் பெயரிட்டழைக்கின்ருள். உயிரற்ற வெண்சங்கைக்கூட, அது மருப்பொசித்த மாதவன் வாய்வைத்து ஊதப் பெறுவதால், 'சங்கரையா!' என்று அன்பு சொட்ட அழைக்கின்ருள். நாச்சியார் திருமொழியிலும் திருப்பாவையிலும் காணக்கிடக்கும் இயற்கைக் காட்சிகள் வெறும் கற்பனை வருணனைகள் அல்ல; ஆண்டாள் வாழ்க்கை நாடகத்தில் அங்கம் வகிக்கும் உயிர்ப்பாத்திரங்கள் அவைகள்! பெரியாழ்வாரின் வளர்ப்பு மக

ளான இவர் அவரிடமிருந்து பக்தியை மாத்திரம் கற்றுக்கொள்ளவில்லை; பைந்தமிழையும் நன்கு கற்றிருக்கிறார். ஆண்டாள் அருளிச் செயல்களான திருப்பாவை முப்பதிலும், நாச்சியார் திருமொழிகளான நூற்று நாற்பத்து மூன்றிலும் கற்பனை, உணர்ச்சி, ஓசைநயம் என்ற கவிதையின் முப்பெரும் உயிர்ப்பண்புகளும் பாங்குறப் பிணைந்து நிற்பதைக் காண்கின்றோம். ஆண்டாள் ஆண்டுள்ள உவமைகள் சுவைமிக்கவை; சிந்தனையைத் தூண்டுபவை. கார்முகிலை நோக்கி, அது,

"ஊழி முதல்வன் உருவம்போல் மெய்கறுத்துப்
பாழியந் தோளுடைப் பற்பநா பன்கையில்
ஆழிபோல் மின்னி வலம்புரிபோல் நின்றதிர்ந்து
தாழாதே சார்ங்க முதைத்த சரமழைபோல்"

பெய்ய வேண்டும் என்று கூறுகையில் எடுத்தாண்டுள்ள உவமைநயம் கலந்து இன்புறத்தக்கது. இவ்வடிகள்,

"மின்னுக்கோடி யுடுத்து விளங்குவிற் பூண்டு
நன்னிற மேகம் நின்றது போலப்
பகையணங் காழியும் பால்வெண் சங்கமும்
தகைபெறு தாமரைக் கையி லேந்தி"

என்ற சிலப்பதிகார வரிகளை (மதுரை: நாடு: 45-48) நினைவூட்டுகின்றன அன்றோ?

"கிங்கிணி வாய்செய்த தாமரைப் பூப்போலே
செங்கண் சிறுச்சிறிதே எம்மேல் விழியாவோ"

"திங்களும் ஆதித்தியனும் எழுந்தாற்போல்
அங்க ணிரண்டும்கொண் டெங்கள்மேல் நோக்குதியால்"

"மாரி மலைமுழைஞ்சில் மன்னிக் கிடந்துறங்கும்
சீரிய சிங்க மறிவுற்றுத் தீவிழித்து

வேரி மயிர்பொங்க வெப்பாடும் பேர்ந்துதறி
மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டுப்
போதருமா போலேநீ பூவைப்பூ வண்ணாஉன்
கோயில்நின் றிங்ஙனே போந்தருளி''
''பாலன்ன வண்ணத்துன் பாஞ்ச சன்னியமே''

இவை ஆண்டாள் காட்டும் சில உவமைகள்.

இனி 'புள்ளின் வாய் கீண்டானை' என்ற திருப்பாவைப் பாசுரத்தில் ''வெள்ளி யெழுந்து வியாழம் உறங்கிற்று'' என்று வரும் அடிகளைக்கொண்டு வான நூற் கணக்குப்படி இச்செயல் நிகழ்ந்த காலத்தைப் பேராசிரியர் மு. இராகவையங்கார் அவர்கள் கீழ்க் கண்டவாறு குறித்துள்ளார்:

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | கி. பி. | 600 | நவம்பர் 27 | மணி | 3-20 |
| 2. | ,, | 731 | டிசம்பர் 18 | மணி | 3–50 |
| 3. | ,, | 885 | நவம்பர் 25 | ,, | 5–8 |
| 4. | ,, | 886 | டிசம்பர் 14 | ,, | 5–20 |

இவற்றுள் கி. பி. 731 டிசம்பர் மாதம் 18ஆம் நாளையே இந்நிகழ்ச்சி நிகழ்ந்தநாள் என்று திரு. வரதராஜய்யர் கூறுவர். ஆயின் பெரியாழ்வார் காலம் 9ஆம் நூற்றுண்டு எனத் துணிபவர் கி. பி. 885ஆம் ஆண்டு நவம்பர் 25ஆம் நாள் காலை 5.8 மணியளவில் இது நிகந்திருக்க வேண்டும் என்று அறுதியிட்டுக் கூறுகின்றனர்.†

**பாவை இலக்கியம்.**

பாவை என்னில் உருவம், வடிவம் என்றுபொருள். சங்க காலத்தில், கன்னிப்பெண்கள் கோரையால் பாவை

---

† ஆழ்வார்கள் காலம்: டாக்டர் மா. இராசமாணிக்கனார்.

யொன்று செய்து பூச்சூடி ஒப்பனை செய்து நீர்த்துறையில் வைத்து நீரில் இறங்கி விளையாடுவார்கள். இது பொதுவான நிகழ்ச்சி. பின்னர் இது ஒரு நோன்பாக வளர்ந்தது. மார்கழித் திங்களில் திருமணமாகாத கன்னிப் பெண்கள் புலர்வதன் முன்னர் தம் தாயாருடன் நீர்த்துறைக்குச் செல்வர். அங்கே பாவை ஒன்றினை அமைத்துத் தம் தாயார் காட்டிய நெறியினிலே நின்று பரவி நீராடுவர். அந்நீராட்டு அம்பா ஆடல் என்றும் தைந்நீராடல் என்றும் பெயர் பெற்றது. இச் செய்தியினை,

> **"வெம்பாதாக வியல்நில வரைப்பு என**
> **அம்பா ஆடலின் ஆய்தொடிக் கன்னியர்**
> **முனித்துறை முதல்வியர் முறைமை காட்டப்**
> **பனிப்புலர்பு ஆடி"**
>
> **"தாய் அருகா நின்று தவத்தைந்நீர் ஆடுதல்"**

எனும் பரிபாடல் அடிகளால் (பரி. 11. 80-84, 11.91) அறியலாம்.

'பாவை நோன்பு என்பது கன்னிப் பெண்களால் மார்கழி மாதத்தில் தொடங்கப் பெற்று அம்மாதத்துப் பௌர்ணமியோடு முடிக்கப்பெறும் ஒரு விரதமாகும். நல்ல நாயகரை அடையவும் நாடு செழிக்கவும் காத்தியாயினீ தேவியை (காளியை) நோக்கிக் கன்னிப் பெண்களால் இந் நோன்பு அம்மாதத்தே நடத்தப் பெறுவதென்பதும் சங்க நாளில் சாத்திரமான முறைப்படித் 'தைந்நீராடல்' என்ற பெயர் பெற்று வழங்கிவந்ததென்பதும், மலையாள நாட்டாரால் "திருவாதிரைத் திருவிழா" என்றும், சைவரால் "ஆருத்திரா தரிசனம்" என்றும் கொண்டாடப்படும் திருநாள் இவ்வித முடிவு தினமே என்றும்' திரு. மு. இராகவய்யங்கார் தமது 'ஆழ்வார்கள் காலநிலை' என்ற நூலில் கூறியுள்ளார்.

இவ்வாறு பெண்கள் பாவையை அமைத்து அதன் முன்னர்ப்பாடிய பாட்டு பாவைப்பாட்டு எனப்பட்டது. சங்ககாலத்தில் அம்பா வாடல் பொதுவான நீர் விளையாட்டாகவும் தைந் நீராடும் தவச் சிறப்பாகவும் இருந்தது. ஆண்டாள் காலத்தில் இப்பாவைப்பாட்டு மேலும் வளர்ச்சி அடைந்தது. பாற்கடலில் பையத்துயின்ற பரமனடி பாடி, நாட்காலே நீராடி, நெய் பாலுண்ணுமலும், விழிக்கு மை எழுதாமலும், கூந்தலில் மலர் முடியாமலும், செய்யத் தகாதவற்றை நீக்கியும், தீக்குறளை சென்றோதாமலும், அறச் செயல்களை ஆற்றுவதிலேயே பெண்கள்மனம் ஊன்றிநிற்கும் பெருநிலையை இங்குக் காண்கிறோம். இவ்வாறு ஓங்கிஉலகளந்த உத்தமன் பேர்பாடி நீராடினுல் நாட்டிற்கு ஒரு தீங்கும் நிகழாது என்றும், திங்கள் மும்மாரி பெய்யும் என்றும், நாட்டில் பல வளங்களும் சிறக்குமென்றும் நம்பப்பட்டன. இது மேல்நோக்கிய பொருள். இதன் உட்பொருள்கள் தத்துவக் கருத்துக்கள் நிறைந்தவை. ஆண்டாள் பாடியருளிய திருப்பாவையென்னும் சங்கத் தமிழ்மாலை முப்பது பாடல்களைக் கொண்டது. இதில் மிகவும் ஈடுபாடுகொண்ட தால் உடையவருக்குத் திருப்பாவை ஜீயர் என்ற பெயர் வழங்குகிறது.

ஆண்டாளுக்குப் பின்னர் மாணிக்கவாசகரும் திருப்பாவை பாடியுள்ளார். இரண்டிற்கும் ஒற்றுமைகள் பல உண்டு. திருவெம்பாவை, முதல் வீரராஜேந்திரன் கால முதல் கோவில்களில் ஓதப்பட்டது. திருவெம்பாவையின் செல்வாக்கு சயாம், சாவகம், கடாரம் முதலிய கீழ்க்கடல் நாடுகட்கும் சென்று பரவியது. சயாம் நாட்டில் திருவெம்பாவை தமிழ் மந்திரமாக மதிக்கப் பெற்று அரசனுக்கு முடிசூட்டும் காலத்தும் லோ-ஜின்-ஜா என்ற திருவிழாக் காலத்தும் ஓதப்

பெற்று வருகிறது. பாட்டுதோறும் 'ஏலோர் எம் பாவாய்' என்று முடிவதால் இதனை அந்நாட்டவர் 'லோரிபாவாய்' என்று அழைக்கின்றனர்.

**நம்மாழ்வார் :** இவரைப்பற்றி குருபரம்பரைகூறும் வரலாறு வருமாறு:

நம்மாழ்வார் ஆழ்வார்திருநகரி என்னும் திருக்குருகூரில் மாறன்காரி என்பாருக்கும், திருவண்பரிசாரம் என்னும் ஊரான் திருவாழ்மார்பன் திருமடமகளான உடையநங்கைக்கும் திருமகவாக அவதரித்தார். பிறக்கும்பொழுதே அழுதல், தாய்முலை உண்ணல் ஆகிய ஏதும் செய்யாமையால், பெற்றோர் குருகூர்ப்புளிய மரத்தடியில் உள்ள கோயிலில் இவரை இட்டு வணங்க இவர் அங்கே ஒரு தொட்டிலில் 16 ஆண்டுகள் போகத் தவம் செய்தார். வடநாடு சென்ற மதுரகவி என்ற அந்தணர் தென்திசைக்கண் தோன்றிய ஒரு திப்பிய ஒளியைக் கண்ணுற்றுத் திருக்குருகூர்ப் போந்து அங்கு புளியமரத்தடியில் தவம் செய்யும் ஆழ்வாரைக் கண்டு கொண்டார். அன்று முதல்,

> **"தேவு மற்றறி யேன்குரு கூர்நம்பி**
> **பாவி னின்னிசை பாடித் திரிவனே"**

என்று ஆழ்வாருக்கே ஆளாகி அவரது அருளிச்செயல்களான பாசுரங்களைப் பரப்புவதையே பேறெனப் பெற்றார்.

நம்மாழ்வாரது பெயர் காரி மாறன் (காரி மகன் மாறன்) என்றும், அவரது தந்தையார் மாறன் காரி (மாறன் மகன் காரி) என்றும் குருபரம்பரை கூறுகிறது.

பராந்தகன் நெடுஞ்சடையன் (கி. பி. 765—790) காலத்தில் அவனது அமைச்சராய் இருந்த மாறன்

காரி என்பவர் மதுரைக் கண்மையில் உள்ள ஆனைமலை யில் நரசிங்கப்பெருமானுக்கு, ஒரு குடவரைக்கோயிலை அமைத்ததாக ஆனைமலைக் கல்வெட்டுக்கள் கூறு கின்றன. இவருக்கு மதுரகவி என்றும் மற்றொரு பெயர் இருந்தது என்பர். இவரே நம்மாழ்வாரின் தந்தையாகிய காரிமாறன் ஆதல் வேண்டும் என்று ஆராய்ச்சியாளர், திரு. கோபிநாதராவ் போன்றோர் கருதுகின்றனர்.†

மேலும் நம்மாழ்வார் சீவரமங்கலம், வரகுண மங்கை என்னும் திருப்பதிகளைத்தன் பாசுரங்களில் பாடியுள்ளார். சீவரமங்கலம் என்பது இன்று நாங்கு நேரி என்று அழைக்கப்பெறும் ஊர். நெடுஞ் சடை யன் பராந்தகன் என்னும் மன்னனது விருதுப் பெயர்களில் சீவரன் என்பது ஒன்று. அவனது பெயரால் அவ்வூர் திருத்தியமைக்கப் பெற்றதாகவும் மகத நாட்டு மறையவனான ஸுஜ்ஜடபட்டன் என் பானுக்கு அம்மன்னனால் அவ்வூர் முற்றூட்டாக வழங் கப்பெற்றது என்றும் சீவரமங்கலச் செப்பேடுகள் கூறுகின்றன. இவற்றையெல்லாம் நோக்குகையில் நம்மாழ்வார் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த வராகவே கொள்ளுதல் பொருந்தும் என்பர்.

நம்மாழ்வாருக்கு மாறன், சடகோபன், பராங்குசன் போன்ற வேறு பெயர்களும் உண்டு. பிறக்கும் குழந்தைகளைக் கவரும் 'சடம்' என்ற வாயுவை அணுக வொட்டாமற் தடுத்தது பற்றி இவர்க்குச் சடகோபன் என்று பெயர் வந்தது என்பர். பிறந்தவுடன் அழுதல், முலையுண்ணல் போன்ற இயற்கைச் செயல்களைச்

† History of Sri Vaishnavas p. 18-20

செய்யாமல் மாறி இருந்தமையால் இவர்க்கு 'மாறன்' என்ற பெயரினை இவரது பெற்ருேர் இட்டனர் என்பர். வைகுந்தத்தில் நித்திய சூரிகளில் ஒருவரான சேனை முதலியாரின திருவவதாரமாக இவரை வைணவர்கள் கருதுகிருர்கள்.

இனி நம்மாழ்வாரின் அருளிச் செயல்களை நோக்கு வோம்.

திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவிருத்தம் திருவாய்மொழி ஆகிய நான்கும் நம்மாழ்வார் திருவாய் மலர்ந்தருளியவையாகும்†

**திருவாசிரியம் :** இது யஜுர் வேதத்தின் சார மென்பர். இதன் கண் ஏழு ஆசிரியப்பாக்கள் அடங்கி யுள்ளன. பாற்கடற் பள்ளியுள் பையத் துயின்ற பரமனது நிலையை ஓர் அழகிய உவமையால் விளக்கு கின்ருர் நம்மாழ்வார்.

**பெரியதிருவந்தாதி :** இது அதர்வண வேதத்தின் சாரமென்று கருதுவர். மறைநூற் கருத்துக்களைச் சிறந்த (87) வெண்பாக்களிற் பொதியவைத்துப் பாடி யுள்ளார். அனைத்துலகிற்கும் திருமாலே முன்னவன் என்றும் அவனே யாவும் என்றும் கூறுகிருர்.

"பாருநீ வானுநீ காலுநீ தீயுநீ......"
"உன்தொல்லுருவை யாரறிவார்"

என்று வியக்கின்ருர்.

---

† இவையெல்லாம் நான் மறைகளின் சாரமாக இருப்ப தால் நம்மாழ்வார் 'வேதம் தமிழ்செய்த மாறன்' என்று போற்றப்படுகின்ருர். "தெளியாத மறைநிலங்கள் தெளிந் தோம்" என்ருர் வேதாந்த தேசிகரும்.

"பாலாழி நீகிடக்கும் பண்பையாம் கேட்டேயும்
காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்—நீலாழிச்
சோதியாய்! ஆதியாய்! தொல்வினையெம் பால்கடியும்
நீதியாய்! நிற்சார்ந்து நின்று"

"புவியும் இருவிசும்பும் நின்னகத்த நீயென்
செவியின் வழிபுகுந்தென் னுள்ளாய்—அவிவின்றி
யான்பெரியன் நீபெரியை என்பதனை யாரறிவார்
ஊன்பருகு நேமியாய் உள்ளு!"

—இவை போன்ற பாடல்கள் இன்பமூட்ட வல்லன.

**திருவிருத்தம் :** இருக்கு வேதத்தின் திரண்ட சாரமே இந்நூல் என மொழிவர். நூறு பாசுரங்களால் ஆனது. திருக்கோவையாரைப் போன்று அகத்துறை நூலாகும் இது. இந்நூலுக்கு நம்பிள்ளை, பெரிய வாச்சான் பிள்ளை, வாதிகேசரி அழகிய மணவாள ஜீயர், அப்பிள்ளை, பெரிய பரகால சுவாமிகள் போன்ருர் பேருரைகள் வகுத்துள்ளனர். இந்நூலில் ஆழ்வார் தம்மைப் பிராட்டியாகக் கருதிக் கண்ணன் மீது கொண்ட காதலைப் புலப்படுத்தியுள்ளார்.

**திருவாய்மொழி :** சாம வேதத்தின் செந்தமிழ் வடிவமே திருவாய்மொழி என்று போற்றுவர். இறைவனது எல்லையறு ஆற்றல்களையும், அவற்றைக் கொண்டு உயிர்களை அவன் ஆண்டருளும் கருணையையும் பத்திப்பிரபத்திகளின் பெருமைகளையும் இந்நூல் சிறக்கக் காட்டுகின்றது. முதற்பத்து முதல் பத்தாம் பத்து முடிய பத்துப்பத்துக்களையுடையது. ஒவ்வொரு பத்திலும் பத்து உட்பகுதிகள் உள்ளன. ஒவ்வொரு உட்பகுதியிலும் 11 பாடல்கள் அடங்கியுள்ளன. ஆக மொத்தம் 1100 பாடல்கள் இதன்கண் அடங்கியுள்ளன. மும்மூர்த்திகளுக்கும் முன்னவன் நாரணனே என்பது நம்மாழ்வாரின் துணிவு.

"முனியே நான்முகனே முக்கண்ணப்பா"

"மூவராகிய மூர்த்தியை முதல் மூவர்க்கு முதல்வன்
தன்னை"

"வெள்ளநீர்ச் சடையானும் நின்னிடைவே றகலாமை
விளங்க நின்றதும்"

என்ற அடிகள் இதனை வலியுறுத்தும். திருமாலின் திருமேனியழகிலிலே இவர் கொண்ட ஈடுபாடு,

மாயக் கூத்தா வாமனா வினையேன் கண்ணா
கண்கைகால்
தூய செய்ய மலர்களாச் சோதிச் செவ்வாய் முகிழதா
சாயல் சாமத் திருமேனி தண்பா சடையாத் தாமரைநீள்
வாசத் தடம்போல் வருவானே யொருநாள் காண
வாராயே!
(8: 5: 1)

என்ற பாட்டில் விளக்க முறுகிறது.

இரண்டாம் பத்தில் நாரை, அன்றில், கனைகடல் போன்றவைகளை விளித்து அவற்றிடம் தன் துயரைச் சொல்வதுடன் அவைகளும் தன்னைப்போல் துயருறுவதாகக்கூறும் அவலச் சுவைமிக்க கவிதைகள் பலவுள. இதோ ஒன்று:

"............ அன்றிலே
ஆட்பட்ட வெம்மேபோல் நீயும் அரவணையான்
தாட்பட்ட தண்துழாய்த் தாமம்கா முற்றாயே!"

"அவனருளாலே அவன்றாள் வணங்கி"

என்ற மணிவாசகப்படி இறைவன் அருளால் தான் தன்னால் அவனையே பாடமுடிந்தது என்று நம்புகிறார் நம்மாழ்வார்.

"என்றைக்கு மென்னைஉய் யக்கொண்டு போகிய
அன்றைக்கன் றென்னைத்தன் னாக்கி யென் னால்தன்னை
இன்றமிழ் பாடிய ஈசனை"

"என்சொல்லால் யான்சொன்ன இன்கவி யென்பித்துத்
தன்சொல்லால் தான்தன்னைச் சீர்த்தித்த மாமாயன்"

என்ற அடிகளால் இதனை உணரலாம். நம்மாழ்வார் ஓதாது உணர்ந்தவர் என்று நம்பப்பட்டாலும் அவரது பாடல்களை நோக்குகையில் பண்டைத் தமிழ் நூல்களை நன்கு கற்றவர் என்றே புலப்படுகின்றது.

"ஊரவர் கவ்வை எருவாக அன்னைசொல்
நீராக நீளுமிந் நோய்"

என்ற திருக்குறளின் சாயலை,

"ஊரவர் கவ்வை யெருவிட் டன்னைசொல் நீர்ப்படுத்து
ஈரநெல் வித்தி முளைத்த நெஞ்சப் பெருஞ்செய்யுள்
பேரமர் காதல் கடல்புரைய விளைவித்த
காரமர் மேனிநங் கண்ணன்......"

என்ற பாசுரத்தில் காண்கின்றோம்.

அதுவே போல், 'பிறப்பில் பல்பிறவிப்பெருமான்' என்ற பரிபாடல் அடியினை இரண்டாம்பத்தில் 'பிறப்பில் பல்பிறவிப் பெருமான்' என்று அப்படியே எடுத்தாண்டிருக்கிறார். பரமனுக்கே தன் உள்ளத்தில் பத்தி வைத்திருப்பினும் அவனது அடியார்களுக்குத் தொண்டு செய்யும் உள்ளத்தினைத் "தொண்டர் தொண்டர் தொண்டர் தொண்டன் சடகோபன் (7:1:11) என்ற கூற்றில் காணலாம்.

"உண்ணும் சோறும் பருகு நீரும் தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணனென் பெருமான்" என்று

இருந்தும் இவர் உலகத்தின் இயல்பை உற்று நோக்கத் தவறவில்லை.

"நண்ணுதார் முறுவலிப்ப நல்லுற்றார் கரைந்தேங்க
எண்ணாருத் துயர்விளைக்கும் இவையென்ன உலகியற்கை"

"வம்மின் புலவீர்! நும் மெய்வருத்திக் கை செய் துய்ம்மினோ
இம்மன் னுலகில் செல்வரிப் போதில்லை நோக்கினோம்
நும்மின் கவிகொண்டு நும்நுமிட்டா தெய்வம் ஏத்தினால்
செம்மின் சுடர்முடி என்திரு மாலுக்கே சேருமே"

என்ற பாசுர அடிகளை நோக்குக.

"வாய்கொண்டு மானிடம் பாடவந் தகவியேனல்லேன், ஆய் கொண்ட சீர்வள்ளல் ஆழிப்பிரான் எனக்கேயுளன்" என்று கூறும் இப்புலவர் பெருமான் 'ஆராவியற்கை அவா நீத்துப் பேராவியற்கை' பெற்ற பெரியார் என்பதில் ஐயமொன்றில்லை. இவரது பாசுரங்கள் அனைத்தும் இசைப்பாடல்கள் என்பது குறிப்பிடத் தகுந்ததொன்று. தேவாரங்களைப் போலவே இவற்றையும் விண்ணகரங்களில் ஓதுவதற்காக இராஜராஜன், இராஜேந்திரன் முதலிய சோழவேந்தர்களும் பிறரும் ஊர்களை முற்றூற்டாக வழங்கிய செய்திகள் கல்வெட்டுக்களில் காணக்கிடக்கின்றன.

**மதுரகவியாழ்வார் :** மதுரகவியாழ்வார்தம் வரலாற்றை ஓரளவு நம்மாழ்வார் வரலாற்றுடன் கண்டோம். இவர் திருக்கோளூரில் அந்தணர் குலத்தில் தோன்றியவர்; வடக்கே அயோத்தி வரையில் சென்றவர், மீண்டு வந்து நம்மாழ்வாரிடம் அடித்தொண்டு பூண்டு அவரது பாசுரங்களைப் பரப்புவதிலேயே தன் வாழ்நாளைக் கழித்தவர். இவர் பாடிய பாடல்கள் மொத்தம் பதினொன்றேயாகும். "கண்ணி நுண் சிறுத் தாம்பு" என்று தொடங்கும் இவரது பாடல்கள் அத

னையே பெயராகக் கொண்ட பிரபந்தமாக மதிக்கப்படு கின்றன. சடகோபர் மீது இவர் கொண்ட பக்தி அள வற்றது.

"நண்ணித் தென்குரு கூர்நம்பி யென்றக்கால்
அண்ணிக் கும்அமு தூறுமென் நாவுக்கே."
"அன்னை யாயத்த னாயென்னை யாண்டிடும்
தன்மை யான்சட கோபனென் நம்பியே"

என்ற அடிகள் இதனை விளக்கும்.

**திருமங்கையாழ்வார்:** திருமங்கையாழ்வார் சோழ மண்டலத்தில் திருவாலிநாட்டைச் சேர்ந்த திருக்குறை யலூரில் கள்ளர் மரபின் காவலனான நீலன் என்ற சிற் றரசனுக்கு மகனாகத் தோன்றியவர். இவரது இயற் பெயர் கலியன் என்பது. சிற்றரசனாக இவர் ஆலி நாட்டை ஆண்டு வருகையில், ஒரு சீவைணவரின் மகளான குமுதவல்லி என்ற பெண்ணணங்கைக் கண்ணுற்று அவர் பால் மனம் ஈடுபட்டு அவரை மணந்துகொண்டு அவர் இட்ட விதிகளின்படித் தானும் சீவைணவராகி நாளும் ஆயிரத்தெட்டு சீவைணவர் களுக்கு அமுது செய்துவரத் தொடங்கினார். அதனால் பெரும் பொருள் செலவாக, இவர் பேரரசனுக்குச் செலுத்த வேண்டிய திறைப்பொருளையும் செலவிடலா னார். இதனையறிந்த அரசன் இவரைச் சிறையிலிட இறைவனது அருளால் இவர் பெரும் பொருள் கச்சி யிற்பெற்று விடுபட்டார். இந்நிகழ்ச்சியின் பின்னரும் பொருள் தட்டு ஏற்பட்டதால் இவர் வழிப்பறியில் ஈடு பட்டார். திருமால் இவரை ஆட்கொள்ளக்கருதி மண வாளனாகப் பெரிய தேவியாருடன்† எழுந்தருளிக் கான்

† ஆண்டாளை மணந்துகொண்டு மணக்கோலத்துடன் வந்தார் என்றும் கூறுவதுண்டு.

வழியே வர ஆழ்வார் அவர்களை யார் என்று உணரா மல் தடுத்துப் பொருள்களைக் கவர்ந்து அவைகளை ஒரு முட்டையாகக் கட்டிக்கொண்டு அதனைத் தூக்கமாட் டாமல் திணறினர். பின் அவர் ஏதோ மந்திரம் செய்தி ருக்க வேண்டும் என்று கூற வந்த மணவாளர் அம்மந்திரத்தை அவருக்கு உபதேசம் செய்வதாகக் கூறி அவரது செவியில் நாராயண திவ்விய மந்தி ரத்தை உபதேசத்தருளினர். உடனே கலிகன்றியார் "நான் கண்டு கொண்டேன் நாராயணா என்னும் நாமம்" என்று எக்களித்து அமுதினும் இனிய செந்தமிழ் மலர் களைத் திருவாய்மலர்ந்தருளினர். இவ்வாறு குருபரம் பரை, திவ்விய சூரி சரிதம் முதலியன கூறுகின்றன. இவர் பாசுரங்களிலிருந்தே இவருக்கிருந்த பலபெயர் களையுணரலாம். அவை ஆலி நாடன், மங்கையர் கோன், குறையலாளி, மங்கை வேந்தன், அருள்மாரி, அட்டமுக்கி, அடையார் சீயம், பரகாலன், கலியன், கலிகன்றி—முதலியனவாகும்.

பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திரு நெடுந்தாண்டாகம், திருஎழுகூற்றிருக்கை, சிறிய திரு மடல், பெரியதிருமடல் என்னும் ஆறு திவ்விய நூல் கள் திருமங்கையாழ்வாரின் அருளிச் செயல்களாம். இவற்றை, 'ஸ்ரீசடகோபர் திருவாக்கான சதுர்வேதத் திற்கு ஆறங்கம் போல ஆசு, மதுரம், சித்ரம், விஸ்தா ரம் எனும் நாற்கவிகளாலே அருளிச் செய்தனர்' என்று திருமங்கையாழ்வாரின் வைபவம் பெருமிதத்துடன் கூறுகிறது. உண்மையில் திருமங்கையாழ்வாரின் பாசுரங்கள் மிகுந்த இன்பம் பயக்கும் இன்னிசைப் பாடல்களேயாம். இவரே தம் பாசுரங்களில் மிகுந்த மதிப்புக் கொண்டிருந்தனர். தம் பாடலின் இனிய கருத்தையும் சுவையையும் அறிய விருப்பமுண்டேல்

திருமாலும் தன்னிடம் வந்து கற்கலாம் என்று அழைக்கின்றனர்,

**"கண்ண நின்றனக்கும் குறிப்பாகில்**
**கற்கலாம் கவியின் பொருள்தானே"**

தன் கவிதையின் தரத்தில் ஆழ்வாருக்கு இருக்கும் நம்பிக்கையன்றோ இது! இவர் கவிபாடும் ஆற்றலுடன் தமிழ் நூல்களை நன்கு பயின்ற பயிற்சியும் கைவரப் பெற்றிருக்கிறார். பல இடங்களில் ஆன்றோர் மொழிகளையும் பொருள்களையும் பொன்னே போல் போற்றிச் செல்கின்றார்.

திருமால் மீது இவர் வைத்திருந்த பக்தியை இவரது பாசுரங்களில் படிக்கும்போது நம் நெஞ்சமும் கனிந்துருகுகின்றது.

**"ஓடினேன் ஓடி உய்வதோர் பொருளால்**
**உணர்வெனும் பெரும்பதந் தெரிந்து**
**நாடினேன் நாடி நான்கண்டு கொண்டேன்**
**நாராய ணாவென்னும் நாமம்"**

*—பெரிய திருமொழி*

**துஞ்சும்போ தழைமின் துயர்வரில் நினைமின்**
**துயரிலீர் சொல்லிலும் நன்றாம்**
**நஞ்சுதான் கண்டீர் நம்முடை வினைக்கு**
**நாராய ணாவென்னும் நாமம்"**

*—பெரிய திருமொழி*

இவ்வாழ்வாரது பாசுரங்கள் தேவாரங்களைப் போல் பண் சுமந்த பாடல்களே. ஆழ்வாரே தமது பாடல்களைப் பண்ணுடன் இசைக்கவேண்டும் என்று குறித்துச் செல்வது காண்க. தான் விரும்பிய பெண்ணை வரைந்து கொள்வதில் இடர்ப்பாடுற்ற ஆண்மகன் பனைமடலில் குதிரை செய்து ஏறி நின்று தலைவி

யின் உருவத்தைக் கிழியில் வரைந்து வைத்து உயிர் துறக்கத் துணிவது சங்கநூல் அகத்துறைகளில் ஒன்ருகும். இது ஆடவர்க்குத்தான் உரியதன்றிப் பெண்கள் மடலேருர் என்பது மரபாகும்.†

ஆயின், திருமங்கையாழ்வார் திருமால் மீது காதலுற்ற ஒரு பெண் மடலேறத் துணிவதாக அமைத்துச் சிறிய திருமடல், பெரிய திருமடல் என்னும் நூல்களை யாத்துள்ளனர்.

ஊனையும் உயிரையும் வாட்டிக் கொடுந்தவம் செய்வதினும் இறைவனது திருக்கோயிலுக்குச் சென்று பணிவதே மேலென்று நம்பும் இவ்வாழ்வார்,

**''ஊன்வாட வுண்ணு துயிர்காவ லிட்டே**
**உடலிற் பிரியாப் புலனைந்தும் நொந்து**
**தாம்வாட வாடத் தவம்செய்ய வேண்டா**
**தமதா இமையோ ருலகாள கிற்பீர்,**
**கானுட மஞ்ஞைக் கணமாட மாடே**
**கயலாடு கானீர்ப் பழனம் புடைபோய்,**
**தேனுட மாடக் கொடியாடு தில்லைத்**
**திருச்சித்ர கூடம் சென்றுசேர் மின்களே''**

(பெரிய திருமொழி—*3–2–1*)

என்று அழைக்கின்ருர். இப்பாடலில் தில்லைத் திருச்சித்திர கூடத்திறைவனைத்தாஞ காட்டுகின்ருர்? இயற்கையின் ஓவியத்திலும் இறைவனைக் காட்டுகின்ருர் அல்லவா?

இனி, இவ்வாழ்வார் வாழ்ந்த காலம் பரமேச்சுவர வர்மன் என்கின்ற இரண்டாம் நந்திவர்ம பல்லவ

---

†கடலன்ன காமம் உழந்தும் மடல்ஏருப்
பெண்ணின் பெருந்தக்க தில் — குறள்—*1137*.

மல்லனது காலமே (கி. பி. 731—795) என்று ஆராய்ச்சி யாளர் பலரும் கருதுகின்றனர்.*

> "பல்லவன் மல்லையர் கோன்பணிந் தபர
> மேச்சுர விண்ணக ரமதுவே"
> (பெரிய திருமொழி—2-9-1)

என்றும்

> "நந்திபணி செய்தநகர் நந்திபுர விண்ணகரம்"
> (பெரிய திருமொழி—5–10–7)

என்றும் இவர் பரமேச்சுவரனாகிய இரண்டாம் நந்தி வர்ம பல்லவமல்லனையே பாடுவதாகக் கொண்டு அன்னார் இவரை அவன் காலத்தவர் என்பர்.

> "ஏழை ஏதலன் கீழ்மகன் என்னா
> திரங்கி மற்றவற் கின்னருள் சுரந்து,
> 'மாழை மான்மட நோக்கியுன் தோழி
> உம்பி எம்பி" என் றொழிந்திலை, உகந்து,
> 'தோழ னீயெனக் கிங்கொழி,' என்ற
> சொற்கள் வந்தடி யேன்மனத் திருந்திட" †

என்னும் அடிகளைக் கலந்து உணர்ந்துதான் கம்பன் கங்கைப் படலத்தில் பின்வருமாறு பாடினன் போலும்!

> "அன்னவன் உரைகேளா அமலனும் உரைநேர்வான்
> என்னுயிர் அனையாய்நீ இளவல்உன் இளையாளிந்
> நன்னுத லவள்நின் கேள் நளிர்கடல் நிலமெல்லாம்
> உன்னுடை யதுநானின் தொழிலுரி மையினுள்ளேன்"§

---

* ஆழ்வார்கள் காலம்—நாலாயிரதிவ்வியப்பிரபந்தம்—மயிலை மாதவதாசர் பதிப்பு—By. டாக்டர் மா. இராச மாணிக்கனார். வைணவமும் தமிழும் PP. 382–384. By திரு E. S. வாதராசய்யர்.

† பெரிய திருமொழி—5-8-1.

§ கம்பன்—அயோத்—கங்கை 687.

இனி, திருமங்கையாழ்வார் திருவரங்கம் திரு மதிலையும் சிகரங்களையும் கட்டுவித்தார் என்று குரு பரம்பரை கூறுவது குறிப்பிடத்தக்கதாகும்.

## தொண்டரடிப்பொடி ஆழ்வார்

இவரது இயற்பெயர் விப்ரநாராயணர் என்பதாகும். இவர் நால்வேதம் ஆறங்கம் முதலியவற்றை நன்கு கற்றுணர்ந்த அந்தணப் பெரியார் ஆவர். இவர் திருவரங்கத்தில் கோயிலுக்கு அணித்தாக நந்தவனம் அமைத்துத் திருமாலை கட்டி, அரங்கனுக்குச் சாத்திச் சேவித்து வந்தார். அந்நாளில் தேவதேவி யென்னும் கணிகையொருத்தி தன் அக்காளிடம் சூளுரைத்த படியே இவரை அணுகி, மயக்கி இவரைத் தன் வயத்தவராக ஆக்கிக்கொண்டாள். அவளது மையலில் சிக்குண்ட இவர் தன் பொருள் எல்லாம் இழந்து அவளால் துறக்கப்பட்டும் அவளது முன்றிற் கிடந்து வருந்துவாராயினர். அதனைக் கண்ட அரங்கன் இவரை ஆட்கொள்ளக் கருதித் தனது பஞ்சபாத்திரத்தில் ஒன்றைக் கணிகைக்குக் கொடுத்தனுப்ப அவளும் இவரை ஏற்றுக்கொண்டு மகிழ்ந்தாள். மறுநாள் கோயிலில் பாத்திரம் காணமையால் அரசன் இவரையும் கணிகையையும் சிறையிலிட்டான். திருவரங்கன் அவன் கனவில் தோன்றி நடந்ததை உரைக்க அரசன் ஆழ்வாரை விடுவித்துப் பணிந்தான். ஆழ்வாரும் மயர் வற மதி நலம் பெற்று தம் இயற்பெயரையும் துறந்து திருமாலின் திருவடியார் அடிப்பொடியாகத் தன்னை மதித்துத் 'தொண்டரடிப் பொடி' என்று தம்மை அழைத்துக் கொள்ளலாயினர்.

இவ்வாறு குருபரம்பரை இவரது வரலாற்றை விரித்துரைக்கின்றது. இவர் இயற்றிய அருளிச் செயல்

களாவன திருமாலை, திருப்பள்ளியெழுச்சி என்பன வாம்.

திருமங்கையாழ்வார் திருவரங்க மதிலையும் சிகரங்களையும் அமைக்கையில் தொண்டரடிப்பொடி யாழ்வாரின் நந்தவனத்தை விடுத்துக் கட்டியதாகக் குருபரம்பரை கூறுவதால் இவரும் திருமங்கையாழ்வார் காலத்தவரே யாவர் என்பர்.

'பச்சைமா மலைபோல் மேனி
பவளவாய் கமலச் செங்கண்
அச்சுதா! அமர ரேறே!
ஆயர்தம் கொழுந்தே! என்னும்
இச்சுவை தவிர யான்போய்
இந்திர லோக மாளும்
அச்சுவை பெறினும் வேண்டேன்
அரங்கமா நகரு ளானே!'

(திருமாலை—2)

என்ற திருமாலைப் பாடல் இவரது உள்ளத் தெளிவைக் காட்டுகின்றது.

'வண்டினை முரலும் சோலை
மயிலினம் ஆலும் சோலை
கொண்டல்மீ தணவும் சோலை
குயிலினம் கூவும் சோலை
அண்டர்கோ னமரும் சோலை
அணி திருவரங்கம்—"

என்ற பாசுரத்தில் திருவரங்கம் செந்தமிழ் வண்ணக் கலவையில் சிறந்தினிது விளங்குகின்றது. திருமாலையில் 45 பாசுரங்கள் அடங்கியுள்ளன.

தொண்டரடிப்பொடியாழ்வாரின் திருப்பள்ளியெழுச்சி தமிழுக்குச் சாகா வரமளித்துதவியிருக்கிறது

எனலாம். இப்பாடல்கள் பத்தும் மாணிக்கவாசகரின் பள்ளியெழுச்சிப் பாடல்களுடன் ஒப்பிட்டுப் போற்றத் தகுந்தவையாகும்.

'கதிரவன் குணதிசைச் சிகரம்வந் தணைந்தான்
கனவிரு ளகன்றது காலையம் பொழுதாய்,
மதுவிரிந் தொழுகின மாமல ரெல்லாம்
வானவ ரரசர்கள் வந்துவந் தீண்டி
எதிர்திசை நிறைந்தன ரிவரொடும் புகுந்த
இருங்களிற் றீட்டமும் பிடியொடு முரசும்,
அதிர்தலி லலைகடல் போன்றுள தெங்கும்
அரங்கத்தம்மா பள்ளி யெழுந்தரு ளாயே' †

என்பது அவரது முதற்பாசுரம்.

"இழிகுலத் தவர்க ளேலும்
எம்மடி யார்க ளாகில்
..........................
......நின்னோடு மொக்க
வழிபட அருளினாய் போன்ம்"

என்றும்

"நுமர்களைப் பழிப்ப ராகில்
நொடிப்பதோ ரளவில் ஆங்கே
அவர்கள்தாம் புலையர் போலும்
அரங்கமா நகரு ளானே!"

என்றும் இவர் பாடுவது சாதிமதங் கடந்த இவரது சமயநிலையை உணர்த்தும்.

**திருப்பாணாழ்வார்**

பாண்குலத்தைச் சேர்ந்த இப்பெரியார் உறையூரில் அவதரித்தவர். இவர் தீண்டப்படாதவராகையினாலே

---

† திருப்பள்ளியெழுச்சி—1

திருவரங்கப் பெரு நகரை மிதிக்க அஞ்சிக் காவிரியின் தென்கரையில் நின்று அரங்கத்தழகனைச் சேவித்து வந்தார். இவரது உண்மைப் பக்தி நிலையை உணர்ந்த அழகிய மணவாளன், காவிரியிலிருந்து நித்தமும் திருமஞ்சன நீர் கொண்டு வரும் ஸ்ரீலோக சாரங்கமகா முனிகள் என்னும் பெரியாரது கனவில் தோன்றி பாணாழ்வாரைத் தம் தோளிற் சுமந்து கொணருமாறு செப்ப, அவரும் அவ்வண்ணமே செய்ய, ஆழ்வார் அணியரங்கனின் அழகுத் திருமேனியைக் கண்களாற் கண்டு உள்ளம் நிறைந்து இறைவனுடன் கலந்தார் என்று குருபரம்பரை கூறுகிறது.

அப்போது அவர் அருளிச் செய்த 'அமலனாதி பிரான்' என்று தொடங்கும் 10 பாசுரங்கள் மிகவும் போற்றப்பட்டு வருபவையாகும்.

**"கொண்டல் வண்ணனைக் கோவல னாய்வெண்ணெய்**
**உண்ட வாயன்என் னுள்ளம் கவர்ந்தானை**
**அண்டர் கோனணி யரங்கன்என் னமுதினைக்**
**கண்ட கண்கள்மற் றொன்றினைக் காணாவே"**

என்ற பத்தாவது பாசுரத்தில் அவர் பெற்ற அளப்பரிய இன்பத்தைக் காட்டுகிறார்.

இவரும் திருமங்கையாழ்வார், தொண்டர்அடிப் பொடி யாழ்வார் காலத்தவர் என்பது பலர்தம் முடிவாகும்,‡

**குலசேகராழ்வார்**

குலசேகர ஆழ்வார் சேரர் குலவேந்தராவர். இவர் திருவஞ்சைக் களத்திற் பிறந்தவர் என்று வேதாந்த

‡ **ஆழ்வார்கள் காலநிலை (பக். 94—96)**
**இலக்கியவரலாறு—வைணவமும் தமிழும்—E.S. வரதரா ஜய்யர் பக்கம் 338—339**

தேசிகர் கூறுவர். எனினும், இவ்வாழ்வாரே தம்மைக் கொல்லிக்கோன் எனக் கூறுவர். எப்படியிருப்பினும் இவர் ஒரு சேரமன்னர் என்பதும், திருமாலிடத்தில் அயராத பக்தி பூண்டு, 'கம்ப மதயானைக் கழுத்தகத் தின் மீதிருந்து இன்பமருஞ் செல்வமும் இவ்வரசும் யான் வேண்டேன்' என்று அரசைத்துறந்தவர் என்ப தும் அனைவரும் ஒப்புக்கொள்ளும் உண்மை. இவர் சேரமான் பெருமாள் நாயனருக்குக் காலத்தாற் பிற் பட்டவர் என்று 'கேரளோத்பத்தி' என்னும் நூல் கூறுகிறது. நாதமுனிகளின் சீடரான மணக்கால் நம்பி கள் இவரைப் புகழ்ந்து பாடியுள்ளார்.

அவரது காலம் பத்தாம் நூற்றுண்டின் பிற்பகுதி யும் 11 ஆம் நூற்றுண்டின் முற்பகுதியுமேயாகும் என்பர். † எனவே இவ்வாழ்வார் அவரது காலத்திற்கு முற்பட்டவராகவோ அன்றி அவர் காலத்தவராகவோ ஆதல் வேண்டும்.

மேலும் இவர்,

**"ஆடிப்பாடி அரங்க வோவென்**
**றழைக்குந் தொண்ட ரடிப்பொடி**
**ஆடநாம்பெறிற் கங்கை நீர்குடைந்**
**தாடும் வேட்கையென் னுவதே"**

என்ற அடிகளில் தொண்டரடிப்பொடி யாழ்வாரைக் குறிப்பதால் இவர் திருமங்கையாழ்வார், தொண்டரடிப் பொடியாழ்வார் போன்றவரது காலத்துக்கு அடுத்து வாழ்ந்தவர் என்பர்§

---

† தமிழ் இலக்கிய வரலாறு E. S. வரதராஜய்யர்; பக்கம் 332

§ஆழ்வார்கள் காலநிலை. பக். 159

மணக்கால் நம்பிகள் இவரைப்பற்றிப் பாடிய பாடலிலிருந்து இவரது வாழ்க்கை வரலாற்றுக் குறிப்புக்கள் சில கிடைக்கின்றன. அப்பாடல் வருமாறு:

"ஆரங்கெடப் பரனன்பர் கொள்ளாரென் றவர்களுக்கே
வாரங்கொடு குடப்பாம்பிற் கையிட்டவன் மாற்றலரை
வீரங்கெடுத்த செங்கோற் கொல்லி காவலன் வில்லவர்கோன்
சேரன் குலசேகரன் முடிவேந்தர் சிகாமணியே"

இப்பாடலால், இவரது அரண்மனையில் வாழ்வோர் இவருக்கும் திருமாலடியார்க்கும் வேற்றுமையை உண்டுபண்ணுவதற்கு முத்துமாலையைக் களவாடி அவ்வடியார்கள் மீது பொய்ப்பழியிட இவர், 'அவர்கள் செய்யார்' என்பதனை உறுதிப்படுத்தக் குடத்துள் கருநாகத்தையிட்டு அதனுள் கையைச் செலுத்திச் சூளுரைத்தார் என்பது தெரியவருகிறது.

இதுபோன்றே இவர் இராமாயண கதை கேட்குங்கால் கரதூஷணர்கள் இராமனுடன் போர் தொடுத்து வந்தனர் என்று கேட்டவுடன் தானே இராமனுக்குத் துணையாகப் போருக்கு எழுந்தனர் என்று ஒரு கதைக் குறிப்பும் வழங்கி வருகிறது.

இனி இவ்வாழ்வார் தம் அரசைத்துறந்து திருவரங்கம் போந்து பெருமாள் திருமொழி, என்ற தமிழ்ப்பிரபந்தத்தையும் முகுந்தமாலை என்ற வடமொழி நூலையும் இயற்றியருளினர். இவர் நம்மாழ்வார் பாடாத வித்துவக்கோட்டையும் பாடியுள்ளார். பல திவ்விய தேசங்கள் சென்று வழிபட்டவர். இறுதியில் காட்டுமன்னார் கோயிலில் இறைவனது பூங்கழல் அணைந்தார் என்பர்.

இவ்வாழ்வார் திருமாலிடம் கொண்ட 'தூராத மனக்காதலை' இவரருளிச் செயல்களிற் காணலாம்.

**ஆனாத செல்வத் தரம்பையர்கள் தற்சூழ**
**வானாளும் செல்வமும் மண்ணரசும் யான்வேண்டேன்**
**தேனார்பூஞ் சோலைத்திருவேங்க டச்சுனையில்**
**மீனாய்ப் பிறக்கும் விதியுடையே னாவேனே†**

என்றும்

**"தம்பமாய் நிற்கும் தவமுடையே னாவனே"§**

என்றும்

**"கானாறாய்ப் பாயும் கருத்துடையே னாவேனே"***

என்றும்

**படியாய்க் கிடந்துன் பவளவாய் காண்பேனே"‡**

என்றும் பாடுகிறார்.

"கண்டார் இகழ்வனவே காதலன்தான் செய்திடினும், கொண்டானையல்லால் அறியாக் குலமகள்போல்," திருமாலையன்றிப் பரதெய்வம் அறியாத இவ்வாழ்வார் குழந்தை நிலையில் இறைவனைத் தேடுகின்றார்.

**"தருதுயரம் தடாயேலுன் சரணல்லால் சரணில்லை,**
**விரைகுழவு மலர்ப்பொழில்சூழ் வித்துவக்கோட் டம்மானே**
**அரிசினத்தா லீன்றதாய் அகற்றிடினும் மற்றவள்தன்**
**அருள்நினைந்தே யழும்குழவி அதுபோன் றிருந்தேனே"¶**

பிள்ளைக் கண்ணன் வளருவதைக் கண்டு யசோதை பெறுகின்ற தொல்லை இன்பத்திறுதியைத்

† பெருமாள் திருமொழி—4—2
§ ,, 4—5
* ,, 4—7
‡ ,, 4—9
¶ ,, 5—1

தாய் தேவகி பெருது புலம்புவதாக இவர் பாடும் 11 பாசுரங்களும், இவரும் பெரியாழ்வாரைப் போன்றே கண்ணனைப் பிள்ளையாக்கிச் சுவைத்தவர் என்பதைக் காட்டுகின்றன.

"முழுதும் வெண்ணெய் அளைந்துதொட் டுண்ணும்
முகிழி ளஞ்சிறுத் தாமரைக் கையும்,
எழில்கொள் தாம்புகொண் டடிப்பதற்கெள்கும்
நிலையும் வெண்தயிர் தோய்ந்தசெவ் வாயும்
அழுகை யுமஞ்சி நோக்குமந் நோக்கும்
அணிகொள் செஞ்சிறு வாய்நெளிப் பதுவும்
தொழுகை யுமிவை கண்ட அசோதை
தொல்லை யின்பத் திறுதிகண் டாளே."

—அத்தீராத விளையாட்டுப் பிள்ளையிடம் அன்னை அசோதை கண்ட விந்தை தாய்க்குலத்தின் பொது அனுபவமான்றோ!

## நந்திக் கலம்பகம்

தென்னாட்டில் மாபெரும் பேரரசாக விளங்கிய பல்லவப் பேரரசு தந்திவர்மன் காலத்தில் வீழ்ச்சியுறத் தொடங்கியது. தெற்கே பாண்டியர்கள் பெண்ணாற் றங்கரை வரையில் பல்லவர்களைத் துரத்தி ஒடுக்கி யிருந்தனர். பாண்டியர் படையொன்று அரசூரில்தங்கி காஞ்சியை நோக்கிப் பாய்வதற்குக் காத்துக்கொண்டி ருந்தது. இந்த நிலையின் தந்திவர்மன் மகன் மூன்றும் நந்திவர்மன் அரசு சுட்டில் ஏறினான். இவன் முன்னேறி வந்த பாண்டியர் படையைத் தெள்ளாறு என்னும் இடத்தில் தடுத்து நிறுத்தித் தெள்ளாற்றுக் கோட்டை யைத் தகர்த்து எறிந்தான். இப்படுகளத்தில் அவன் அடைந்த வெற்றி, வலிமை குன்றிச் சரிந்து வந்த

பல்லவப் பேரரசை நிமிரவைத்து, ஏற்றத்தைக் கொடுத்தது. 'தெள்ளாறு எறிந்த நந்திவர்மன்' என்று கல்வெட்டுக்களில் இடம் பெற்ற அவன்‡பாண்டியர் குறும்புகளை அடக்கி அவர்களை வையைக் கரை வரையில் துரத்திச் சென்று ஒடுக்கினன்.

இவ்வாறு மாபெரும் வெற்றி வேந்தனாக விளங்கிய இப்பல்லவனது புகழ் தென்னாடு முழுதும் பரவியது. "மழை கண்ட சோலை போலவும், சூரியனைக் கண்ட தாமரைக்குளம் போலவும், மாரியிறுதியில் வானத்தில் தோன்றும் முழுமதியம் கண்ட கடல் போலவும் நாட்டவர் இன்பம் பொங்கி வாழ்ந்தனர்" என்று செப்பேடுகள் இவனது ஆட்சி நலத்தைப் பாராட்டிப் பேசுகின்றன.† கோநந்திவிக்கிரமவர்மன் நந்திபோத்தரசன், அவனி நாராயணன், குமாரமார்த் தாண்டன் என்று இவனது சிறப்புப் பெயர்கள் கற்களில் பொறிக்கப்பட்டுள்ளன. இவனது காலம் கி. பி. 826—849.

இத்தகைய சிறப்புமிக்க பேரரசன் மீது பாடப்பட்டதே இந்த நந்திக்கலம்பகம் என்னும் பிரபந்த நூல். இந்நூலைப் பாடியவர் இன்னார் என்று இனஞ் சுட்ட முடியவில்லை. எனினும் இந்நூல் பாடப்பட்ட வரலாற்றைக் குறித்துத் தொண்டை மண்டல சதகம்

"கள்ளாறு செஞ்சொற் கலம்பகமே
கொண்டு காயம் விட்ட
தெள்ளாறை நந்தியெனுந்
தொண்டைமான்"

‡ S. I. I. Vol. XII. No 56
† S. I. I. Vol. Pant. V. No 98

என்று ஒரு செய்தியைக் குறிப்பிடுகின்றது. இதனை அடிப்படையாகக் கொண்டோ என்னவோ ஒரு கதை வழங்குகிறது. நந்திவர்மனுக்குத் தம்பியர் பலர் இருந்தனர். இவர்கள் இவன்மீது பகைமையும் பொறாமையும் கொண்டு இவனைக்கொல்ல முயன்றனர். வாளால் கொல்ல முடியாமல், ஒரு புலவனைக்கொண்டு, நந்திவர்மனுக்கு இறுதி விளைவிக்கின்ற சொற்களை இடையிடையே பெய்து இந்தக் கள்ளார்ந்த கலம்பகத்தைப் பாடச் செய்தனர். அப்புலவனும் நந்தியின் அந்தப்புறச் சுவரில் துளை ஒன்று செய்து அதன் வழியாக இந்நூற் பாடல்கள் ஒரு சிலவற்றை அவன் செவியில் கேட்குமாறு பாடிவிட்டு ஓடிவிட்டான். அப்பாடலின் சுவையில் மயங்கிய பல்லவன் அதனை முழுதும் கேட்க மிகவும் வேட்கை கொண்டான். ஒரு நாள் இரவில் கணிகையொருத்தி அக்கலம்பகப் பாடலைப் பாடுவது கேட்டு மறுநாள் அவளை வரவழைத்துக் கேட்க அவள், 'அது நூறு பாடல்கள் கொண்ட கலம்பகம்; அதனைக் கேட்க வேண்டுமாயின் சுடுகாடுவரை நூறு பந்தல்கள் அமைத்து ஒவ்வொரு பந்தலுக்கு ஒன்றாகப் பாடவேண்டும்; இறுதியாகப் பாடும்பொழுது பாட்டுடைத்தலைவனை மன்னவன் சுடுகாட்டில் சிதைமேலிருந்து கேட்க வேண்டும்'' என்றனள்.

அமைச்சர்கள் எவ்வளவோ தடுத்தும், தமிழின் பால் உள்ள தீராத காதலால் நந்திவர்மன் அவ்வாறே செய்தான். ஒவ்வொரு பாடல் பாடி முடிந்தவுடன் பந்தல் பற்றி எரிந்தது. இறுதியாக,

'வானுறு மதியை அடைந்ததுன் வதனம்
மறிகடல் புகுந்ததுன் கீர்த்தி

கானுறு புலியை அடைந்ததுன் வீரம்
கற்பக மடைந்தவுன் கரங்கள்
தேனுறு மலராள் அரியிடம் புகுந்தாள்
செந்தழல் புக்கதுன் மேனி
யானுமென் கலியும் எவ்விடம் புகுவேம்
நந்தியே நந்தயா பரனே''*

என்னும் பாடலைப் பாடுகையில் சிதை தீப்பற்றிக் கொள்ள நந்திவர்மன் தீக்கிரையாகின்றன். இனி, நந்திவர்மன் தம்பியருள் ஒருவனே இதனைப் பாடித் தன் அண்ணனைக் கொன்றதாகவும் ஒரு கதை வழங்கு கிறது. இவ்வாறு இக் கலம்பகத்தால் நந்தி மாண்ட கதையைப் பதினேழாம் நூற்றாண்டவரான படிக்காசுப் புலவர் கூறுவதைப்போலவே (தொண்டை மண்டல சதகம் 31) பதினெட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த வரான சிவஞான யோகியார் தமது சோமேசர் முது மொழி வெண்பாவில்,

''நந்தி கலம்பகத்தால் மாண்டகதை நாடறியும்
சுந்தரஞ்சேர் தென்குளத்தூர் சோமேசா''

என்று குறிப்பிடுகிறார். எனினும், இக்கதையைஉண்மை யென்று காட்ட நூலில் அகச்சான்றுகள் ஏதுமில்லை. மாறாகப் பல இடங்களில் அவன் ஆக்கத்தைக் குறித்தே பல சொற்கள் உள்ளன. நந்திவர்மனின் தம்பியர் அவ னிடம் பகைமை பூண்டிருந்தனர் என்பதற்கு மட்டும் ஒரு சான்று இருக்கிறது. 'குலவீரர் ஆகமழியத், தம்பியரெண்ணெமெல்லாம் பழுதாக வென்ற தலை மான வீரதுவசன்' என்பதே அச்சான்று. 'இக்கலம் பகம் பாடி அரங்கேற்றம் செய்த காலத்துக் கவியரங்

---

* நந்திக்கலம்பகம் 81

கத்துக்கு இடப்பெற்ற பந்தர் தீப்பற்றிக்கொண்டிருக்க வேண்டும். சின்னாட்களுக்குப் பின் நந்திவர்மன் இறந்திருக்க வேண்டும். இவ்விரு செய்திகளையும் ஒன்று படுத்திப் பிற்காலத்தே நந்திவர்மனுடைய தம்பியர் வழிவந்தவர் எவரோ இப்பொய்க் கதையைக் கட்டியிருக்க வேண்டும்' என்று திரு ஒளவை. சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள் கூறுவர்.§ இனி, நூலின் மாண்பினை நோக்குவோம். கலம்பகம் என்பது தொண்ணூற்று பிரபந்தங்களில் ஒன்ருகும். தோள்வகுப்பு, மதங்கு, அம்மானை, காலம், சம்பிரதம், கார்தூது, தவம், மடக்கு, மறம், பாண், களி, சித்து, இரங்கல், கைக்கிளை, ஊர், வண்டு, தழை, ஊசல் என்னும் பதினெட்டு உறுப்புக்கள் இப்பிரபந்தத்தில் கலந்து வரும். உலாக்களுக்கெல்லாம் முதலானதாக திருக்கயிலாய ஞான வுலா இருப்பதுபோல், இந்நூலே கலம்பகங்களுக்கெல்லாம் வழிகாட்டியாகிய ஆதிக் கலம்பகம் என்பர். எனவே, இதில் ஒரு சில உறுப்புக்களே அமைந்துள்ளன. பல பூக்கள் கலந்து தொடுத்த மாலை போன்று பலவகைப் பாக்களும் கலந்து முதலும் கடையும் ஒரே சொல்லால் முடித்தலே கலம்பகத்தின் மரபாகும். எனினும், நந்திக்கலம்பகத்தில் பல பாடல்கள் சிதைந்தும் வடிவுதிரிந்தும் காணப்படுவதால் பல பாடல்களில் அந்தாதித் தொடை அமைவுபெற வில்லை. மேலும் 'அரசர்க்குத் தொண்ணூறு' என்று பாடுவதே கலம்பக மரபாக இருப்பினும் இதனுள் நூறு பாடல்களுக்கு மேலும் உள்ளன. நந்தி மன்னன் மீது பாடப் பெற்ற தனிப் பாடல்கள் பல இதனுள் கலந்தன போலும்.

---

§ சைவ இலக்கிய வரலாறு பக். 402

இந்நூறு பாடல்கள் அனைத்தும் சொற்சுவையும், பொருட் சுவையும் நிரம்பியன; நெஞ்சையள்ளும் கற்பனையும், சொல்லச் சொல்லச் சொல்லினிக்கும் இனிமையும் பெற்று விளங்குவன.

சிவபெருமான்மீது பாடப்பட்ட கடவுள் வாழ்த்துடன் இந்நூல் தொடர்கிறது.

**'மண்டலமாய் அம்பரமாய்**
**மாருதமாய் வார்புனலாய்**
**ஒண்சுடராய் ஒளியென்னும்**
**ஒருருவ மூன்றுருவம்**
**மைவடிவோ வளைவடிவோ**
**மரகதத்தின் திகழ்வடிவோ**
**செவ்வடிவோ பொன்வடிவோ**
**சிவனேநின் திருமேனி'**

என்ற இப்பாடலைக் கொண்டு இதன் ஆசிரியர் ஒரு சைவர் என்பர். பாரதவெண்பாவைப்பாடிய பெருந்தேவனாரே இவர் என்று கூறுவார்க்கு, இதனைச் சான்றாகக் காட்டியே சிலர் மறுப்பர். நந்திக் கலம்பகப் பாடல்கள் ஓசைநயம் வாய்க்கப்பெற்றவை. 'Sound echoing the sense' என்ற கருத்திற்கிணங்க, பலபாடல்களில் ஓசையும் பொருளும் ஒன்றி வருவதைக் காணலாம்.

**'ஓடரிக்கண் மடநல்லீர் ஆடாமோ ஊசல்**
**உத்தரியப் பட்டாட ஆடாமோ ஊசல்'**

என்று ஊசல் ஆடுகையில் ஏற்படும் உந்தலும், உச்சமும், வீழ்ச்சியும் பெறும் ஓட்டத்தைச் சொற்களில் காண்கின்றோம்.

கார்காலத்தில் தலைவனின் பிரிவால் நைந்து அவன் வருகையை எதிர்நோக்கி நிற்கும் ஒரு பெண்ணின்

உள்ளக் குமுறலை ஒரு பாடல் சொல்லில் தேக்கிக் காட்டுகின்றது.

**'மங்கையர் கண் புனல்பொழிய மழைபொழியுங் காலம்**
**மாரவேள் சிலைகுனிக்க மயில்குனிக்கும் காலம்**
**.......................**
**அங்குயிரும் இங்குடலும் ஆனமழைக் காலம்**
**அவரொருவர் நாமொருவர் ஆனகொடுங் காலம்' (99)**

மற்றுமொரு தலைவிக்கு நிலவின் குளிர்மை கொடுமையாய்க் கொதிக்கின்றது.

**'பெண்ணிலா ஊரில் பிறந்தாரைப் போலவரும்**
**வெண்ணிலா வேயிந்த வேகமுனக் காகாதே'**

என்று நிலவை நோக்கி நொந்துகொள்கிறாள் தலைவி.

மகள் மறுத்தல் என்ற துறையில் ஒரு வீரக் கிழவன் பேசுகின்ற செம்மாந்த மறவுரையைக் கேளுங்கள்:

**'அம்பொன்று வில்லொடிதல் நாண் அறுதல்**
**நான்கிழவன் அசைந்தேன் என்றோ**
**வம்பொன்று குழலாளை மணம்பேசி வரவிடுத்தார்**
**மன்னர் தூதா**
**செம்பொன்செய் மணிமாடத் தெள்ளாற்றில் நந்திபதம்**
**சேரார் ஆனைக்**
**கொம்பன்றோ நம்குடிலில் குறுங்காலும்**
**நெடுவளையும் குனிந்து பாரே' (82)**

இனித் தூதாக வந்த பாணனை நையாண்டிசெய்து அனுப்புகின்ற ஒரு தலைவியின் பாட்டில் நிறைந்துள்ள நகைச் சுவையைக் காண்போம்.

**'ஈட்டு புகழ்நந்தி பாணநீ எங்கையர்தம்**
**வீட்டிருந்து பாட விடிவளவும்—காட்டிலழும்**
**பேயென்றாள் அன்னை பிறர்நரியென் றார்தோழி**
**நாயென்றாள் நீயென்றேன் நான்' (101)**

**பெருந்தேவனார் பாரதவெண்பா**

இந்நூல் ஓர் உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுளாகும். இதனை இயற்றியவர் பெருந்தேவனார் என்பவர். இவர் சங்க காலத்தில் பாரதம் பாடிய பெருந்தேவனாரின் வேறானவர் என்பதை அனைவரும் உடன்படுகின்றனர்.* இவர் தெள்ளாறு எறிந்த நந்திவர்மன் காலத்தவர் என்பது,

**'தேர்வேந்தர் வானேறத் தெள்ளாற்றில் வென்றானோ**
**டியார்வேந்தர் ஏற்பார் எதிர்'**

என்ற இவரது பாரதவெண்பா அடிகளால் உணரலாம். இவரும் நந்திக்கலம்பக ஆசிரியரும் ஒருவராக இருக்கலாம் என்ற ஒரு கருத்தும் உண்டு.‡ ஆயின், இவர் சருக்கம்தோறும் திருமாலையே பாடுவதால் சிவனைக் குறித்துக் கடவுள் வாழ்த்துப் பாடிய நந்திக்கலம்பக ஆசிரியரினும் இவர் வேறுபட்டவர் என்று ஔவை, சு. துரைசாமிப்பிள்ளையவர்கள் கூறுவர்.†

இந்நூலில் வெண்பாவைத் தவிர ஆசிரியப்பாவும் விரவி வந்துள்ளது. இடையிடையே வந்துள்ள உரை நடைப்பகுதிகளில் வடமொழிச் சொற்கள் மிகுதியாகக் கலந்துள்ளன. 'செய்யுட்களில் பல இழுமென நடை பெறலின்றியும், பொருட்செறிவின்றியும் உள்ளன' என்று கருதுவர் திரு. கி. வா. ஜ. அவர்கள் §

---

* கா. சு. பிள்ளை, மு. இராகவய்யங்கார், K.S. சீனிவாசப் பிள்ளை, ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை.

‡ ஸாஸனத்தமிழ்க்கவி சரிதம்—பக் 25

† சைவ இலக்கிய வரலாறு. பக் 404

§ தமிழ்க் காப்பியங்கள்—பக். 249.

# சோழர் காலம்

சங்க காலத்தின் இறுதியில் மூவேந்தர்களது சிறப்பும் சீரும் குன்றி, தமிழகம் இருண்ட காலத்தின் பிடியில் சிக்குண்டு இடர்ப்பாடுற்றது. கி. பி. ஏழாம் நூற்றாண்டில் காவிரிக்கு வடக்கே பல்லவர்களும் தெற்கே பாண்டியர்களும் தழைத்துத் தளிர்விடத் தொடங்கினர். ஆயின் சோழர்குடி வலியும் வளமும் குன்றி ஒரு சிற்றரசாகக் குறைந்து கிடந்தது. பாண்டியர்க்கும் பல்லவர்க்கும் பெண்கொடுத்து வாங்கும் அளவிற்குத்தான் அக்குடியின் நிலை இருந்தது.‡ சங்க காலத்தில் திருமாவளவனும், கிள்ளிவளவனும், கோச்செங்கணனும் மாண்புற்றிருந்ததைப் போன்ற சோழப் பேரரசன் எவனும் இந்த நூற்றாண்டுகளில் தோன்றியதற்கு ஆதாரமில்லை. இந்நிலையில் சோழப்பேரரசை மீண்டும் தழைக்கச் செய்து மகோன்னதமான ஒரு

‡ நின்ற சீர்நெடுமாறனுடைய தேவியார் மங்கையர்க்கரசி ஒரு சோழர்குலச் சிற்றரசி என்பதை 'மங்கையர்க்கரசி, வளவன் தன்பாவை' என்ற சம்பந்தர் வாக்காலும் பிறவாலும் உணரலாம்.

பெருநிலைக்கு உயர அதற்கு வழிவகுத்தவன் விஜயாலய சோழன் என்பவன். இவன் ஏறத்தாழக் கி. பி. 850இல் தஞ்சையை முத்தரையர்களிடமிருந்து கைப்பற்றிச் சோழப்பேரரசிற்கு அடிக்கல் நாட்டினன். தொண்ணூற்று ஆறு விழுப்புண்களைத் தன் திருமேனியில் தாங்கி அவன் ஆற்றிய வீரச் செயல்களை அவன் வழித் தோன்றல்களும், வரலாற்று மாணவர்களும் போற்றிப் பெருமை கொள்கின்றனர். இவனுடைய மகன் முதலாம் ஆதித்தன் வடக்கே பல்லவர்களை வென்று தொண்டை மண்டலத்தையும் மேற்கே கொங்குநாட்டையும் தன் அடிப்படுத்திச் சோழப் பேரரசினை உண்மையில் அகலமும் ஆற்றலும் நிறைந்ததாகச் செய்தான். அவன் மகன் பராந்தகன், 'மதுரையும் ஈழமும் கொண்ட கோப்பரகேசரி'யாவான்*. இவனுடையமூத்த மகனர் கண்டராதித்த தேவர் திருவிசைப்பா பாடியருளிய சிவஞானச் செல்வர். இவருடைய தம்பியான அரிஞ்சயனும், சுந்தரசோழனும் பொங்கியெழுந்து வரும் சோழப் பேரரசை நிலைப்படுத்தியவர் ஆவர். அவனுடைய மகன் அருள்மொழித் தேவன் இராசஇராசன்; அவன் மகன் இராசேந்திரன், 'கங்கையும் கடாரமும் கொண்ட கோப்பரகேசரி'யாவான். இவ்விரு வேந்தர்கள் காலத்தில் சோணடு—ஏன் தமிழ்க்குலம் இத்தரணியிலே மிகப் பெரியதோர் ஏற்றத்தைக் கண்டு திகழ்ந்தது எனலாம்.

பள்ளத்தில் வீழ்ந்து கிடந்த சோழர்குடி வீறுகொண்டெழுந்து வெற்றியைத் தழுவியது விஜயால

---

* "ஈழமும் தமிழ்க் கூடலுஞ்சிதைத் திகல்கடந்ததோர் இசை பரந்ததும்" என்று இவன் பெருமையைக் கலிங்கத்துப் பரணி பாடுவது காண்க.

(இராச பாரம்பரியம்—23)

யன் காலத்தில்; சோழர்தம் உதயஞாயிருக எழுந்தான் ஆதித்தன். பகைவர்களுக்கு அந்தகனுக—கூற்றுவனுகப் பராந்தகன் தோன்றினுன். முதலில் சோழன் பார் வேந்தருக்கெல்லாம் அரசனுகிய நிலையை இராச இராசன் காலத்தில் காண்கின்ருேம். அவன் மகன் அரசர்க்கு இந்திரனுக உயர்ந்து இராசேந்திரனுகி விட்டான்.

இவ்வாறு சோழர்குலம்—தமிழ்க்குலம் வரலாறு கண்டிராத அளவிற்கு அரசியல் நிலையில் ஏற்றத்தைக் கண்டது. அதன் பயனுய் அன்னுர்தம் கலை, கல்வி, பண்பாட்டுத் துறைகள் அடைந்த வியத்தகு மேம்பாட்டினை வரலாறு கற்றவர் யாவரும் போற்றுவர்.

இத்தகைய மகோன்னத சூழ்நிலையில் வைதிகச் சமயங்களும் புறச் சமயங்களும் தழைத்து இலக்கியத்தை வளர்த்தன. மக்களின் வாழ்வின் விரிவைப் போல் கவிதைக் கலையும் அகலமும் எடுப்பும் கொண்டு வளர்ந்தது. அதன் பயனுகப் பெருங்காப்பியங்கள் தோன்றலாயின. ‡ இனி அக் காவியங்களைப் பற்றி ஆராய்வோம்.

காவியம், காப்பியம் என்பன 'காவ்யம்' என்ற வட சொல்லின் திரிபேயாகும். கவியால் செய்யப்படுவது காவியம் என்பர். எனினும், அது இங்கு பல செய்யுளும் உறுப்பாய்த்திரண்டு பெருகிய பொருள் தொடர் நிலைச் செய்யுளையே குறிக்கும் என்பர். 'கவியாற்பாடப் படுவனவெல்லாம் காப்பியமல்லவோ, பொருட்டொடர் நிலையைக் காப்பியமென்றது என்னையெனின், சேற்

---

‡ காப்பியங்களுடன் பரணி, உலா, போன்ற பிரபந்தங்களும் தோன்றின; திருமுறைகள் வகுக்கப்பட்டன; இலக்கண நூல்கள் பெருகின; உரைகள் எழுந்தன.

றுள் தோன்றுவனவெல்லாம் பங்கயமெனப் பெயர் பெறுமாயினும் அப்பெயர் தாமரை ஒன்றன் மேற்றே யாயினவாறு போல இப் பெயர் பொருட்டொடர் நிலைக்கே ஆயிற்று' என்று தண்டியலங்கார உரையாசிரியர் கூறுவது காண்க. ஒரு மொழியின் வளர்ச்சியினையும் மாண்பினையும் அளவிடுவதற்கு அம்மொழியில் தோன்றிய காவியங்களே சிறந்த கருவிகளாக விளங்குகின்றன எனில் அது மிகையாகாது. தமிழில் சங்க காலத்திற்குப் பின்னுல் சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவக சிந்தாமணி, வளையாபதி, குண்டலகேசி என்னும் ஐம்பெருங் காப்பியங்களும், சூளாமணி, நீலகேசி, யசோதர காவியம், உதயணகுமார காவியம், நாக குமார காவியம் என்னும் ஐஞ்சிறு காப்பியங்களும் தோன்றின. இவை தவிர கம்பராமாயணம், பெரிய புராணம், கந்தபுராணம் போன்ற காப்பியங்களும் உண்டு. ஆயின், கடைச்சங்ககாலத்திலும் அதற்கு முன்பும் வழங்கிவந்த காவியங்களைப் பற்றிப் பெரிதும் அறிவதற்கில்லை. எனினும், காவியத்திற்குரிய இலக்கணங்கள் தொல்காப்பியத்திலேயே காணக்கிடைப்பதாலும், பிற நூல்களைப் பற்றி உரையாசிரியர்கள் எடுத்தாளும்பொழுது அவற்றைப்பற்றிப் பேசுவதாலும் முதல், இடை, கடைச்சங்க காலங்களிலேயே காவியங்கள் தமிழ் மொழியில் வழங்கி வந்திருக்கக் கூடும் என்று எண்ணுவதற்கு இடமிருக்கிறது.

"தமிழில் மிகப் பழங்காலத்தில் 'செய்யுள் இலக்கணத்தையும் காவிய இலக்கணத்தையும் தனியே வரையறுத்து உரைக்கும் நூல் இல்லையென்றே தோன்றுகின்றது; ஆயினும் அக்காலத்தில் எழுந்த இலக்கண நூல்களில் அங்கங்கே சில பகுதிகள்

காவியங்களின் இயல்பை வரையறுத்துக் கூறுகின்றன" என்று திரு. கி. வா. ஜகந்நாதன் கூறுகிறார்*

கொங்குவேளிர் செய்த பெருங்கதை (உதயணன் கதை) பற்றிப் பேசவந்த அடியார்க்கு நல்லார் தமது உரைப்பாயிரத்தில் இடைச் சங்கப் புலவர்களால் பாடப் பட்ட கலியும் குருகும் வெண்டாளியும் முதலிய செய்யுள் இலக்கியம் ஆராய்ந்து செய்யப்பட்டது அக்காவியம் என்று கூறுகின்றார். எனவே, கொங்கு வேளிர் தம் காவியத்தை யாப்பதற்குரிய அடிப்படை இலக்கணங்களைச் சங்க இலக்கண நூல்களிலிருந்தே பெற்றார் என்று தெரிகிறது. சங்க நூல்களில் காவிய இலக்கணங்கள் இருந்தன என்றால் சங்க காலத்தில் காவியங்களும் இருந்திருக்க வேண்டுமன்றோ? இலக் கியத்திலுருந்து பிறப்பதுதானே இலக்கணமும்?‡ இவற்றால் தமிழில் பஞ்ச காவியங்களுக்கு முன்னால் பல காவியங்கள் இருந்திருக்கக்கூடும் என்பது விளங்கும். ஆயினும் அவையாவை யென்று உறுதி யாகத் தெரியவில்லை. ஊகிக்கக்கூடிய ஒரு சிலவும் பெயரளவில் மட்டிலுமோ சிதைந்தோ காணப்படு கின்றன.

இனி, இப்பொழுது தமிழில் கிடைக்கும் நூல் உரைகளால் அறியவரும் பழங்காப்பியங்களை, (1) பெயரளவில் அறியப்படும் சில பழங்காப்பியங்கள் (2) உரைகளில் அங்கங்கே மேற்கோளாகச் சில செய்

* "தமிழ்க்காப்பியங்கள்"—பக்கம் 15.

‡ It is not neccessary to prove that poetics are possible only under the supposition that poetry existed already, and that poetry is older than poetics' —The Foundations of Indian Poetry and their Historical Development–p. 2

யுட்கள் மட்டிலும் எடுத்தாளப்பட்ட காப்பியங்கள், (3) வழங்கிவரும் காப்பியங்கள் என்று திரு. கி. வா. ஜ. அவர்கள் மூன்று வகையாகப் பிரித்துக்காட்டு கின்றனர்.†

இவற்றுள் பெயர்மட்டிலும் தெரியும் காப்பியங் கள் பருப்பதம், கலியாணன் கதை, புராணசாகரம் என்பன.

சங்க காலத்தில் வெண்பா, ஆசிரியப்பா யாப் பினுல் ஓர் இராமாயணம் வழங்கப்பட்டு வந்ததாக உரையாசிரியர்கள் காட்டுகின்றனர். அதுபோன்று பாரதமும் பெருந்தேவனுரால் பாடப்பட்டது. தகடூர் யாத்திரை தொன்மை என்னும் வனப்பிற்கு எடுத்துக் காட்டாகக் காட்டப்படுகிறது.

இனிச் சங்கத்திற்குப் பிற்பட்ட பஞ்ச காவியங் களை ஆராய்வோம். ஐம்பெருங் காப்பியங்களை சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி குண்டலகேசி என்று வழங்குவது மரபு. இதை நோக்கு கையில் நூலின் கால நிலையைக் கருத்திற்கொண்டு இம்முறைவைப்பு அமைக்கப்பட்டதாகத் தெரிய வில்லை. ஐம்பெருங் காப்பியம் என்ற வழக்கே முதன் முதலில் 13—14 ஆவது நூற்றுண்டில் (மயிலை நாதர் காலத்தில்) தான் காணப்படுகிறது. அதற்கு முன்னர் இல்லை என்று பேராசிரியர் தெ. பொ. மீனுட்சிசுந்தர ஞர் கூறுவர்.§ திரு. கி. வா. ஜவும் அது பிற்காலத்தில் எழுந்த வழக்கே என்பர். ஐம்பெருங் காப்பியங்கள் என்ற வழக்குத் தோன்றிய பின்னர் ஐஞ்சிறு காப்பி

† 'தமிழ்க்காப்பியங்கள்'—பக் 215
§ சமணத்தமிழ் இலக்கியவரலாறு—பக் 116

யங்கள் என்ற வழக்கும் தோன்றியது என்பர். எனவே பிற்காலத்தாரால் ஐம்பெருங் காப்பியங்கள் என்றும் சிறு காப்பியங்கள் என்றும் கருதப்படும் காப்பியங் களை நாம் அம்முறை வைப்பின்படி ஆராயாது கால அடிப்படையில் நோக்குவோம்.

சிலப்பதிகாரம், மணிமேகலை இரண்டும் ஏனைய வற்றிற்குக் காலத்தால் முற்பட்டவை. அவற்றை முன்னரே ஆராய்ந்தோம்.

**குண்டலகேசி :** மணிமேகலை சமயவாதத்தைக் காப்பியமாக்கும் ஒரு புதுமுயற்சியைத் தோற்று வித்தது எனலாம். அதன் விளைவாகத் தமிழில் குண்டலகேசி, நீலகேசி, பிங்கலகேசி போன்ற வாதக் காப்பியங்கள் தோன்றலாயின. கேசி என்று முடிவு றும் காப்பியங்கள் அனைத்தும் சமயவாதச் சார்புள்ள வையே. அவற்றுள், குண்டலகேசி ஒரு பௌத்த சமயக் காப்பியமாகும். விருத்தப் பாவால் இயன்ற இந்நூல் ஒரு தருக்க நூலாக யாப்பருங்கல விருத்தி யுரையில் எடுத்துக்காட்டப்படுகிறது.† இந்நூல் முழுதும் கிடைக்கப்பெறவில்லை. இதன் செய்யுட்கள் பல நீலகேசி உரையில் எடுத்தாளப் பட்டிருக்கின்றன. அவற்றால், இந்நூலுக்கு மறுப்பாகத் தோன்றியதே நீலகேசி என்ற சமணக்காப்பியம் என்பது உய்த்துண ரப்படுகின்றது. புறத்திரட்டிலும் பத்தொன்பது செய் யுட்கள் காணப்படுகின்றன. குண்டலகேசி கூறும் கதையையும் நாம் நீலகேசியின் உரையிலிருந்தே தெரிந்துகொள்கிறோம்.

---

†"தருக்கமாவன—ஏகாந்தமும் அனேகாந்தமும் என்பன. அவை குண்டல, நீல, பிங்கல அஞ்சன காலதரிசன தத்துவ கேசிகளினும் சாங்கியம் முதலிய தரிசனங்களிலும் கண்டு கொள்க"—யா.வி—பக் 540

பத்திரை என்பவள் ஒரு வணிக மகள். காளன் என்பவன் அரசனுல் காவலில் வைக்கப்பட்டவன். இவனை ஒருநாள் அவள் கண்டு காதல் கொண்டு, தன் தந்தையின் உதவியால் அவனை மீட்டு மணந்து கொள்கிருள். இருவரும் இல்லறத்தில் இனிதிருக்கையில் ஒருநாள் பத்திரை காளனைக் கள்வன் என்று கூற அவன் சினந்து அவளை வஞ்சகமாகக் கொல்லக் கருதி ஒரு மலைமுகட்டிற்கு அழைத்துச்சென்று கொல்ல முயல்கையில், அவள் 'தற்கொல்லியை முற்கொல்வன்' என நினைத்துச் சாகுமுன் அவனை மும்முறை வலம் வர வேண்டும் என்று இரக்க, அவனும் அது நேர, அவள் அவனை மலைஉச்சியினின்றும் பிடித்துத் தள்ளிக் கொன்ருள். அதன்பின் வாழ்வை முனிந்த பத்திரை ஒரு நிக்கந்தத் துறவியை அடைந்து, சமய நூல்கள் பலவற்றையும் உணர்ந்து, பாரில் உள்ள புறச்சமயத்தாரை வாதில் வென்ருள். அவள் நிக்கந்தத் துறவியான பிறகு களைந்த கூந்தல் சுருண்டு வளர்ந்ததால் குண்டலகேசி என்று அழைக்கப்பட்டாள். இறுதியில் இவள் சிராவஸ்தி என்னும் நகரில் ஜேதவனத்தில் புத்தரின் சீடரான சாரீபுத்தனுல் வாதில் வெல்லப்பட்டு, அவரால் புத்த தர்மம் உபதேசிக்கப்பட்டுப் பௌத்த துறவியாகி நிர்வாணமடைந்தாள்.

இக்கதையால், இது ஒரு பௌத்த நூல் என்று தெரிகிறது. இது பெரும்பாலும் சமயவாதத்தையே பேசுவதால், இது பெருங்காப்பியம் ஆகாது என்பர்.‡ இது பல்வேறு காதைகளாகப் பிரிக்கப்பட்டிருத்தல் வேண்டும்.

‡தமிழ்க்காப்பியங்கள்—பக். 231.

இந்நூல் யாப்பருங்கல விருத்தியுரையில் எடுத்தாளப்படுவதால் உறுதியாகப் பத்தாம் நூற்றாண்டிற்கு முற்பட்டதாதல் வேண்டும். நீலகேசியின் காலம் கி. பி. 8 அல்லது 9ஆம் நூற்றாண்டு என்பர்.‡ நீலகேசி குண்டலகேசியின் மறுப்பு நூலாகையால், பின்னது அதற்கும் முற்பட்டதாதல் வேண்டும்.

இனி, நீலகேசியின் உரையாசிரியர் காட்டும் பாடல்களில் சிலவற்றைக் காண்போம்.

> **"வாயுவினை நோக்கியுள மாண்டவய நாவாய்**
> **ஆயுவினை நோக்கியுள வாழ்க்கையது வேபோல்**
> **தீயவினை நோக்கும்இயல் சிந்தனையும் இல்லாத்**
> **தூயவனை நோக்கியுள துப்புரவும் எல்லாம்"**

என்று மனத்தூய்மையின் சிறப்பினை ஒரு பாட்டு அழகாக வலியுறுத்துகின்றது. யாக்கை நிலையாமையை இனிது எடுத்துக்காட்டும் ஒரு பாடலைக் காண்போம் :

> **"போதர உயிர்த்தஆவி புகஉயிர்க் கின்ற தேனும்**
> **ஊதியம் என்று கொள்வர் உணர்வினன் மிக்க நீரார்**
> **ஆதலால் அழிதன் மாலைப் பொருள்களுக் கழிதல்**
> **வேண்டா**
> **காதலான் அழுதும் என்பார் கண்நனி கலைய லுற்றார்"**

நீலகேசி : நீலகேசி என்னும் சமண வாதநூல் குண்டலகேசிக்கு எதிராக எழுந்தது என்பதை முன்னர்க் கண்டோம். இதனை இயற்றினார் பெயர் தெரியவில்லை. இதற்கு மிகச்சிறந்த உரையொன்றுண்டு.

---

‡சமணத்தமிழ் இலக்கியவரலாறு—தெ. பொ. மீ. பக். 90. ஆயின் திரு. சக்கரவர்த்தி நயினார் நீலகேசியின் காலத்தைக் கி. பி. 5ஆம் நூற்றாண்டாகக் கொள்வர்.

அதனை இயற்றியவர் சமயதிவாகர வாமன முனிவர் ஆவர்.§

இதன் கதை வருமாறு: பாஞ்சால நாட்டில் குண்டலவர்த்தனம் என்ற நகருக்கு அண்மையில் பலாலயம் என்ற இடுகாட்டில் உள்ள தெய்வத்திற்கு இடப்படும் உயிர்க்கொலையை, முனிச்சந்திரர் என்ற ஒரு சமண முனிவர் தன் தவத்தின் வல்லமையால் தடுக்க, அவரது தவத்தைக் கலைப்பதற்காகத் தமிழ் நாட்டுப் பழையனூர் நீலிப்பேயைப் பிறபேய்கள் அழைத்து வந்தன. அவள் அந்நாட்டரசிபோல் தோற்றம் கொண்டு முனிச்சந்திரரின் தவத்தைக்கலைக்க முற்பட்டுத் தோல்வி யடைந்தாள். பின்னர் அவருக்கே மாணவியாகிச் சமணத்தின் கொல்லாமையாகிய சீலத்தைப் பார் முழுதும் பரப்பிப் புறச்சமயத்தாரை வாதில் வென்றாள். பௌத்த சமயத் தலைவியான குண்டலகேசியையும் அர்த்த சந்திரரையும், ஆசீவக, சாங்கியரையும் வாதில் வென்று அவர்களைச் சமணராக ஆக்கினாள். யாவரும் அவளையே சமணத்தலைவியாக ஏற்றுக்கொள்கின்றனர்.

இந்நூல் பத்துச் சருக்கங்களுள் அடங்கிய 894 செய்யுட்களைக் கொண்டது. இவற்றை வாமன தேவருடைய உரையுடன் திரு. சக்கரவர்த்தி நயினார் அவர்கள் வெளியிட்டு உதவியுள்ளனர்.

நூலின் தொடக்கத்தில் பாஞ்சால நாட்டின் சிறப்பும், குண்டலவர்த்தன நகரின் சிறப்பும் அழகுற வருணிக்கப் படுகின்றன. இவ்வாறு இது ஒரு தருக்க நூலாயினும் காவியத்தின் அழகுமுகப்புடன்

§ இவரே மேருமந்தர புராணம் இயற்றியவர் என்று பேராசிரியர் தெ. பொ. மீ. கூறுவர்.

தொடங்கி நடக்கிறது. "போரில் வரும் வெற்றியே அன்றி வாதத்தில் வரும் வெற்றியும், போர்த்திறமைகள் போல வாதத்திறமைகளும் காப்பியத்தின் போக்காக அமைகிற நுட்பத்தை இவ்வாறு தமிழ்நாட்டில் தான் முதன்முதல் காண்கிறோம்" என்று பேராசிரியர் தெ. பொ. மீ அவர்கள் பாராட்டுகின்றனர்.† பின்னல் எழுந்த சிவஞான சித்தியார் பரபக்கம், பிரபோத சந்திரோதய காவியம் முதலியவற்றிற்கு இந்நூலே சிறந்த வழிகாட்டியாக அமைந்தது என்று அன்னார் கூறுவர்.

பாஞ்சால நாட்டின் சிறப்புக்களைப் பேசவரும் நீலகேசி ஆசிரியர் கற்பனைநயம் மிக்க பாடல்களால் வருணித்துச் செல்கின்றார். அவற்றுள் இரண்டு பாடல்களை நோக்குவோம் :

"வருபுனலன வளவயலிடை மறிவனஇன வாளை
மருவினியன மதிழ்தகையன மலர்சிறையன நாரை
கருவரியன கடுநடையன களைகுரலன கம்புள்
திருவுருவின தெரிகதிரின திசைதிசைதொறும்
செந்நெல்"

—*நீலகேசி: 12*

"குருவுடையன கொடிமிடைவொடு குலைவிரிவன கோடல்
தருசுடரன தளவயலின தகைமலரன தோன்றி
அருகுடையன அணியுருவின வயலனவலர் காயா
முருகுடையன முகைவிரிவன முறியலர்வன முல்லை"

—*நீலகேசி: 15*

வளையாபதி : ஐம்பெருங் காப்பியங்களுள் கடைசியில் வைத்து எண்ணப்படும் இந்நூல் நிக்கந்த வேடத்து இருடிகணம் என்றும் அறிவன் என்றும்

---

† *சமணத்தமிழ் இலக்கிய வரலாறு—பக். 91.*

பேசுவதால் ஒரு சமண நூலாதல் வேண்டும் என்பர். எனினும், இந்நூல் நுதலும் கதை யாதெனத் தெரிவ தற்கில்லை. வைசிய புராணத்தில் ஓரளவிற்கு இதன் கதை கூறப்பட்டிருப்பினும், அதனை முழுதும் ஏற்றுக் கொள்ளுதற்கில்லை என்பர் திரு. கி. வா. ஜ அவர்கள்.‡ எனினும், இந்நூலின் ஒரு சில பாடல்கள் அடியார்க்கு நல்லார், பரிமேல் அழகர், இளம்பூரணர், நச்சினார்க் கினியர், யாப்பருங்கல உரையாசிரியர் முதலியோரால் எடுத்தாளப்பட்டிருக்கின்றன. புறத்திரட்டிலும் சில பாடல்கள் உள்ளன. இவ்வாறு எழுபதுக்கு மேற்பட்ட பாடல்களைச் 'செந்தமிழ்' திரட்டித் தந்துள்ளது. இந் நூற் பாக்களில் சில நாலடியாக வருவன; சில ஆறடி யாக வருவன. இரண்டடி வெவ்வேறு எதுகைபெற்று வருவன சில. இதனாலும், யாப்பருங்கல விருத்தி யால் எடுத்தாளப்படுவதாலும், இது சிந்தாமணிக்கு முந்தியது என்பர் பேராசிரியர் தெ. பொ. மீ அவர்கள்.§

இந்நூல் முழுவதும் நமக்குக் கிடைக்காவிடினும், இது மிகவும் சிறந்த கவிதை அழகு நிறைந்தது என்பதை உரையாசிரியர்களின் பாராட்டினால் தெரிந்து கொள்ளலாம். 'தக்கயாகப் பரணியின் உரையாசிரி யர், அப்பரணியின் நூலாசிரியராகிய கவிச்சக்கர வர்த்தி ஒட்டக்கூத்தர் "கவியழகு வேண்டி வளையா பதியை நினைந்தார்" என்று எழுதுவதினின்றும், சமணத்தை வெறுத்த சைவராலும், சைவப்புலவராலும் இதன் இலக்கியச்சுவை எவ்வளவு உயர்ந்ததாகக் கருதப்பெற்றது என்பது விளங்கும்' என்று பேராசிரி யர் தெ. பொ. மீ அவர்கள் கூறுவது காண்க.†

‡ தமிழ்க் காப்பியங்கள்—பக். 249.
§ சமணத்தமிழ் இலக்கிய வரலாறு—பக். 92.
† சமணத்தமிழ் இலக்கிய வரலாறு—பக். 93

மக்கட்பேற்றின் பெருமையை மாண்புறக் காட்டும் வளையாபதிச் செய்யுள் ஒன்றனை நோக்குவோம் :

**"பொறையிலா அறிவு போகப்**
**புணர்விலா இளமை மேவத்**
**துறையிலா வனச வாவி**
**துகிலிலாக் கோலத் தூய்மை**
**நறையிலா மாலை கல்வி**
**நலமிலாப் புலமை நன்னீர்ச்**
**சிறையிலா நகரம் போலும்**
**சேயிலாச் செல்வம் அன்றே"**

**பெருங்கதை :** வளையாபதி, குண்டலகேசி போன்றன்றி, இந்நூல் பெருங்காப்பியமாக ஆவதற்குரிய சிறப்புக்கள் பல கொண்டு திகழ்கின்றது. இது நடையமைப்பினாலும் பொருட்சிறப்பினாலும் காப்பியங்களுள் தலைமையுடையதாகக் கருதத் தகுவது. சங்க காலத்தைச் சார்ந்து எழுந்த சிலப்பதிகாரத்திற்கும் மணிமேகலைக்கும் பின்னர், சிந்தாமணிக்கும் முந்தி எழுந்த மிகச்சிறந்த காவியமாகும் இந்நூல். கங்க அரசனாகிய துர்விநீதன்‡ வடமொழியில் செய்த பிரகத்கதை என்னும் நூலே இதற்கு முதல்நூல் என்பர். எனினும் மணிமேகலையில் கூட இக்கதையின் சில செய்திகள் பேசப்படுகின்றன. திருமங்கையாழ்வாரும் சிறிய திருமடலில் வாசவதத்தையைக் குறிக்கின்றார்.

இக்கதை உதயணனுடைய கதையையே கூறுகிறது. எனவே இதற்கு உதயணன் கதை என்ற பெயரும் உண்டு. இப்பெருங் கதையுள் பல கதைகள்

---

‡ இவன் ஆறும் நூற்றாண்டின் இறுதியில் இருந்தவன்—தமிழ்க் காப்பியங்கள் : பக்—285

ஒன்றுக்குள் ஒன்ருகக் கட்டுக்கோப்புடன் கூறப்படு கின்றன. சிலப்பதிகாரம், மணிமேகலை போன்று இக் காவியம் அகவல் யாப்பால் இயன்றது; அவற்றைப் போன்றே ஒவ்வொரு பாட்டும் னகர ஈற்றில் முடிவடை யும். இதனைத் தொல்காப்பியர் 'இயைபு' என்னும் வனப்பென்பர். இக்காப்பியத்தில் கதைத்தொடர்ச்சி மட்டுமன்றி, அந்தாதியாகச் சொற்ருெடர்ச்சியும் அமைந்து திகழ்வதை யாப்பருங்கல விருத்தி எடுத்துக் காட்டுகிறது.

இதனை இயற்றியவர் கொங்குவேளிர் ஆவர். அதனால் இது கொங்குவேள் மாக்கதை என்றும் அழைக்கப்பெறுகிறது. இதனை, இவர் இடைச்சங்கப் புலவர்களால் பாடப்பட்ட கலியும், குருகும், வெண் டாளியும் முதலிய செய்யுள் இலக்கியங்களை ஆய்ந்து செய்தார் என்று அடியார்க்கு நல்லார் கூறுவதை முன்னரே கண்டோம். இந்நூலில் வழங்கும் சொற் களும் பொருள்களும் வீரசோழிய உரையாசிரியர் காலத்திலேயே (11 ஆம் நூற்ருண்டு) ஒருசில விளங் காது போயின. 'அகலக்கவி செய்வானுக்கு அப்படி யல்லது ஆகாது' என்று அவர் அமைதி கூறுவது காண்க.

வடநாட்டு உதயணனும் வாசவதத்தையும்தமிழ்க் கம்பனின் இராமர்—சீதை போன்று கண்டதும் காதல் கொள்ளும் சிறப்பைக் கொங்குவேளிர் காட்டுகின்ருர். கம்பன் 'காவிரி நாடன்ன கழனிநாடு' என்று கோசல நாட்டைப்பாடி உண்மையில் சோணுட்டையே காட்டு வது போன்று இக்காப்பியத்திலும் வடபுலம் தமிழ் மயமாகும் மாண்பினைக் காண்கின்ருேம். இவர் 'பல செய்யுள் இலக்கணங்களை ஆய்ந்து செய்தவர்'

ஆதலின், இந்நூலில் தமிழ் இலக்கண மரபுகள் மாருமல் ஒளிர்கின்றன. உதயணனின் படை பலநாடு நகரங்களைக் கடந்து அருட்ட நகரத்தை அடைவதைக் கூறும்போது ஆசிரியர் தமிழ் மரபைக் கையாள்கிருர்.

> "வலப்பால் எல்லை வயல்பரந்து கிடந்த
> அளற்றுநிலைச் செறுவின் அகல்நிலங் கெழீஇ
> இடப்பான் மருங்கிற் பரற்றலை முரம்பிற்
> புன்புலந் தழீஇய புகற்சித் தாகி
> வன்ருெழில் வயவர் வலிகெட வகுத்த
> படைப்புறக் கிடங்கும் தொடைப்பெரு வாயிலும்
> வாயிற் கமைந்த ஞாயிற் புரிசையும்
> இட்டமைத் தியற்றிய கட்டளைக் காப்பின்
> மட்டுமகிழ் நெஞ்சின் மள்ளர் குழீஇய
> அருட்ட நகரம்...................."

(உஞ்சை: 48: 172—181)

'மதில் பெரும்பாலும் மருதத்திடத்தது' (தொல். புறத்திணை: 9) என்பது தொல்காப்பியம். இதையொட்டியே, கொங்குவேளிரும் மருதநில வருணனையை அடுத்து அருட்ட நகரத்தின் கோட்டைக் காட்சியைப் பாடுகின்ருர்.

> "நுண்புறப் புறவின் செங்காற் சேவல்
> வெண்சிறைப் பெடையொடு விளையாட்டு விரும்பி
> வன்பரல் ஆர்ந்த வயிற்ற வாகிக்
> கண்பொரி கள்ளிக் கவர்சினை ஏறிக்
> கூப்பிடு குரலிசை சேட்புலத் திசைப்ப"

(உஞ்சை: 52)

என்று பாலைநிலக் காட்சியை அவர் வருணிக்கும் இடத்தும் செந்தமிழ் மரபு சிறந்து பொலிதல் காண்க. மேலும், இந்நூலுள் இயந்திரவண்டி, விமானம், மாய

யானை போன்ற பல இயற்கைக்கு மேற்பட்ட பொருள்கள் (Supernatural Objects) குறிக்கப்படுகின்றன. பெண்ணின் பெருந்தகைமை, கல்வி, மக்கள்ஒழுக்கம், அரசியல், கலை போன்ற பலவேறு செய்திகளையும் நாம் இதனின்று அறிகிறோம். 'அந்நாளைய நாகரிக வாழ்வின் சிறப்பெல்லாம், வகையெல்லாம், இந்நூலில் விளங்குவது போல வேறு எந்தத் தமிழ்நூலிலும் விளங்குவதில்லை' என்று பல்கலைச் செல்வர் தெ. பொ. மீ அவர்கள் கூறுவர். ‡

இந்நூல் முழுதும் கிடைக்கப் பெறுமை தமிழர்தம் தவக்குறைவே. முதலிலும், இடையிலும், ஈற்றிலும் பல செய்யுட்கள் காணப்பெறவில்லை. இதன்காலம் ஏழாம் நூற்றாண்டு என்பர்.

**சீவகசிந்தாமணி :** இக்காப்பியம் சிந்தாமணி என்றும் வழங்கப்பெறும். இப்பெயர் இதற்குத் தன்மையால் அமைந்தது என்பர் சங்கரநமச்சிவாயர். ஆயின், சீவகன் சுடுகாட்டில் பிறந்ததும் அவன் தாயான விசயை 'சிந்தாமணியே கிடத்தியால்' என்று கூறிப் புலம்புவதால், அவனைப்பற்றிய இந்நூலுக்கும் இப்பெயர் வந்தது என்ற கருத்தைப் பலரும் உடன்படுகின்றனர். † சீவகன் பிறந்து கல்வி பயில்வதனை நாமகளை மணத்தல் என்றும், போரில் வெல்லுதலை மண்மகளை மணத்தல் என்றும், அரசனுதலைப் பூமகளை மணத்தல் என்றும் சீவகன் பிறமகளிரை மணத்தலோடு ஒருங்குவைத்து மணத்தையே பாடுதலின், இதற்கு மணநூல் என்ற பெயரும் உண்டு.

---

‡ சமணத்தமிழ் இலக்கிய வரலாறு—பக். 95

† சிந்தாமணியின் ஓம்படைச் செய்யுளும் சிந்தாமணி என்றே பெயரிட்டழைக்கின்றமை காண்க.

**கதைச்சுருக்கம் :** ஏமாங்கத நாட்டிற்கு அரசன் சச்சந்தன் என்பவன். இவன் தன் மனைவி விசயை மீது கொண்ட காதலால் அரசாட்சியைக் கட்டியங் காரனிடம் ஒப்படைத்து விடுகிறான். அவன் வஞ்சக மாய்ச் சூது செய்து போருக்கு அழைத்துச் சச்சந் தனைக் கொன்று விடுகிறான். கருவுற்றிருந்த விசயை மயிற்பொறியின் உதவியால் வானவெளியிற் பறந்து சென்று ஓர் இடுகாட்டில் சீவகனைப்பெற்றுப் பிரியாவிடை கொண்டு தவம் செய்யச் செல்கிறாள். கந்துக்கடன் என்ற வணிகன் சீவகனை எடுத்துச் சென்று தன்மகனைப் போன்று செல்லமாக வளர்க் கிறான். சீவகனது கைத்தூண் தின்று யானைத்தீ என்னும் நோய் தீரப்பெற்ற அச்சணந்தி என்பவர் சீவகனுக்கு ஆசிரியராய் அமைந்து அவனது பிறப் பின் உண்மையைக் கூறி அவனைத் தெருட்டுகிறார். அவரது அறிவுரைப்படி யாரும் அறியாமல் ஓராண்டு காலம் வாழ்கிறான், சீவகன். வேட்டு வர்கள் ஆயர்களது மாட்டு நிரைகளைக் கவர்ந்து செல்ல, அவைகளை மீட்க இயலாது கட்டியங்காரன் உட்பட யாவரும் வருந்தும் பொழுது, சீவகன் அவ்வேட்டுவர்களைக் கொல்லாது துரத்தி அடித்து விட்டு ஆனிரைகளை மீட்டுவந்து ஆயர்தலைவன் நந்த கோபனது மகளான கோவிந்தையைத் தன் நண்பன் பதுமுகனுக்கு மணமுடித்துவைக்கின்றான். பின்னர் யாழ்ப் போரில் காந்தருவ தத்தையை வென்று அவளை மணந்து கொள்கிறான். பாம்பு கடித்த பதுமையையும் நச்சு நீக்கி மணந்து கொள்ளுகிறான். தன் கணவனு தற்குரியவனைத் தவிரப் பிற ஆடவர்களைக்கண்டு நாணுத கேமசரியார் இவனைக் கண்டு நாணிக் காதலுற, அவளை மணக்கின்றான். பின் ஊர்ஊராகத் திரிந்து

வருகையில் அரசிளங்குமரர்க்கு விற்றெழில் கற்பித்துக் கனகமாலையை மணந்து இன்புற்று வருகையில், அவனுடைய தோழர்களால் விசயை வாழும் இடம் அறிந்து அங்குச் சென்று அவளைத் தன் மாமன் கோவிந்தனிடம் அனுப்பி விடுகிறான். பின்னர், சீவகன் ஏமாங்கத நாட்டிற்குத் திரும்ப, இராசமாபுரத்தில் விமலை பந்தாடுகையில் அவளைச் சந்தித்து மணந்து கொள்கிறான். சுண்ணப் போட்டியில் குணமாலைக்குத் தோற்ற சுரமஞ்சரி சீவகனையே அடையவேண்டும் என்று ஏங்கிப் பிற ஆடவரைக் கண்ணெடுத்து நோக்காது கோயிலில் வழிபாடு செய்ய, இவன் அவளைக் கிழவனுகி மணப்பதாகச் சூளுரைத்து அவளை மணந்து கொள்கிறான். தாயின் அறிவுரைப்படிக் கோவிந்தனிடம் சென்று, எந்திரப் பன்றியை அம்பால் எறிந்துவென்று கோவிந்தையாரை மணந்து கொள்கிறான். கட்டியங்காரன் உட்படப் பல மன்னர்கள் அப்போட்டியில் தோற்றுவிட்டனர். கோவிந்தன், சீவகன் யார் என்று கூறப் போர் மூள்கிறது. சீவகன் கட்டியங்காரனைப் போரில் வென்று கொல்கிறான். பின் அரசை மீட்டுத் தன் தேவியருடன் இன்பமனுபவித்து மக்களைப்பெற்று, முடிவில் வாழ்வின் நிலையாமையைக் கொம்பேறும் குரங்குகளால் கண்டுகொண்டு பற்றை நீத்துத் துறந்து முத்திமகளை மணந்துகொள்கிறான்.

இக்கதையைப் பாடும் திருத்தக்கதேவர் இயற்கைக் கவினையும் இன்னிசைச் சுவையையும் தமிழ்ச் சுவையுடன் கூட்டி இக்காப்பியத்தைச் சமைத்துள்ளார். நாட்டுப் படலமும் நகரப் படலமும் ஓர் இலட்சியக் கனவாக விரிகின்றன. பின்னர்க் காவியம் பாட வந்தவர்க்கெல்லாம் இவரே இத்துறையில் வழி காட்டியாகத் திகழ்கிறார் என்பர். இதன் பதிப்பாசிரி

யரான டாக்டர். ஐயர் அவர்கள் "இது பழைய இலக்கிய உரைகளிலும் இலக்கண உரைகளிலும் உரையாசிரியர்களால் மேற்கோளாக எடுத்துக்காட்டப் பட்டுள்ள பிரமாண நூல்களுள் ஒன்று. முச்சங்கத்தும் எழுந்தருளியிருந்து தமிழாராய்ந்த தெய்வப் புலவர் கள் அருளிச் செய்த இலக்கியங்கள் போன்று செந் தமிழ் நடையில் சிறந்துள்ளது. வடமொழியில் வான்மீகம் போல எல்லா வருணனைகளும் தன்பால் அமையப் பெற்றிருத்தலின் மகாகாவியம் என்று கூறப்பட்டிருத்தலே யன்றி, பிற்காலத்து அதிமதுர மான காப்பியங்கள் இயற்றிய மகாகவிகள் பலர்க்கும் இன்ன இன்னவற்றை இன்ன இன்னவாறு வருணித்துப் பாடுகவென அவ்வான்மீகம் போல வழிகாட்டியதும் இந்நூலே என்பர்" என்று தமது முதற்பதிப்பின் முகவுரையில் கூறிப் போந்துள்ளனர். மேலும், கம்பன் இக்காவியத்தில் காணப்பெறும் முறைகள் சிலவற்றை எடுத்துத் தன் காவியத்தில் அமைத்துள்ளான் என்று கூறும் ஒரு வழக்காறு உண்டென்று ஐயரவர்களே கூறுகின்றார்.

இனி, ஒரு சில எடுத்துக் காட்டுகள் மூலம் நூலின் சுவையினை நுகர்வோம். கோதாவரி ஆற்றிற்குச் சான்றோர் தம் கவியை உவமையாக்கிக் காட்டும் கம்பனைப் போன்றே இவரும்,

**"சொல்லரும் சூற்பசும் பாம்பின் தோற்றம்போல்**
**மெல்லவே கருவிருந் தீன்று மேலலார்**
**செல்வமே போல்தலை நிறுவித் தேர்ந்தநூற்**
**கல்விசேர் மாந்தரின் இறைஞ்சிக் காய்த்தவே"**

**(நாமகள் : 24)**

என்று, வயல்களில் தலைசாய்த்து விளங்கும் நெற்கதிர்களுக்குக் கல்வி சேர் மாந்தரை உவமையாக்கிக் காட்டும் திறம் ஓர்ந்து இன்புறத்தக்கது.

"தண்காஞ்சித் தாதாடித் தன்னிறங் கரந்ததனைக்
கண்டாணு மடப்பெடை கிளியெனப்போய்க் கையகல
நுண்தூவி இளஞ்சேவல் நோக்கோடு விளிபயிற்றித்
தன்சிறகாற் பெடைதழுவத் தலைவந்த திளவேனில்"
(காந்தருவ : 157)

எனவரும் பாட்டு, இளவேனிலின் வருகையை எழுச்சியுடன் இசைக்கின்றது.

இன்பச்சுவை தலைதூக்கி நிற்கும் இக்காப்பியத்தில் துன்பச் சுவையும் விரவித் திகழ்கின்றது. இடுகாட்டில் மகவைப் பெற்ற விசயை,

"வெவ்வாய் ஓரி முழவாக
விளிந்தார் ஈமம் விளக்காக
ஒவ்வாச் சுடுகாட் டுயரரங்கின்
நிழல்போல் நுடங்கிப் பேயாட
எவ்வாய் மருங்கும் இருந்திரங்கிக்
கூகை குழறிப் பாராட்ட
இவ்வா றாகிப் பிறப்பதோ
இதுவோ மன்னர்க் கியல்வேந்தே"
(நாமகள் : 280 )

என்று புலம்பும்போது, அவளுடைய உள்ளத்துணர்ச்சியை நம்மால் தெளிவாக உணர முடிகின்றது.

காப்பிய ஆசிரியரான திருத்தக்கதேவர் சோழர் குடியைச் சார்ந்த சமணத் துறவி என்பதை 'முந்நீர் வலம்புரி' என்ற இதன் ஓம்படைச் செய்யுளுக்கு நச்சினார்க்கினியர் கூறும் உரையால் உணரலாம்.

கி. பி. ஒன்பதாம் நூற்றுண்டின் பிற்பகுதியில் பொங்கியெழுந்து வந்த சோழப் பேரரசு எவ்வா றெல்லாம் உயர வேண்டும் என்று அவர் கண்ட கனவே இக்காவியமாக உருப்பெற்றது என்பர், பேராசிரியர் தெ. பொ. மீ. அவர்கள். * கடுந்தவ வாழ் வாகிய சமண சமயக் கருத்துக்களைக் கற்போர் அறியாதவாறு காவியத்தில் கலந்து அவ் வாழ்வை ஒரு வெற்றி வாழ்வாக, மணவாழ்வாகப் படைத்து விடுகிருர் திருத்தக்க தேவர்.

மைசூர் மாநிலத்தில் சிரவண பெல்குளத்தில் காணப்பட்ட கல்வெட்டு ஒன்று ¶ மகாபுராணத்தின் இரண்டாம் பகுதியைப் பாடிய குணபத்திராச்சாரி யாரையும், சிந்தாமணி ஆசிரியரையும், அவருக்குபின் வந்த சூளாமணி ஆசிரியர் ஸ்ரீவர்த்தமான தேவரையும் குறிக்கின்றது. இது குறிப்பிடும் சிந்தாமணி ஆசிரியர் திருத்தக்கதேவரே என்று பலரும் உடன்படுகின்றனர்.§ குணபத்திராச்சாரியார், கி. பி. 9 ஆம் நூற்றுண்டின் இறுதியில் பட்டமேற்ற இராட்டிரகூட அரசனை அகாலவர்ஷனின் அவைக்களப் புலவர். மேலும், இந்நூற் சிறப்புப் பாயிரம் "பொய்யா மொழிபுகழ் மையறு சீர்த்தித் திருத்தகு முனிவன்" என்று பாடு கிறது. இப்பொய்யாமொழி பத்தாம் நூற்றுண்டின் முற்பகுதியில் வாழ்ந்த சத்தியவாக்கி என்ற கங்க மன்னனே என்பர். மேலும், பத்தாம் நூற்றுண்டைச் சார்ந்த யாப்பருங்கல விருத்தி, சிந்தாமணியை எடுத்தாள்கின்றது. இன்னேரன்ன காரணங்களால்

---

* சமணத்தமிழ் இலக்கிய வரலாறு—பக். 103

¶ Ep. Indica—Vol III : p: 190—191

§ ஸ்ரீ. கோபிநாதராவ் (செந்தமிழ். தொகுதி 99)

இது ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதியைச் சார்ந்தது என்பர். ‡

சீவகசிந்தாமணி, சமணரால் மட்டுமின்றி எல்லோராலும் நன்கு பயிலப்பட்ட நூலாகும். மக்களிடையே நன்கு வழங்கிவந்த சிறப்பினையுடையது இக் காப்பியம்.

**சூளாமணி :** இக் காப்பியத்தை இயற்றியவர் தோலாமொழித் தேவர். இவர் திருத்தக்க தேவருக்குப் பின் தோன்றியவர் என்பதைச் சிரவண பெல்குளத்துக் கல்வெட்டினால் அறிந்தோம். * இக் காவியம் சிந்தாமணியைப் போன்றே காப்பிய அழகு அனைத்தும் நிரம்பப் பெற்றது; எவ்வகையிலும் பெருங்காப்பிய வரிசையில் சுடர்விட்டுத் துலங்கும் தகுதியுடையது. எனினும், ஐஞ்சிறு காப்பிய வரிசையில் இடம் பெற்றது காலம் செய்த கோலம் என்றே கொள்ளல் வேண்டும். 'தோலா நாவின் சுச்சுதன்' (308) என்றும் 'ஆர்க்கும் தோலாதாய்' (1473) என்றும் இக் காப்பியத்தில் வழங்கிய அருமை நோக்கி இதன் ஆசிரியருக்குத் தோலாமொழித் தேவர் என்ற பெயருண்டாயது என்பர்.

இக்காவியம் கூறும் கதை குணபத்திராச்சாரியார் செய்த ஸ்ரீ புராண உத்தரபாகத்தில் கூறப்பட்டிருக்கிறது.

---

‡ திரு. சீனிவாசப் பிள்ளை அவர்கள் பத்தாம் நூற்றாண்டின் துவக்க காலத்தது என்பர்—தமிழ்வரலாறு : முதற் பகுதி—பக். 232.

*சிரவண பெல்குளத்துக் கல்வெட்டு குறிக்கும் வர்த்தமான தேவர் தோலாமொழித் தேவரே என்று திரு. கோபிநாதராவ் போன்றூர் கருதுவர்—தமிழ் வரலாறு—K. சீனிவாச பிள்ளை. பக் : 237.

பயாபதி என்னும் அரசன் சுரமை என்றதொரு நாட்டை ஆண்டு வந்தான். அவனது இரு மனைவியர்க்கும் விசயன், திவிட்டன் என்ற மக்கள் தோன்றுகின்றனர். அவர்களுள், விசயன் பலராமன் போன்றும், திவிட்டன் கண்ணன் போன்றும் சிறப்புக்களைப் பெற்று, உரிய பருவத்தில் கல்வி கேள்விகள் கற்றுக் காளையராகின்றனர். திவிட்டன் விஞ்சையர் மகளாகிய சயம்பாவை மணக்க முடிவு செய்யப்படுகிறது. அது காரணமாக அசுவ கண்டன் என்னும் விஞ்சையர் கோன் அவன் மீது அழுக்காறும் பகைமையும் கொண்டு மாயச் சிங்கத்தை ஏவி அவனைக் கொல்ல முற்படுகிறான். திவிட்டனைக் கண்ட மாயச் சிங்கம் ஓடிவிட, உண்மைச் சிங்கத்தை வாய்பிளந்து கொல்கிறான் திவிட்டன். முடிவில் அசுவகண்டனுடன் போர் ஏற்பட்டு அவன் போரில் மாள்கிறான். வெற்றி பெற்ற திட்டன் விஞ்சையர் மகளை மணக்கின்றான். திவிட்டன் கோடிக் குன்றெடுத்து மக்களைக் காக்கின்றான். திவிட்டனுக்குச் சோதிமாலை என்ற பெண் பிறக்க, அந்தச் சோதிமாலை தன் மாமன் மகன் அமுததேசனை சுயம்வரத்தில் வரித்து மணக்கின்றாள். பயாபதி துறவை மேற்கொண்டு முத்தியடைந்து உலகுக்கொரு சூளாமணியாகின்றான்.

இந்த வரலாற்றினைச் சுவைக்கச் சுவைக்கப் பாடுகின்றார் தோலாமொழித் தேவர். இக்காவியத்தில் அரசியல் நீதிகள், தூதுசெல்லும் முறை, குடிமக்கள் திருவிழா, வேனில் விழா, அமைச்சர் பேரவை, சுயம்வர நிகழ்ச்சி, தெய்வப்போர், மாயப்போர் முதலியன வெல்லாம் இடம் பெற்றுத் திகழ்கின்றன. தமிழ் முறைப்படி ஐந்திணை வளம் கூறப்படுகிறது. நாட்டு, நகர வருணனைகள் காணப்படுகின்றன. எனினும்,

வடமொழியின் சாயல் இதில் படுவதாகக் கூறுவர். வடமொழி நூல்களில் வருவது போன்று விதூஷகன் வருகிறான். இயற்கைக்கு அப்பாற்பட்ட பல செய்திகள் பேசப்படினும் இயற்கையின் அழகு இக்காவியத்தின் பல இடங்களில் கொலுவீற்றிருக்கக் காண்கிறோம். இவ்வளவு இனிமையாகச் செல்லும் செய்யுட்கள் வேறு இல்லை என்றும், சிந்தாமணியிலும் இந்த ஒட்டமும் இனிமையும் இல்லை என்றும் பேராசிரியர் தெ. பொ. மீ. கூறுவர். § 'சிந்தாமணியின் விருத்த யாப்பு இடையிடையே தடைப்பட்டுச் செல்கின்றது. சூளாமணியோ செப்பமுற்ற நடையோடு விளங்குகின்றது' என்பர் திரு. கி. வா. ஜ அவர்கள்.* இக்காரணங்களால் இது சிந்தாமணிக்குப் பிந்தியது என்பர். கண்ணன் கதை சமணரிடம் வழங்குவதைக் காப்பியமாக்கிக் காட்டியுள்ளார் தோலா மொழித் தேவர்.

சேந்தன் என்னும் தமிழின் கிழவன் அவைக்களத்தில் இந்நூல் அரங்கேற்றப்பட்டது என்று இதன் பாயிரம் பாடுகிறது. † இச் சேந்தன் என்பவன் அவனி சூளாமணி மாறவர்மன் என்னும் பாண்டியன் என்றும், இவனது காலம் ஒன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதி என்று கூறலாம் என்றும் திரு. க. அ. நீலகண்ட சாஸ்திரியார் கூறுவர். ‡ இதனால் இக்காவியம் எழுந்த காலமும் அதுவே என்பர். கி. பி. ஏழாம் நூற்றாண்டிற்கு முற்படாமலும் ஒன்பதாம்

---

§ *சமணத் தமிழ் இலக்கிய வரலாறு—பக்: 113*

* *தமிழ்க் காப்பியங்கள்—பக் : 244.*

† *சூளாமணி : பாயிரம்—4.*

‡Cholas, vol ii pp—510, 544.

நூற்றுண்டிற்குப் பிற்படாமலும் எழுந்தது என்பர் தெ. பொ. மீ அவர்கள்.

இனி, இக்காவியத்தில் நுழைந்து கவிதையைச் சுவைப்போம்.

"வானிலங் கருவிய வரையும் முல்லைவாய்த்
தேனிலங் கருவிய திணையும் தேறல்சேர்
பானலங் கழனியும் கடலும் பாங்கணி
நானிலங் கலந்துபொன் நரலும் நாடதே"

(நாட்டுச் சருக்கம் : 12)

என்ற பாட்டு, சுரமைநாட்டில் நானிலமும் கொலுவீற்றிருக்கும் காட்சியைக் காட்டுகிறது. அவற்றுள் நெய்தல் நிலத்தின் தனிப்பட்ட காட்சியையும் காண்போம்.

"கோடு டைந்தன தாழையும் கோழிருள்
மோடு டைந்தன மூரிக் குவளையும்
தோடு டைந்தன வாம்பலும் கற்பகக்
காடு டைந்தன போன்றுள கானலே"

(நாட்டுச் சருக்கம் : 20)

இயற்கை மாத்திரம் அன்றிக் காவியத்தின் உயிர்நாடியாக விளங்கும் திவிட்டனின் தோற்றப் பொலிவைக் காட்டும் பாடல் இது:

"பூவையம் புதுமலர் புரையு மேனியன்
தூவிரி தாமரை தொலைத்த கண்ணினன்
தீவிரி யாம்பலிற் சிவந்த வாயினன்
மாவிரி திருமறு வணிந்த மார்பினன்"

(குமாரகாலச் சருக்கம் : 8)

**யசோதர காவியம் :**

சிறு காப்பியங்கள் ஐந்தனுள் ஒன்றுகிய இக்காப்பியம் ஐந்து சருக்கமும் 320 செய்யுட்களும் கொண்டு

---

* சமணத்தமிழ் இலக்கிய வரலாறு, பக். 111

விளங்குகிறது. இதனை இயற்றியவர் வெண்ணுவலுடையார் வேள் என்பவராவர் என்பர். கருமத்தின் பயனை வற்புறுத்த வந்த ஒரு கதையே இது.

உதயநாட்டு மன்னன் மாரிதத்தன் என்பவன் சண்டமாரி என்னும் தெய்வத்திற்கு அயரிஷி என்னும் இளஞ் சமணத் துறவியையும், அவன் தங்கை அபயமதியையும் பலியிடுவதற்காகப் பிடித்துக்கொண்டு வந்தான். அவர்கள் பஞ்சபரமேட்டிகளைத் தொழுது உயிர்விடத் துணிகின்றனர். அவர்களது இன்முகத்தைக் கண்டு வியந்த மன்னன் அதற்குக் காரணம் கேட்க, அவர்கள் பழம்பிறப்புவரலாற்றினைக் கூறுகின்றனர். அசோகன் துறவிற்குப்பிறகு அவன் மகன் யசோதரன் அமிர்தபதி எனும் தன் தேவியுடன் அரியணை ஏறுகிருன். அட்ட பங்கன் என்னும் யானைப்பாகன் பாடிய பாடலைக் கேட்ட அரசிஅவனிடம் ஈடுபட்டுக் கள்ள உறவு கொள்கின்ருள். அதனை அறிந்த யசோதரன் காமத்தை முனிந்து துறவு மேற்கொள்ள விரும்புகிருன். அவனுடைய தாயோ சண்டமாரிக்குப் பலியிட்டுப் பரிகாரம் தேட முற்படுகிருள். உயிர்க்கொலைக்கு அஞ்சி மாவால் கோழி செய்து பலியிடுகின்றனர். அதுவும் உயிர்பெற்றுப் புலம்புகிறது.—அமிர்தமதி நஞ்சிட்ட சோறிட, யசோதரனும் அவன்தாயும் இறக்கின்றனர். பலப்பல விலங்குகளாக மாறிப்பிறந்து இறுதியில் கோழிப் பிறவியை அடைகின்றனர். யசோதரனது மகன்வளர்ந்து பட்டம் ஏற்கிருன். அவன் அவைக் களத்திற்கு வந்த சமணத் துறவி ஒருவரால் பழம்பிறவி வரலாற்றை உணர்கிருன். தன் இரட்டை மக்கள் இருவரும் தன் தந்தையும் பாட்டியும்தாம் என்பதையும் அறிகின்ருன். இறுதியில் துறவை மேற்கொள்ளுகிருன்.

கி.பி. பத்தாம் நூற்றுண்டிலேயே யசோதரன்கதை தமிழில் வழங்கியது. சோமதேவசூரி, வாதிராஜசூரி, புஷ்பதந்தர் என்பவர்கள் யசோதரன் கதையை வட மொழியில் கூறியிருக்கின்றனர். புட்பதந்தர் தம் கதையின் தமிழ்வடிவமே யசோதர காவியம் என்று ஒரு தமிழ்ப் பாடல் கூறுகிறது.

இசை காமத்தை விளைவிப்பது என்னும் சமணக் கருத்தை வலியுறுத்த வந்ததே இக்காவியம் என்பர். யானைப் பாகன் பாடிய பாடலால் அரசி அவன்மீது காமம் கொண்டு பற்பல தீமைகளை அடுத்து அடுத்துச் செய்கின்றுள். யானைப்பாகன் பாடிய பாடல் மாளவ பஞ்சமம் என்னும் பண் என்பர். இது 300 ஆண்டுகளுக்கு முன்னர் தோன்றியிருக்க முடியாது என்றும், அதனுல் இந்நூல் விஜயநகர அரசிற்கு முற்பட்டதன்று என்றும் அறிஞர்கள் கூறுகின்றனர். யசோதர காவியம் சூளாமணியைப் போல் சிறந்ததன்று என்பர்.

**உதயண குமார காவியம்:** இது உதயணன் கதையையே கூறினுலும் பெருங்கதையினும் வேறுபட்டதாகும். அதற்கு மிகவும் பிற்காலத்தில் எழுதப்பட்டது இது. 367 செய்யுட்களைக் கொண்டது. திருத்தமான நடையுடையதன்று என்று இதன் பதிப்பாசிரியரான டாக்டர். ஐயர் அவர்களே கூறுவர்.

**நாக குமார காவியம்:** இதுபற்றி ஏதும் அறிவதற்கில்லை; பெயரளவில் மட்டுமே காணப்படுகிறது.

## திருவிசைப் பாக்கள்

சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள் ஒன்பதாவதாக விளங்குவன திருவிசைப் பாக்கள். இவற்றை

ஒன்பதின்மர் பாடியுள்ளனர். அவர்களது பெயர்கள் வருமாறு : (1) திருமாளிகைத்தேவர் (2) கருவூர்த் தேவர் (3) சேந்தனார் (4) பூந்துருத்தி நம்பிகாடவநம்பி (5) கண்டராதித்தர் (6) வேணாட்டடிகள் (7) திருவாலிய முதனார் (8) புருடோத்தமநம்பி (9) சேதிராயர். இனி, இவர்களைக் குறித்துச் சிறிது நோக்குவோம்.

**திருமாளிகைத் தேவர்:** இவர் திருவாவடுதுறையில் தோன்றிய சைவப் பெரியார். கருவூர்த்தேவரும் இவரும் ஒரே காலத்தவர் என்பர்.‡ முன்னவர் தேவி வழிபாட்டிலும் இவர் தேவன் வழி பாட்டிலும் சிறந்தவர் என்று கூறுவர். சேந்தனாரையும் இவரையும் பற்றிய கல்வெட்டு ஒன்று திருவீழிமிழலையில் கிடைத்திருப்பதால் இருவரும் ஒரு காலத்தவராவர்.

இவர் பாடிய திருவிசைப்பாப் பதிகங்கள் நான்கும் தில்லையில் பாடப்பெற்றன. இவர், தம் காலத்தில் வழங்கிய புறச்சமயங்களைப் பலவிடங்களிற் கடிந்துரைக்கின்றார்.

> ''புறஞ்சமண் புத்தர் பொய்கள்கண் டாயைத்
> தொண்டனேன் புணருமா புணரே''
>
> (1. கோயில்: 8)

என்று இவர் கூறுவது காண்க. இவரது கோயில் திருவாவடுதுறை ஆதீன மடத்துள் இருக்கின்றது.

**கருவூர்த்தேவர்:** இவர் கொங்குநாட்டுக் கருவூரைச் சேர்ந்த சைவப் பெரியார். இவர் பல்வேறு விந்தைகள் புரிந்தவர் என்றும், அதனால் இவர் ஒரு சித்தர் என்றும் கூறுவர். இவர் தஞ்சை இராசஇராசேச்சுரத்தில் சிவலிங்கத்தைப் பிரதிட்டை செய்வதற்கு உதவினர்

‡திரு. கா. சு. பிள்ளை—இலக்கியவரலாறு—பக்: 380

என்று திரு. C. K. சுப்பிரமணிய முதலியார் போன்றோர் கூறுவர்.* கோயில் (தில்லை), திருக்களந்தை ஆதித்தேச்சுரம், கீழ்க்கோட்டூர் மணியம்பலம், திருமுகத்தலை, திரைலோக்கிய சுந்தரம், திருப்பூவணம், திருச்சாட்டியக்குடி, கங்கைகொண்ட சோழேச்சுரம் என்னும் திருப்பதிகளுக்கு இவர் திருவிசைப்பாத் திருப்பதிகங்களை இயற்றியருளியுள்ளனர்.

**"கருதுவார் கருது முருவமாங் கங்கை**
**கொண்டசோ ளேச்சரத் தானே"**

என்று, இறைவன் 'தமர் உகந்தது எவ்வுரு அவ்வுரு தானாகி' வருவான் என்ற ஆன்றோர் வாக்குப்படிப் பாடுகின்றார். சிவபெருமான் பெண்ணைத் தன் பாகத்துள் வைத்திருந்தும் யோக நிலையை உடையவனாய் இருக்கின்றான் என்பதை "மங்கையோ டிருந்தே யோகுசெய் வானை" என்று பாடுகிறார். இவர், சிவனைச் சைவன் என்றே அழைக்கின்றார்:

**"தனியனே னுள்ளங் கோயில்கொண் டருளும்**
**சைவனே"**

**சேந்தனார்:** இவர் பட்டினத்தடிகளிடம் பணி பூண்டிருந்தவர். அவர் துறவு மேற்கொண்டுத் தனது செல்வத்தையெல்லாம் அறஞ்செய்யச் சொல்லியவாறே இவர் செய்ய, அரசன் இவரைச் சிறையில் இட்டான். பின்னர்த் தன் குருநாதர் அருளால் சிறை வீடு பெற்றார். பிறகு தில்லை சென்று, விறகு விற்று வரும் ஊதியத்தால் நாளும் சிவனடியார்க்கு உணவிட்டு மகிழ்ந்தார். சிவபெருமானே இவர் வீடு சென்று கூழ் உணவு பெற்று இவரது பெருமையை உலகம் அறியு

* **செந்தமிழ்ச் செல்வி**—Vol. IV, V

மாறு செய்தார் என்று இவரைப்பற்றி ஒரு வரலாறு உண்டு. இவர் தில்லையில் தேரோடும்படித் திருப்பல்லாண்டு பாடினர் என்றும் கூறுவர். திருவீழிமிழலை, திருவாவடுதுறை, திருவிடைக்கழி என்னும் திருப்பதிகளுக்கு இவர் பதிகங்கள் பாடியுள்ளார். இவரது திருவிடைக்கழித் திருவிசைப்பா முருகன் மீது பாடப்பெற்றது. அதில் இவர் முருகனைச் சுப்பிரமணியன் என்றே வழங்குவது குறிப்பிடத் தக்கதாகும்.

"தூவிநற் பீலி மாமயி லூருஞ்
சுப்பிர மண்ணியன் தானே"

சிவபெருமானுடைய மாபெரும் வடிவத்தை இவர் பின்வருமாறு பாடியுள்ளார்:

"எண்ணில்பல் கோடி சேவடி முடிகள்
எண்ணில்பல் கோடிதிண் தோள்கள்
எண்ணில்பல் கோடி திருவுரு நாம
ஏர்கொள்முக் கண்முகம் இயல்பும்
எண்ணில்பல் கோடி எல்லைக்கப் பாலாய்
நின்றைஞ்ஞூற் றந்தணர் ஏத்தும்
எண்ணில்பல் கோடி குணத்தரேர் வீழி
இவர்நம்மை ஆளுடை யாரே"

**பூந்துருத்திநம்பிகாடவநம்பி :**

இவர் திருப்பூந்துருத்தி என்னும் திருப்பதியைச் சார்ந்த ஆதிசைவர். இவர் தில்லைக்கும் திருவாரூர்க்கும் திருவிசைப்பாக்கள் பாடியுள்ளார். மூவரையும் பாடியிருப்பதால், இவர் அவர்களுக்குக் காலத்தால் பிந்தியவர் ஆவர்.

"பக்தியாய் உணர்வோர் அருளைவாய் மடுத்துப்
பருகுதோ றமுதமொத் தவர்க்கே

தித்தியா விருக்கும் தேவர்காள் இவர்தம்
திருவுரு இருந்தவா பாரீர்
சத்தியாய்ச் சிவமாய் உலகெலாம் படைத்த
தனிமுழு முதலுமாய் அதற்கோர்
வித்துமாய் ஆரு ராதியாய் வீதி
விடங்கராய் நடம்குலா வினரே''

என்னும் இவரது பாடல் மிகவும் அழகும் இனிமையும் நிறைந்திருப்பது காண்க.

**கண்டராதித்தர்:** 'மேற்கெழுந்தருளிய தேவர்' என்று கல்வெட்டுக்களால் அழைக்கப்பெறும் 'சிவ ஞான' கண்டராதித்தர் முதற் பராந்தகனது மகனுவார். இவர் மிகச் சிறந்த சிவபக்தர். சைவகுரவர் மூவர் தமிழையும் பக்தியோடு பாடிச் சிந்தித்திருப்பவர். எனவேதான் இவர் சிவஞான கண்டராதித்தர் எனப் படுவாராயினர். இவரது மனேவியார் செம்பியன் மாதேவியாரும் 'மாதேவடிகள்' என்று கல்வெட்டுக் களால் பாராட்டப்பெறும் சிவபக்தர். சைவத் திரு முறைகளான 'சிவஞான'த்தையே எஞ்ஞான்றும் ஓதி மகிழ்ந்த இவர் மேற்கே கங்கநாட்டுச் சிவாலயங் களைத் தரிசிக்கவேண்டிச் சென்றமையால், இவர் 'மேற் கெழுந்தருளிய தேவர்' என்று கல்வெட்டுக்களால் குறிக்கப்பட்டார்.*

கண்டராதித்த தேவர் 'மேற்கெழுந்தருளிக்' கங்க நாட்டில் இருந்த காலத்தில் தம் குல தெய்வமாகிய தில்லைப்பெருமானைக் காணும் விருப்பத்தோடு விரைந்து வந்தார்.

''மின்னார் உருவம் மேல் விளங்க
வெண்கொடி மாளிகை சூழப்

---

* A. R. No 540 Of 1920.

"பொன்னார் குன்ற மொன்று வந்து
நின்றது போலு மென்னாத்
தென்னா என்று வண்டு பாடும்
தென் தில்லை யம்பலத்துள்
என்னா ரமுதை எங்கள் கோவை
என்று கொல் எய்துவதே"

என்று பாடும் இவரது தீந்தமிழ் இசையில் தில்லை வாணனைக் காணத் துடிக்கும் இவரது நெஞ்சின் நிலையை நாம் உணர்கின்றோம். இவர் பாடிய திருவிசைப்பா தில்லையம்பலத்தைப் பற்றியது. இது பஞ்சமம் என்னும் பண்ணடைவு பெற்றது. மூவர் தமிழை இவர் கலந்து ஓதிய பயிற்சியால் இவரது திருவிசைப்பாக்களில் அவற்றின் சாயலைக் காணலாம். இவர் கி. பி. 957 இல் இறைவனடி சேர்ந்தார் என்று வரலாற்றறிஞர் கூறுவர். *

**வேணாட்டடிகள் :** வேணாடு என்பது திருவாங்கூர் என்பர். இவரது இயற்பெயர் தெரிந்திலது. இவர் தில்லைக்கு ஒரு திருவிசைப்பா பாடியுள்ளார். இவரைப் பற்றி அதிகம் தெரியவில்லை. இவரது சொல் நடையால் இவர் பத்தாம் நூற்றாண்டைச் சார்ந்தவர் என்று திரு. கா. சு. பிள்ளை அவர்கள் கூறுவர்.§

**திருவாலியமுதனார் :** திருவாலி என்பது இவர் ஊராதல் வேண்டும். இவர் கோவில் (தில்லை) பற்றி நான்கு திருவிசைப் பாக்கள் பாடியுள்ளார். முதற்பதிகத்தில் இறைவனது 'பாதாதிகேச' வருணனை காணப் படுகிறது.

---

* பிற்காலச் சோழர் சரித்திரம்—Vol I—பக் : 64.
§ இலக்கிய வரலாறு—பக் : 335.

**புருடோத்தம நம்பி :** 'மாசிலா மறைபல ஓது நாவலன்' என்று இவர் தம்மை அழைத்துக் கொள்வதால் இவர் ஓர் அந்தணர் எனத் தெரிகிறது. இவர் தில்லைக் கூத்தன் மீது இரண்டு திருப்பதிகங்கள் பாடியுள்ளார். இவரைப் பற்றியும் அதிகமாக அறிவதற்கில்லை.

**சேதிராயர் :** மெய்ப்பொருள் நாயனார்தம் சேதி நாட்டைச் சார்ந்த மன்னர் மரபினர் இவர். இவர் தில்லையம்பலவாணன் மீது ஒரு பதிகம் பாடியுள்ளார். அது அகத்துறைகள் அமைந்த பாடல்களையுடையது.

## பதினோராம் திருமுறை

பதினோராம் திருமுறையுள் பன்னிரு புலவர்கள் செய்த அருட்பாக்கள் இடம்பெற்றுள்ளன. அவர்கள் 1. திருவாலவாயுடையார் 2. காரைக்கால் அம்மையார் 3. ஐயடிகள் காடவர்கோன் 4. சேரமான் பெருமாள் நாயனார் 5. நக்கீரதேவ நாயனார் 6. கல்லாட தேவர் 7. கபிலதேவர் 8. பரணதேவர் 9. இளம்பெருமான் அடிகள் 10. அதிராவடிகள் 11. பட்டினத்துப் பிள்ளையார் 12. நம்பியாண்டார் நம்பி— ஆவர். இவர்களுள் காரைக்கால் அம்மையார், சேரமான் பெருமாள் நாயனார் ஆகிய இருவரது காலத்தையும் ஒருவாறு முடிவுசெய்ய முடிந்ததால், கால அடிப்படையில் அவர்களைப்பற்றி முன்னரே கண்டோம். ஏனையோருள் பட்டினத்துப்பிள்ளையாரும், நம்பியாண்டார் நம்பியும் சோழர் காலத்தைச் சேர்ந்தவர்கள் என்பது உறுதி. பிறர் காலம் தெளிவாகத் தெரியவில்லை. எனினும் அவர்கள் பதினோராம் திருமுறையில் வைத்துப் பேசப் படுவதால் அவர்களைப்பற்றியும் இந்தக் கால எல்லை

யுள் ஆராய்வதால் இழுக்கொன்றுமில்லை என்று கருதி மேற்செல்வோம்.

**திருவாலவாயுடையார் :** மதுரையில் எழுந்தருளி யுள்ள சோமசுந்தரக் கடவுளே இத் திருவாலவாயுடை யார் என்பர். அழகிய ஆசிரியப்பாவால் இயன்ற 'திருமுகப்பாசுரம்' என்ற ஒரு பாடல் இவரால் இயற் றப்பட்டதாகப் பதினேராம் திருமுறையின் முதற்கண் வைக்கப்பட்டுள்ளது. 'அன்னம் பயில்பொழில் ஆல வாயில், மன்னிய சிவன்யான்' என்று இப்பாடலின் ஆசிரியர் தம்மை அறிமுகப்படுத்திக் கொள்வதால், இவர் இறையனுர் என்று கருதப்பட்டனர் போலும். இத் திருமுகப்பாசுரம் பாணபத்திரனுக்குப் பரிசில் வேண்டிச் சேரமான் பெருமாள் நாயனுருக்கு எழுதப் பட்டது என்பர். அவ்வாறு எனின், இதன் காலமும் ஏழாம் நூற்றுண்டின் இறுதியும் எட்டாம் நூற்றுண் டின் தொடக்கமும் ஆகும். எனினும் இது முடிந்த கருத்தன்று.

**ஐயடிகள் காடவர்கோன் :** இவர் அறுபத்துமூன்று நாயன்மார்களுள் ஒருவர். இவர் இயற்றிய நூல் சேத்திரத் திருவெண்பா என்பதாகும். இதனுள் இருபத்துநான்கு வெண்பாக்கள் அடங்கியுள்ளன. நிலையாத வாழ்க்கையை எண்ணிப்பார்த்து இறை வனது நிலைத்த துணையைத் தேடிக்கொள்ளுமாறு நெஞ்சுக்கு அறிவுறுத்துகின்றது இந்நூல்.

> **"தொட்டுத் தடவித் துடிப்பொன்றுங் காணுது**
> **பெட்டப் பிணமென்று பேரிட்டுக்—கட்டி**
> **எடுங்களத்தா என்னுமுன் ஏழைமட நெஞ்சே**
> **நெடுங்களத்தான் பாதம் நினை"** (8

**நக்கீரதேவ நாயனுர் :** கயிலைபாதி காளத்திபாதி அந்தாதி, திருவீங்கோய் மலை எழுபது, திருவலஞ் சுழி மும்மணிக்கோவை, திருவெழுகூற்றிருக்கை, பெருந்தேவ பாணி, கோபப்பிரசாதம், கார்எட்டு, போற்றித் திருக்கலிவெண்பா, திருமுருகாற்றுப்படை, திருக்கண்ணப்பர் திருமறம் ஆகிய பத்து நூல்கள் நக்கீரதேவ நாயனுரால் இயற்றப்பட்டன. இவற்றுள் திருமுருகாற்றுப்படையின் நடையினுக்கும் பிறவற் றின் நடையினுக்கும் மிகுந்த வேறுபாடு இருப்பதால், ஏனைய ஒன்பது நூல்களை இயற்றிய நக்கீரர் சங்கத்து நக்கீரரின் வேறுபட்டவர் ஆவர் என்பது தெளிவாக விளங்கும். இந்நூற்களின் பாக்கள் அனைத்தும் வெண்பாவாலும், ஆசிரியப்பாவாலும், கலித்துறைப் பாவாலும் யாக்கப்பெற்றவை; இனிய சுவையும் கற்பனை நயமும் மிக்கவை. இவற்றுள் திருவீங்கோய் மலை என்னும் நூலில் 70 வெண்பாக்கள் உள்ளன. அழகான இயற்கை வருணனைகளை இங்கே காண் கிறோம். காட்டுவேட்டுவன் ஒருவன், தான் எய்யத் தொடுத்த மானை நோக்கி அதன் கண்ணழகில் தன் காதலியைக் கண்டு, அதனைக் கொல்ல மனமின்றி அன் புடன் அனுப்பிவைக்கும் காட்சி ஒன்றனைப் புலவர் பின்வரும் பாடலில் காட்டுகின்றார்:

**"எய்யத் தொடுத்தோன் குறத்திநோக் கேற்றதெனக்**
**கையிற் கணைகளைந்து கன்னிமான்—பையப்போ**
**என்கின்ற பாவனைசெய் ஈங்கோயே தூங்கெயில்கள்**
**சென்றன்று வென்றான் சிலம்பு"** (12)

'திருக்கண்ணப்ப தேவர் திருமறம்' கம்பீரமான நடையையுடையது; 157 அடிகளைக்கொண்ட ஆசிரியப் பாவால் இயன்றது. திருக்கண்ணப்ப நாயனுரின் பிறப்புவாழ்க்கையைப் பற்றிப் பேசுகையில்,

"..............................பிறந்தது
தேனழித் தூன்உண் கானவர் குலத்தே, திரிவது
பொருபுலி குமுறும் பொருப்பிடைக் காடே, வளர்ப்பது
செங்கண் நாயொடு தீவகம் பலவே, பயில்வது
வெந்திறற் சிலையொடு வேல்வாள் முதலிய
அந்தமில் படைக்கலம் அவையே..."

என்று புலவர் வருணிப்பது சுவைமிக்கதாக உள்ளது.

**கல்லாடதேவர் :** கல்லாட தேவரும் 'திருக் கண்ணப்ப தேவர் மறம்' என்ற நூலைச் செய்துள்ளார். இதுவும் 38 அடிகளைக்கொண்ட அழகிய ஆசிரியப் பாவால் இயன்றது. இவரும் 'கல்லாடம்' என்னும் நூலை இயற்றியவரும் ஒருவர் என்று கூறுவர்.

"பரிவின் தன்மை உருவுகொண் டனையவன்
போழ்வார் போர்த்த காழகச் செருப்பினன்
குருதி புலராச் சுரிகை எஃகம்
அரையிற் கட்டிய உடைதோற் கச்சையன்"

என்று கண்ணப்பரின் தோற்றத்தைப்பற்றி இந்நூலும் சுவையுடன் பேசுகிறது.

**கபிலதேவர் :** மூத்த நாயனார் திருவிரட்டை மணிமாலை, சிவபெருமான் திருவிரட்டை மணிமாலை, சிவபெருமான் திருவந்தாதி ஆகிய மூன்று நூல்களும் இவரால் இயற்றப்பட்டவை. இவற்றின் நடையைக் கொண்டே இவர் சங்கத்துச் சான்றோராகிய கபிலரினும் வேறுபட்டவர் என்பது விளங்கும். விநாயகரைப் பற்றிப் பாடுவதால் இவர் ஏழாம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டவராதல் வேண்டும்.

**பரணதேவர் :** சிவபெருமான் திருவந்தாதி என்னும் நூல் இவரால் இயற்றப்பட்டது. 101 வெண்பாக்

களால் இயன்ற இந்நூல் சிவபெருமானுடைய சிறப் பியல்புகளை எடுத்துப்பாடுகிறது. 'அரியலால் தேவி யில்லை' என்ற கருத்துப்படி "மாயனைஓர்பாகம் அமர்ந் தானை" என்று இப்புலவர் பாடுகின்றார். சங்கத்துப் பரணர் அல்லர் இவர் என்பது இந்நூலை ஒருமுறை கற்பாரும் உணர்வர்.

**இளம்பெருமான் அடிகள் :** இவர் சிவபெருமான் திருமும்மணிக்கோவை என்றதொரு நூலைப் பாடியுள் ளார். அகவற்பா, வெண்பா, கட்டளைக் கலித்துறை ஆகிய மூன்று பா யாப்பினால் இயன்ற 30 பாடல்கள் இதன்கண் உள்ளன.

**அதிராவடிகள் :** இவர் மூத்த பிள்ளையார் திரு மும்மணிக்கோவை என்ற நூலை இயற்றியுள்ளார். இது வும் மேற்சொன்ன மூவகைப் பாக்களால் இயன்றது. ஆயின் 23 பாடல்களே கிடைத்துள்ளன.

**பட்டினத்தடிகள்**

காவிரிப்பூம் பட்டினத்தில் வாழ்ந்துவந்த திரு வெண்காடர் என்னும் பெருங்குடி வணிகரே பட்டினத் தடிகள் என்றும், பட்டினத்துப் பிள்ளையார் என்றும் அழைக்கப் பெறுவோராவர். இவருக்கு மதிவாணன் என்ற ஒரு மகன் இருந்தான். இவன் பதினாறு ஆண்டு கள் வாழ்ந்து இறந்துவிட்டான். அதன்பின் நெடுநாட் களாக இவருக்குக் குழந்தை இல்லை. அதனால், வறுமை யால் வாடிய ஆதிசைவர் ஒருவரது ஆண்மகவினை வாங்கி மருதவாணன் என்ற பெயரிட்டு வளர்த்து வர லாயினர். அப்பிள்ளையும் அறிவுடன் வளர்ந்து கற்க வேண்டுவன கற்று வணிகத் துறையிலும் தேர்ச்சி பெற்றவனாயினன்; திரைகடல் ஓடித் திரவியம் தேடி

ஞன். அதனால் அவன்மீது மிகவும் பற்று வைத்திருந்தார் திருவெண்காடர். ஒருநாள் அவன் தன் தாயிடம் ஒரு பெட்டியைக் கொடுத்துவிட்டு எங்கோ சென்று மறைந்துவிட்டான். அதனால் கவலையுற்ற வெண்காடர் தன் மனைவியிடம் அவன் கொடுத்துச் சென்ற பெட்டியைத் திறந்து பார்க்க, அதில் ஓர் ஏட்டு முறியும் காதற்ற ஊசியும் இருந்தன. அவ்வேட்டில் "காதற்ற ஊசியும் வாராதுகாண் கடைவழிக்கே," என்று எழுதப் பெற்றிருந்தது. அதனைக் கண்ட திருவெண்காடர்தம் அகக்கண்கள் திறந்தன. ஒட்டும் பற்றினை வெட்டித் துறந்த தூயோராயினர். தம்மிடம் தலைமைக் கணக்கராயிருந்த சேந்தனாரிடம் சொல்லித் தம் செல்வமனைத்தையும் ஊர்மக்களுக்குத் தானம் செய்யச் செய்தனர். கையில் இரந்துண்டு ஊர் ஊராகச் சுற்றித் திரிந்தார். பெருங்குடி வணிகரான இவர் இவ்வாறு இரந்துண்டு திரிந்தது அவர் போன்ற வணிகருக்கு அருவறுப்பைத் தந்தது. அவரை நஞ்சிட்டுக் கொல்ல நினைத்தனர். ஆயினும் அவர்தம் முயற்சி அவர்களுக்கே தீமை விளைவித்தது. தம் முயற்சிகள் யாவும் பயனற்றுப் போகவே உறவினர்கள் வேந்தன்பால் முறையிட்டு, வெண்காடரின் செல்வமனைத்தையும் ஊராருக்கு வழங்கிய சேந்தனாரைச் சிறையிட்டனர். வேந்தன் ஒருநாள் வெண்காடர் இருக்குமிடம்சென்றான். அவர்அப்போது நிட்டையில் இருந்தார். நிட்டை கலைந்ததும் வேந்தன் தம்முன் நிற்பது கண்டார். வேந்தன் அவர் துறவை மேற்கொண்டதற்குக் காரணம் கேட்டான். அவர் "நீர் நிற்க; யாம் இருக்க" என்று முறுவலித்தவாறே நீத்தார் பெருமையை விளக்கினார். அவனும் மனம் தெளிந்தான். பின்னர் இவர் திருவிடைமருதூர், சீர்காழி, சிதம்பரம் முதலிய ஊர்களிற்

சென்று திரிந்து, வடக்கே கோதாவரி நதிக்கரையில் உள்ள மாகாளத்தை அடைந்தார். அங்கே இவரைக் கள்வர் என்று தவறுதலாக அரசனின் ஆட்கள் இழுத்துச் சென்றனர். இவரைக் கழுவில் ஏற்ற முயலும்பொழுது கழுமரம் பற்றி எரிந்தது. பட்டினத்தடிகளின் துறவாற்றலை உணர்ந்த அரசன் பத்திரகிரி அவருடைய உண்மைச் சீடராகி நாட்டைத்துறந்து அவருடன் வழி நடக்கலானர்; திருவிடைமருதூரில் தான் இறக்கும்வரையிலும் அவருடனேயே இருந்தார். பட்டினத்தடிகள் பின்னர் திருவொற்றியூர் சென்று அங்குக் கடற்கரையில் விளையாடிக்கொண்டிருந்த பிள்ளைகள் செய்த மணற்குழியில் புகுந்து மறைந்தார்.

பட்டினத்தடிகளின் வரலாற்றைப் பட்டினத்துப் பிள்ளையார் புராணம், புலவர் புராணம் என்னும் நூல்கள் கூறுகின்றன. திருப்புகழ் ஆசிரியர் அருணகிரியார் இவர்தம் மகனர் என்று ஒரு செய்தி வழங்குகிறது. ஆயின் அவர் 15ஆம் நூற்ருண்டில் வாழ்ந்தவராதலால் இக்கூற்றை ஒப்புக்கொள்வதற்கில்லை. பட்டினத்தடிகள் பாடியனவாகப் பதினேராம் திருமுறையில் காணக்கிடைக்கும் நூல்கள் கோயில் நான்மணிமாலை, திருக்கழுமல மும்மணிக்கோவை, திருவிடைமருதூர் மும்மணிக்கோவை, திருவேகம்பமுடையார் திருவந்தாதி, திருவொற்றியூர் ஒருபா ஒருபஃது என்னும் ஐந்து நூல்களாகும். பட்டினத்தார் பிரபந்தத் திரட்டு என்னும் நூலில் இவ்வைந்து நூல்களையும் தவிர, முதல்வன் முறையீடு, அருட்புலம்பல், உடற்கூற்று வண்ணம் முதலாகிய வேறுபல நூல்கள் காணப்படுகின்றன. ஆயின் 'இவை பிற்காலத்தார்

எவராலோ பாடிச் சேர்க்கப்பட்டன என்பது தமிழ் அறிஞர் இடையே நிலவும் கருத்து' என்பர்.*

பட்டினத்தடிகள் 'வித்தகப்பாடல் முத்திறத்தடியார்', என்று தேவார ஆசிரியரையும், 'திருந்திய அன்பிற் பெருந்துறைப்பிள்ளை', என்று மணிவாசகரையும் குறித்துள்ளார். எனவே இவர் ஒன்பதாம் நூற்றாண்டிற்கு முன்னர் வாழ்ந்தவர் அல்லர் என்பர். மேலும் இவரது பாடல்கள் பதினோராம் திருமுறையில் நம்பியாண்டார் நம்பியால் சேர்க்கப்பட்டிருப்பதால் அவருக்கு முற்பட்டவர் என்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

இவரது பாடல்களில் பல புராணச் செய்திகள் பேசப்படுகின்றன. திருமாலுக்கு இறைவன் ஆழி கொடுத்தது, குபேரனுக்கு நிதி அளித்தது, நஞ்சுண்டது, திரிபுரம் எரித்தது போன்றவை அச்செய்திகள்.

திருவிடைமருதூர் மும்மணிக்கோவையில்,

> **"போதும் பெருவிடிற் பச்சிலை உண்டுபுனல் உண்டெங்கும்**
> **ஏதும் பெருவிடின் நெஞ்சுண்டன்றே.........**
> **............................தோணிபு ரேசர்வண்டின்**
> **தாதும் பெருத அடித்தா மரைசென்று சார்வதற்கே"**

என்று பாடுவது 'யாவர்க்குமாம் இறைவற்கு ஒரு பச்சிலை' என்ற திருமந்திரத்தை நினைவுறுத்துகின்றது.

### நம்பியாண்டார் நம்பி

நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பிய ஞானசம்பந்தர் போன்ற சைவசமயப் பெரியார்களின் பதிகங்

---

*சைவ இலக்கிய வரலாறு—ஔவை. சு. து—பக்: 376

களைத் தொகுத்து, இசைவகைக் கேற்பத் திருமுறை களாக வகுத்து உதவிய பெரியார் நம்பியாண்டார் நம்பி யாவர்.

இவர் திருநாரையூர் என்னும் ஊரில் ஆதிசைவ மரபில் தோன்றியவர். இவர்தம் தந்தையார் அவ்வூரில் எழுந்தருளியுள்ள பொல்லாப்பிள்ளையாருக்குப் பூசை செய்யும் தொழிலைப் பூண்டிருந்தார். ஒருநாள் இவர் தந்தையார் வெளியூர் சென்றிருந்தார். அவருக்குப் பதி லாகப் பூசை செய்யச் சென்றிருந்த சிறுவர் நம்பி, நிவேதனப் பொருளை உண்ணுமாறு பிள்ளையாரை அன்புடன் வற்புறுத்த, அவரும் அவ்வாறே உண்டு, நம்பியின் வேண்டுகோளுக்கிணங்கக் கற்கவேண்டுவன வற்றை எல்லாம் கற்பித்தருளினார். இந்தச் செய்தி ஊரும் நாடும் எல்லாம் பரவி, நம்பியின் புகழ் ஓங்கத் தலைப்பட்டது.

அந்நாளில் சோழவேந்தன் திருப்பதிகம் பாடும் ஓதுவார் மூலமாக ஒரு பதிகத்தைப் பாடக் கேட்டுச் சிவனடியார்களின் பதிகங்கள் அனைத்தையும் திரட்டித் தொகை செய்ய விரும்பினான். இந்நிலையில் நம்பியின் செயலைக் கேள்விப் பட்ட மன்னன் திருநாரையூர் சென்று நம்பியின் உதவியால் பொல்லாப் பிள்ளை யாரின் அருளைப் பெற்று, தெய்வத் திருப்பதிகங்கள் யாவும் தில்லைக் கோவிலில் பரமன் திருக்கூத்தியற் றும் அம்பலத்தின் புறக்கடையில் வைத்துக் கையடை யாளம் இடப்பெற்றுள்ளன என்பதை யறிந்து, நம்பி யுடன் சென்று தில்லை மூவாயிரவரை நாடினார். அவர் களோ, 'தமிழ்வைத்த மூவர் வந்தால் அறை திறக்கும்' என்று கூறிவிட்டனர். நம்பியின் அறிவுரைப்படி மன் னன் திருவிழாஎடுத்து மூவரது திருமேனிகளையும் எழுந்

தருளச் செய்து 'மூவரும் வந்தனர்' என்று அறிவித்தான். தில்லை அந்தணர் மூவாயிரவரும் கதவுகளைத் திறந்துவிட, உட்சென்று பார்க்கையில் புற்றுக்கு இரையாயின போக எஞ்சிய திருப்பதிகங்கள் கண்டெடுக்கப்பட்டன. இவற்றுள் மூவர் தமிழை முதல் ஏழு திருமுறைகளாகவும், வாதவூரடிகளது கோவை, திருவாசகத்தை எட்டாம் திருமுறையாகவும், திருவிசைப் பாக்களை ஒன்பதாம் திருமுறையாகவும், திருமுகப் பாசுரம் முதலாக உள்ளனவற்றைத் தொகுத்துப் பதினோராம் திருமுறையாகவும் நம்பியாண்டார் நம்பியால் வகுக்கப் பெற்றன. பொல்லாப்பிள்ளையாரின் அருளால் அறிந்துணர்ந்த திருத்தொண்டர்களைப் பற்றித் திருத்தொண்டர் திருவந்தாதியையும் அவர் பாடினார். திருநீலகண்ட யாழ்ப்பாணரின் வழியில் தோன்றிய பெண்ணொருத்தியின் இசை அறிவின் உதவியால் திருப்பதிகங்களுக்குப் பண் அடைவு வகுக்கப் பெற்றது. இவ்வளவுக்கும் உதவிய பொல்லாப்பிள்ளையாரிடம் தான் கொண்ட நன்றி உணர்ச்சிக்கு அடையாளமாக நம்பி அவர்மீது திருவிரட்டை மணிமாலை ஒன்று பாடினார். மேலும் கோயில் திருப்பண்ணியர் விருத்தம், திருத்தொண்டர்திருவந்தாதி, ஆளுடையபிள்ளையார் (சம்பந்தர்) திருவந்தாதி, ஆளுடையபிள்ளையார் திருச்சண்பை விருத்தம், ஆளுடையபிள்ளையார் திருமும்மணிக்கோவை, ஆளுடையபிள்ளையார் திருவுலாமாலை, ஆளுடையபிள்ளையார் திருக்கலம்பகம், ஆளுடையபிள்ளையார் திருத்தொகை, திருநாவுக்கரசர் ஏகாதச மாலை ஆகிய நூல்களையும் பாடியுள்ளார். இவற்றுள் ஆறு நூல்கள் திருஞானசம்பந்தர் மீது பாடப்பெற்றிருப்பதால் இவர் அவர்மீது அளவிறந்த ஈடுபாடு உடையவர் என்பது தெரிகிறது. இவற்றுள் திருத்தொண்டர் திரு

வந்தாதி சைவ நெறிக்குரிய வரலாறு காண்பதற்கு மிகவும் துணைசெய்கின்றது. நம்பியாரூரரின் திருத் தொண்டத் தொகையில் குறிப்பாகக் கூறப்பட்டுள்ள திருத்தொண்டர்களின் வரலாற்றுக் குறிப்புகள் இந் நூலில் சிறிது விரிவாகக் கூறப்பட்டுள்ளன. எனவே திருத்தொண்டத் தொகைக்கு இந்நூல் வழிநூலாகும். இவ்விரு நூல்களின் துணைகொண்டே தொண்டர்சீர் பரவுவாரான சேக்கிழார் தமது திருத்தொண்டர் புரா ணத்தைப் பாடி முடித்தார்.

திருமுறைகண்ட புராணம், திருமுறை காண்பதற் குத் துணைபுரிந்த சோழனை, **'இராசராச அபயகுல சேகரன்'** என்று அழைக்கின்றது. இதில் கூறப்பட்ட இராசராசன் என்பான் முதலாம் இராசராசனே யாவான் என்பர், திரு K.S. சீனிவாசப்பிள்ளை, திரு கா.சு. பிள்ளை போன்றவர்கள். இவர் தஞ்சை இராசராசேச்சுவரத்தில் திருப்பதிகங்கள் ஓதுவதற்கு முற்றூட்டாக நிலங்களை விட்ட செய்திகள் கல்வெட்டுக்களில் பேசப்படுகின் றன. தேவார ஆசிரியர்களின் திருமேனிகளைச் செப்புச் சிலைகளாக அமைத்து அவற்றிற்குரிய வழிபாடுகளை யும் வகுத்து வைத்தமைக்கு இவனதுகல்வெட்டுக்களில் சான்றுகள் இருக்கின்றன. மேலும் தஞ்சைக்கோயிலைக் கட்டுமுன்னர் இவன் தனது குலதெய்வமாகிய திரு வாரூர்த் தியாகேசனையே வழிபட்டு வந்தான். அவ்வூர்க் கோயில் முறைகளுக்கிணங்கவே தஞ்சைக் கோயில் வழிபாட்டு முறைகளை வகுத்தமைத்தான். எனவே இந்த இராசராசனே திருமுறைகண்ட சோழனாதல் வேண்டும் என்று அன்னார் கூறுவர்.

இனி, விஜயாலய சோழனின் மைந்தனான முதலாம் ஆதித்தனே திருமுறை கண்ட சோழனாவான் என்று

திரு. T. V. சதாசிவப்பண்டாரத்தார், திரு. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை போன்றவர்கள் கூறுகின்றனர். தங்கள் கூற்றுக்குச் சான்ருக நம்பியாண்டார் நம்பி தமது திருத்தொண்டத் தொகையுள் முதலாம் ஆதித்தனை மூன்று இடங்களில் (பாடல்கள் 50, 65, 82) பாடுவதாக இவர்கள் எடுத்துக் காட்டுவர். †

இனி, 'அபயகுல சேகரன்' என்று வருவதால் அபயன் என்றழைக்கப்பட்ட முதலாம் குலோத்துங்கனே திருமுறைகண்டவன் என்றும் சிலர் கருதுவர். ஆயின், திருவிசைப்பா பாடிய கருவூர்த் தேவர் முதலாம் இராசராசன் காலத்தவர் ஆதலால் அவனுக்குக் காலத்தால் மிகவும் பிற்பட்டவனுன குலோத்துங்கன் திருமுறைகண்டவனுக இருத்தல் இயலாது என்று அக் கருத்து மறுக்கப்படுகிறது. எனினும், முதலாம் இராசராசனே திருமுறை கண்டவன் என்ற கருத்து, பெரும்பான்மையோருக்கு உடன்பாடாயிருக்கிறது. இவனது காலம் 10ஆம் நூற்ருண்டின் இறுதியும் பதினேராம் நூற்ருண்டின் தொடக்கமும் ஆகும். எனவே நம்பியாண்டார் நம்பியின் காலமும் அதுவேயாதல் வேண்டும்.

### ஔவையார்

'அறம் செய விரும்பு' என்று ஏடுதொட்டுப் படிக்கத் தொடங்கும் பள்ளிச் சிறுவன் முதல் பண்டிதர்கள் வரை யாவருக்கும் ஓர் இலட்சியக் கவிஞராகத் திகழ்பவர் ஔவையார். அவரே தமிழ் மாணவரின் முதல் கவிஞரும் ஆவார். இலக்கியம், சமயம், நீதி என்ற எல்லாத் துறைகளிலும் ஔவையின் அமுத

† சைவ இலக்கிய வரலாறு, பக். 438, 439

மொழிகள் நமக்கு மந்திரச் சொற்களாகப் பயனளிக்கின்றன.

ஔவையார் என்ற பெயர் மேற்கூறிய துறைகள் பலவற்றிலும் வந்து தோன்றிடினும், ஔவையார் ஒருவரே என்று கொள்வதற்கில்லை. அரவக்கடல் தானை அதிகனிடம் கருநெல்லிக் கனி பெற்று வாழ்ந்த சங்க கால ஔவையார் ஒருவர்;

**"தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்**
**மூவர் தமிழும் முனிமொழியும்—கோவைத்**
**திருவா சகமும் திருமூலர் சொல்லும்**
**ஒருவா சகமென் றுணர்"**

என்று பாடும் ஔவையார் தேவார திருவாசக ஆசிரியர்களுக்குப் பின்னர் வாழ்ந்த வேறொருவராவர். அதாவது, இவர் ஒன்பதாம் நூற்றாண்டிற்கு முற்பட்டு வாழ்ந்திருத்தல் இயலாது. கி. பி. பதினொன்றாம் நூற்றாண்டைச் சார்ந்தவரான இளம்பூரணர் இந்த ஔவையார் எழுதிய 'அட்டாலும் பால்சுவையிற் குன்றாது' என்னும் பாடலை எடுத்தாண்டிருக்கிறார் (தொல்-செய்: 72). எனவே இந்தக் கால எல்லையில் வைத்து, நாம் பேச எடுத்துக்கொண்ட ஔவையார் ஒன்பதாம் நூற்றாண்டிற்குப் பின்னரும் பதினொன்றாம் நூற்றாண்டிற்கு முன்னரும் வாழ்ந்தவராதல் வேண்டும்.

ஆத்திச்சூடி, கொன்றை வேந்தன், மூதுரை, நல்வழி, ஞானக்குறள், விநாயகர் அகவல், பந்தனந்தாதி, அசதிக்கோவை, வைத்திய நிகண்டு, கல்வி ஒழுக்கம், நன்னூற்கோவை, நான்மணிக்கோவை, அருந்தமிழ் மாலை, தரிசனப்பத்து என்ற நூல்கள் ஔவையார் பாடியருளியனவாகக் கருதப்படுகின்றன.

இவற்றுள் முதல் ஏழு நூல்களைத்தவிர எஞ்சியவை கிடைக்கவில்லை.

ஆன்றோர் நூல்கள் எல்லாம் கூறிய அரிய அற நீதிகளை, அறியாக் குழந்தைகளுக்கும் உணர்த்தும் நோக்கதோடு அகரவரிசையாகக் கூறுகின்றன, ஆத்திச்சூடி, கொன்றைவேந்தன் ஆகிய நூல்கள். ஆத்திச்சூடி 'அறம் செய விரும்பு' என்பது போன்ற மிகச்சிறிய சொற்றொடர்களாலும், கொன்றைவேந்தன் 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்பது போன்று சற்றுப் பெரிய சொற்றொடர்களாலும் அமைந்து, சூத்திரங்கள்போல் மந்திரமொழிகள் பச்சை உள்ளங்களில் பதியுமாறு அமைந்துள்ளன. இவை யிரண்டும் பிள்ளைகளது பருவத்திற்கேற்ற முறையில் அடுத்தடுத்து அமைந்துள்ளமை நோக்கத்தக்கது. 'கொன்றை வேய்ந்த செல்வன்' என்று தொடங்கும் இதன் காப்புச் செய்யுளை நச்சினார்க்கினியர், பேராசிரியர், யாப்பருங்கல விருத்தியுரைகாரர் போன்ற புலவர்கள் எடுத்தாண்டுள்ளனர்.

மூதுரை என்பது முப்பது வெண்பாக்களால் இயன்ற நீதிநூல். 'வாக்குண்டாம்' என்று இதன் காப்புச் செய்யுள் தொடங்குவதால் இந்நூல் 'வாக்குண்டாம்' என்றே அழைக்கப்படுகிறது.

> "அட்டாலும் பால்சுவையிற் குன்றாது அளவளாய்
> நட்டாலும் நண்பல்லார் நண்பல்லர்
> கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே சங்கு
> சுட்டாலும் வெண்மை தரும்"

என்று இவைபோன்ற அரிய உண்மைகளை அழகிய இனிய தமிழில் இந்நூல் எடுத்துரைக்கின்றது.

நல்வழி என்னும் நூல் நாற்பது வெண்பாக்களால் ஆனது. இந்நூலில் பல மெய்ந்நூல்களின் கருத்துக் களெல்லாம் சிறப்புறக் கூறப்பட்டுள்ளன. 'மூதுரை யால் உலகியலுக்குரிய அறவொழுக்கங்களும், நல்வழி யால் சமய ஒழுக்கங்களும் கூறியிருப்பதனால், இந் நூல்கள் மக்கள் வாழ்க்கை முழுதுக்கும் நலம்புரியும் பணியாகச் செய்ய வேண்டும் என்ற கருத்தோடு ஔவையார் இவற்றைச் செய்துள்ளார் என்பது தெரி கிறது' என்பர் திரு. ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள்.

விநாயகர் அகவல் மெய்யறிவையும் யோக அறி வையும் போதிக்கும் நூலாகும். ஞானக்குறள் என்பது 310 குறள் வெண்பாக்களால் ஆனது. திருவள்ளுவர் அறம், பொருள், இன்பம் கூறி வீடுபற்றிக் கூறாமை யால், அதனை இந்த ஞானநூலில் பாடினர் என்பர். இந்நூல் முழுதும் யோக ஞானங்கள் பற்றியே பேசு கின்றது.

## இலக்கண நூல்கள்

மிகப் பழைமையான தமிழ் இலக்கண நூலாக இன்று விளங்குவது தொல்காப்பியம். அது எழுத்து, சொல், பொருள் என்னும் மூன்றினையும் எடுத்துரைக் கின்றது. தொல்காப்பியத்திற்குப் பிறகு அதன் வழி நூல்களாக அவிநயம், பல்காப்பியம், பல்காயம். காக்கை பாடினியம், சிறுகாக்கை பாடினியம் போன்ற நூல்கள் தோன்றலாயின. தொல்காப்பியத்தில் எழுத்து, சொல், பொருள் என்றிருந்த தமிழ்இலக் கணம் 'யாப்பு' பற்றியும் தனித்து ஆராயும் நிலைக்கு வளர்ந்து விட்டது. அவிநயத்துள் 'யாப்பு' ஆராய்ச்சி

மிகவும் விரிவாக அமைந்துள்ளது. இதற்குத் தண்டலங்கிழவன் இராசபவித்திரப் பல்லவதரையன் என்பவர் உரை எழுதியிருப்பதாக மயிலைநாதர் உரை கூறுகிறது. பல்காப்பியமும் பல்காயமும் யாப்பு நூல்களே. காக்கைபாடினி என்ற பெண்பாற்புலவரால் பாடப்பெற்ற யாப்பு நூல் காக்கைபாடினியம். விருந்து வரக் கரைந்த காக்கையைப் பாடியதால் இப்புலவர் காக்கைபாடினியார் நச்செள்ளையார் என்று அழைக்கப் பெறுகிறார். அவர்தாம் காக்கை பாடினியம் என்னும் நூலையும் யாத்தனர் என்பர்.

இவர் அக்காலத்தில் மிகவும் மதிக்கப் பெற்றிருந்தார் என்பது 'கற்றார் மதிக்கும் கலைக்காக்கைபாடினியார்' என்ற அடியாலும், 'காக்கை பாடினியார் முதலிய மாபெரும் புலவர்' என்ற யாப்பருங்கல விருத்தி யுரையாலும் அறியலாம். இவ்வுரையாசிரியர் காக்கைபாடினியாரது யாப்பிலக்கணத்திலிருந்து பல சூத்திரங்களை மேற்கோள்களாகக் காட்டுகின்றார். இந்நூலைப் போன்றே பிற்காலத்தில் எழுந்த சிறு காக்கை பாடினியமும் செய்யுள் இலக்கணத்தையே பேசுகின்றது. இவற்றைத் தவிர, கையனார் யாப்பு, நத்தத்தனார் யாப்பு, மயேச்சுவரர் யாப்பு போன்ற நூல்களும் இருந்தமை யாப்பருங்கல விருத்தி உரையால் தெரிகிறது. இந்த யாப்பு நூல்கள் பாவினையும் பாவகைகளையும் ஆராய்கின்றன. இவைகளை அடுத்துப் பாட்டியல் நூல்கள் பிரபந்த வகைகளையும், நூலின் முதற்பாட்டில் வரும் முதற் சீருக்கும் எழுத்துக்கும், பாட்டுடைத் தலைவன் பெயருக்கும் அப்பெயரின் முதல் எழுத்துக்கும் உள்ள சோதிடப் பொருத்தங்களையும் ஆராயத் தொடங்கின.

இனிப் பொருள் இலக்கணம் இறையனுர் அகப் பொருள் காலத்தில் ஒரு வளர்ச்சியைக் கண்டது. அந்நூல், பொருளில் அகத்தை மட்டும் எடுத்துப் பேசுகின்றது. இதனுல் புறப்பொருளைப் பற்றித் தனிப்பட ஆராய்வதற்காகப் புறப்பொருள் வெண் பாமாலை எழுந்தது. தண்டியாசிரியர் காலத்தில் தமிழ் இலக்கணம் அணி இயலுடன் சேர்ந்து ஐந்தாயிற்று. வடமொழியில் தண்டியலங்காரத்தை இயற்றிய தண்டியாசிரியர் தமிழ்நாட்டவர் ஆனதால் அவரு டைய அணியியல்கருத்துக்கள் தமிழ்நாட்டில் பெரிதும் பரவின. திவாகரம், பிங்கலந்தை என்னும் நிகண்டு களும் அணிகளை வரிசைப் படுத்திக் கூறின.

இவ்வாறு அகத்தியர் காலத்தில் இயல், இசை, நாடகம் என்ற மூன்று தமிழுக்கும் பொதுவாக இருந்த இலக்கணம், தொல்காப்பியர் காலத்தில் இயலுக்கு மட்டிலும் எழுத்து, சொல், பொருள் என்று ஆகி, அதன் பின்னர் கி. பி. 11, 12 ஆம் நூற்றுண்டு களுக்குள் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் பொருள்களை ஆராயும் நிலையில் பெரிதும் வளர்ச்சி யுற்றதைக் காண்கின்ருேம். இனிச் சோழர் காலத்தில் தோன்றிய தமிழ் இலக்கண நூல்களை ஆராய்வோம்.

**யாப்பருங்கலம்—யாப்பருங்கலக்காரிகை:** மேற் கண்ட நூல்களிலிருந்து தமிழில் யாப்பிலக்கணம் எவ்வளவு விரிவாக ஆராயப்பட்டது என்பதைப் புரிந்துகொள்ளலாம். இவையெல்லாம் தொல்காப் பியத்தை ஒட்டியும் மாறுபட்டும் செல்லத் தொடங் கின. ஆயினும், நாளடைவில் வடமொழித் தொடர்பு அதிகமாகி விடவே புதிய கொள்கைகள் தோன்ற

லாயின. தளை இலக்கணம் கொள்ளப்பட்டது. அடிக்கு அடி எழுத்தெண்ணிக் கூறப்பட்ட கட்டளை யடிகள் மறைந்து போயின. பாக்களை விடப் பாவினங் களில் புலவர்கள் அதிக ஆர்வம் காட்டத் தொடங் கினர்; பலவகைச் சந்தங்கள் விரவி விருத்தங்கள் பாடத் தொடங்கினர்.

இந்த வகையில் யாப்பின் மரபை வரையறுத்து விதியமைத்த நூல்களுள் மிகச் சிறந்ததாகக் கருதப் படுகிறது யாப்பருங்கலம் என்னும் நூல். இதனை இயற்றியவர் அமுத சாகரர் என்னும் சமணராவார். இவரே இதற்குப் புறநடையாக யாப்பருங்கலக் காரிகையையும் இயற்றினார். இக் காரிகை யாப்பருங் கலத்தைக் காட்டிலும் சிறந்ததாகத் தமிழ் நாட்டாரால் ஏற்றுக் கொள்ளப்பட்டது. அமுத சாகரர் இந்நூலை இயற்றியதற்காகக் 'களத்தூர்' என்னும் ஊர் இவ ருக்கு வழங்கப்பட்டு, அதுவும் 'காரிகைக் களத்தூர்' என்ற பெயருடன் திகழ்வதாயிற்று. கி. பி. 11 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த இராசேந்திரனுடைய கல்வெட்டு ஒன்று இவ்வூரைக் 'காரிகைக் களத்தூர்' என்றே குறிப்பதால், இந்நூல் 11 ஆம் நூற்றாண்டிற்கு முன் னர்ப் பத்தாம் நூற்றாண்டிலேயே தோன்றியிருத்தல் வேண்டும் என்பர். § "யாப்பருங்கலம் முன்னைய யாப்பாராய்ச்சிகளையெல்லாம் மழுங்கச் செய்து இன்றுவரை தன் கொள்கையை எல்லோரும் கற்கும் வகையில் சிறந்து விளங்குகிறது" என்பர் பேராசிரியர் தெ. பொ. மீ அவர்கள். * யாப்பருங் கலத்திற்குச் சிறந்ததொரு விருத்தியுரை உள்ளது. இதனைப்போல்

§ சாஸனத் தமிழ்க் கவி சரிதம்—பக் : 42.
* சமணத் தமிழ் இலக்கிய வரலாறு—பக் : 154

சிறந்த உரையைக் காண்பது அரிது என்பர். பத்தாம் நூற்றாண்டு வரை தோன்றிய தமிழ் இலக்கண இலக்கியங்களின் நரம்பறிவதற்கு இந்த விருத்தியுரை பெரிதும் உதவுகிறது.

காரிகையின் உரைகாரர் குணசாகரர் என்பவர். இவர் அமுத சாகரரது ஆசிரியர் என்பர். இவர் விருத்தியுரையை எடுத்தாள்வதால் விருத்தியுரையும் இவர் காலத்ததாதல் வேண்டும் என்பர். குணசாகரர் வடமொழி நிருத்தம், வியாகரணம் முதலியவற்றையும், கருநாடகச் சந்த நூல்களையும் நன்கறிந்தமை அவரது உரையால் அறியக் கிடக்கின்றது. யாப்பருங்கலக் காரிகை வடமொழிக் கொள்கையைப் பின்பற்றிச் செல்கிறது. இதனை 'ஆரியம் என்னும் பாரிரும் பௌவத்தைக் காரிகையாக்கித் தமிழ்ப் படுத்திய அருந்தவத்துப் பெருந்தன்மை அமித சாகரர்' என்று குணசாகரர் கூறுவதிலிருந்து உணரலாம். அமுதசாகரரும் குணசாகரரும் சமணராவர்.

**வீர சோழியம் :** பொன்பற்றியூர் என்னும் ஊரைச் சார்ந்த புத்தமித்திரர் என்பவரால் இயற்றப்பட்டது வீரசோழியம் என்னும் இலக்கண நூல். வீரசோழன் என்னும் மன்னது ஆதரவில் தோன்றிய நூலாகையால் இதற்கு இப்பெயர் அமைந்தது.

> **"வீர சோழன் திருப்பெயராற் பூமேலுரைப்பன்"**
> **"செம்பியன் வீரரா சேந்திரன்றன் நாவியல்**
> **செந்தமிழ்ச் சொல்லின்"**

என்று புத்தமித்திரர் கூறுவதால், இவ்வேந்தன் முதலாம் இராசேந்திரனது மகனான வீரராசேந்திரனே இவ் வீர சோழன் (கி. பி. 1063—70) ஆவான் என்பர்.*

* சாஸனத் தமிழ்க்கவி சரிதம்—பக் : 50.

இந்நூல் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐந்திலக்கணத்தையும் ஒருங்கே உணர்த்தும் முதல் நூலாகும். இதற்குப் பெருந்தேவனார் என்பவர் உரை கண்டிருக்கிறார். இவர் பாரதம் பாடியவர் அல்லர். புத்தமித்திரர் ஒரு பௌத்தர் ஆவர்.

**நேமிநாதம் :** தொல்காப்பியச் சொல்லதிகாரத்தைச் சுருக்கியும் விளக்கியும் சொல்ல எழுந்ததே நேமிநாதம் என்னும் நூலாகும். இதனை இயற்றியவர் குணவீர பண்டிதர் என்பவர். நேமிநாத முனிவர் என்பவர் இவரது ஆசிரியர் ஆனதால் அவர் முன்னால் அவருடைய பெயர் தாங்கி இந்நூல் தோன்றியது. இதனால் குணவீரருக்கும் நேமிநாதர் என்ற பெயர் வரலாயிற்று. 'நேமிநாதர் பாட்டோலை பிடிக்க ஒட்டக்கூத்தர் பாடியது' என்று தமிழ் நாவலர் சரிதையில் வருவதால் இவர் ஒட்டக்கூத்தர் வாழ்ந்த காலத்தில் (திரிபுவன தேவன் இரண்டாம் குலோத்துங்கன் காலத்தில்) வாழ்ந்தவராவர். இவர் வெண்பா யாப்பில் எழுதிய பாட்டியலே 'வச்சணந்திமாலை' எனப்படும். இதற்கு முதல்நூல் இந்திரகாளியம் என்னும் பாட்டியலாகும் என்பர்.

**நம்பியகப் பொருள் :** தொல்காப்பியத்தின் பொருளதிகாரத்திற்குப் பின்னர், அகப்பொருளை மட்டிலும் தனித்துப் பேசும் இறையனார் அகப்பொருள் தோன்றியது. இரண்டின் இலக்கணங்களும், வளர்ந்து வரும் தமிழுக்குப் போதாவாயின. இக்குறையைப் போக்கி அகப்பொருளை இனிது விளக்க எழுந்தது நம்பியகப்பொருள். இதனை இயற்றியவர் நாற்கவி ராச நம்பி என்பவர். இவர் தொண்டை நாட்டுப் புளியங்குடியில் வாழ்ந்த உய்யவந்தாரின் மகனாவார்.

இவர் தொல்காப்பிய அகப்பொருட் கருத்துக்களையும் சான்றோர் இலக்கியங்களையும் ஆராய்ந்து தாம் கண்டவற்றைத் தொகைப்படுத்திச் சூத்திரங்களாக எழுதியுள்ளார். 'இருபெருங் கலைக்கும் ஒருபெருங் குரிசில்' என்று பாராட்டப் பெறுவதால், இவர் இருமொழிகளையும் நன்கு கற்றவர் என்பதும், 'நாற்கவிராச' என்னும் அடைபெற்று வருவதால் பலவகைப் பாக்களையும் பாடவல்லவர் என்பதும் தெரிய வருகின்றன. நம்பியகப்பொருள் அகத்திணையியல், களவியல், வரைவியல், கற்பியல், ஒழிபியல் என்ற ஐந்து பிரிவுகளைக் கொண்டது. இவரது சமயம் சமணம் என்பதும், இவரே இந்நூலுக்கு அழகியதொரு உரை எழுதியுள்ளார் என்பதும் சிறப்புப்பாயிரத்தால் தெரிய வருகின்றன. இவர் 12 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த முதலாம் சடையவர்மன் குலசேகரன் காலத்தவர். இவர் பாடிய அகப்பொருளை அடிப்படையாகக் கொண்டு, பொய்யாமொழிப் புலவர் தஞ்சைவாணன் என்பவன் மீது 'தஞ்சைவாணன் கோவை' என்ற கோவை நூலைப் பாடினர். பாண்டியர் படைத்தலைவனான வாணர்குல வீரனே இத் தஞ்சைவாணன் ஆவான். இவனது காலம் 13ஆம் நூற்றாண்டு எனின், இவனது காலத்திற்குள் நம்பியகப்பொருள் புகழ் பரக்கப் பெற்றிருத்தல் வேண்டும். எனவே, இவரது காலம் 12ஆம் நூற்றாண்டு என்பர்.

**நன்னூல் :** மூன்றாம் குலோத்துங்கனது காலத்தில் (கி. பி. 1178—1216) மைசூர்ப் பகுதியில் உள்ள கோலாரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டவன் சீயகங்கன் என்னும் கங்கமன்னன். இவனது வேண்டுகோட்கிணங்கித் தொண்டைநாட்டுச் சனகாபுரியில்

வாழ்ந்த சன்மதி முனிவர் என்பவரது மகனுர் ஆகிய பவணந்தி என்னும் சமண முனிவரால் இயற்றப் பட்டதே நன்னூல். 'அரும்பொருள் ஐந்தும் யாவரும் உணர' என்று இதன் சிறப்புப்பாயிரம் உரைப்பதால் இது ஐந்திலக்கணங்களையும் சொல்ல எழுந்திருத்தல் வேண்டும். ஆயின், இன்று எழுத்தும் சொல்லுமே கிடைத்துள்ளன. அகத்தியம், தொல்காப்பியம், அவி நயம் ஆகிய நூல்களைப் பின்பற்றித் தோன்றியதே இந்நூல் என்பர். தொல்காப்பியக் கடலை எளிதாக நீந்துவதற்குரிய தெப்பம்போல் இது துணைசெய்கிறது என இன்றுவரையில் அறிஞர் போற்றுகின்றனர். 'நன்னூல்' என்று இதற்கு மக்கள் இட்டபெயரே இதன் பெருமைக்குச் சான்ருகத் திகழ்கின்றது. இதன் கருத்துக்கள் சிலவற்றை மறுத்துப் பிற்காலத்தில் எழுந்ததே இலக்கண விளக்கம் என்னும் ஐந்திலக்கண நூலாகும். நன்னூலுக்கு மயிலைநாதர் என்ற சமணப் பெரியார் ஓர் அழகிய உரை செய்துள்ளனர். சங்கர நமச்சிவாயர் என்பவரும் சிறந்த விருத்தியுரை கண் டுள்ளனர். சிவஞான முனிவர், ஆறுமுக நாவலர் போன்ருரும் முறையே விருத்தியுரை, காண்டிகையுரை செய்துள்ளனர்.

**தண்டியலங்காரம்:** தொல்காப்பியம் உவம இயலை மட்டிலும் கூறிப் பிற அணிகளைப் பற்றிக் குறிப்பாக உணர்த்தியதே அன்றித் தனிப்பட்ட இலக்கணம் அமைக்கவில்லை. ஆயின், அணியியல் என்ற ஒருநூல் யாப்பருங்கல விருத்தியுரையாலும், நேமிநாத உரை யாசிரியராலும், அடியார்க்கு நல்லாராலும் எடுத்தாளப் பட்டிருக்கிறது.

இந்நிலையில் அணியிலக்கணத்தைச் செவ்விய முறையில் பேச எழுந்தது தண்டியலங்காரம். இது

தண்டி என்பவரால் வடமொழியிற் செய்யப்பட்ட 'காவ்யதர்சம்' என்னும் நூலின் வழிநூலாகும். வட மொழித் தண்டியாசிரியர் ஒரு தமிழர் என்பதை முன்னரே கண்டோம். எனவே, இவரது அணியிலக் கணக் கொள்கைகள் தமிழ்நாட்டில் புகழோடு பரவின. இதற்குப் பதின்மூன்றுக்கு மேற்பட்ட உரைகள் உண்டு. இரண்டு உரைகாரர் தமிழ்நாட்டினர். அவர்கள் தமிழ்த்தொகை நூல்களை உதாரணங் காட்டியுள்ளனர் என்பர்.† தமிழ்த் தண்டியாசிரியது பெயர் தெயவில்லை. இவர் வீரசோழியத்திற்குப் பிற்பட்டவர் என்பர். மூல ஆசிரியரது பெயராலேயே இவரது நூலும் அழைக்கப்படுவது, அவர்மீது கொண்ட மதிப்பினுல்தான். இந்நூலுக்கு ஆசிரியர் 'அணியதிகாரம்' என்றே பெயரிட்டனர் என்பது உரையால் தெரிகிறது. தண்டியலங்கார உரை மிகவும் அழகானது; தண்டியாசிரியரே பல செய்யுட்களைக் காட்டியுள்ளனர் என்பர். அவ்வுரைகளிற் சில அனபாய சோழனைப் புகழ்ந்து பாடுகின்றன. அம்மன்னது காலம் கி.பி. 1313—1146. மேலும் தண்டியாசிரியர் 'மலரிவருங் கூத்தன்' என்று ஒட்டக்கூத்தனைப் பாடுவதால் இவர் ஒட்டக்கூத்தரது காலத்தவர் என்பது விளங்கும். இவர் ஒட்டக்கூத்தரது மாணவர் என்றும் சிலர் கருதுகின்றனர். தண்டியலங்காரம் வடமொழிக் காவ்ய தர்சத்தின் மொழி பெயர்ப்பு என்பதில் ஐயமில்லை என்பர் ‡ தண்டியலங்கார ஆசிரியர் கலைமகளைப் பாடுகிருர். எனவே இவரது சமயம் சமணமோ, பௌத்தமோ அன்று.

---

† Dandi's Kavyadarsa—Ed. by V. Narayana Iyer, p. iii

‡ தமிழ்க் காப்பியங்கள்—கி. வா. ஜ—பக்: 49

**புறப்பொருள் வெண்பாமாலை :** தொல்காப்பியத்திற்குப் பின்பு புறப்பொருளை விளக்க எழுந்தவை பன்னிருபடலம், புறப்பொருள் வெண்பாமாலை என்பன. பன்னிருபடலம் அகத்தியருடைய மாணவர்கள் பன்னிருவராலும் பாடப்பட்டது என்பர். அப்பன்னிரு படலத்தையே முதல் நூலாகக் கொண்டு வழி நூலாக எழுந்ததே புறப்பொருள் வெண்பாமாலை. இதனை இயற்றியவர் சேரர் குடியில் தோன்றியவரான ஐயனாரிதனார் ஆவர்.

திணைகளை விளக்கும் சூத்திரங்கள், திணைதுறைகளுக்கு இலக்கியமாக அமையும் வெண்பாக்கள், அவ்வெண்பாக்களை விளக்கும் 'கொளு' என்னும் உரைநடைப்பகுதி ஆகிய உறுப்புக்களுடன் இந்நூல் அமைந்துள்ளது. இவ்வெண்பாக்கள் மிகவும் நயமுள்ளவையாகும். இந்நூலுக்குச் சாமுண்டிதேவநாயனார் என்பவர் இயற்றிய பழைய உரை ஒன்று உண்டு. இது வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பை, வாகை, பாடாண், பொதுவியல், கைக்கிளை, பெருந்திணை என்னும் பன்னிரு திணைகளைப் பற்றிப் பேசுகின்றது.

இன்னோரன்ன இலக்கண நூல்களுக்குப் பின்னர் பல நூல்கள் எழுந்துள்ளன. குறிப்பாக, ஐந்திலக்கணத்தையும் பற்றிப் பேசும் இலக்கண விளக்கம் என்னும் நூல் வைத்தியநாத தேசிகரால் மூன்று நூற்றாண்டுகளுக்கு முன்னர் இயற்றப்பட்டது. இந்நூலின் அருமை நோக்கி இதனைக் குட்டித் தொல்காப்பியம் என்பர். இதுபோன்றே, பதினெட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த 'பெஸ்கி' என்னும் வீரமாமுனிவரால் இயற்றப்பட்ட 'தொன்னூல்' என்னும் இலக்கணநூல்

ஐந்திலக்கணத்தையும் பற்றிப் பேசுகின்றது. பத்தொன்பதாம் நூற்றாண்டில் முத்துவீருப் புலவர் என்பவரால் முத்துவீரியம் என்னும் ஐந்திலக்கண நூல் எழுதப்பட்டது. தண்டியலங்காரத்தைப் போன்றே பதினாறும் நூற்றாண்டில் வாழ்ந்த திருக்குருகைப் பெருமாள் கவிராயர் என்பவரால் 'மாறன் அலங்காரம்' என்னும் அணியிலக்கண நூல் இயற்றப்பட்டது. வடமொழிக் குவலயானந்தம் தமிழிலும் அதே பெயருடன் மாணிக்கவாசகர் என்பவரால் மொழிபெயர்க்கப் பட்டது. நவநீதப் பாட்டியல், சிதம்பரப் பாட்டியல் போன்ற பாட்டியல் நூல்களும் தோன்றின.

## சித்தர் நூல்கள்

பண்டைக் காலத்தில் அட்டமா சித்திகளையும் யோகநெறியால் கைவரப்பெற்று இயற்கையை உற்றுணர்ந்து அடக்கிய பெரியார்கள் சித்தர்கள் எனப்படுவர். இவர்கள் தமிழில் மருத்துவம், யோகம், இரசவாதம், மந்திரம், ஞானம் ஆகிய துறைகளில் நூல்களை இயற்றியுள்ளார்கள். சித்தவைத்தியம் ஒரு தமிழ்மருத்துவ முறை என்பர். நெடுங்காலத்திற்கு முன்னர் அகத்தியர், புலத்தியர், புசுண்டர், நந்தி, திருமூலர், காலாங்கிநாதர், போகர், கொங்கணர், உரோமமுனி, சட்டமுனி, மச்சமுனி, கருரர், தன்வந்திரி, தேரையர், பிண்ணாக்கீசர், கோரக்கர், யூகிமுனி, இடைக்காடர் என்னும் பதினெண் சித்தர்கள் வாழ்ந்துஇருந்து பல செயற்கரிய சாதனைகளையும் நூல்களையும் செய்தனர். இவர்களுள் திருமூலரைப் பற்றி முன்னரே கண்டோம். அகத்தியர் இயற்றியனவாக அமுதகலை ஞானம், நோயின் சாரம், வைத்தியக்கும்மி, வைத்திய சாரம், செந்தூர முறை போன்ற நூல்கள் கூறப்படு

கின்றன. ஆயின் இவைகள் கிடைக்கவில்லை என்பது டன் இவைகளை இயற்றியவர் இதிகாச கால அகத்திய ராக இருந்திருக்க இயலாது என்பதும் விளங்கும்.

திருஞான சம்பந்தர் 'தேவராயும் சித்தராயும்' என்றும் 'அட்டமா சித்திகள் அணைதரு காளத்தி' என்றும் பாடியுள்ளமையால், இச்சித்தர்கள் அவரது காலத்திற்கு முன்னரே வாழ்ந்திருத்தல் வேண்டும் என்பர்.

மேற்கூறிய பதினெண் சித்தர்கள் பலரும் மருத்துவம், இரசாயனம், மந்திரம் போன்ற துறைகளிற் சிறந்திருக்கக் காண்கின்றோம். புலிப்பாணியார் வைத்தியம் ஐந்நூறு, சாவாத்திரட்டு போன்ற நூல்களைச் செய்துள்ளார். கொங்கணர் என்பவர் இரசவாத ஆராய்ச்சியில் சிறந்தவர். இடைக்காடர் இரேகை சாத்திர வல்லுநர் என்பர். தேரையர் அகத்தியரின் மாணுக்கர் என்றும், மருத்துவ நூலிற் சிறந்தவர் என்றும், இவர் எழுதிய 'நோயணுகா விதி' என்னும் நூல் யாவராலும் கைக்கொள்ளத் தகுந்தது என்றும் கூறுவர். தேரையருடைய மாணவரான தன்வந்திரியும் ஒரு சிறந்த சித்த மருத்துவர்.

இனி, இப்பதினெண் சித்தர்களைத் தவிர வேறுபல சித்தர்கள் செய்த நூல்களும் தமிழ்மொழியில் உள்ளன. இவற்றின் காலங்களையெல்லாம் இன்னும் வரையறை செய்ததாகத் தெரியவில்லை. இவர்களுள் பட்டினத்தார் பாடல்கள், பத்திரகிரியார் மெய்ஞ் ஞானப் புலம்பல், சிவவாக்கியர் பாடல்கள், இடைக் காட்டுச் சித்தர் பாடல்கள், அகப்பேய்ச் சித்தர், குதம்பேய்ச் சித்தர், கடுவெளிச் சித்தர், அழுகணிச்

சித்தர் ஆகியோரது பாடல்கள், கொங்கணநாயனர் வாலைக்கும்மி, பீரு முகம்மது ஞானரத்தினக்குறவஞ்சி போன்ற நூல்களும் பிறவும் இன்று தனிப்பாடல் திரட்டாகச் 'சித்தர் பாடல்கள்' என்று காணக்கிடக்கின்றன. இவையனைத்தையும் இங்குப் பேசுவதற்கு வாய்ப்பில்லாமையால் ஒருசிலவற்றை மட்டும் நோக்குவோம்.

பட்டினத்தார், பத்திரகிரியார் என்பவர்கள் முன்னர்க் கண்டவர்கள் என்று கூறுவதற்கில்லை. சிவவாக்கியர் யாவற்றையும் கடந்த யோகியாகக் காட்சியளிக்கின்றார். 'சாதியாவது ஏதடா' என்று புரட்சிகரமாகக் கேட்கும் இவர்,

**"வீடெடுத்து வேள்விசெய்து மெய்யினோடு பொய்யுமாய்**
**மாடுமக்கள் பெண்டிர்சுற்றம் என்றிருக்கும் மாந்தர்காள்**
**நாடுபெற்ற நடுவர்கையில் ஓலைவந்து அழைத்திடில்**
**ஓடுபெற்ற அவ்விலை பெறுதுகாணிவ் வுடலமே"**

என்று அறிவுறுத்துகின்றார்.

**"நாதர்முடி மேலிருக்கும் நாகப் பாம்பே**
**நச்சுப்பையை வைத்திருக்கும் நல்ல பாம்பே"**

என்னும் பாம்பாட்டிச் சித்தரது பாடலை யாவரும் அறிவர். இவர்,

**"எட்டுமலை களைப்பந்தாய் எடுத்தெறிகுவோம்**
**ஏழுகட லையுங்குடித் தேப்பம்விடுவோம்"**

என்று சித்தர்களின் ஆற்றலைக் காட்டுகின்றார்.

**"மும்மலம் நீக்கிட முப்பொறிக் கெட்டாத**
**முப்பாழ் கடந்ததாம் அப்பாழைச்**
**செம்மறி யோட்டிய வேலை அமயத்தும்**
**சிந்தையில் வைப்பீரே கோனாரே"**

என்பது இடைக்காட்டுச் சித்தர் பாட்டு.

அகப்பேய்ச் சித்தர் தம் அகத்தையே பேயாகக் கண்டு வினு—விடை முறைகளிற் பாடிச் செல்கின்ருர்.

"மாங்காய்ப்பால் உண்டு மலைமேல் இருப்போர்க்குத்
தேங்காய்ப்பால் ஏதுக்கடி—குதம்பாய்
தேங்காய்ப்பால் ஏதுக்கடி"

என்ற குதம்பேய்ச் சித்தரின் பாடலை யாவரும் அறிவர். அது போன்றே,

"பாபம் செய்யாதிரு மனமே நாளைக்
கோபஞ் செய்தேயமன் கொண்டோடிப் போவான்"

என்று பாடும் கடுவெளிச் சித்தரின் 'நந்தவனத்தில் ஓர் ஆண்டி' என்று தொடங்கும் பாடல் தமிழகத்தின் சிற்றூரில் வாழ்வோருக்கும் தெரியும்.

அழுகணிச் சித்தரின் பாடல்களும் நெஞ்சை உருக்குபவை.

"பையூரி லேயிலிருந்து பாழூரிலே பிறந்து
மெய்யூரில் போவதற்கு வேதாந்த வீடறியேன்
மெய்யூரில் போவதற்கு வேதாந்த வீடறிந்தால்
பையூரும் மெய்யூரும் என்கண்ணம்மா—பாழாய்
முடியாதோ"

என்பது அவர் பாட்டு.

## கலிங்கத்துப்பரணி

மன்னர்கள் பகைப்புலத்துப் பொருது புகழ் நிறுத்துவதைப் புலவர்கள் என்றும் போற்றி வந்துள்ளனர். புறத்திணை நூல்கள் முழுவதிலும் இந்த

நிலையைக் காண்கிறோம். அகத்திணை நூல்களிலும் ஆங்காங்கே குறிப்புக்கள் காணப்படுகின்றன. பொருநர்களில் ஏர்க்களம் பாடுவோர், போர்க்களம் பாடுவோர், பரணி பாடுவோர் என்று பலதிறத்தார் இருந்ததாக அறிகின்றோம். இந்த நிலையில்—இதன் வளர்ச்சியாக—செயற்கரிய வீரச்செயல்களைச் செய்து பெரும் புகழ் கைக்கொண்ட மாபெரும் வீரர்களைப் பாட்டுடைத் தலைவர்களாகக் கொண்டு, அவர்களது அருஞ்செயல்களைப் பாடுவதற்கு எழுந்தது பரணி இலக்கியம்.

> "ஆனை ஆயிரம் அமரிடை வென்ற
> மான வனுக்கு வகுப்பது பரணி"

என்பது அப்பரணியின் தலையாய கொள்கையாக அமைந்தது. பின்னர் இதனிலும் ஒரு வளர்ச்சியைக் காண்கின்றோம். புறப்பகையை வெல்லுவதைக் காட்டிலும் அறியாமை, மோகம் முதலிய அகப்பகைகளை வெல்லும் பேராண்மை பெருமையுடையதாதலால், தத்துவராயரால் (15ஆம் நூற்றுண்டு) அஞ்ஞுவதைப் பரணி, மோகவதைப்பரணி என்னும் பரணிகள் படைக்கப்பட்டன. ஒட்டக்கூத்தர் இறைவனின் ஆற்றலை விளக்க 'தக்கயாகப் பரணி' பாடினுர். இதை ஒட்டி இரணியவதைப் பரணி, கஞ்சவதைப்பரணி முதலியன எழுந்தன.

இனி, தொண்ணூற்றுறு வகைப் பிரபந்தங்களுள் பரணியும் ஒன்றுகும். பரணி என்பது கொற்றவையின்—காளியின்—திருநட்சத்திரம் ஆகையால் அந்நாளில் கூளிகள் (பேய்கள்) கூழ் சமைத்துக் காளிக்குப் படைப்பது மரபு. அதைப் பின்னணியாகக் கொண்டு, கடை திறப்பு முதலிய உறுப்புக்களை அமைத்துப் பாட்டுடைத் தலைவனது பலவகைச்

சிறப்புக்களையும் இப்பிரபந்தம் பாடுவதால் இது பரணி என்ற பெயர் பெற்றது என்பர். பாலைக்காட்டின் நடுவில் காளி கோயிலில் கூடிய பேய்கள் பசியால் வருந்துகையில், ஒரு பேய் தோன்றுதல், அது அரசனது அரசபரம்பரையைப் பாடுதல், அவனது போர் எழுச்சியும் நிகழ்ச்சியும் கூறுதல், அப்போர்க்களத்தில் கிடைக்கும் பேரரசப் பிணவிருந்தைப் பாடுதல் என்று பல நிலைகளில் நடக்கின்றது இப்பிரபந்தம். அச்சத்தையும், அருவறுப்பையும், அழகின்மையையும் அழகாக—சுவையுள்ளதாகக் காட்டும் இதன் ஆற்றல் அறிந்து வியக்கத்தக்கது. தொல்காப்பியம் கூறும் பல்வகை வனப்புக்களுள் இது 'விருந்து' என்பதின்பாற் படும் என்பர்.§

கலிங்கத்துப் பரணி முதற்குலோத்துங்க மன்னனது படைத் தலைவனான கருணாகரத் தொண்டைமான் கலிங்கம் சென்று வென்ற வெற்றிச் சிறப்புகளைப் பாடுகின்றது. இது இப்பிரபந்த நூல்களுக்குள் முதன்மையானதும் சிறப்பானதும் ஆகும் என்பர். இதனைப் பாடிய செயங்கொண்டார் தீபங்குடியைச் சார்ந்த சமணராவார். * சோழர்கள் காலத்தில் அமைச்சர் முதலானோர் அரசர்களது சிறப்புப் பெயர்களையே தம் பெயராக வைத்துக் கொள்வது வழக்கம். செயங்கொண்ட சோழனது சிறப்புப் பெயரையே இவர் தாங்கினார் போலும். இவர் கவிச்சக்கரவர்த்தி என்று

---

§ தக்கயாகப் பரணி—முகவுரை—பக் : 10.

* ஆசிரியர் சமணரெனக் கருதப்பட்ட போதிலும் உமாபதி, நான்முகன், சூரியன், கணபதி, முருகவேள், நாமகள், உமையவள் முதலிய தெய்வங்களைத் துதித்துப் பாடியே தம் நூலைத் தொடங்குவது சிந்திக்கத் தக்கதாகும்.

அழைக்கப்படுகிறார். குலோத்துங்கனது காலம் கி. பி. 1078—1118. ஆதலால் இவரது காலமும் அதுவே யாகும்.

இந்நூல் கடை திறப்புடன் தொடங்குகிறது. தலைவன் பால் வேளத்தில் ஊடியிருக்கும் பெண்டிர் களை 'மன்னன் போர் வென்று வந்தான்; கதவைத் திறவுங்கள்' என்று பாடி ஊடல் தணிவிக்கும் முறை யாக இது அமைந்துள்ளது. புறப்போர்க் கொடுமை யைப் பாடும் புலவர் அகக்காதல் நெகிழ்வையும் காட்டும் திறனை நினைந்து வியக்கின்றோம்.

"நேயக் கலவி மயக்கத்தே
நிகழ்ந்த மொழியைக் கிளிஉரைப்ப
வாயைப் புதைக்கும் மடநல்வீர்
மணிப்பொற் கபாடம் திறமினோ"
"வருவார் கொழுநர் எனத்திறந்தும்
வாரார் கொழுநர் என அடைத்தும்
திருகுங் குடுமி விடியளவும்
தேயுங் கபாடம் திறமினோ"

என்னும் பாடல்கள் மேற்சொன்ன உண்மையை விளக் கும். இவ்வாறு அன்பைப் பாடும் புலவர் பேயைக் காட்டும் காட்சியைக் காண்போம் :

"வன்பி லத்தொடு வாதுசெய் வாயின
வாயி னுல்நிறை யாதவ யிற்றின"

கொற்றவையின் கோயில் முன்னர்,

"அடிக்கழுத்தின் நெடுஞ்சிரத்தை அரிவ ராலோ
அரிந்தசிரம் அணங்கின்கைக் கொடுப்ப ராலோ
கொடுத்தசிரம் கொற்றவையைப் பரவு மாலோ
குறை உடலம் கும்பிட்டு நிற்கு மாலோ"

என்று அவர் காட்டும் காட்சி நெஞ்சை நடுங்க வைக்கின்றதன்றோ ?

இவ்வாறு பல சிறப்பியல்புகளை இந்நூலிற் காணலாம். சோழர்தம் வரலாற்றை அறிவதற்கு இந்நூல் பெருந்துணை புரிகின்றது. எனவே, இது ஒரு வரலாற்றுப் புனைந்துரை (Historic Romance) போலவும், மாயக் காப்பியம்(Fairy Tale)போலவும் விளங்குகிறது என்பர். இதனைப் போன்றே கொப்பத்துப் பரணி, கூடல் சங்கமத்துப் பரணி முதலிய நூல்கள் சோழர் வரலாற்று நூல்களாகத் திகழ்கின்றன.

**ஒட்டக் கூத்தர் :** இவர் கூத்தர் என்றும் கூத்த முதலியார் என்றும் அழைக்கப் பெறுவர். இது நடராசப் பெருமானின் பெயராகும். இவரது ஊர் 'மலரி' என்பதை 'மலரிவருங் கூத்தன்' என்ற தண்டியலங்கார உரை மேற்கோள் செய்யுளால் உணர்கிறோம். இப் புலவர் பெருமான் தமிழ் இலக்கிய இலக்கணங்களைக் கசடறக் கற்றறிந்ததோடு வடமொழி நூல்களிலும் நல்ல பயிற்சி உடையவர். தம்முடைய நூல்களில் பலவிடங்களில் இவர் வடமொழிச் சொற்களைப் பெய்து செல்கின்றார். இவர் முதற் குலோத்துங்க சோழனது மகனான விக்கிரம சோழனின் அவைக்களப் புலவராய் வீற்றிருந்தவர்; அவனது மகன் குலோத்துங்கனுக்கு ஆசானாகவும், அவன் மகன் இராசராசனுக்கு அவைக்களப் புலவராகவும் இருந்து பெருமை பெற்றவர். இவ்வாறு மூன்று தலைமுறைகளுக்கு நெடிது வாழ்ந்து 'நரை முதிர் யாக்கை நடுங்கா நாவின் உரைமுதாள'ராகப் பெருமை பெற்றவர். கவிச்சக்ரவர்த்திகள் என்றும், கவிராட்சசன் என்றும் சக்ரவர்த்திகள் என்றும் வரும் இவரது

பட்டப்பெயர்கள் கவிஞர் உலகில் இவர் பெற்ற தனியிடத்தைக் காட்டுகின்றன. அரசனுல் காளம் என்னும் விருதைப் பெற்றமையால் 'காளக்கவி' என்றும், இருமொழிப் புலமை குறித்து 'சருவஞ்ஞகவி' என்றும் இவருக்கு வேறுபல சிறப்புக்களும் உண்டு. மேற்சொன்ன சோழர் மூவருள், ஒருவன் அரிசிலாற்றங் கரையில் உள்ள ஓர் ஊரை இவருக்கு அளித்தான். அவ்வூர் 'கூத்தனூர்' என்று இன்றும் வழங்கி வருகிறது.* இராசராசன் உலாவைப் பாடியதற்காக அம் மன்னன் ஒவ்வொரு கண்ணிக்கும் ஆயிரம் பொன் கொடுத்தான் என்பதைச் சங்கரசோழன் உலா முதலியவை கூறுகின்றன. இவ்வாறு மன்னரும், மக்களும், புலவரும் மதிக்க மேன்மையாக வாழ்ந்து வந்தவர் இப்புலவர் பெருமான். கம்பர், புகழேந்தி முதலானோர் இவரது காலத்தவர் என்றும், அவர்கள்பால் இவர் பகைமை கொண்டிருந்தார் என்றும் கூறுவதற்கு அடிப்படை ஏதும் இல்லை. மாருக, இவர் தனக்கு முன் வாழ்ந்த கவிஞர்களைப் போற்றிப் பாராட்டி இருக்கிறார். செயங்கொண்டாரை, 'பாடற் பெரும் பரணி தேடற் கருங்கவி கவிச்சக்ரவர்த்தி பரவ' என்று குலோத்துங்கன் பிள்ளைத்தமிழில் பாடுவதிலிருந்து இவ்வுண்மை தெரியும். சோழர்களைத் தவிர, திருச்சிற்றம்பலமுடையான் பெருமாள் நம்பி, புதுவைக் காங்கேயன், காவிரிப்பூம்பட்டினத்து வள்ளல்கள் சிலர் முதலியோரும் இவரை ஆதரித்ததாகத் தெரிகிறது. இவர் கலைமகளையே தம் இட்டதெய்வமாகக் கொண்டிருந்தார் என்பர். கூத்தனூரில் இவரால்

---

* இவ்வூர் தஞ்சை மாவட்டத்தில் பூந்தோட்டம் என்னும் ஊருக்கு அணித்தாக உள்ளது.

அமைக்கப்பட்ட கலைமகள் கோவில் இன்றும் உள்ளது.

இனி, இவர், இயற்றிய நூல்கள் மூவருலா, தக்கயாகப்பரணி, குலோத்துங்கன் பிள்ளைத் தமிழ், அரும்பைத் தொள்ளாயிரம், காங்கேயன் நாலாயிரக் கோவை, ஈட்டி எழுபது முதலியனவாகும். பிள்ளைத் தமிழுக்குரிய கூறுபாடுகளைப் பெரியாழ்வார் முதலிற் பாடியிருப்பினும், அதனை முதன் முதல் ஒரு பிரபந்த மாகப் பாடிய பெருமை ஒட்டக் கூத்தரையே சாரும் என்பர்.

மூவருலா என்பது விக்கிரமன், இரண்டாம் குலோத்துங்கன், இரண்டாம் இராசராசன் ஆகியமூவர் மீதும் பாடப்பெற்றதாகும். உலா என்பது 96 வகைப் பிரபந்தங்களுள் ஒன்ருகும். பாட்டுடைத் தலைவன் உலா வருதலைச் சிறப்பித்துப் பாடப்படுதலின் இது உலா எனவும் உலாப்புறம் எனவும் அழைக்கப்பெறும். தலைவன் வீதியிற் பவனி வருகையில், அவ் வீதியி லுள்ள பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை தெரிவை, பேரிளம்பெண் என்னும் ஏழு பருவப் பொது மகளிரும் அவனைக் கண்டு காமுறுவதாக இப்பிரபந்தம் பாடுகிறது. இம்மூன்று உலாக்களுள், இராச இராசன் உலாவே அளவாலும் தன்மையாலும் பெருமையுற்றது என்பது அறிஞர் முடிவு. மூவர் உலா பலவரலாற்றுச் செய்திகள் நிறைந்தது; வரலாற்று ஆசிரியர்களுக்கு ஆதார நூல்களுள் ஒன்ருகத் திகழ்வது.

தக்கயாகப் பரணி என்பது, தக்கன் சிவபெரு மானை இகழ்ந்து செய்யப் புகுந்த வேள்வியை வீரபத் திரக் கடவுள் அழித்து, அவனுக்கு உதவி புரிய வந்த தேவர்களையெல்லாம் வென்று, அவனுடைய தலையை

யும் தடிந்த வரலாற்றைப் பரணிநூல் மரபின்படிக் கூறுவது. தம் மரபின் பெருமையை 'ஈட்டி எழுபதால்' ஒட்டக் கூத்தர் பாடுகின்ருர்.

## பெரிய புராணம்

பத்தியின் பாலராகிப் பரமனுக்கே ஆளாகிய அறுபத்து மூவரது வரலாற்றை அழகுற எடுத்துப் பாடுகிறது பெரியபுராணம். இதனைப் பாடிய சேக்கிழார் அதுபற்றியே இந்நூலுக்குத் திருத்தொண்டர் புராணம் என்று பெயரிட்டார். பின்னர் இதன் பெருமை பற்றி இதற்குப் பெரியபுராணம் என்ற பெயர் ஏற்பட்டது. திருநீற்றுத்தொண்டின் நெறிவாழ்ந்த அடியார்களைப் பாடியதால் சேக்கிழார் 'தொண்டர்சீர் பரவுவார்' என்று அழைக்கப்பட்டார். இவரது இயற் பெயர் அருண்மொழித் தேவர் என்பதாகும். சேக்கிழார் என்பது குடியின் பெயர். இவரது ஊர் தொண்டை நாட்டிலுள்ள குன்றத்தூர் ஆகும். இவர், அனபாயன் என்றும் திருநீற்றுச் சோழன் என்றும் புகழப்பட்ட இரண்டாம் குலோத்துங்கனிடத்து (கி. பி. 1133–1146) அவனது தலைமை அமைச்சராகப் பணிபூண்டு வந்தார். அம்மன்னனும் இவரைப் பெரிதும் மதித்து 'உத்தம சோழப் பல்லவராயன்' என்ற பட்டப் பெயரை அளித்தனன். இவருக்கு 'மாதேவடிகள்' என்றும் ஒரு சிறப்புப் பெயர் இருந்தமையை அக்குலோத்துங்கனது மகனும் இராசராசனது திருமழபாடிக் கல்வெட்டு ஒன்று கூறுகிறது. ‡

இக் குலோத்துங்கன் காலத்தில் சமணர் காப்பிய மாகிய சீவகசிந்தாமணி பெரிதும் விருப்பத்துடன்

‡ சாஸனத்தமிழ்க் கவி சரிதம்—பக். 72.

பயிலப்பட்டு வந்தது என்பதை முன்னரே கண்டோம். இவ்வாறு சமணர் நூலில் தோய்ந்திருந்த இவனது மனத்தைத் திருப்ப எண்ணி, சேக்கிழார் இவனுக்குச் சிவத்தொண்டர்களின் வரலாற்றைக் கூறியதாகவும், அதைக் கேட்ட மன்னன் பெரிதும் வியந்து தொண்டர் தம் வரலாற்றையெல்லாம் தொகுத்து ஒரு காவிய மாகப் பாடித் தரும்படியாகவும் சேக்கிழாரை வேண்டினுன் எனவும், அவனது வேண்டுகோட்கிணங்கிச் சேக்கிழார் தில்லையம்பலவாணன் 'உலகெலாம்' என்று அடியெடுத்துக் கொடுக்க இந்நூலைப் பாடித் தில்லையிலே அரங்கேற்றினுர் எனவும் சேக்கிழார் புராணம் முதலிய நூல்களின் வாயிலாகத் தெரிந்து கொள்ளுகிறோம்.

சேக்கிழார் பாடியது வெறும் கற்பனைக் காவிய மன்று; பல கால எல்லையில் வாழ்ந்த சிவத்தொண்டர்களின் வாழ்க்கை உண்மைகளையெல்லாம் திரட்டிக் காவிய நயத்துடன் பாடிச் செல்லவேண்டிய செயற்கரிய சாதனை.

தாம் பாட எடுத்துக்கொண்ட பொருளுக்கு ஆதார நூல்களாக, முதல் நூல்களாக அவருக்குக் கிடைத்தவை நம்பியாரூரரின் திருத்தொண்டத் தொகையும், நம்பியாண்டார் நம்பியின் திருத்தொண்டர் திருவந்தாதியுமாகும். மேலும் அவர் அமைச்சராக இருந்தமையால் அரசியல் சலுகைகளையும் வசதிகளையும் பெற்று நாயன்மார்கள் பிறந்த, வாழ்ந்த, பாடிச் சென்ற பதிகளுக்கெல்லாம் நேரிற் சென்று அறிய வேண்டிய செய்திகளையும் பிறசான்றுகளையும் திரட்டி எடுத்துவந்து ஆராய்ந்து இந்நூலைப் பாடியிருக்கிறுர்; தொடர்புற்ற கல்வெட்டுக்களையும் கண்டு தெளிந்திருக்

கிறார். * இவ்வளவு செய்திகளையும் வெறும் வரலாற்று அறிக்கைபோல் கூறாமல் தகுந்த இடங்களில்மிடைந்து 'பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டப்' பாடியிருக் கிறார். அதுவே சேக்கிழார் பெருமை.

இந்நூல் ஒரு தனிப்பட்ட தலைவனைப்பற்றிப் பாடாமல் பல பெரியோர்களது வரலாற்றைப் பேசுவ தாலும், பெருங்காப்பிய இலக்கணங்களாகிய அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கனுள் அறத்தை யும் வீட்டையுமே பற்றிப் பேசுவதாலும் இது பெருங் காப்பியமாகாது என்று சிலர் கூறுவர்.§ ஆயின், இவரது காப்பியம் சுந்தரமூர்த்தி நாயனாரையே பாட்டு டைத் தலைவனாகக் கொண்டு, திருமலைச் சருக்கம் முதல் வெள்ளானைச் சருக்கம் ஈறாக ஒரே தலைவனது வரலாற்றையே பேசுகின்றது என்றும், இடையிடையே பல பெரியோர்களது வரலாற்றைப் பேசுகின்றது என்றும், சுந்தரமூர்த்தி நாயனார் புராணத்தில் ஐந்திணை வளங்களையும், ஏயர் கோன் கலிக்காம நாயனார், சிறுத் தொண்டர் புராணங்களில் வீரச்சுவையையும் பாடு கிறது என்றும், அதனால் இது ஒரு பெருங்காப்பியமே என்றும் திரு. C. K. சுப்பிரமணிய முதலியார் போன் றோர் கூறுவர்.

---

* முதலாம் இராசேந்திரனுடைய கல்வெட்டு ஒன்று 'தத்தா, நமரேகாண் என்ற மெய்ப்பொருள் நாயனார் படிமம் ஒன்று' என்று கூறுகிறது. அவன் காலத்திற்கு ஏறத் தாழ நூறாண்டுகளுக்குப் பின்னர் வாழ்ந்த சேக்கிழார், அதே சொற்றொடரை மெய்ப்பொருள் நாயனார் புராணத்தில் எடுத்தாண்டிருக்கிறார்—இது ஓர் எடுத்துக் காட்டு.

§ தமிழ்க் காப்பியங்கள்—பக்: 254.

இனி, இந்நூலைப் பற்றிப் பேசின் அதிகம் விரியும். ஆகையால் நூலிலுள்ள ஒரு சில நயங்களை மட்டிலும் காண்போம். கோதை நாச்சியாருக்குக் 'கருவிளை ஒண் மலர்களும் காயா மலர்களும் திருமால் உருவொளி காட்'டுவது போலத் தொண்டர் சீர் பரவும் சேக் கிழாருக்கு இயற்கை சிவனடியாராகவே காட்சி அளிக் கின்றது.

"பத்தியின் பால ராகிப் பரமனுக் காளாம் அன்பர்
தத்தமில் கூடி ஞர்கள் தலையினல் வணங்கு மாபோல்
மொய்த்தநீள் பத்தி யின்பால் முதிர்தலை வணங்கி மற்றை
வித்தகர் தன்மை போல விளைந்தன சாலி யெல்லாம்"

"காடெல்லாம் கழைக்கரும்பு காவெல்லாம் குழைக்கரும்பு
மாடெல்லாம் கருங்குவளை வயலெல்லாம் நெருங்குவளை
கோடெல்லாம் மடவன்னம் குளமெல்லாம் கடலன்ன
நாடெல்லாம் நீர்நாடு தனையொவ்வா நலமெல்லாம்"

எனவரும் பாடல்களை,கற்பனை நயத்திற்கும் கவினுற்ற சொல்லாட்சிக்கும் எடுத்துக் காட்டலாம் அல்லவா? திருநாவுக்கரசர் பிறந்த திருமுனைப்பாடி நாடு தீங்கின் றிச் சிறந்திருந்தது என்பதை,

"ஆங்குவன முலைகள்சுமந் தணங்குவன மகளிரிடை
ஏங்குவன நூபுரங்கள் இரங்குவன மணிக்காஞ்சி
ஓங்குவன மாடநிரை ஒழுகுவன வழுவிலறம்
நீங்குவன தீங்குநெறி நெருங்குவன பெருங்குடிகள்"

என்று கவிநயத்துடன் காட்டுகிறது.

## கந்தபுராணம்

இதனை இயற்றியவர் காஞ்சிபுரத்திலுள்ள குமர கோட்டத்தில் பூசை செய்யும் மரபில் வந்த கச்சியப்ப சிவாச்சாரியார் ஆவர். இந்நூல் வடமொழி 'ஸ்காந்த

புராணத்தின்' ஒரு பகுதியாகிய சங்கர சங்கிதையிற் கூறும் அறுமுகக் கடவுள் வரலாற்றைப் பற்றிப் பாடும் ஒரு சிறந்த காப்பியமாகும். பதினுயிரத்திற் கும் மேற்பட்ட செய்யுட்களையுடைய இந்நூல் சிந்தா மணியின் ஆண்மைப் பெருநடையுடன் திகழ்வதாக அறிஞர் உரைப்பர். சிவபெருமானுடைய நுதல் விழியிலிருந்து எழுந்த ஆறு பொறிகளும் சரவணப் பொய்கையில் சேர்ந்து, ஆறு குழந்தைகளாகப் பிறத் தலும், அவர்களைக் கார்த்திகைப் பெண்கள் ஆறுபேர் கண்டெடுத்துச் சேர்க்க ஆறுமுகப் பெருமானுகித் திருவிளையாடல் புரிதலும், சூரபன்மன் தான் சிவனி டத்துப் பெற்ற வரத்தால் பிரம்மாதி தேவர்களைச் சிறைவைத்தலும், முருகன் அவனையும் அவன் கூட் டத்தையும் வென்று தேவர்களைச் சிறைமீட்டலும், தேவயானையையும் வள்ளியையும் அவன் மணத்தலும் ஆகிய பல செய்திகளையும் இந்நூல் காவியப் பண் புடன் கூறுகிறது. காவியநயத்தில் சைவசித்தாந்தக் கருத்துக்களும் கலந்து தரப்படுவதாக அறிஞர் உரைப்பர்.

**"ஊரி லான்குணங் குறியிலான் செயலிலான் உரைக்கும்**
**பேரி லான்ஒரு முன்னிலான் பின்னிலான் பிறிதோர்**
**சாரி லான்வரல் போக்கிலான் மேலிலான் தனக்கு**
**நேரி லான்உயிர்க் கடவுளாய் என்னுளே நின்ருன்"**

என்று முருகனை முழுமுதற்கடவுளாக வழிபடுகின்ருர் கச்சியப்பர். அதே தருணத்தில்,

**"முழுமதி யன்ன ஆறு முகங்களும் முந்நான் காகும்**
**விழிகளின் அருளும் வேலும் வேறுள படையின் சீரும்**
**அழகிய கரமீ ராறும் அணிமணித் தண்டை ஆர்க்கும்**
**செழுமலர் அடியும் கண்டான் அவன்தவம் செப்பற்**
**பாற்ருே"**

என்று முருகனது அழகுக் கோலத்தையும் காட்டு கின்ருர்.

கந்தபுராணத்தின் முதற்பாட்டில் வரும் 'திகட சக்கரம்' என்ற சொற்ருெடர்க்கு வீரசோழியம் புணர்ச்சி விதி கூறுகின்றது. வீரசோழிய காலம் பதிஞேராம் நூற்ருண்டின் பிற்பகுதி. எனவே, இந் நூல் அக்காலத்திலோ, பன்னிரண்டாம் நூற்ருண்டின் தொடக்கத்திலோ தோன்றியிருக்கும் என்பர்.†

## கம்பர்

'கம்பன் என்ருெரு மானிடன்' பிறந்தது, தமிழகத் திற்குக் காலம் தந்த அருட்கொடையாகும். பிறமொழி களில் புலமை பெற்றிருப்பதோடு தமிழையும் பாங் குறக் கற்றறிந்த அறிஞர் அனைவரும் இன்று கம்பனை உலக மகா கவிஞருள் ஒருவஞகக் கொண்டு போற்று கின்றனர் என்பதில் ஐயமில்லை. 'கல்வி சிறந்த தமிழ் நாடு, உயர் கம்பன் பிறந்த தமிழ்நாடு' என்று, தமிழ கம் கம்பனைப் பெற்றதால் புகழும் பெற்றுத் திகழ் கின்றது. உலக மகாகவி என்று கம்பனுக்கு உரிய தோர் இடத்தைத் தேடிக்கொடுத்தது அவனுடைய இராமாவதாரம் என்னும் மாபெருங்காப்பியமாகும். இராமனுடைய கதையைக் கம்பன் காலத்திற்கு முன் னரே தமிழ்மக்கள் அறிந்திருக்கின்றனர். 'பெருமகன் ஏவல் அல்லது யாங்கணும், அரசே தஞ்சமென்று அருங்கான் அடைந்த, அருந்திறல் பிரிந்த அயோத்தி போலவும்' என்று சிலப்பதிகாரமும், 'வேல்போர் இராமன் அருமறைக் கவித்த பல்வீழ் ஆலம்' என்று

† திரு. கா. சு. பிள்ளை—இலக்கிய வரலாறு—பக்: 371.

அகநானூறும் கூறுவதையும், இன்னபிற இலக்கியச் சான்றுகளையும் நோக்க, சங்ககாலத்திலேயே இராமனது கதை மக்கள் உள்ளத்தில் பதிந்து இருந்தது என்பது விளங்கும்.

இராம கதையை உலகிற்கு முதன்முதற் சொன்னவர் வால்மீகி யாவார். இவர் இராமனை மாந்தருள் ஒரு மாணிக்கமாகவே காட்டுகின்றார் என்பர். ஆனால் இராமன் சிலப்பதிகார காலத்தில் தமிழ்நாட்டில் ஒரு தெய்வமாக விளங்கத் தொடங்கிய நிலையை ஆய்ச்சியர் குரவையில் காண்கிறோம். இந்த நிலை, பின்னர் வந்த ஆழ்வார்களால் வளர்க்கப்பட்டுக் கம்பன் காலத்தில் இராமன் முழுமுதற் பொருளாகி விடுவதைக் காண்கின்றோம். இளங்கோவடிகள் பெருங்குடி வணிகனின் பெருமடமகளைக் கற்புக்கடம்பூண்ட ஒரு தெய்வமாக்கிக் காட்டியதுபோல், வான்மீகியின் இராமனைத் தெய்வமாக ஆக்கிக் காட்டுவதற்காக அவனைச் சிறந்த பாத்திரமாகப் படைக்கின்றார் கம்பர். தமிழ்மக்கள் அவனை முழுமுதற் பொருளாக ஏற்றுக் கொள்ள வேண்டும் என்றும், அவனது கதையை வெறும் கதையென மதிக்காமல் நெஞ்சில் நிறைந்த வாழ்க்கை நெறியாக ஏற்றுக்கொள்ள வேண்டும் என்றும் கம்பன் காவியம் தமிழ்க் காவியமாக மாறுகிறது; வடநாட்டு இராமன் தமிழன் ஆகின்றான். இந்த மாற்றத்திற்காகக் கம்பனும் வான்மீகியிடமிருந்து சிற்சில இடங்களில் மாறுபட வேண்டியிருக்கிறது.

**"வாங்கரும் பாதம் நான்கும் வகுத்தவான் மீகி என்பான்**
**தீங்கவி செவிகள் ஆரத் தேவரும் பருகச் செய்தான்"**

என்று வான்மீகியிடம் மிகவும் மதிப்புக் கொண்ட கம்பன், இராமனைத் தமிழ்நிலத்திற்கு உரியவனுக்கு

வதற்காக அவருடன் மாறுபடத் தயங்கவில்லை. இந்த நிலையில் மலையாள, தெலுங்கு, கன்னட மொழிகளிலுள்ள இராமாயண ஆசிரியர்களுக்கும், இந்தியில் 'இராமசரித மானஸை' இயற்றிய துளசிதாசருக்கும் கம்பன் ஒரு முன்னோடியாக—வழிகாட்டியாக விளங்குகிறான் என்பது அறிஞர்கள் கருத்தாகும். எனினும், கம்பன் தனது 'தோமறுமாக்கதையை' இயற்றிய பொழுது, புலவர்கள் அதனை முழுமனத்துடன் ஏற்றுக் கொண்டதாகத் தெரியவில்லை. உரையாசிரியர்கள் யாவரும் கம்பனை எடுத்தாளத் தவறிவிட்டது குறிப்பிடத்தக்கதாகும். எனினும் கம்பனது காவியத்தைப் போல் பொதுமக்கள் மனத்தில் இடம்பெற்ற காவியம் வேறு எதுவும் இல்லை என்றே கூறவேண்டும். கம்பராமாயணத்தின் ஏட்டுப் பிரதிகள் சில இன்னும் திபெத்தில் கூட இருப்பதாகவும், தெலுங்கு, கன்னட, மேற்குக்கடற்கரை (மலையாள) நாடுகளிலும் கம்பராமாயணப் பிரதிகள் அந்த அந்த மொழி எழுத்துக்களில் எழுதப்பட்டு வழங்கப்படுகின்றன என்றும் ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். கி. பி. 1376இல் கன்னட நாட்டில் கம்பராமாயணப் பிரசங்கி ஒருவருக்கு நிலம் தானமாக வழங்கப்பட்டதற்குக் கல்வெட்டு ஒன்று காணப்படுகிறது.

கம்பர் உவச்சர் குடியைச் சார்ந்தவர் என்றும், ஏகம்பர் என்பது முதல் எழுத்து குறைந்து கம்பர் என்றாயிற்று என்றும், இவரை ஆதரித்தவர் திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்பவள்ளல் என்றும் அறியக்கிடக்கின்றன. இவரை ஆதரித்த சோழ வேந்தன் மூன்றாம் குலோத்துங்கன் என்பது ஆராய்ச்சியாளர் தம் முடிவு. 'எண்ணிய சகாப்தம் எண்ணூற்றேழின்மேல்' என்று வரும் செய்யுளைக் கொண்டு,

சிலர் கம்பர் தமது காவியத்தைச் சக ஆண்டு 807 இல் (கி. பி. 885), அதாவது முதலாம் ஆதித்தன் காலத்தில் இயற்றியிருத்தல் வேண்டும் என்பர். ஆயின் இது சக ஆண்டு அன்று என்றும், விக்கிரம ஆண்டு தான் என்றும் கொண்டு, இவரது காலத்தை மூன்ரும் குலோத்துங்கனது காலமாகக் கொள்வர், பேராசிரியர் கா. சு. பிள்ளை போன்றவர்கள்.* திரு. மு. இராகவய்யங்கார், இரா. இராகவய்யங்கார் போன்ருரும் இதனையே ஒப்புக்கொள்கின்றனர். எனவே கம்பரது காலம் பன்னிரண்டாம் நூற்ருண்டின் இறுதி அல்லது பதின்மூன்ரும் நூற்ருண்டின் முற்பகுதி என்று கொள்வது பொருந்தும். இச்சோழன் கம்பனை மிகவும் போற்றி வந்திருப்பினும், கம்பர் அவனிடம் மனம் கசந்து வடபுலம் சென்று 'ஒரங்கலி'லிருந்த பிராதபருத்திரன் என்பவனுல் ஆதரிக்கப்பட்டார் என்றும், அவன் அடைப்பை தாங்கிவர மீண்டும் தமிழ் நாடு போந்தார் என்றும் கூறுவர். கம்பருக்கு அம்பிகாபதி என்ெருரு மகன் இருந்ததாகவும், அவன் சோழன் மகளைக் காதலித்ததற்காகக் கொலையுண்டான் என்றும் ஒரு கதை வழங்குகிறது. அவனே அம்பிகாபதிக் கோவையை இயற்றினுன் என்பர். கம்பர் தம்மை ஆதரித்த சடையப்ப வள்ளலிடம் தாம்கொண்ட நன்றியுணர்ச்சியைச் காட்டத் தம் காப்பியத்துள் ஆயிரம் செய்யுளுக்கு ஒருமுறை அவரைப் புகழ்ந்து பாடியிருக்கிருர்.

ஆங்கிலப் பெரும்புலவரான மில்டன் ஹோமர், வெர்ஜில், தாந்தே போன்ருரது காப்பியங்களையெல்

* இலக்கிய வரலாறு—பக். 377

லாம் நன்கு படித்துப் பின்னர்த் தம் காவியமாகிய 'சொர்க்க நீக்கத்தைச்' செய்தது போலவே, கம்பர் தனக்கு முன்னர்ப் பாடிய சான்றோர் கவிகளையெல்லாம் கற்றறிந்து சிறந்த புலமையைப் பெற்றிருக்கிறார். 'கல்வியிற் பெரியவர் கம்பர்' என்றும் 'கம்பன் வீட்டுள் ஒருசிறுபுன் கட்டுத் தறியும் கவிசெய்யும்' என்றும் வழங்கும் முதுரைகளே அதற்குச் சான்றாகும். சங்க இலக்கியம், திருக்குறள், சிந்தாமணி, சூளாமணி போன்ற நூல்களின் சாயல்களைக் கம்பன் காவியத்தில் பலவிடங்களிலும் காணலாம். திருத்தக்க தேவரால் கையாளப் படத் தொடங்கிய விருத்த யாப்பு கம்பன் கைவண்ணத்தால் ஒரு முழுமை நிலையை அடையக் காண்கிறோம். 'விருத்தமென்னும் ஒண்பாவிற்கு உயர் கம்பன்' என்று கம்பன் புகழப் பெறுகிறான். பதினாயிரத்திற்கும் மேற்பட்ட அவனது பாடல்களில் அறுபதுக்கும் மேற்பட்ட சந்த வேறு பாடுகள் ஒலிக்கக் காண்கிறோம்.

கம்பன் கவிதையைப் பற்றிச் சொல்ல இங்குஇடம் போதாது.

> "புவியினுக் கணியாய் ஆன்ற பொருள்தந்து புலத்திற் றாகி
> அவியகத் துறைகள் தாங்கி ஐந்திணை நெறிய ளாவிச்
> சவியுறத் தெளிந்து தண்ணென் றொழுக்கமும் தழுவிச் சான்றோர்
> கவியெனக் கிடந்த கோதா வரியினை வீரர் கண்டார்"

என்று கம்பரே கவிதைக் கலைக்கு இலக்கணம் வகுக்கின்றார். அவரது காவியம் அதற்கு இலக்கியமாகின்றது. பாத்திரப் படைப்பிலும், கட்டங்களை அமைக்கும் (Situation) முறையிலும், உவமைகளை எடுத்தாள்வதிலும், இயற்கையை வருணிப்பதிலும்,

மனித உணர்ச்சிகளைப் படம் பிடித்துக் காட்டுவதிலும் கம்பனுக்கு நிகரானவர் இல்லை எனலாம். "முற்காலக் காப்பியங்கள் யாவற்றையும் தமிழ் உலகம் மறக்கச் செய்து தன்னிடத்திலே தமிழர் உள்ளத்தைத் தேக்கி வைத்த பெரும் புகழ் கம்பராமயணத்திற்கு உரிய தாகும்" என்பர் திரு. கி. வா. ஜ. அவர்கள். *

கம்பன் முழுமுதற் கடவுளையே காப்பியத் தலைவனாகப் பாட வந்தாலும் அவனையும் மனிதனாக நடமாட விட்டு, மனித உணர்ச்சிகளின் பல்வேறு வடிவங்களைக் காட்டி, அத்துடன் நின்றுவிடாமல் மனித சமுதாயத்திற்கு ஒரு வழியையும் காட்டிச் செல்கின்றான். அவன் படைத்த கற்பனை நாடான (Utopia) கோசலை நாட்டில்,

**"பொற்பின் நின்றன பொலிவு பொய்யிலா**
**நிற்பின் நின்றன நீதி மாதரார்**
**அற்பின் நின்றன அறங்கள் அன்னவர்**
**கற்பின் நின்றன கால மாரியே."**

'பூவலயம் இன்று தனியன்று பொது' என்று ஒரு சமதர்ம நாடாக விளங்குகிறது இராமராச்சியம்.

கம்பர் இராமாயணத்தைத் தவிர, சடகோபர் அந்தாதி, சரசுவதி அந்தாதி, இலக்குமி அந்தாதி, ஏர் எழுபது என்னும் நூல்களையும் இயற்றியுள்ளார்.

## சோழர் வீழ்ச்சியும் பாண்டியர் எழுச்சியும்

விஜயாலயன் காலம் முதல் மகோன்னதமான நிலையில் இருந்து வந்த சோழப் பேரரசு, பதின்

* தமிழ்க்காப்பியங்கள்—பக். 252.

மூன்றும் நூற்றுண்டில் சிதைந்து சிற்றரசர்களின் தனித்தனி ஆட்சிக்குட்பட்டுக் குலைந்தது. ஆயின், தெற்கே பாண்டியர்களின் கை வலுக்கத் தொடங்கியது. முதல் மாறவர்மன் சுந்தரபாண்டியன், முதல் சடையவர்மன் சுந்தரபாண்டியன், முதல் மாறவர்மன் குலசேகர பாண்டியன் ஆகியோர் காலத்தில் (13ஆம் நூற்றுண்டு) பாண்டியப் பேரரசு தமிழகம் முழுவதையும் தன்னுள் அடக்கிக்கொண்டு விரிந்து கிடந்தது. § இந்த நூற்றுண்டில் முன்னைய நூற்றுண்டுகளைப்போல மாபெரும் நூல்கள் தோன்றுமற் போனுலும் சில நல்ல நூல்கள் தோன்றின. அவற்றுள் முக்கியமான சிலவற்றை நோக்குவோம்.

**திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம் :** 'காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி' வருபவன் இறைவன் என்று மணிவாசகர் கூறுவர். செயற்கரிய செயல்களை இறைவன் விளையாட்டாகச் செய்யும் ஆற்றலுடையவன். எனவே, மதுரையில் கோயில் கொண்டு எழுந்தருளும் சோமசுந்தரக் கடவுள் நிகழ்த்திய அறுபத்துநான்கு திருவிளையாடல்களையும்கூறும் தமிழ் நூல் திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணமாகும். இது உத்தர மகாபுராணம் என்னும் வடநூலின் ஒரு பகுதியின் மொழி பெயர்ப்பாகும். கடவுள் வாழ்த்து, அவையடக்கம், பதிகம், நூல் வரலாறு, திருநாட்டுச் சிறப்பு, திருநகரச் சிறப்பு, நூற்பயன் என்னும் உறுப்புக்களைப் பெற்ற இந்நூல் இந்திரன் பழிதீர்த்த திருவிளையாடல் முதலாக வேதம் உணர்த்திய திருவிளையாடல் ஈருக உள்ள அறுபத்து நான்கு திருவிளையாடல்களைக் கூறுகிறது. 1753 செய்

§ பாண்டியர் வரலாறு—பக். 130.

யுட்கள் இதன்கண் உள்ளன. இந்நூலை இயற்றியவர் செல்லி நகர்ப் பெரும்பற்றப் புலியூர் நம்பி ஆவர். இவர் வேம்பத்தூர்ச் சோழியர் வகுப்பைச் சார்ந்தவ ராதலால் இவரது நூல் வேம்பத்தூரார் திருவிளையாடற் புராணம் என்றும் அழைக்கப்படும். இதனைப் பழைய திருவிளையாடல் என்றும் கூறுவதுண்டு. எனினும், பதினாறும் நூற்றாண்டில் பரஞ்சோதி முனிவரின் திருவிளையாடற்புராணம் தோன்றிய பிறகு இந்நூல் தனது செல்வாக்கை இழந்துவிட்டது என்பர்.‡ இந் நூலாசிரியரது பூர்வீக ஊராகிய வேம்பத்தூர் சங்க கால முதல் நல்ல புலவர்களைப் பெற்றுத் திகழ்ந்த தாகும்.† கௌணிய கோத்திரத்தைச் சார்ந்த செல்லி நகர் ஆனந்த தாண்டவ நம்பி என்பவரது மனைவியார் மதுரையில் அங்கயற்கண்ணியின் கோயில் சந்நிதிக் கோபுரத்தைக் கி. பி. 1228 இல் கட்டுவித்தனர் என்று மதுரைத் திருப்பணிமாலை கூறுகிறது. இந்த ஆனந்த தாண்டவ நம்பியே பெரும்பற்றப்புலியூர் நம்பி என்பது ஆராய்ச்சியாளர் முடிவு. எனவே இவரது காலமும் அதுவேயாம். இந்நூலைச் செய்ததற்காகப் பாண்டி வேந்தன் இவருக்குச் சில ஊர்களை முற்றூட் டாகக் கொடுத்தான் என்பர். எனினும், இவரது நூல் நல்ல செந்தமிழ் நடையில் சிறப்புற்றிருக்கவில்லை.

இவரும் பரஞ்சோதி முனிவரும் செய்த திருவிளை யாடற்புராணங்களைத் தவிர வேறு சில நூல்களும்

---

‡ *தமிழ் இலக்கிய வரலாறு (13, 14, 15ஆம் நூற்றாண்டு கள்)*—T. V. S—*பக்.4.*

† புறநானூற்றில் வரும் வேம்பற்றூர்க் குமரனாரும், வேம்பற்றூர்க் கண்ணங்கூத்தனாரும் இவ்வூரைச் சார்ந்தவர் கள் என்பர்.

உண்டு. தொண்டைநாட்டு இலம்பூர் வீமநாத பண்டிதரின் கடம்பவன புராணமும், வாயற்பதி அநதாரி என்பவரின் சுந்தர பாண்டியம் என்னும் இரண்டும் குறிப்பிடத்தக்கவை. பின்னது இன்னும் அச்சேறவில்லை என்பர்.

**புகழேந்தி:** 'கேட்டாலும் இன்பம் கிடைக்கும் கண்டீர், கொண்ட கீர்த்தியொடு, பாட்டாலுயர்ந்த புகழேந்தி' என்று தொண்டைமண்டல சதகத்தால் புகழ்பெற்றவர் புகழேந்திப் புலவர். இவ்வாறு இவர் புகழ் ஏந்தி நிற்பதற்குக் காரணம் இவரது 'நள வெண்பா' என்னும் சிறுகாப்பிய நூலாகும். நளனுடைய கதை பாரத நாடெங்கும் மக்களிடை வழங்கி வந்த கதை. சிலப்பதிகார ஊர்காண் காதையில் நளனுடைய வரலாறு பேசப்படுகிறது—வரி 50-57. இவ்வாறு தமிழ் மக்கள் அறிந்த கதையொன்றினைத் தனக்கே உரித்தான புலமையால் காப்பியமாக்கித் தந்தவர் புகழேந்தியாவார். வெண்பா யாப்பு அவரிடம் ஒரு முழுமையை அடைவதால் இவர் 'வெண்பாவிற் புகழேந்தி' என்று பாராட்டப் படுகிறார்.

இவர் தொண்டை நாட்டுப் பொன்விளைந்த களத்தூரிற் பிறந்தவர். இவரது பிறப்புப்பற்றி யாதும் தெரியவில்லை. இப்புலவர் மள்ளுவ நாட்டுத் தலைவனை சந்திரன் சுவர்க்கி என்பவரால் ஆதரிக்கப்பட்டவர். கம்பர் சடையப்பவள்ளலைத் தம் காவியத்துள் பலவிடங்களில் வைத்துப் புகழ்வதைப் போல், இவரும் சந்திரன் சுவர்க்கியைப் புகழ்ந்து பாடியுள்ளார்.

இப்புலவர் ஈழநாடு சென்று அங்கிருந்த ஆரிய சேகரன் என்னும் பாண்டியர் படைத் தலைவனைக்கண்டு பரிசில் பெற்றுத் திரும்பினர் என்று தமிழ்நாவலர்

சரிதை கூறுகின்றது. இந்த ஆரியசேகரன் கி. பி. 1268 முதல் 1311 வரை ஆண்ட முதல் மாறவர்மன் குலசேகர பாண்டியனின் படைத்தலைவன் என்பது ஆராய்ச்சியாளர்தம் கருத்தாகும். எனவே, இதுவே புகழேந்தியாரின் காலம் எனக் கொள்ளலாம்.

புகழேந்தியார் சங்க நூல்களையும், பாரதவெண்பா, முத்தொள்ளாயிரம் திருவாய்மொழி முதலான நூல்களையும் நன்கு கற்றவர் என்பதை அவரது நூல்வழி உணர்கிறோம். வெண்பா யாப்பில் அமைந்த தமிழ்க் காப்பியங்களுள் நளவெண்பா மிகச் சிறந்ததாகும். அவர் கையாளும் உவமைகளும் உருவகங்களும் நெஞ்சை அள்ளுபவையாகும்.

தான் தூதுவிட்ட அன்னத்திற்காக வழிமேல் விழிவைத்துக் காத்துநின்ற நளன், அதனைக் கண்டதும் செய்தி கேட்கத் துடிக்கின்றான். இருப்பினும் என்ன ஆயிற்றோ என்று அஞ்சுகிறான். அந்த இடத்தில் புலவர் காட்டும் உவமையைப் பாருங்கள்:

**"முகம்பார்த்(து) அருள்நோக்கி முன்னிரந்து செல்வர்**
**அகம்பார்க்கும் அற்றோரைப் போல—மிகும்காதல்**
**கேளா இருந்திட்டான்............"**

தமயந்தியைப் பற்றிப் பாடுங்கால்,

**"நாற்குணமும் நாற்படையா ஐம்புலனும் நல்லமைச்சா**
**ஆர்க்கும் சிலம்பே அணிமுரசா—வேற்படையும்**
**வாளுமே கண்ணா வதன மதிக்குடைக்கீழ்**
**ஆளுமே பெண்மை அரசு"**

என்று பாடுகிறார். இவர் செஞ்சியின்கண் வாழ்ந்த ஒரு தலைவன் மீது செஞ்சிக் கலம்பகம் ஒன்றைப்பாடியுள்ளதாகத் தொண்டைமண்டல சதகத்தால் அறிகிறோம்.

ஆயினும் அந்நூல் கிடைக்கவில்லை. இனி, அல்லி அரசாணிமாலை, புலந்தரன் களவு மாலை, இரத்தினச் சுருக்கம் முதலான நூல்களும் இவரால் இயற்றப்பட்டன என்பதற்குச் சான்றுகள் இல்லை. அதுபோல் ஒட்டக்கூத்தருக்கும் இவருக்கும் இடையில் பகைமை இருந்ததாகக் கூறும் கதைகள் பலவும் கற்பனையே. ஏன் எனில் ஒட்டக் கூத்தர் காலம் இவருக்கு நூறு ஆண்டுகள் முந்தியது.

**சைவ சித்தாந்த நூல்கள்**

சைவ சமயம் தமிழர்களது பழம்பெறும் சமயம் என்று முன்னரே கண்டோம். சைவ சித்தாந்தக் கருத்துக்கள் தமிழ் மறைகளாம் தேவார திருவாசகங்களில் காணக்கிடக்கின்றன. எனினும் அவை நூல்களாத் தோற்றம்கொள்ளத் தொடங்கியது பதின்மூன்றாம் நூற்றாண்டில்தான் என்பர் * சைவ சித்தாந்தத்தின் முதல் குரவராகத் தோன்றியவர் மெய்கண்ட தேவர் என்பர். இவர் இயற்றியருளிய சிவஞான போதத்துடன் மேலும் பதின்மூன்று நூல்களும் தோன்றின. ஆக, இன்று சைவ சித்தாந்த நூல்கள் என்று விளங்குவன பதி

---

* சிவஞான போதம் தோன்றுவதற்கு முன்னரே பன்னிரண்டாம் நூற்றாண்டில் திருவுந்தியாரும், திருக்களிற்றுப்படியாரும் தோன்றிவிட்டன என்றாலும், அவை மெய்கண்டாரின் நூல்போல் சைவ சித்தாந்தத்தை நிரல்பட முறையாக விளக்கவில்லை என்பர். திருவுந்தியாரை இயற்றியவர் திருவியலூர் உய்யவந்த தேவர் ஆவர். 45 செய்யுட்களை உடைய இந்நூல் சைவ சித்தாந்தக் கருத்துக்களைப் பொதுவாகக் கூறிச் செல்கின்றது. திருக்களிற்றுப்படியார் திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனாரால் இயற்றப்பட்டது. இந்நூலும் திருவுந்தியாரின் காலத்ததே யாகும்.

ணுன்கு நூல்களாகும். அவை சிவஞானபோதம், சிவ ஞான சித்தியார், திருவுந்தியார், திருக்களிற்றுப் பாடியார், இருபா இருப∴து, உண்மை விளக்கம், சிவப்பிர காசம், திருவருட்பயன், விஞவெண்பா, போற்றிப் ப∴றெடை, கொடிக்கவி, நெஞ்சுவிடு தூது, உண்மை நெறிவிளக்கம், சங்கற்ப நிராகரணம் என்பன. அவற் றைப்பற்றிச் சிறிது நோக்குவோம்.

**சிவஞான போதம்:** சைவசித்தாந்த நூல்களுள் இதுவே தலையாய நூலாகும். இதில் பன்னிரண்டு சூத் திரங்களும், அவற்றைக் காரணங்கள் கொண்டு விளக் கும் முப்பத்திரண்டு அதிகரணங்களும், எண்பத் தொன்று எடுத்துக்காட்டு வெண்பாக்களும் உள்ளன. முதல் ஆறு சூத்திரங்களும் பொதுவதிகாரம் எனப் படும்; பதி (இறைவன்), பாசம் (தளை), பசு (உயிர்) ஆகிய மூன்றின் உண்மைகளையும் தன்மைகளையும் பேசுகின்றன. இரண்டாவது பகுதி உண்மை அதிகாரம் எனப்படும்; பரம்பொருளாலேயே உலகம் தோற்றம், நிலை, அழிவு என்ற முத்தொழிற்படுகிறது என்றும், அப்பரம்பொருளே சிவம் என்றும் கூறுகிறது. இதனை இயற்றியவர் மெய்கண்ட தேவர். இவர் பெண்ணாடகம் என்னும் ஊரைச் சார்ந்த அச்சுதக்களப்பாளர் என்னும் சைவ வேளாளர்தம் தவப்புதல்வர் ஆவர். திருவெண் காடர் என்பது இவரது இயற்பெயர். தம்முடைய ஆசி ரியரால் இவர் மெய்கண்டார் என்று அழைக்கப்பட் டார். இவர் சடையப்பவள்ளலின் வழித்தோன்றல் எனபர்.* மூன்ரும் இராசராசனது பதினைரும் ஆட்சி யாண்டுக் கல்வெட்டு ஒன்று மெய்கண்ட தேவரது

---

* இலக்கிய வரலாறு— கா. சு. பிள்ளை— பக். 377

பெயரைக்குறிப்பதால், இவர் அம்மன்னனது காலத்தைச் (சார்ந்தவராதல் வேண்டும். கி. பி. 1216–1256)‡ மெய்கண்ட தேவருக்கு அருள்நந்தி சிவாச்சாரியார் உள்ளிட்ட 49 பெரியார்கள் மாணவர்களாய் இருந்தனர். 18ஆம் நூற்றாண்டில் சிவஞானமுனிவர் சிவஞான போதத்திற்குச் சிற்றுரையும் பேருரையும் எழுதியுள்ளனர். இவற்றுள் பேருரை சிவஞான மாபாடியம் என வழங்கப்படுகிறது. இவ்வுரை மிகச் சிறந்ததாகும்.

**சிவஞான சித்தியார் :** சைவசித்தாந்த நூல்களுள் மிகவும் விரிந்ததும் சிறந்ததுமான இந்நூல் பரபக்கம், சுபக்கம் என்னும் இரு பெரும் பிரிவுகளையுடையது. பரபக்கம் 301 விருத்தப் பாக்களாலும், சுபக்கம் 328 பாக்களாலும் இயன்றவை. பரபக்கத்தில் உலகாயதம் முதல் பாஞ்சராத்திரம் ஈறுக 14 சமயங்கள் பேசப்படுகின்றன. சுபக்கத்தில் சிவஞான போதத்தைப் பின்பற்றிச் சைவசித்தாந்தக் கருத்துக்கள் விளக்கப்பட்டுள்ளன. எனவே, இதற்கு முதல்நூல் சிவஞான போதம் என்பர். 'சிவத்தின் மேல் தெய்வமில்லை; சிவஞான சித்திக்கு மேல் சாத்திரம் இல்லை' என்னும் பழமொழி இந்நூலின் பெருமையை உணர்த்தும். இதன் ஆசிரியர் மெய்கண்டாரின் தலையாய மாணவரான அருள்நந்தி சிவாச்சாரியார் ஆவர். அச்சுதக் களப்பாளருக்கு ஆசிரியரான இவர் மெய்கண்டாரிடம் வாதாடி ஆணவம் அழியப்பெற்று அவரது சீடரானார்.

இருபா இருபஃது: இது இவர் செய்த நூலேயாகும். இந்நூலில் பத்து ஆசிரியப்பாவும் பத்து நேரிசை

---

‡ *தமிழ் இலக்கிய வரலாறு* (13, 14, 15 *நூற்றாண்டுகள்*)—— T. V. S. *பக்.* 27

வெண்பாக்களும் உள்ளன. அருள் நந்தியார் மெய் கண்டாரை வழிபட்டு வினவும் முறையில் சைவசித் தாந்தக் கருத்துக்களை இந்நூல் விளக்குகிறது.

**உண்மை விளக்கம் :** இது 53 வெண்பாக்களை உடையது. முப்பத்தாறு தத்துவங்கள், பதி, பசு, பாசம் இவற்றின் தன்மைகள், ஐந்தெழுத்தின் உண்மை கூத்தனின் வடிவில் உள்ளமை முதலியன இந்நூலில் பேசப்படுகின்றன. இதன் ஆசிரியர் மெய் கண்டாரின் மாணவரான மனவாசகங்கடந்தார் என்ற பெரியார்.

**சிவப்பிரகாசம் :** சிவஞான போதம், சிவஞான சித்தியார் ஆகிய இரண்டையும் பின்பற்றிச் சைவ சித்தாந்தங்களைப் பேசும் இந்நூல் 100 விருத்தப் பாக்களை உடையது. பொது அதிகாரம், உண்மை அதிகாரம் என்னும் இரு பிரிவுகளை உடையது. இது சிவஞான சித்தியாரின் சுருக்கமென்றே கூறுவர். இதனை இயற்றியவர் கொற்றவன்குடி உமாபதி சிவாசாரியார் ஆவர். இவர் அருள்நந்தியாரின் மாண வரான மறைஞான தேசிகரின் மாணவர். தில்லை மூவாயிரவருள் ஒருவர்; சந்தான குரவர் நால்வருள் இறுதியானவர். இவரது காலம் பதினான்காம் நூற் றுண்டின் முற்பகுதி என்பர். திருவருட்பயன், வினா வெண்பா, போற்றிப் பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சு விடு தூது, உண்மைநெறி விளக்கம்.‡ சங்கற்ப நிராகரணம் ஆகிய நூல்களும் இவரால் இயற்றப் பட்டவையேயாகும். இவற்றுள் சங்கற்ப நிராகரணம் என்னும் நூலில் மாயாவாதம், அகப்புறச் சமயங்கள்,

‡ இதன் ஆசிரியர் சீர்காழித் தத்துவனார் என்றும் சிலர் கூறுவதுண்டு.

அகச்சமயங்கள் ஆகியவை பற்றியும், அவற்றிற்கும் சைவசித்தாந்தத்திற்கும் உள்ள வேறுபாடுகள் பற்றியும் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன. மெய்கண்டார் அருள்பெற்ற ஒருவருக்கும், மாயாவாதி ஒருவருக்கும் தில்லையில் தேர் மண்டபத்தில் நடைபெற்ற வாதப் போரில், மெய்கண்டாரின் அருள்பெற்றவர் மாயாவாதியை வென்று உணர்த்திய உண்மைகளே இந்நூலில் இடம்பெற்றுள்ளன என்றும், இந்நிகழ்ச்சி நிகழ்ந்த ஆண்டு கி. பி. 1313 என்றும் திரு. பண்டாரத்தார் கூறுவர்.

சைவசித்தாந்தக் கருத்துக்கள் சித்தாந்த உலகில் உயர்வாகப் போற்றப்படுபவை; ஜி. யூ போப், மறைத்திரு. கௌடீ போன்ற மேனாட்டவராலும் பாராட்டப் பெறுபவை.

## நிகண்டுகள்

ஒரு மொழியின் சொல்வளத்தையும், பற்பல பொருள்களில் சொற்களைப் பயன்படுத்திச் சொற்களை ஆளுவதையும் அறிவதற்குப் பெருந்துணை செய்வன நிகண்டுகள். இந்தத் துறையில் தமிழ்மொழிக்குச் சிறந்த தொண்டினைச் செய்தவர்கள் சமணர்கள். தொல்காப்பியத்திற்குப் பின்பு உரையாசிரியர்கள் பல நிகண்டுச் சூத்திரங்களை எடுத்தாண்டிருக்கின்றனர். ஆயினும் அவை எந்த நூற்களிலிருந்து எடுத்தாளப் பட்டிருக்கின்றன என்பதை அறிவதற்கில்லை.

**திவாகரம் :** தற்பொழுது தமிழில் உள்ள நிகண்டுகளில் மிகவும் பழைமையானது திவாகர நிகண்டேயாகும். அது பற்றியே இது 'ஆதி திவாகரம்' என

வழங்கப்பட்டு வருகிறது. இதனை இயற்றியவர் திவாகர முனிவர் என்ற சமணர். அம்பர் என்ற ஊரைச்சார்ந்த சேந்தன் என்பவனுடைய ஆதரவில்இந் நூல் தோன்றியதால் இது 'சேந்தன் திவாகரம்' என்றும் வழங்கப்படுகிறது. 9500 சொற்கள் இதில் விளக்கம் பெறுகின்றன. அவற்றுள் 384 சொற்கள் பலபெருள் ஒரு சொற்கள்.

திவாகர முனிவர் தம் நூலில் இராட்டிர கூடரையும், சளுக்கியரையும் குறிப்பிடுவதால் இவரது காலம் கி. பி. எட்டாம் நூற்றுண்டின் பிற்பகுதிக்கு முந்தியதெனக் கருதப்பெறும்.

**பிங்கலந்தை :** திவாகரத்திற்குப் பின்னர்த் தோன்றிய நிகண்டு பிங்கலந்தை யாகும். இதனை இயற்றியவர் பிங்கலமுனிவர். இவரைத் திவாகரரின் மகனுர் என்றும் கூறுவர். பன்னிரண்டாம் நூற்றுண்டைச் சார்ந்த நன்னூல் ஆசிரியர் பிங்கலரைப் பற்றிக் குறிப்பிடுவதால் இது அதற்கு முந்தியதாகும். 14,700 சொற்கள் இதில் விளக்கம் பெறுகின்றன. அவற்றுள் பலபொருள் ஒரு சொற்கள் 1091. இது திவாகரத்தின் வளர்ச்சி என்றே தோன்றுகிறது.

**சூடாமணி :** தமிழில் வழங்கும் நிகண்டுகளுக்குள், யாவராலும் விரும்பிப் போற்றப்படுவது சூடாமணி நிகண்டேயாகும். 'நிகண்டு சூடாமணி' என்றும் இது வழங்குகிறது. இது பன்னிரண்டு தொகுதிகளை உடையது. இதனை இயற்றியவர் பெருமண்டூரைச் சார்ந்த மண்டலபுருடர் என்பவர். இவர் 'கெடிமன்னர் வணங்கும் தாளான், கிருட்டின ராயன்' என்று பாடுவதால் இவர் கிருட்டினராய தேவன் காலமான பதினு

ரும் நூற்ருண்டைச் சார்ந்தவர் என்பர். இவர் சிரவண பெல்குளத்திற்குச் சென்று வடமொழியில் உள்ள ஸ்ரீபுராணத்தைக் கற்று மணிப்பிரவாள நடையில் அந்நூலைச் செய்துள்ளார். இதனை, 'திருந்திய கமல வூர்தி, திருப்புகழ் புராணம் செய்தோன்' என்றுகூறும் சிறப்புப்பாயிரத்தால் உணரலாம்.

# நாயக்கர் காலம்

கி. பி. பதின்மூன்ருஞ் நூற்ருண்டில் சோழப் பேரரசு குலேந்து, பாண்டியர் தலைதூக்கி நின்றமையைக் கண்டோம். எனினும் பாண்டியருடைய வலிமை ஒரு நூற்ருண்டு கூடத் தொடர்ந்து நிலைபெற முடியாமல் போயிற்று. அதற்குக் காரணம் அவர்களுக்குள் ஏற்பட்ட உள்நாட்டுப் பூசல்களும், ஆட்சி உரிமைப் போராட்டங்களுமேயாம். மாறவர்மன் குலசேகர பாண்டியனது மக்கள் வீரபாண்டியன், சுந்தர பாண்டியன் ஆகிய இருவருக்குள் ஆட்சியுரிமை பற்றிப் பகைமை மூண்டது. சுந்தரபாண்டியன் தில்லி முகம்மதிய சுல்தானைத் துணைக்கழைத்துத் தென்னுட்டிற்குத் தீராத கேட்டையும், பாண்டியர்க்கு நெடும் பழியையும் உண்டாக்கினுன். தென்னுடு வந்த முகம்மதிய மாதண்ட நாயகனுன மாலிக்காபூர் என்பவன் கி. பி. 1310 இல் இராமேஸ்வரம் வரையில் வந்து கொள்ளை அடித்துப் பெருங்கேடு விளைவித்தான்.*

---

* *மதுரை நகரிலிருந்து மட்டிலும் 500க்கு மேற்பட்ட யானைகளையும் 5000 குதிரைகளையும் 500 மணங்கு நிறையுள்ள பொன்னையும், மணியையும வாரிச் சென்ருன், மாலிக்காபூர்* —South India and the Muhammadan Invaders—by S. Krishnaswamy Iyengar—P. 100

ஏற்கெனவே பிளவு பட்டிருந்த நாட்டில் இதனால் பல் வேறு குழப்பங்கள் மூண்டன. ஏறத்தாழ ஐம்பது ஆண்டுகள் முகம்மதிய ஆட்சி மதுரையில் அமைந்தது. இந்த நிலையில் கி. பி. 1358 இல் ஹொய்சாள வீர பல்லாளனுடைய மெய்க்காப்பாளருள் ஒருவரான குமார கம்பன்ன உடையார் என்பவர் மதுரையையும் பாண்டிநாட்டையும் முகம்மதியரிடமிருந்து மீட்டு ஓர் இந்து அரசை நிறுவினார். † இவ்வரசே, மிகப்பெரும் இந்துப் பேரரசாம் விஜய நகரப் பேரரசின் தென்னாட்டு அங்கமாகப் பின்னர்த் தோற்றம் கொண்டது. அதன் விளைவாக எழுந்த மதுரை நாயக்கர் ஆட்சி 15, 16, 17 ஆம் நூற்றாண்டுகள் முழுதும், 18 ஆம் நூற்றாண்டின் முற்பகுதி வரையிலும் தமிழ்நாட்டில் ஒரு நிலையான அரசியலை உருவாக்கியது. இதன் பயனாக இந்து சமயப் பண்பாடு மீண்டும் தழைக்கத் தொடங்கியது. தமிழ் இலக்கிய வரலாற்றில் நாயக்கர் ஆட்சிக் காலம் சிறந்ததொரு காலம் என்றே சொல்ல வேண்டும். சைவமடங்கள் தோன்றின. சைவசித்தாந்த நூல்களும் பேருரைகளும் எழுந்தன. தலபுராணங்களும் பலவகைப் பிரபந்த நூல்களும் தோன்றின. விஜயநகர மன்னர்கள் தெலுங்கையும் கன்னடத்தையும் ஆதரித்தது போல் தமிழையும் ஆதரித்தனர். சூடாமணி நிகண்டின் ஆசிரியர் மண்டல புருடர் கிருட்டின தேவராயரை 'மருவுமுத் தமிழை முன்னாள், வளர்த்த பாண்டியரே போல கருதிய வெல்லாம் தந்து' வளர்த்தார் என்று போற்றுகிறார். இனி இக்கால எல்லையில் எழுந்த நூல்களை ஆராய்வோம்.

† History of the Nayaks of Madura—R. Sathyanatha Iyer—p. 4

## உரையாசிரியர்கள்

தமிழ் இலக்கிய வரலாற்றில் உரையாசிரியர்கள் தனியிடம் பெறுகின்றனர். தொல்காப்பியம், சங்க இலக்கியங்கள், திருக்குறள், சிலப்பதிகாரம், நாலாயிரம், பின்னர்த்தோன்றிய இலக்கண நூல்கள் இவை யாவும் உரையாசிரியர்களது உதவி இன்றேல் நமக்குப் புரியாது போயிருக்கும்.

**இளம்பூரணர் :** தொல்காப்பியத்திற்கு உரை கண்ட சான்றோர்கள் இளம்பூரணர், பேராசிரியர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், தெய்வச் சிலையார், கல்லாடர் போன்றோராவர். இவர்களுள் காலத்தால் மூத்தவர் இளம்பூரணர் ஆவர். அதுபற்றியே இவர் உரையாசிரியர் என்ற சிறப்புப் பெயர் பெற்றார். இவர் மணக்குடியைச் சார்ந்தவர் என்றும், இளம்பூதியின் மகனார் என்றும் சிறப்புப்பாயிரம் கூறுகிறது. இளம்பூரணர் என்பது முருகனது பெயராதலால் இவர் சைவராதல் வேண்டும் என்பர், திரு. கா. சு. பிள்ளை அவர்கள். எனினும், 'தொல்காப்பியர் னகரத்தை ஈற்றில் அமைத்தமைக்குக் காரணம் வீடு பேற்றிற்குரிய சிறப்பு ஆண்பாலுக்கே உரிமையாதலால்' என்று கூறுகிறார். இது சமணர் கொள்கை. எனவே இவர் சமணராதல் வேண்டும் என்பர். இவர் தொல்காப்பியம் முழுமைக்கும் உரை செய்திருக்கிறார். தாம் கூறும் உரைகளே முடிந்த முடிபுகளாகக் கொள்ளாமல், கருத்து வேற்றுமைக்கு மதிப்புக் கொடுத்துச் செல்லுதல் இவரது சிறப்பியல்பாகும். இவர் பதினொன்றாவது நூற்றாண்டின் இறுதியிலாவது பன்னிரண்டின் தொடக்கத்திலாவது வாழ்ந்தவர் என்பர்.

**பேராசிரியர் :** இவர் 'பேராசிரியர்' என்ற சிறப்புப் பெயர் பெற்றிருத்தலே இவரது பெருமைக்குச் சான்ருகும். இவர் தொல்காப்பியம் முழுமைக்கும் உரை செய்திருந்ததாகத் தெரிகிறது. எனினும் இன்று கிடைக்கும் உரை பொருளதிகாரத்தில் மெய்ப்பாட்டியல், உவமவியல், செய்யுளியல், மரபியல் ஆகிய நான்கு இயல்களுக்கு மட்டிலுமேயாகும். இவர் திருக்கோவையாருக்கு ஓர் அழகிய உரையைச் செய்துள்ளார். அது பற்றியே இவர் சைவர் என்று கருதப்படுகிருர். இவர் குறுந்தொகைக்கும் உரை எழுதியுள்ளதாகத் தெரிகிறது. அவ்வுரை கிடைக்கவில்லை.

**சேனுவரையர் :** தொல்காப்பியச் சொல்லதிகாரத்திற்கு உரை வகுத்த பெரியார்களுள் இவரும் ஒருவர். இவர் வடமொழியும் தமிழும் நன்கு பயின்றவர்; வடநூல் முடிபுகளையும் கொள்கைகளையும் தமிழ் மொழிக்குரிய இலக்கணங்களில் புகுத்தி அவற்றிற்கு அமைதி கூறியவர். இவர் மிகவும் பாராட்டப்பெற்ற உரையாசிரியர் ஆவர். 'சேனுவரையர்' என்பதற்குப் படைத்தலைவர் என்பது பொருள். இவர் ஒரு படைத்தலைவர் போலும். திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள ஆற்றூரில் வாழ்ந்த சேனுவரையர் என்பவர் கி. பி. 1275 இல் தமது உடைமைகளை அவ்வூர்ச் சிவன்கோயிலுக்கு அளித்து விட்டதாக அவ்வூர்க் கல்வெட்டு ஒன்று கூறுகிறது. இவரே அச் சேனுவரையர் எனறும், இவரது காலம் மாறவர்மன் குலசேகர பாண்டியனது காலமான கி. பி. 1268—1311 என்றும் திரு. **T. V.** சதாசிவப் பண்டாரத்தார் கூறுவர்.

**அடியார்க்கு நல்லார் :** நெஞ்சை யள்ளும் சிலப்பதிகாரத்திற்கு இவர் அழகியதோர் உரை செய்துள்

ளார். சிலப்பதிகாரத்திற்கு அரும்பத உரையும் ஒன்று இருக்கிறது. அடியார்க்கு நல்லார் அரும்பத உரையைப் பற்றிப் பல இடங்களில் குறித்துச் செல்கின்ருர். எனவே அவ்வுரை, அடியார்க்கு நல்லார் உரையினும் காலத்தால் முந்தியதாகும். கொங்கு வேளிரின் விசய மங்கலத்துக்கு அருகில் இருக்கும் நிரம்பை என்பது இவருடைய ஊராகும். இராமானுசரால் வைணவஞன போசள விஷ்ணுவர்த்தனின் அமைச்சன் பொப்பண்ண காங்கேயன் என்னும் சமணன் அடியார்க்கு நல்லாரை ஆதரித்தவன். எனவே இவரது காலம் பன்னிரண்டாம் நூற்ருண்டு என்பர். இவரது உரையைக் கொண்டு பார்க்கையில், இவர் சமணச் சார்புடையவராகவே தோன்றுகிருர். அடியார்க்கு நல்லார் உரை சிலப்பதிகாரம் என்னும் பொற்கருவூலத்தைத் திறந்து காண்பதற்கு உதவும் ஒரு திறவுகோல் என்று கருதுதல் பொருந்தும். சொற்பொருளும் பொழிப்புரையும் கூறிச் செல்வதுடன் ஆங்காங்கே நுட்பமான கருத்துக்களைக் கூறிச் செல்லுதல் இவரது போக்காகும். இவரது உரையால் இவருக்கு முன்னர் இருந்த பல்வேறு தமிழ்நூல்களை அறிந்து கொள்ளுகிறேம். சிலம்பில் காணக்கிடைக்கும் இசை, நாடகத் தமிழ்நூல் கருத்துக்களை இவரது உரையின் உதவியின்றி அறிந்து கொள்வதற்கு இயலாது. நச்சினுர்க்கினியர் முந்நீர் முதலியவற்றிற்குக் கூறும் உரை அடியார்க்கு நல்லார் உரையை மறுப்பதுபோல் அமைவதால், நச்சினுர்க்கினியர் இவருக்கும் காலத்தாற் பிற்பட்டவர் என்று கூறுவர்.

**நச்சினுர்க்கினியர் :** பண்டை உரையாசிரியர்கள் பலரினும் இவரே மிகுதியான நூல்களுக்கு உரை எழுதி, 'உச்சிமேற் புலவர்கொள் நச்சினுர்க்கினியர்' என்று

புகழப்பெற்றவர் ஆவர். இவர் மதுரையில் பாரத்துவாச கோத்திரத்தில் பிறந்த அந்தணராவர். தொல்காப்பியம், பத்துப்பாட்டு, கலித்தொகை, குறுந்தொகை இருபது பாட்டுக்கள், சிந்தாமணி ஆகியவற்றிற்கு இவர் உரை எழுதியுள்ளார். சிந்தாமணிக்குச் சிறந்ததோர் உரை எழுதவேண்டி இவர் சமண சமயத்தைச் சார்ந்து அந்நூற்பொருளை அறிந்தார் என்பர். சிந்தாமணியின் உரை மிகச்சிறந்த உரை என்று சமணரும் போற்றுகின்றனர். எனினும் இவரது சமயம் சைவம் என்பர். நச்சினார்க்கினியர் என்பது சிவபெருமானின் பெயராகும்.† இவர் சொற்பொருள் கூறும் முறை மிகவும் சுவைமிக்கதாகும். பழைய செய்யுட்களையும் அவற்றின் கருத்துக்களையும் உரைநடையாக எழுதுவது இவரது சிறப்பியல்பு. நன்னூலை இவர் குறிக்கின்றார். எனவே இவர் 13ஆம் நூற்றாண்டிற்கும் பிற்பட்டவர் என்று அறிஞர் உரைக்கின்றனர். திருக்குறள் உரையாசிரியர்களில் 'நச்சர்' என்று குறிப்பிடப்பட்டவர் நச்சினார்க்கினியரே என்று கருதுவோரும் உளர்.

**பரிமேலழகர்:** இவர் திருக்குறளுக்கும் பரிபாடலுக்கும் உரை எழுதிய பெரியார் ஆவர். திருக்குறளுக்குத் தருமர், மணக்குடவர், தாமத்தர், நச்சர், பரிமேலழகர், பருதியார், திருமலையர், மல்லர், பரிப்பெருமாள், காளிங்கர் என்ற பதின்மர் உரை கண்டுள்ளனர். அவர்களுள் பரிமேலழகர் மற்ற யாவருக்கும் பின்னால் உரை எழுதியவராவர். எனினும் இவரது உரையே மற்றைய

† "நச்சுவார்க் கினியர் போலும் நாகவீச் சுவரனாரே"
—நாவுக்கரசர் தேவாரம்

"நச்சினார்க் கினியாய் போற்றி"—காஞ்சிப் புராணம்

உரைகளினும் பெரிதும் பாராட்டப் பெறுகிறது. இதனை,

> "பரித்தஉரை யெல்லாம் பரிமே லழகன்
> தெரித்தஉரை யாமோ தெளி"

என்னும் அடிகளால் உணரலாம். இவ்வாறு போற்றப் படும் படியாகப் பரிமேலழகர் உரை திட்பநுட்பமும் தூய தமிழ்நடையும் கொண்டு விளங்குகிறது. இன்றைக்குத் திருக்குறளின் ஆழ்ந்த கருத்துக்களையெல்லாம் அறிவதற்குப் பரிமேலழகர் உரை இன்றியமையாததொன்றாகும். இவர் காஞ்சியில் வாழ்ந்த வைணவராவர். இதனைத் 'திருக்காஞ்சிவாழ் பரிமேலழகன்' என்னும் தொண்டைமண்டல சதகச் சொற்களாலும், 'நீள்நிலம் கடந்தோன் தாள்தொழுமரபிற் பரிமேலழகர்' என்ற பரிபாடல் உரைச்சிறப்புப் பாயிரப் பகுதியாலும் உணரலாம். இவர் காஞ்சியில் உள்ள உலகளந்த பெருமாள் கோயில் அருச்சகர் மரபினர் என்பர். பழைய செய்யுட்பகுதிகளைத் தம் உரைநடையில் வைத்த உரையாசிரியர்களுள் இவரே முதன்மை வாய்ந்தவர் என்று அறிஞர் உரைப்பர்.

காஞ்சி வரதராசப்பெருமாள் கோவிலில் தெலுங்கச் சோழனான விஜயகோபாலனது (கி. பி. 1272) கல்வெட்டு ஒன்று பரிமேல்அழகியபெருமாள் தாதர் என்ற ஒருவரைக் குறிப்பிடுகின்றது.‡ இவர் நம் உரையாசிரியர்தாம் என்றே அறிஞர்கள் கருதுகின்றனர். எனவே இவரது காலம் பதின்மூன்றும் நூற்றாண்டு ஆகும். இவருக்கு 'வண்துவரைப் பெருமாள்' என்றும் ஒரு பெயருண்டு,

‡ S.I.I. Vol. VI No. 854.

**வைணவ உரையாசிரியர் :** பதினான்கு, பதினைந் தாம் நூற்றாண்டுகளில் தமிழ் வேதமாகிய நாலாயிரத் திவ்வியப் பிரபந்தங்களுக்குப் பேருரைகள் எழுந்தன. இவ்வுரைகள் யாவும் வடமொழிச் சொற்களை மிகுதி யாகவும் தமிழ்ச் சொற்களைச் சிறிது குறைவாகவும் கொண்ட மணிப்பிரவாள நடையில் அமைந்தவை. இப்போக்கினால், தமிழ்மொழியில் ஏராளமான வட சொற்கள் புகத்தொடங்கின. இந் நூற்றாண்டுகளில் தோன்றிய வில்லிபாரதம், திருப்புகழ் போன்ற நூல் களில் வடசொற்கள் மிகுதியாக உள்ளமைக்கு இப் போக்கே ஒரு காரணம் எனலாம். இனி இவ்வுரை யாசிரியர்களைப் பற்றிச் சுருக்கமாக ஆராய்வோம்.

நம்பியாண்டார் நம்பியைப் போன்று நாலாயிரத் தைத் தொகுத்து அளித்தவர் 'நாதமுனி'கள் ஆவர். இவர் வீரநாரண புரத்தைச் சார்ந்தவர். இவ்வைணவப் பெரியார், 'யோகரகசியம்' 'நியாய தத்துவம்' முதலிய நூல்களை இயற்றியுள்ளார். இவரது மாணாக்கராகிய 'உய்யக்கொண்டாரின்' மாணவர் 'மணக்கால் நம்பி' யாவார். இவரது மாணவரும் நாதமுனிகளின் பேரரு மான 'ஆளவந்தார்' சிறந்த வைணவப் பெரியார் ஆவர். பெரிய திருமலைநம்பி, திருக்கச்சிநம்பி, திருக்கோட்டியூர்நம்பி முதலிய பலர் இவர்தம் சீடர் களாவர். இவர்களது குருபரம்பரையில் உதித்தவரே 'இராமானுசர்' என்னும் உடையவர். இவரது மாணவ ராகிய 'திருக்குருகைப்பிரான் பிள்ளான்' என்பவர் திருவாய்மொழிக்கு ஆறுயிரப்படி என்னும் உரை இயற்றியுள்ளார். உடையவரது மற்றொரு மாணவ ரான கூரத்தாழ்வாரின் மாணவர் 'திருவரங்கத் தமுதனார்' இராமனுச நூற்றந்தாதி என்னும் பிரபந் தத்தை இயற்றினர். கூரத்தாழ்வாரின் மகனார் பராசர

பட்டர் என்பவர். இவரது மாணவர் 'நஞ்சீயர்' என்பார். இவர் திருவாய்மொழிக்கு ஆருயிரப்படி உரையையும், பெரிய திருமொழிக்கு ஓர் உரையையும் எழுதியுள்ளார். இவரது மாணவர் 'நம்பிள்ளை' என்பவர் திருவாய்மொழி உரை ஒன்பதினுயிரப்படி, திருப்பள்ளியெழுச்சி உரை, திருவிருத்த உரை, பெரிய திருமொழி உரை முதலியவற்றை ஆக்கியுள்ளார். நம்பிள்ளையின் மாணவரான 'பெரிய வாச்சான் பிள்ளை' என்பார் நாலாயிரத்திற்கும் இருபத்துநாலாயிரம் படி இயற்றியவர். இவரது காலம் 15ஆம் நூற்ருண்டின் முற்பகுதியாகும். இவர் தென்கலையாரால் மிகவும் போற்றப் படுவர். இவரைத் தவிர 'வடக்குத்திருவீதிப்பிள்ளை' என்பவர் திருவாய்மொழிக்கு முப்பத்தாருயிரப்படி உரை இயற்றியுள்ளார். இவர் காலத்தவரான கிடாம்பியூர் அப்புள்ளாரின் மாணவரே 'வேதாந்ததேசிகர்' என்பர். இவர் வடகலை வைணவர்கள் தம் குரவராவர். அடைக்கலப்பத்து, நவரத்தினமாலை, திருச்சின்ன மாலை என்னும் தோத்திர நூல்கள் வேதாந்ததேசிகரால் பாடப்பெற்றவை.

'பின்பழகிய பெருமாள் சீயர்' என்பார் 'வைணவ குருபரம்பரை'யை இயற்றியவராவர். வடக்குத் திருவீதிப்பிள்ளை என்பவரின் மக்களே 'பிள்ளைலோகாச் சாரியாரும்', 'அழகிய மணவாளநயினுரும்' ஆவர். முன்னவர் அட்டாதச ரகசியம் என்னும் 18 நூல்களை இயற்றியுள்ளார். அழகிய மணவாளர் திருப்பாவைக்கு ஆருயிரப்படி உரையையும், 'அமலனுதிபிரான்,' 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' ஆகியவற்றிற்கு உரைகளையும் எழுதியுள்ளார். 'பிள்ளை' என்ற பெயரை, அக்காலத்தில் அந்தணர்களும் வைத்துக்கொண்டிருந்தமை இதனுல் தெரிகிறது.

**இரட்டையர்கள்:** நட்பினுல் பிணைந்த இரு புலவர்கள் தம் வாழ்நாளெல்லாம் ஒன்ருகவே இயங்கி, ஒரு மனப்பட்டுப் பாடல்கள் பாடிக் கவிதை வானில் பறந்த விந்தையைத் தமிழ் இலக்கிய வாழ்வில் காண்கின்ரேம். அவர்களது இயற்பெயர்கள் மறைந்து 'இரட்டையர்கள்' என்ற பெயரே நிலைப்பட்டுவிட்டது† இவர்களில் ஒருவர் குருடர்; மற்றவர் முடவர். குருடர் முடவரைச் சுமந்து செல்ல, முடவர் அவருக்கு வழி காட்டுவர் என்பர். ஆயின், இது ஒரு கற்பனையே என்று திரு. பண்டாரத்தார் அவர்கள் கூறுவர். இப்புலவர் இருவரும் சோழநாட்டிலுள்ள இலந்துறை என்னும் ஊரில் பிறந்தவர்கள் என்று ஒரு செவிவழிச் செய்தி கூறுகிறது. தில்லைக் கலம்பகம், திருவாமாத்தூர்க் கலம்பகம், ஏகரம்பரநாதர் உலா, கச்சிக்கலம்பகம் ஆகிய நூல்களை இவர்கள் பாடியுள்ளனர். கலம்பகம் பாடுவதில் இரட்டையர்கள் நிகரற்றவர்களாய் விளங்கினர். அதனுல் இவர்கள் 'கலம்பகத்திற்கு இரட்டையர்கள்' என்று பாராட்டப் பெற்றனர். இவர்கள் சிறந்த சிவபக்தர்கள் என்பதை இவர்களது நூல்களால் உணரலாம்.

தில்லையம்பலவாணன்மீது பாடப்பட்டதே தில்லைக் கலம்பமாகும். இது நூறு செய்யுட்களை உடையது. இவர்கள் காலத்தில் முகம்மதியர்கள் ஆதிக்கத்தால் தமிழ் நாட்டிலுள்ள வணிகரும், வேளாளரும், குடிமக்களும் மிகவும் தொல்லைப்பட்டனர்

---

† இரட்டையரில் மூத்தவர் 'முதுசூரியர்' என்றும் இளையவர் 'இளஞ்சூரியர்' என்றும் அழைக்கப்பட்டதாகத் தமிழ் நாவலர் சரிதை கூறுகிறது. எனினும் அதற்குச் சான்றுகள் இல்லை.

என்பதை, ‘பூவணிக வேளாளர் புவியரசர் கொடுங் கோன்மை பொறுத்தாற்போல’ என்று இவர்கள் காட்டும் ஓர் உவமையால் உணரலாம். திருவாமாத் தூர்க் கலம்பகம் அவ்வூர்ச் சிவபெருமான்மீது பாடப் பெற்றது. இந்நூலில்,

> “அணிப்புலவர் பெருமிதமோ அல்லதுநின் தமிழறிவோ
> மணிப்பலகைக் கீழ்நின்ருய் மறைகிடந்து முறையிடவே”

எனவரும் பகுதி இவர்களது தமிழ்ப் பற்றைக் காட்டு கின்றது. ஏகாம்பரநாதர் உலா 555 கண்ணிகளை உடைய – 1110 அடிகளையுடைய நீண்ட கலிவெண்பா வால் ஆன ஒரு பிரபந்தமாகும். இந்த உலாவில் இவர்கள்,

> “வடித்தசுடர் வேற்சம்பன் வாழ்மல்லி நாதன்
> கொடுத்த திருத்தேர்மேற் கொண்டு”

என்று பாடும் இடத்தும், வேறு சில இடங்களிலும் மல்லிநாதன் என்ற சம்புவரையனைக் குறிப்பிடுகின்ருர். சோழர் காலத்தில் சிற்றரசர்களாக இருந்த சம்புவரை யர், அவ்வாட்சி வீழ்ச்சியுற்றபொழுது காஞ்சியைத் தலைநகராகக்கொண்டு ஆளத் தலைப்பட்டனர். அம் மன்னருள் இராச நாராயண சம்புவரையன் (கி. பி. 1331—1383) என்பவன் மல்லிநாதன் என்றும், திரு மல்லிநாதன் என்றும் கல்வெட்டுக்களில் அழைக்கப் படுகிருன். எனவே இரட்டையர்கள் இவனது காலத் தவரே யாவர் என்று பேராசிரியர் மு. இராகவய்யங் கார் போன்ருேர் கூறுவர்.* இரட்டையர்கள் வில்லிபுத் தூராரை ஆதரித்த வக்கபாகை வரபதி ஆட்கொண் டானை, ‘ஆட்கொண்டநாயன் தமிழ்க் கொங்கர் கோன்

*சாஸனத் தமிழ்க்கவி சரிதம்—பக். 129-130.

. . . வக்கஙகராதி' எனப் பாடியிருப்பதால் இவர்களும் வில்லிபுத்தூராரும் ஒரே காலத்தவர் என்று அன்னார் கூறுவர்.

**வில்லிபுத்தூரார் பாரதம் :** பாரதக் கதை தமிழ் நாட்டில் சங்க காலத்திலேயே வழங்கி வந்திருக்கிறது என்பதற்குச் சங்க நூற்களில் சான்றுகள் உள்ளன. சேரமான் பெருஞ்சோற்று உதியன் சேரலாதன், பாரதப் போரில் போராடிய வீரர்களுக்குப் பெருஞ்சோறு அளித்த செய்தி புறநானூற்றில் காணப்படுகிறது. தொகை நூல்கள் பலவற்றிற்குக் கடவுள் வாழ்த்துப் பாடிய பெருந்தேவனார் தமிழில் மகாபாரதத்தைப் பாடினார். சின்னமனூர்ச் செப்பேடுகளும் பாண்டியர் மாபாரதம் தமிழ்ப் படுத்தியதையும் மதுராபுரிச் சங்கம் வைத்ததையும் கூறுகின்றன. தெள்ளாறு எறிந்த நந்திவர்மன் காலத்தில் வாழ்ந்த பெருந்தேவனார் பாரதவெண்பாப் பாடியதைப் பற்றி முன்னரே கண்டோம். கி. பி. 13ஆம் நூற்றாண்டில் தொண்டை நாட்டில் (சென்னைக்கு அருகில்) உள்ள அரும்பாக்கத்தில் வாழ்ந்த அருள்நிலை விசாகன் என்பார் 'பாரதத்தை இனிய செந்தமிழ்ப் படுத்தியதாக' மூன்றாங் குலோத்துங்கனின் திருவாலங்காட்டுக் கல்வெட்டு ஒன்று கூறுகிறது.*

இவ்வாறு தமிழ் மொழியில் பாரதச் செய்திகளும் பாரதக் காவியங்களும் முன்னரே இருந்தன என்றாலும் வில்லிபுத்தூராழ்வார் இயற்றிய பாரதமே மிகச் சிறந்ததாகக் கருதப்படுகிறது. பரதன் என்னும் மன்னனது வழித்தோன்றல்களாகிய பாண்டவர்வரலாற்றைக்கூறு

---

* சாஸனத் தமிழ்க்கவி சரிதம்—பக் : 90.

வதால் இது பாரதம் என்று பெயர் பெற்றது. இதனை வியாச முனிவர் வடமொழியில் முதலில் இயற்றினர். வியாச பாரதமே வில்லிபாரதத்தின் முதல் நூல் என்பர். சிலர் அகத்தியபட்டர் வடமொழியில் செய்த பாலபாரதமே இதற்கு முதல் நூல் என்றும் கொள்வர். வியாச பாரதம் பதினெட்டுச் சருக்கங்களை உடையது. ஆயின், வில்லிபுத்தூராழ்வார், முதற்பத்துச் சருக்கங்களையே பாடியுள்ளார். பின்னுள்ள எட்டுச் சருக்கங்களையும் பாடியவர் அரங்கநாதக் கவிராயர் என்பவர்.

வில்லிபுத்தூராழ்வார் திருமுனைப்பாடி நாட்டில் உள்ள சனியூர் என்னும் ஊரில் வாழ்ந்த வீரராகவன் என்னும் வைணவ அந்தணரின் மகனுவார்.† இவர் இளமையிலேயே கற்றுத் துறைபோகிச் சிறந்த புலவராக இருந்தார். இவரது புகழைக் கேள்வியுற்ற, வக்கபாகையை ஆண்ட வரபதி ஆட்கொண்டான் என்னும் மன்னன் இவரைத் தன் அவைக்களப் புலவராக ஆக்கிக்கொண்டான். அவனது வேண்டுகோளுக்கு இணங்கியும், 'மன்னும் மாதவன் சரிதமும் இடையிடை வழங்கும் என்னும் ஆசை'யாலும் இவர் பாரதம் பாட இசைந்தார் என்று இந்நூற் பாயிரங்கள் கூறுகின்றன. இவரது மகனுர் வரந்தருவார் இதற்குச் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளார். இனி, இவருக்கும் இவர் தம்பியருக்கும் இடையே ஏற்பட்ட தாயப் பகைமையைப் போக்கவே வரபதி ஆட்கொண்டான் இவரைப் பாரதம் பாடச் செய்தான் என்றும் கூறுவர். இம் மன்னனிடத்தில் வில்லிபுத்தூர்

---

† இவர் தந்தையார் பெரியாழ்வார்மீது தான்கொண்ட பக்தியின் சின்னமாக இவருக்கு வில்லிபுத்தூரார் என்று பெயரிட்டிருக்கலாம் என்பர்.

ஆழ்வார் மிகவும் நன்றி உணர்ச்சி உடையவராய் இருந்தமையால், அம் மன்னனைத் தம் நூலில் பல இடங்களில் புகழ்ந்து பாடுகிறார்.

இவர் சருக்கம் தோறும் திருமாலைப் பாடுவதால் சிறந்த வைணவராகக் காணப்படினும், நடுநிலைமை யான சமய உணர்ச்சி இவரிடம் இருக்கக் காண் கிறோம். திருமால் அடியாராகிய இப் புலவர் பெருமான்,

**"இன்னம்பல பலயோனியில் எய்தாநெறி பெறவே**
**முன்னம்பலர் அடிதேடவும் முடிதேடவும் எட்டா**
**அன்னம்பல பயில்வார்புனல் அணிதில்லையுள் ஆடும்**
**பொன்னம்பல நாதன்கழல் பொற்போடுப ணிந்தான்"**

என்று சிவபெருமானைப் புகழ்ந்து பாடுகிறார்.

வில்லி பாரதம் பல்வகைப்பட்ட சந்தங்களும், சொல்லணி, பொருளணிகளும் பெற்ற பாடல்களால் யாக்கப்பெற்ற நூல். இதனுடைய பெருமையால் பாரத வெண்பா போன்ற பழைய தமிழ்ப் பாரதங்கள் வழக்கிறந்தன என்பர். இவர் அருணகிரியாருடன் வாதம் புரிந்து தோற்றார் என்று ஒரு செவிவழிச் செய்தி கூறுகிறது. எனினும், இவர் இரட்டையர் காலமான பதினான்காம் நூற்றாண்டைச் சார்ந்தவர் என்பதை முன்னரே கண்டோம். அருணகிரியாரோ பதினைந்தாம் நூற்றாண்டவர். வட சொற்களை அள வுக்கு மீறித் தமிழ்ச் செய்யுட்களில் புகுத்தும் வழக்கம் இவரால்தான் முதலில் ஏற்பட்டது என்று கூறுவர். இவருக்குப் பின்வந்த அருணகிரியார், தாயுமானவர் போன்றோர் வடமொழிச் சொற்களை ஏராளமாக எடுத் தாள்வதைக் காண்கிறோம்.

**காளமேகப்புலவர் :** 'ஆசுகவி மாரி அகில வுலக மெலாம் வீசுகவி காளமேகம்' என்று பாராட்டப் பெற்ற பெரும்புலவர் கவிகாளமேகம் ஆவர். காள மேகம் தங்குதடையின்றி மழைபொழிவது போல் ஆசுகவி பொழிவதால் இவர்க்கு இப்பெயர் வந்தது. இவரது இயற்பெயர் வரதன் என்பது; ஊர் கும்ப கோணம். திருவானைக்காவில் வாழ்ந்த தாசி மோக னங்கியிடம் கொண்ட காதலால், வைணவராயிருந்த இவர் சைவராகித் திருவானைக்காவில் கோவிற்பணி யாற்றிவந்தார். அகிலாண்டேசுவரியின் அருளால் கவிவாணரானார் என்பர். சிலேடையாகவும் நகைச் சுவை ததும்பவும் பாடல் இயற்றுவதில் இவருக்கு நிகர் இவர்தான். திருமலைராயன் என்ற மன்னனது அவைக்களப் புலவர் அதிமதுர கவி என்பவர் மிகவும் செருக்குற்றிருந்தார். காளமேகம் அவருடைய ஆண வத்தைத் தம் கவியாற்றலால் அடக்கினார். ஒருமுறை, அதிமதுரகவி திருமாலின் பத்து அவதாரங்களையும் ஒரே வெண்பாவில் அடக்கிப் பாட முடியுமா என்று இவரைக் கேட்க, இவர் பாதி வெண்பாவில் பாடி முடித்தார். அதனைக் கீழே காண்க.

**"மெச்சுபுகழ் வேங்கடவா வெண்பாவாவிற் பாதியிலென்**
**இச்சையிலுன் சென்மம் எடுக்கவா—மச்சாகூர்**
**மாகோலா சிங்காவா மாராமா ராமாரா**
**மாகோபா லாமாவா வாய்"**

*[மச்சா—மச்சாவதாரனே; கூர்மா—கூர்மாவதாரனே; கோலா—வராகாவதாரனே (கோலம்—பன்றி) சிங்கா—நரசிங்கனே; ராமா—பரசுராமனே; ராமா—தசரதராமனே; ராமா—பலராமனே; கோபாலா—கண்ணனே; மாஆவாய்—கற்கி அவதாரனே]*

வேறொருவர் ஓர் ஈ அமர மலைநடுங்குவதாகப் பாட முடியுமோ என்று கேட்கக் காளமேகம் பின்வரும் பாடலைப் பாடினார்:

**“வாரணங்கள் எட்டும் மகமேரு வுங்கடலும்**
**தாரணியும் எல்லாம் சலித்தனவால்—நாரணனைப்**
**பண்பாய் இடைச்சி பருமத்தி னாலடித்த**
**புண் வாயில் ஈமொய்த்த போது”**

திருமலைராயன் அவைக்களத்தில் இருந்த போலிப் புலவர்களைக்கண்ட காளமேகம் நகைச்சுவை ததும்பப் பாடுகிறார்:

**“வாலெங்கே நீண்டெழுந்த வல்லுகிரெங் கேநாலு**
**காலெங்கே ஊன் வடிந்த கண்ணெங்கே—சாலப்**
**புவிராயர் போற்றும் புலவீர்காள் நீங்கள்**
**கவிராயர் என்றிருந்தக் கால்”**

திருவாரூர்க் கோவில் மதிலில் இரட்டையர்கள்,

**“நாணென்றால் நஞ்சிருக்கும் நற்சாபம் கற்சாபம்”**

என்று முடிக்காமல் எழுதிவைத்த பாட்டை,

**“பாணந்தான் மண்தின்ற பாணமே—தாணுவே**
**சீராரூர் மேவுஞ் சிவனேநீ எப்படியோ**
**நேரார் புரமெரித்த நேர்”**

என்ற அடிகளைப்பாடி நிறைவு செய்தார் என்று கூறுவர். எனவே இவர் இரட்டையர் காலத்தவர் என்பர்.

காளமேகப் புலவரை ஆதரித்த மன்னன் திருமலைராயன் என்னும் சளுக்கியச் சிற்றரசன் ஆவான் என்பதைத் தமிழ் நாவலர் சரிதையால் உணரலாம். இவன் காலம் கி. பி. 14ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியும் 15ஆம் நூற்றாண்டின் முற்பகுதியுமாகும். எனவே

காளமேகப் புலவர் காலமும் அதுவேயாகும்.* இவர் திருவானைக்கா உலா, பரப்பிரம விளக்கம் முதலிய நூல்களை இயற்றியுள்ளார்.

**அருணகிரிநாதர் :** கந்தன் புகழைச் சந்தத் தமிழ்ப் பாமாலையில் தொடுத்துப் புகழ்பெற்ற பெரியார் அருணகிரிநாதர். முருகன் புகழ்பாடும் பாடல்களின் தொகுதியானதால் இவரது நூல் திருப் புகழ் என்று பெயர்பெற்று நிலவுகின்றது. பட்டி தொட்டிகளிலும் கூடத் திருப்புகழை அறியாதார் இல்லை என்றே சொல்லவேண்டும்.

இப்பெரியார் பிறந்த ஊர் திருவண்ணமலை ஆகும். இவர்தம் பெற்றோரைப் பற்றித் தெளிவாகத் தெரியவில்லை. பட்டினத்தடிகளே இவருடைய தந்தை யார் என்றும், தாயார் ஓர் உருத்திரகணிகை என்றும் கூறும் செய்திகளை உண்மையென்று ஒப்புக்கொள்வ தற்கில்லை. இவர் நல்ல பெற்றோர்களுக்கு மகனாகத் தோன்றி, இருமொழிகளையும் நன்கு கற்றுத் தேறித் திருமணப்பருவம் அடைந்தார். திருமணமும் நடந் தது. எனினும் வினையின் விளைவால் பொதுமகளிர் வலைப்பட்டுத் தன்குலம் தரும் வான்பொருள் குன் றத்தைத் தொலைத்ததுடன் தீராத நோயிற்கு ஆளானார். உற்றாரும் ஊராரும் இவரது இழிந்தநிலை பற்றிப் பழித்துரைக்கத் தலைப்பட்டனர். அதுகண்டு மனம் பொறுத இப்பெரியார் திருவண்ணமலைக் கோபுரத்தின் மீதேறிக் கீழ்வீழ்ந்து உயிர்விடத் துணிந்தார். அத் தருணத்தில் முருகப்பெருமான் இவரைக்காத்து இவர் தலைமீது தன் திருவடி சூட்டி வாழ்வித்தார். அத்துடன்

---

* சாஸனத்தமிழ்க்கவி சரிதம்—பக், 150

'முத்தைத்தரு பத்தித்திருநகை' என்று அடி எடுத்துக் கொடுத்துத் தமது புகழைப் பாடுமாறு பணித்தார். அவ்வண்ணமே இவர் முருகவேளைத் துதித்து வண்ணப்பாடல்கள் பாடுவாராயினர். தேவார ஆசிரியர்களால் பாடப்பெற்ற தலங்கள் 'பாடல்பெற்ற தலங்கள்' என்று புகழ்பெறுவது போல அருணகிரியாரால் திருப்புகழ் பாடப்பெற்ற முருகத்தலங்களுக்கு மிகுந்த சிறப்பு உண்டு. இவர் பதினாறாயிரம் பாடல்களைப் பாடினார் என்று ஒரு கொள்கை உண்டு. ஆயினும் இன்று கிடைப்பன 1307 பாடல்களே ஆகும்.

அருணகிரியார்,

**"உதகதாம மார்பான ப்ரபுடதேவ மாராஜன்**
**உளமு மாட வாழ்தேவர் பெருமாளே"**

என்று பாடுகையில் பிரபுடதேவ மாராசன் என்பானைக் குறிப்பிடுகின்றார். தமிழ்நாட்டை ஆண்ட விஜயநகர மன்னருள் சங்கம மரபில் 'பிரபுடதேவன்' என்று பெயருடன் இரு மன்னர்கள் (முறையே கி. பி. 1406—1422; கி. பி. 1422—1437ல்) வாழ்ந்தார்கள் என்று வரலாற்றறிஞர் கூறுவர்.§ அருணகிரியார் இவ்விரு மன்னருள் ஒருவனைப் பாடியிருத்தல் வேண்டும். எப்படியிருப்பினும் கி.பி. 15ஆம் நூற்றாண்டின் முற்பகுதியே அவரது காலம். எனவே வில்லிபுத்தூர் ஆழ்வார் அருணகிரியாருடன் வாதிட்டுத் தோற்றார் என்பதை ஒப்புக்கொள்வதற்கில்லை.

அப்பிரபுட தேவன், சம்பந்தாண்டான் என்னும் பொறாமைக்காரனது சூழ்ச்சிக்கு ஆளாகி அருணகிரியா

§ Further Sources of Vijayanagra History, by Sri. K. A. N. Sastri and Dr. N. Venkataramanayya, Vol I, p—107

ரைப் பாரிசாத மலர் கொண்டு வருமாறு வானுலகத் திற்கு ஏவினான். அருணகிரியார் தன் உடலை ஓர் இடத்தில் கிடத்திக் கிளி உருவெடுத்து விண்ணிற் பறந்து சென்று பாரிசாத மலருடன் திரும்பினார். அதற்குள் சம்பந்தாண்டான் சூழ்ச்சியால் அவரது உடல் எரிக்கப்பட்டுவிட்டது. அருணகிரியார் கிளி உருவுடனே திருத்தணிகை சென்று குமரனின் பூங்க ழல் அடைந்தார். இவ்வாறு ஒரு செவிவழிச் செய்தி கூறுகிறது. இவர் தம் பாடலில் 'சுகசொரூபம்' என் றும் 'சுகபதம்' என்றும் குறிப்பிடுவதைக் கொண்டு இக்கதை எழுந்திருக்கலாம் என்பர் திரு. பண்டாரத் தார் அவர்கள். 'சுகம்' எனில் கிளி என்று பொருள்.

திருப்புகழ் 1307 பாடல்களுள் 1008க்கு மேற்பட்ட சந்த வேறுபாடுகள் காணப்படுகின்றன என்று அறி ஞர்கள் கூறுவர். இப்பாவகையை முதலில் அமைத்த பெருமை அருணகிரியாரையே சாரும். இவர் வட மொழியில் சிறந்த புலமை உடையவராதலால் இவரது பாடல்களில் வடசொற்கள் மிகுந்துவரக் காண்கிறோம். எடுத்துக்காட்டாக ஒன்று:

> "பூர்வ பச்சிம தக்ஷிண உத்தர திக்குள
> பக்தர்கள் அற்புத மென ஓதும்
> சித்ர கவித்துவ சத்தமிகுத்த திருப்புகழ்"

வடசொற்களே அன்றி 'ஜல்தி' 'சலாம்' போன்ற இந் துஸ்தானிச் சொற்களையும் இவர் கையாண்டுள்ளார்.

> "நீலங்கொள் மேகத்தின் மயில்மீதே
> நீவந்த வாழ்வைக்கண் டதனாலே
> மால்கொண்ட பேதைக்குன் மணநாறும்
> மார்தங்கு தாரைத்தந் தருள்வாயே

வேல்கொண்டு வேலைப்பண் டெறிவோனே
வீரங்கொள் சூரர்க்குங் குலகாலா
நாலந்த வேதத்தின் பொருளோனே
நானென்று மார்தட்டும் பெருமாளே

என்ற பாடலில் திருப்புகழின் சந்த இனிமையும் கந்தன் புகழும் களிநடம் புரியக் காண்கின்றோம்.

கந்தர் அந்தாதி, கந்தர் அலங்காரம், கந்தர் அனுபூதி, திருவகுப்பு என்னும் நூல்களும் அருணகிரியாரால் இயற்றப்பட்டவை. கந்தர் அந்தாதி 102 பாடல்களை உடையது. கந்தர் அலங்காரமும் 102 பாடல்களைக்கொண்டது. இந்நூலில் அருணகிரியார், 'மொய்தார் அணிகுழல் வள்ளியை வேட்டவன் முத்தமிழால் வைதாரையும் வாழ வைப்போன்' என்று முருகனைப் பாடுகின்றார்.

"கந்தர நு பூதிபெற்றுக் கந்தர நு பூதிசொன்ன
எந்தை அருள்நாடி இருக்கும்நாள் எந்நாளோ!"

என்று தாயுமானவரால் பாராட்டப்பெற்றது கந்தர் அனுபூதி.

## பதினாறும் நூற்றாண்டுத் தமிழ் நூல்கள்

பதினாறும் நூற்றாண்டில் பாவலர் பலர் தோன்றினர்; காவியம் பல எழுந்தன. அவற்றில் தமிழ்த்தாய் பெருமையுடன் அணியத்தகும் அணிகளாக மதிப்பிடப் பெறுபவை ஒரு சிலவே. இந் நூற்றாண்டுப் புலவர்களில் பலர் வடமொழி நூல்களை மொழிபெயர்ப்பதிலும், சைவசித்தாந்த நூல்களுக்கு உரைவகுப்பதிலும் கருத்துச் செலுத்திப் புதிய நூல்களை இயற்றத் தவறினர். திருக்குருகைப் பெருமாள் கவிராயரின் 'மாறன் அலங்காரம்' எனும் இலக்கணநூல், அதிவீர

ராம பாண்டியரின் 'நைடதம்' என்னும் காவியம், பரஞ்சோதி முனிவரின் 'திருவிளையாடல் புராணம்' என்னும் புராணம் ஆகிய மூன்றுமே இந்நூற்றாண்டின் சிறந்த நூல்கள். இவையாவும் வடமொழி நூல்களின் மொழி பெயர்ப்பாம்.

**உரைவகுத்த பெரியார் :** இந்நூற்றாண்டில் தோன்றிய 'நிரம்ப அழகிய தேசிகர்' சிவஞான சித்தியார் சுபக்கத்திற்கு உரை இயற்றியுள்ளார். அத்துடன் சேதுபுராணத்தையும் எழுதியுள்ளார். ஈழத்தைச் சார்ந்த 'ஞானப்பிரகாசரும்' 'மறைஞானதேசிகர்', 'சிவாக்கிர யோகிகளும்' சிவஞான சித்தியார் சுபக்கத்திற்கு உரை யாத்துள்ளனர். 'திருவொற்றியூர் ஞானப்பிரகாசர்' என்பார் சிவஞான சித்தியார் பரபக்கத்துக்கு உரை எழுதியுள்ளார். இப்புலவர் பெருமக்கள் உரை எழுதியதோடமையாது சைவசித்தாந்தம் பற்றிய நூல்களும் எழுதியுள்ளனர். இனி, இந்நூற்றாண்டுக்குப் பெருமைதரும் சில புலவர்களையும், அவர்தம் நூல்களையும் காண்போம்.

**வீரகவிராயர் :** வீரகவிராயர் இராமநாதபுரத்தைச் சார்ந்த நல்லூர் என்னும் ஊரில் பிறந்தவர். இந்நல்லூரே, குலோத்துங்கசோழ நல்லூர் என வழங்கப்பட்டது என்பர். குலோத்துங்கசோழ நல்லூர் என்னும் ஊரை அடுத்த விரையாத கண்டன் என்னும் ஊரில் பிறந்தவர் இவர் என்றும், எனவே இவர் பெயர் வீரை ஆசுகவிராயர் என வழங்கப்பட வேண்டும் என்றும் மு. இராகவய்யங்கார் கூறுவர்.

வீரகவிராயரின் கவிபுனையும் வேகத்தையும் விவேகத்தையும் கண்ட சான்றோர் இவரை 'ஆசுகவிராயர்' என அழைத்தனர். இவர் 'அரிச்சந்திர

புராணம்' என்னும் ஒரு நூலை மட்டுமே இயற்றிய தாகத் தெரிகிறது. இந்நூல் வடமொழியிலுள்ள அரிச்சந்திரன் கதையைத் தமிழில் கூறுகிறது. விவாக காண்டம் முதல் உத்தரகாண்டம் முடிய இந்நூலில் பத்துக் காண்டங்கள் உள்ளன. இதற்கு வீரகவிராயர் 'அரிச்சந்திர சரித்திரம்' என்றே பெயரிட்டார். எனி னும், அரிச்சந்திரபுராணம் என்ற பெயரே வழங்கி வருகிறது. அவலச்சுவையே மனிதனின் மனத்தை உருக்குவது என்றும், அதுவே அவன் நினைவில் நிற்க வல்லது என்றும்அறிஞர் இயம்புவர். அவ்வுண்மையை இந்நூலால் உணரலாம். தன் மைந்தன் இறந்துகிடப் பதைக் கண்டு சந்திரமதி அழுது புலம்புவதாகக் கவிராயர் அமைத்த பாடல்களில் ஒன்றைக் கீழே காண்க :

**"பனியால் நனைந்து வெயிலால் உலர்ந்து**
**பசியால் அலைந்தும் உலவா**
**அனியாய வெங்கண் அரவால் இறந்த**
**அதிபா வம்என்கொல் அறியேன்**
**தனியே கிடந்து விடநோய் செறிந்து**
**தரைமீ துருண்ட மகனே!**
**இனியா ரைநம்பி உயிர்வாழ் வம்என்றன்**
**இறையோ னும்யானும் அவமே"**

**திருக்குருகைப் பெருமாள் கவிராயர் :** திருநெல் வேலி மாவட்டத்தில் உள்ள ஆழ்வார் திருநகரி என் னும் திருத்தலத்தில் தோன்றியவர் இக் கவிராயர். இவருக்குப் பெற்றோர் இட்டபெயர் சடையன். இவர் குடும்பத்தினர் திருக்குருகைப் பெருமாள் திருக் கோயிற் புலவராகத் திகழ்ந்தனர். தந்தைக்குப் பிறகு சடையரும் கோயிற் புலவரானார். அதுமுதல்

திருக்குருகைப் பெருமாள் கவிராயர் எனும் பெயர் பெற்றார்.

இவர் மாறன் அலங்காரம், குருகாமான்மியம், மாறன் அகப்பொருள், திருப்பதிக்கோவை முதலிய நூல்கள் இயற்றியுள்ளார்.

**மாறன் அலங்காரம் :** வடமொழியிலுள்ள அணி நூலைத் தழுவிக் கவிராயர் இயற்றிய அணி இலக்கண நூலே 'மாறன் அலங்காரம்'. பாயிரம், பொதுவியல், பொருளணியியல், சொல்லணியியல், எச்சவியல் என்னும் ஐந்து பகுப்புக்கள் கொண்டது இது. இதற்கு இரத்தின கவிராயர் என்பார் உரைவகுத்துள்ளார்.

**அதிவீரராம பாண்டியர் :** பைந்தமிழ் வளர்த்த தோடமையாது தாமும் பாவலர்களாகத் திகழ்ந்த பாண்டிய மன்னருள் ஒருவரே அதிவீரராம பாண்டியர். இவர் கொற்கையிலிருந்து ஆட்சி செய்தார். குலசேகரன் என்ற பெயரும் இவருக்குண்டு.

இவர் இயற்றிய நூல்கள் பல. அவற்றுள் இலிங்கபுராணம், காசிக்காண்டம், கூர்மபுராணம் நைடதம் ஆகியவை மொழிபெயர்ப்பு நூல்கள். வெற்றிவேற்கை என வழங்கும் நறுந்தொகை, திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி, திருக்கருவை வெண்பா முதலியவையும் இவர் இயற்றியனவே. இவருடைய சகோதரர் வரதுங்கராம பாண்டியரும் சிறந்த புலவர். வரதுங்கராமரின் மனைவி அதிவீரரின் நூல்களைச் சுவைத்து அவற்றின் தன்மையை உள்ள வாறு உரைத்தார் என்ப.

**நைடதம் :** இன்பச் சுவை மிகுந்த காவியம் இந் 'நைடதம்'. இதனுள் 1172 பாடல்கள் உள்ளன. இது

'சென்று தேய்ந்து இறுதல்' என்னும் குற்றமுடையது என்பதை வரதுங்கராம பாண்டியரின் மனைவி, "நாய் விரைவாக ஓடி இளைத்தாற்போன்ற தன்மை பெற்றது" என்ற கூற்றால் குறிப்பிட்டார் எனக் கூறுவர். எனினும் 'நைடதம் புலவர்க்கு ஔடதம்' என்னும் பழமொழி இந்நூலின் சிறப்பைக் காட்டும்.

**திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி :** கரிவலம் வந்த நல்லூரே கருவை என வழங்கப்படுகிறது. அவ்வூரில் உள்ள சிவபெருமான்மீது பாடப்பட்டதே இந்நூல். இது கற்பார் நெஞ்சைக் கனிவிக்கும் தன்மையைக் கண்டு இதனைக் 'குட்டித் திருவாசகம்' எனப் புகழ்ந்தனர். இப் புகழுரை பொருந்துவதே எனக் கூற அடுத்துவரும் ஒரு பாடலே போதும்.

**"சிந்தனை உனக்குத் தந்தேன்**
**திருவருள் எனக்குத் தந்தாய்**
**வந்தனை உனக்குத் தந்தேன்**
**மலரடி எனக்குத் தந்தாய்**
**பைந்துணர் உனக்குத் தந்தேன்**
**பரகதி எனக்குத் தந்தாய்**
**கந்தனைப் பயந்த நாதா**
**கருவையில் இருக்குந் தேவே"**

**பரஞ்சோதி முனிவர் :** சோழநாட்டுத் திருமறைக்காட்டைச் சேர்ந்தவர் பரஞ்சோதி முனிவர். மதுரையில் தங்கியிருந்தபோது மீனாட்சியம்மை இவர் கனவில் தோன்றித் 'திருவிளையாடற் புராணம்' இயற்றப் பணித்ததாகக் கூறுவர். இவர் தன் பிற்காலத்தை மதுரையிலேயே கழித்தார். திருவிளையாடற் போற்றிக் கலிவெண்பா, மதுரைப் பதிற்றுப் பத்தந்தாதி ஆகிய நூல்களையும் இவர் இயற்றியுள்ளார்.

**திருவிளையாடற் புராணம்:** பரஞ்சோதிக்கு முன்னரே தமிழில் திருவிளையாடற் புராணம் இருந்தது. அது சிறப்பற்றிருந்தமையின், இந் நூல் பெரும்புகழ் பெற்றது. வடமொழிக் கூடல்மான்மியத்தைத் தழுவியதே இந்நூல். இதன்கண் இறைவனின் அறுபத்து நான்கு திருவிளையாடல்களும் 3363 பாக்களால் விளக்கப்பட்டுள்ளன. அன்றைய நாட்டின் அமைப்பையும், கலைகளின் நிலையையும், மக்கள் வாழ்க்கையையும் இந் நூல் கற்பார் தெள்ளிதின் உணரலாம். பரஞ்சோதி முனிவர் இறைவனின் பெருமைகளையெல்லாம் ஆங்காங்கே எடுத்துரைத்துள்ளார். பொற்றாமரை வாவியுள் வீழ்ந்த நக்கீரனார் இறைவனை நினைந்து உருகுவதாய் வரும் பகுதியில் பரமனின் பெருமையையும், பைந் தமிழ்ச் சுவையையும் ஒருங்கே காணலாம்:

"பொருப்பகழ்ந் தெடுத்தோன் சென்னி
புயமிற மிதித்தாய் போற்றி
இருக்கிசைத் தவனே பாட
இரங்கிவாள் கொடுத்தாய் போற்றி
தருக்கொடும் இருவர் தேடத்
தழற்பிழம் பானாய் போற்றி
செருக்குவிட் டவரே பூசை
செய்யநேர் நின்றாய் போற்றி"

## பதினேழாம் நூற்றாண்டின் நூல்கள்

பதினேழாம் நூற்றாண்டில் சமயச் சார்பான இலக்கியங்களே மிகுதியாக எழுந்தன. பல தல புராணங்கள் பிறந்தன. முகமதிய சமயத்தவரான உமறுப் புலவர் இந் நூற்றாண்டில்தான் 'சீறாப் புராணம்' இயற்றினார்.* வைத்தியநாத தேசிகரின் 'இலக்கண விளக்

* இந்நூலைப் பற்றிய செய்திகளை 'இஸ்லாமியர் செய்த தமிழ்த் தொண்டு' என்னுந் தலைப்பில் காண்க.

கம்', ஈசான தேசிகரின் 'இலக்கணக்கொத்து' முதலிய இலக்கண நூல்களும் பிறந்தன. இந் நூற்றுண்டின் தமிழ்ப் புலவர்களுள் எழுவரைப் பற்றி விரிவாக எழுதப்பட்டுள்ளது. அவர்களைத் தவிர மணவாளதாசர், அழகிய சிற்றம்பலக் கவிராயர், கடிகை முத்துப்புலவர், கருணைப் பிரகாசர் முதலியோரும் இந் நூற்றுண்டின் இலக்கிய வளர்ச்சிக்குத் துணை செய்துள்ளனர்.

**பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் :** இவர் பதினேழாம் நூற்றுண்டின் சிறந்த புலவருள் ஒருவர். இவர் பன்னிரண்டாம் நூற்றுண்டினர் என்பர் ஒரு சாரார். 'திவ்விய கவி' என்ற சிறப்புப் பெயர் பெற்ற இவருக்கு அழகிய மணவாளதாசர் என்ற மற்றொரு பெயரும் உண்டு. திருமங்கையில் தோன்றினும் தன் வாழ்வின் பெரும் பகுதியைத் திருவரங்கத்தில் கழித்தார். தமிழிலும் வடமொழியிலும் நிகரற்ற புலமை பெற்றவர். இவர் இயற்றிய 'அஷ்டப் பிரபந்தம்' ஆன்றோர் போற்றும் அருந்தமிழ் நூல். இந்நூலே, நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்திற்குப் பின் வைணவச் சார்பாய் எழுந்த பிரபந்தத் தொகுதியாகும். இதனை 'திவ்வியப் பிரபந்த சாரம்' எனக் கூறலும் ஏற்புடைத்தே. யமகம், திரிபு, சிலேடை முதலிய சொல்லணிகள் அமையப் புனையப் பெற்ற இந்நூலைக் கற்றோர், தமிழில் நல்ல தேர்ச்சி பெறுவர். இது பற்றியே 'அஷ்டப் பிரபந்தம் கற்றவன் அரைப் பண்டிதன்' என்னும் முதுமொழி வழங்கி வருகிறது. திருவரங்கக் கலம்பகம், திருவரங்கத்து மாலை, திருவரங்கத்தந்தாதி, சீரங்க நாயகர் ஊசல், திருவேங்கடமாலை, திருவேங்கடத்தந்தாதி, அழகர் அந்தாதி, நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதி என்னும் எட்டு நூல்கள் இணைந்ததே அஷ்டப் பிரபந்தம். இதில் மொத்தம் 790 செய்யுட்கள்

உள்ளன. திருவரங்கக் கலம்பகத்தில் 'மறம்' என்ற தலைப்பில் வந்த பாடலில் மாலிடம் கொண்ட மாறாக் காதலும் மறமும் நகைச் சுவையும் ஒன்றோடொன்று போட்டியிடுகின்றன. அப்பாடலைச் சற்றே சுவைப் போம் :

**"கொற்றவன்தன் திருமுகத்தைக் கொணர்ந்த தூதா!**
**குறையுடலுக் கோமறவர் கொம்பைக் கேட்டாய்?**
**அற்றவர்சேர் திருவரங்கம் பெருமாள் தோழன்**
**அவதரித்த திருக்குலமென் றறியாய் போலும்!**
**மற்றதுதான் திருமுகமே யானால் அந்த**
**வாய்செவிகண் மூக்கெங்கே மன்னர் மன்னன்**
**பெற்றஇள வரசானால் ஆலின் கொம்பைப்**
**பிறந்தகுலத் தினுக்கேற்பப் பேசு வாயே"**

'சொல் நோக்கும், பொருள் நோக்கும், தொடை நோக்கும், நடை நோக்கும், துறையின் நோக்கோடு எந் நோக்கும் காண இலக்கியமாவது' என்ற புகழுரை இந் நூலுக்கு முற்றிலும் பொருந்தும்.

**குமரகுருபரர் :** இந் நூற்றாண்டில் சைவ சமயத் தையும் செந்தமிழையும் ஒருங்கே வளர்த்த பெரும் புலவர் குமரகுருபரராவர். இவர் ஸ்ரீவைகுண்டத்தின் ஒரு பகுதியான ஸ்ரீகைலாசத்தில் தோன்றியவர். ஐந்தாண்டுவரை பேசாமல் ஊமைக் குழந்தையாகவே இருந்ததைக் கண்டு கவலையுற்ற பெற்றோர் இவரைத் திருச்செந்தூருக்கு அழைத்துச் செல்ல, அங்கு முருகன் அருளால் பேசும் ஆற்றல் பெற்றார். உடனே 'கந்தர் கலிவெண்பா' என்ற நூலை இயற்றினார். மதுரை, சிதம்பரம் முதலிய தலங்களுக்குச் சென்ற பின் காசியை அடைந்தார். டில்லிப் பேரரசரின் அன் பையும் ஆதரவையும் பெற்றுக் காசியில் 'குமாரசாமி'

மடத்தை நிறுவினார். காசியில் குமரகுருபரர் பல சொற்பொழிவுகளை நிகழ்த்தினார். அவற்றைப் பரம பக்தரும் கவிஞருமான துளசிதாசர் செவிமடுத்தார் என்றும், கம்பராமாயணக் கருத்துக்கள் இந்தி இராமா யணத்தில் அமைய இதுவே காரணம் என்றும் கூறுப. மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ், முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழ், மதுரைக்கலம்பகம், காசிக் கலம்பகம்' கந்தர் கலிவெண்பா, நீதிநெறி விளக்கம், திருவாரூர் நான்மணிமாலை, சிதம்பர மும்மணிக் கோவை, சகல கலாவல்லிமாலை முதலிய நூல்களை இவர் இயற்றியுள்ளார். இந் நூல்களில் இவர் தமிழ் மொழியை, 'கலைத் தமிழ்த் தீம்பாலமுதம்' என்றும், 'மும்மைத் தமிழ்' என்றும், 'சொற் சுவை பழுத்த தொகைத் தமிழ்' என்றும், 'தீஞ்சுவைக் கனியும் தண்தேன் நறையும் வடித்தெடுத்த சாரங் கனிந்து ஊற்றிருந்த பசுந்தமிழ், என்றும் புகழ்வது அறிந்து இன்புறத்தக்கதாகும்.

**மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் :** பாட்டுடைத் தலைவனை அல்லது தலைவியைக் குழந்தையாய்ப் பாவித்து இயற்றப்படும் சிற்றிலக்கியமே பிள்ளைத் தமிழ். இதனைப் பிள்ளைப் பாட்டு எனவும் வழங்குவர். இதனைக் குழந்தையின் மூன்றும் திங்கள் முதல் இரு பத்தோராம் திங்கள்வரை வரும் ஒற்றித்த திங்கள் பத்தினும் கூறுவதாக அமைப்பர். இது ஆண்பால் பிள்ளைத்தமிழ், பெண்பால் பிள்ளைத் தமிழ் என இரு வகைப்படும். ஆண்பால் பிள்ளைத் தமிழில் காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி, சிற்றில் சிதைத்தல், சிறுபறை முழக்கல், சிறுதேர் உருட்டல் ஆகிய பத்துப் பருவங்கள் இடம்பெறும். பெண்பாற் பிள்ளைத் தமிழில் ஆண்பாற் பிள்ளைத் தமிழுக்குரிய முதல் ஏழு பருவங்களும் இருக்க, எட்

டாவதாக அம்மானை, ஒன்பதாவதாக நீராடல், பத்தாவதாக ஊசல் இடம்பெறும். இதுவே பிள்ளைத் தமிழ் இலக்கணம்.

மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ், பிள்ளைத் தமிழ் இலக்கியங்களுள் சிறந்தது. இதனைக் குமரகுருபரர் திருமலை நாயக்கர் முன்னர் அரங்கேற்றுகையில், மீனாட்சியம்மையே குழந்தையுருக்கொண்டு அவையில் அமர்ந்து கேட்டு மகிழ்ந்தார். குமரகுருபரர் முத்தப் பருவத்தின்,

> **"காலத் தொடுகற் பனைகடந்த**
> **கருவூ லத்துப் பழம்பாடல்**
> **கலைமாச் செல்வர் தேடிவைத்த**
> **கடவுள் மணியே........."**

எனத் துவங்கும் பாடலை அரங்கேற்றுகையில், குழந்தையாய் வந்த மீனாட்சியம்மை தம் கழுத்திலிருந்த முத்தமாலை ஒன்றைக் குமரகுருபரர்க்கு அணிந்து மறைந்தாராம். இந் நிகழ்ச்சி 'தொடுக்கும் கடவுட் பழம்பாடல் தொடையின் பயனே' என்ற பாடலின் அரங்கேற்றத்தில் நடந்தது என்பார் திரு. ச. சோமசுந்தர தேசிகர்.

குமரகுருபரரின் கற்பனைத் திறனை இந்நூல் முழுக்கக் காணலாம். எடுத்துக்காட்டாக ஒரு காட்சியைக் காண்போம். சோலை ஒன்றில் தேன் வெள்ளம் பாய்கிறது. அங்குள்ள பலா மரத்திலிருந்த குரங்கு, கிளை முறியவே தேன் வெள்ளத்தில் மூழ்கி விடுகிறது. எனினும் பலாக் கனி ஒன்றைப் பற்றிக்கொண்டு நீந்தித் தப்பித்துக் கொள்கிறது. இக் காட்சியைக் குமரகுருபரர்,

"குழியும் பசுங்கண் முசுக்கலை வெரீஇச்சிறு
குறும்பலவின் நெடிய பாரக்
கொம்பொடி படத்தூங்கு முட்புறக் கனியின்
குடங்கொண்டு நீந்தும் மடை"

என்று ஊசல் பருவத்தில் தருகிறார்.

**மதுரைக் கலம்பகம்:** குமரகுருபரரின் மதுரைக் கலம்பகமும் அவர் புலமைக்குச் சான்று பகருவதாம். அம்மானை என்னும் கலம்பக உறுப்பில்வரும் பாடலில் ஒருத்தி, 'இறைவன் வென்றான்' என்கிறாள். மற்றொருத்தி, 'வெற்றிபெற்ற இறைவனின் உடல் இரு கூறாகி விட்டதே, ஏன்?' எனக் கேட்கிறாள். மூன்றாமவள், 'உடல் இரு கூறானாலும் அதில் காயம் (தழும்பு) இல்லை' எனக் கூறுகின்றாள்.

"இருவருக்கும் காண்பரிய ஈசர்மது ரேசனார்
விருதுகட்டி அங்கம்வெட்டி வென்றனர்காண் அம்மானை
விருதுகட்டி அங்கம்வெட்டி வென்றனரே யாமாகில்
அருமையுடம் பொன்றிருகூ றுவதேன் அம்மானை
ஆனாலும் காயமிலை ஐயரவர்க் கம்மானை"

இப்பாடலில் மதுரேசனின் இரு கதைகளும், அம்மையப்பனாக அவர் இருக்கும் தன்மையும், மகளிரின் சொற்றிறமையும் சிறப்புறுகின்றன.

**வைத்தியநாத தேசிகர்:** "ஓதும் பிரபந்தங்கள் ஒரு கோடி நிமிஷத்து உரைக்கும் ப்ரசண்ட வாக்கி, உத்தண்ட அமிர்தரச சித்ர வித்தார கவி யுபய கவிராச ராசன்" என்று புகழப் பெறும் வைத்தியநாத தேசிகர் திருவாரூரில் பிறந்தவர். அகோரத முனிவரிடம் வடமொழியும் தென்மொழியும் நன்கு கற்றவர்; எண்ணற்றவர்களுக்குக் கண் போன்ற கல்வியைக் கற்றுத்

தந்தவர். படிக்காசுப் புலவர், குடந்தைப் புராணம் பாடிய அரதூர் சொக்கப் புலவர், ஒப்பிலாமணி தேசிகர் முதலிய பெருமக்கள் இவர்தம் மாணவர்கள். இவருடைய ஐந்து புதல்வரும் கற்றுச் சிறந்த கவிவாணர்கள். இஃதே இவர்தம் புலமையும் பெருமையும் விளக்கி நிற்கும்.

**இலக்கண விளக்கம்:** நன்னூலும் அதன் உரையும் தொல்காப்பியத்திலிருந்து மாறுபடுவது கண்டு வைத்தியநாத தேசிகர் 'இலக்கண விளக்க'த்தை இயற்றினர். எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐந்திலக்கணத்தையும் கூறும் இந்நூலில் 760 சூத்திரங்கள் உள்ளன. இதற்கு நூலாசிரியரே உரையும் எழுதியுள்ளார். இவர் காலத்தவர் பயின்ற இலக்கண நூல் இஃதேயாம். இதற்குக் 'குட்டித் தொல்காப்பியம்' என்ற மற்றொரு பெயரும் உண்டு. இப்பெயரொன்றே இந்நூலின் அருமை பெருமைகளை அறையா நிற்கும்.

வைத்தியநாத தேசிகர் இந்நூலைத் தவிர, மயிலம் பிள்ளைத் தமிழ், பாசவதைப் பரணி, நல்லூர்ப் புராணம் முதலிய பல நூல்களை இயற்றியுள்ளார்.

**அந்தகக்கவி வீரராகவ முதலியார்:** சான்றோர் நிறைந்த தொண்டை நாட்டின்கண் பூதூரில் தோன்றியவர் அந்தகக்கவி வீரராகவ முதலியார். இவர் ஒரு பிறவிக் குருடர் எனினும், தன் முதுகில் எழுத்துக்களை எழுதச் சொல்லிக் கற்றுப் பல்வேறு இலக்கிய இலக்கணங்களில் தேர்ச்சி பெற்றார். இதனை 'ஓர் ஆயிரம் கோடி எழுதாது தன்மனத் தெழுதிப் படித்த விரகன்' என்று இவரே தன்னைப் பற்றிக் கூறிக்கொள்வதாலும் உணரலாம்.

வீரராகவர் விரைந்து கவிபாடும் திறன் பெற்ருர். தமிழகமெங்கும் 'திக்விசயம்' செய்ததோடன்றி, ஈழத்திற்கும் சென்று பரராசமன்னனின் அவையில் தன் புலமையைக் காட்டிப் பொருளும் புகழும் பெற்ருர். இவர் திருக்கழுக்குன்றப் புராணம், திருக்கழுக்குன்றத்து உலா, திருவாரூர் உலா, சேயூர் முருகன் பிள்ளைத் தமிழ், சேயூர்க் கலம்பகம், சந்திரவாணன் கோவை, பஞ்ச ரத்தினம் முதலிய நூல்களை இயற்றியுள்ளார். இவர் எதையும் பிறர் வியக்கப் பாடுவார்; சீட்டுக்கவி வரைவதிலும், நகைச்சுவை பொதியப் பாடுவதிலும் வல்லவர்; வசை பாடுவதிலும் நிகரற்றவர். இவர் அகளங்கனைப் புகழ்ந்து பாடிய அகத்துறைப் பாடலைக் கீழே காண்க:

"வடவைக் கனலைப் பிழிந்துகொண்டு
மற்றும் ஒருகால் வடித்தெடுத்து
வாடைத் துருத்தி வைத்தூதி
மறுகக் காய்ச்சிக் குழம்புசெய்து
புடவிக் கயவர் தமைப்பாடிப்
பரிசு பெருமல் திரும்பிவரும்
புலவர் மனம்போல் சுடுநெருப்பைப்
புழுகென் றிரைத்தால் பொறுப்பாளோ
அடவிக் கதலிப் பசுங்குருத்தை
நஞ்சுக் குழலென் றஞ்சியஞ்சி
அஞ்சொற் கிளிகள் பஞ்சரம்விட்
டகலா துறையும் அகளங்கா
திடமுக் கடவா ரணமுகைத்த
தேவே தேவ சிங்கமே
திக்கு விசயம் செலுத்திவரும்
செங்கோல் நடாத்தும் செங்கோவே"

**படிக்காசுப் புலவர் :** தொண்டை நாட்டில் தோன்றிய தண்டமிழ்ச் சான்றோருள் ஒருவர் படிக்காசுப் புலவர். இவர் பொற்களந்தை எனப்பெறும் பொன் விளைந்த களத்தூரில் பிறந்தவர். இலக்கண விளக்க நூலாசிரியர் வைத்தியநாத தேசிகரிடம் கல்வி கற்றார். தம் கவித் திறத்தால் புவிமக்கள் போற்றப் பல பரிசுகள் பெற்றுப் பல ஊர்களைக் கண்டுவந்தார். கொங்கு நாட்டுக் கவசை என்னும் ஊரில் வாழ்ந்த புலவர்கள், வண்ணம் பாடுவதில் படிக்காசுப் புலவர் தோற்றார் எனக் கூறிப் புலவரின் பல்லக்கு முதலிய விருதுகளைப் பறித்துக் கொண்டனர் என்பர். இந் நிகழ்ச்சியைக் கொங்கு மண்டல சதகமும் குறிப்பிடுகின்றது.

படிக்காசுப் புலவர் தொண்டை மண்டல சதகம், புள்ளிருக்கு வேளூர்க் கலம்பகம், உமைபாகர் பதிகம் முதலிய நூல்கள் இயற்றியுள்ளார். இவர் சீதக்காதி என்னும் வள்ளலைப் பற்றிப் பாடிய பாடல்களைத் தனிப்பாடல் திரட்டில் காணலாம்.

**''ஈயாத புல்லர் இருந்தென்ன போயென்ன எட்டிமரம்**
**காயா திருந்தென்ன காய்த்துப் பலனென்ன கைவிரித்துப்**
**போயா சகம்என் றுரைப்போர்க்குச் செம்பொன் பிடிபிடியாய்**
**ஓயாமல் ஈபவன் மால்சீதக் காதி ஒருவனுமே''**

என்னும் பாடலில் சீதக்காதியின் வள்ளன்மையைத் தெள்ளத் தெளிய விளக்குகிறார் புலவர். ''படிக்காசன் உரைத்த தமிழ் வரைந்த ஏட்டைத் தொட்டாலும் கைமணக்கும்; சொன்னாலும் வாய்மணக்கும்; துய்ய சேற்றில் நட்டாலும் தமிழ்ப் பயிராய் விளைந்திடும்'' என்ற மற்றொரு புலவரின் புகழுரையே இவர் தம் சிறப்பை விளக்கப் போதுமானதாகும்.

**சிவப்பிரகாச சுவாமிகள் :** வீரசைவ சமயத்தைச் சார்ந்தவர் சிவப்பிரகாச சுவாமிகள். இவர் தொண்டை நாட்டுப் புலவர். திருநெல்வேலியில் வாழ்ந்த வெள்ளி யம்பலவாணத் தம்பிரானிடம் கல்வி கற்றபின் தொண்டை நாட்டிலுள்ள துறைமங்கலத்தில் உறைந் தார். 'பேய்கொண்டாலும் கொளலாம்; பெண்கொள் ளல் ஆகாதே' எனக்கூறித் துறவறத்தில் நின்றவர்.

இவர் இயற்றிய நூல்கள் பல. சோணசைலமாலை, வெங்கைக்கோவை, தருக்க பரிபாடை, நால்வர் நான்மணிமாலை, சிவஞான பாலையர் நெஞ்சுவிடுதூது, திருக்கூவப் புராணம், பிரபுலிங்கலீலை, ஏசுமத நிராகரணம், நன்னெறி, சீகாளத்தி புராணம் என்பன அவற்றுள் சில.

**நால்வர் நான்மணிமாலை :** சைவ சமயக் குரவர் களான அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய நால்வரைப் பற்றிய நாற்பது பாடல்கள் கொண்டது இந்நூல். சம்பந்தரை வெண்பாவாலும், அப்பரைக் கலித்துறையாலும், சுந்தரரை விருத்தப்பா வாலும், மாணிக்கவாசகரை அகவற்பாவாலும் போற் றிப் புகழ்ந்துள்ளார், சிவப்பிரகாசர்.

**பிரபுலிங்க லீலை :** இந்நூல் வீர சைவ சமயச் சிறப்புரைக்கும் ஒப்பற்ற காவியம். இதனைக்கன்னட மொழியிலிருந்து சிவப்பிரகாசர் மொழிபெயர்த்தார். இது அல்லமப்பிரபுவின் திருவிளையாடல்களைக் கூறு கிறது. இதனுள் துதிகதி முதல் மான்மிய கதி ஈறுக 25 கதிகளும் (அத்தியாயங்களும்) 1157 பாடல்களும் உள்ளன. இந்நூலின் கவிச்சிறப்பிற்கும் கற்பனை வளத்திற்கும் ஈடு இணை இல்லை. 'மாயை உற்பத்தி

கதி'யில் மாயையின் பெதும்பைப் பருவ வளர்ச்சியைச் சிவப்பிரகாசர் சிறப்பிக்கும் முறையைக் காண்போம்:

**"அன்ன நடையும் அன்னமிலா**
**ஐயர் நடையும் தளர்வெய்தக்**
**கன்னி நடக்கும் நடைகற்ருள்**
**கரும்பு கசக்கும் மொழிபெற்ருள்**
**மன்னு மலர்வீழ் சுரும்பனைய**
**மைந்தர் பார்வைக் குறிப்புணர்ந்தாள்**
**தன்னை அரியள் என்றுணர்ந்து**
**தானே மனத்தில் தருக்குற்ருள்"**

**அமிர்தகவிராயர்:** அமிர்தகவிராயர் மதுரை மாவட்டத்தில் பொன்னுங்கால் என்னும் ஊரைச் சார்ந்தவர். இவர் கற்பன கற்றுத் தேர்ந்து புலவோர் போற்றும் நிலையடைந்தபின், இராமநாதபுரத்தை ஆண்ட தளவாய் இரகுநாத சேதுபதியின் அவைக்களப் புலவராய் விளங்கினர்.

**ஒரு துறைக்கோவை:** ஒரு நாள் சேதுபதியும் செந்தமிழ்ப் புலவர் பலரும் மாலைப்போதில் சோலையில் உலவினர். மன்னர், "புலவர்களே, அகப்பொருள் துறை ஏதேனும் ஒன்றில் பல பாடல்கள் புனைய வல்லீரோ?" என வினவினன். ஒரு துறையில் பத்துப் பாடுவோம் என்றனர் சிலர்; மற்றும் சிலர் இருபது பாடுவோம் என்றனர்; சிலர் முப்பது பாடுவோம் என்றனர். அமிர்தகவிராயரோ, 'நான் நூறு பாடல் பாடுவேன்' என்ருர். புலவர் 'நான் நூறு' என்பதை 'நானூறு' எனக்கொண்டு அவ்வாறே பாடவேண்டும் என வற்புறுத்தினர். அமிர்தகவிராயர் ஒப்புக்கொண்டு 'நாணிக் கண் புதைத்தல்' என்னும் ஒரே துறையில் நானூறு பாடல்களைப் பாடினர். இந்நூலே ஒருதுறைக்கோவை

யாகும். நானூறு துறைகளில் பாடப்படும் கோவை 'ஐந்திணைக்கோவை' என்றழைக்கப் படுவது போல, ஒருதுறைக்கண் அமைந்த பாடல்களைக் கொண்ட நூல் ஒருதுறைக்கோவை என வழங்கப்படுகிறது.

ஒருதுறைக் கோவையில் முதல் இரண்டடிகளில் கவிஞர் சேதுபதியைச் சிறப்பிக்கிறார்; பின்னிரண்டு அடிகளில் துறைப்பொருளைக் கூறுகின்றார்.

நாணம்கொண்ட தலைவி கைகளால் முகத்தை மூடிக்கொள்கிறாள். அதைக்கண்ட தலைவன் "தாமரை மலரில் குவளைகள் உள்ளனவே; அக் குவளைகளின் மேலும் தாமரைகள் உள்ளனவே!" என வியக்கின்றான். தலைவியின் முகம் தாமரை; கண்கள் குவளைகள்; கண்களை மூடிய கைகள் குவளையின் மேலுள்ள தாமரைகள்! தலைவனின் வியப்புக்கூற்று நம்மையும் வியப்பில் ஆழ்த்தி எல்லைஇல்லா இன்பம் தருகிறது.

**"கண்டே யெனுஞ்செங் கனிமொழி யீர்சிலைக் கார்விசயன்**
**திண்டேர் கடவும் ரகுநாதன் வெற்பிற்செந் தாமரைமேற்**
**கொண்டே குவளை இருத்தல்கண் டேன் அக் குவளையின்மேல்**
**வண்டேய் கமலமும் கண்டேன் இதுவென்ன மாயங்களே'**

இக்கோவையின் ஒவ்வொரு பாடலுக்கும் ஒரு பொற்றேங்காய் உருட்டினர் சேதுபதி மன்னர். அத்தோடு பொன்னங்கால் என்னும் ஊரை முற்றூட்டாகப் புலவர்க்கு ஈந்தார். சேதுபதி வரிசை யறிந்து பரிசு வழங்கிய பான்மை போற்றற்குரியதே.

பதினாறும், பதினேழாம் நூற்றாண்டுகளைவிடப் **பதினெட்டாம் நூற்றாண்டில்** தமிழ் செழித்து வளர்ந்தது. இந் நூற்றாண்டில் எண்ணற்ற இலக்கியங்கள் எழுந்தன. பழைய பாணியை விட்டுப் புதிய இலக்

கியங்களைப் படைக்கும் முயற்சிக்கும் இடம் இருந்தது. தருக்க நூல்களும் எழுந்தன. கிறித்துவசமயம் வேரூன்றிவிட்ட காரணத்தால் தமிழுக்கும் சில நன்மைகள் விளைந்தன. தமிழன்னைக்குப் பல்வேறு புத்தணிகள் செய்து அணிவித்து மகிழ்ந்த வீரமாமுனிவர் எனும் மேல்நாட்டவர் இந் நூற்றுண்டில்தான் வாழ்ந்தார். இவர்தம் இலக்கியத் தொண்டைக் 'கிறித்துவரின் தமிழ்த்தொண்டு' எனும் பகுதியில் விரிவாகக் காண்க. இந்நூற்றுண்டுப் புலவர்களுள் பெரும்புகழ் பெற்ற சிலரைப்பற்றி இனி விரிவாகக் காண்போம்.

**நல்லாப்பிள்ளை :** வில்லிபுத்தூராரின் பாரதத்தை விரித்துப் பாடியவர் நல்லாப்பிள்ளை. இவர் தொண்டை மண்டலத்து முத்தாலப் பேட்டையில் கணக்கர் குலத்தில் பிறந்தவர். தமிழ், வடமொழி, தெலுங்கு ஆகிய மும்மொழிகளையும் கற்றுத் தேர்ந்தவர். இவர் தம் இருபதாம் வயதிலேயே பாரதம் பாடத்துவங்கினுர் என்பர். இவர் இயற்றிய பாரதம் 'நல்லாப் பிள்ளை பாரதம்' என வழங்கப்பெறுகிறது.

**நல்லாப்பிள்ளை பாரதம் :** நல்லாப்பிள்ளை, வில்லி புத்தூராரின் பாரதத்தையே பல வடமொழிக் கதைகளைப் பெய்து விரித்துப் பாடினுர். இந்நூலில் 14,728 பாடல்கள் உள்ளன. வில்லிபாரதத்தைக் காட்டிலும் இதில் பத்தாயிரம் பாடல்கள் அதிகம் உள்ளன.

**தாயுமானவர் :** சமய குரவர்களால் பாடப்பெற்ற பெருமைமிக்க திருமறைக் காட்டில் தோன்றியவர் தாயுமானவர். இவர்தம் தந்தையார் திரிசிரபுரத்தில் பணியாற்றுகையில், அவ்வூர் இறைவனை தாயுமான வர் அருளால் பிறந்தமையால் அவ்விறைவன் பெயரையே இவருக்கும் வழங்கினுர். தந்தையார்

இறந்தபின் தாயுமானவர், தம் தந்தையைப் போலவே விசய ரகுநாத சொக்கலிங்க நாயக்கரின் கணக்கராகப் பணியாற்றினர். அரசி தம்பால் கொண்ட காமத்தை அறிந்து அவ்வூரைவிட்டுச் சென்றர். இவர் மணம் புரிந்துகொண்டு சிலகாலம் இல்லறத்தில் வாழ்ந்தார். ஒரு மகனை ஈன்ற பிறகு துறவு மேற்கொண்டார்.

தாயுமானவர் பல தலங்களுக்குச் சென்றர்; இறைவனைத் தரிசித்ததுடன் பல அரியபாடல்களையும் இயற்றினர். இராமேசுவரத்திற்குத் தாயுமானவர் சென்றபோது அவ்வூர் மக்கள் மழை இன்றிப் பயிர்போல வாடியதைக் கண்டார். உடனே "சைவ சமயம் சமயமெனில்.........வானங்காள் பெய்மின் மழை" என்று ஒரு வெண்பாவைப் பாடப் பெருமழை பெய்தது என்பர்.

தாயுமானவர் பாடிய பாடல்கள் உயர்ந்த கருத்துக்களை எல்லா மக்களும் உணரும் எளிய முறையில் எடுத்துக் கூறுவன. இவை 'தாயுமானவர் திருப்பாடல் திரட்டு' என்னும் பெயரால் தொகுக்கப்பட்டுள்ளன. தாயுமானவர் பொன்மொழிகளில் ஒரு சில:

"எல்லாரும் இன்புற் றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறென் றறியேன் பராபரமே"
"நெஞ்சகமே கோவில் நினைவே சுகந்தமன்பே
மஞ்சனநீர் பூசைகொள்ள வாராய் பராபரமே"
"சித்தம் தெளிந்து சிவமானோர் எல்லோர்க்கும்
கொத்தடிமை யான குடிநான் பராபரமே"

**திரிகூடராசப்பக் கவிராயர் :** இந் நூற்றண்டின் மிகச் சிறந்த புலவர் சிலருள் ஒருவர் திரிகூடராசப்பக் கவிராயர். இவர் திருக்குற்றலத்துக்கு அருகில் உள்ள மேலகரம் என்னும் ஊரினர். குற்றலத்தலபுராணம்

குற்றாலமாலை, குற்றாலக்குறவஞ்சி, சிலேடை முதலிய பல நூல்களை இவர் இயற்றியுள்ளார். இவற்றுள் சிறந்தது குற்றாலக் குறவஞ்சியே. இவர் காலத்தில் மதுரையை ஆண்ட முத்துவிஜயரங்க சொக்கலிங்க நாயக்கர் என்னும் மன்னர் இக் குறவஞ்சியை அரங்கேற்றுவித்து, நூலை யாத்த புலவர்க்கு நன்செய்நிலம் பரிசளித்தார்.

**குற்றாலக் குறவஞ்சி :** குறவஞ்சி என்பது சிற்றிலக்கியங்களுள் ஒன்று. இதனைக் குறத்திப்பாட்டு என்றும் கூறுவர். தலைவன் உலாவருதல், உலாப்போந்த தலைவனைக்கண்டு தலைவி காதல் கொள்ளுதல், திங்கள் தென்றல் முதலியவற்றைத் தலைவி பழித்தல், குறத்தி வருதல், குறத்தி மலைவளம் கூறல், பின் குறிதேர்ந்து நலம் விளையுமெனக் கூறல், குறவன் குறத்தியைத் தேடி வருதல், குறவன் குறத்தியின் அணிகளைக்கண்டு ஐயுற்று வினவல், குறத்தியின் விடை முதலியவற்றை உறுப்புகளாகக் கொண்டு திகழ்வது குறவஞ்சி. இது ஆசிரியம், வெண்பா, தரவு, கொச்சகம் முதலியவற்றுடன் சிந்து, கண்ணி ஆகிய பாவினங்களும் விரவி வருமாறுபாடப்பெறும். இது குறவஞ்சியின் இலக்கணம்.

குற்றாலக் குறவஞ்சி 'குறவஞ்சித் தமிழ்' என்றும் 'குறவஞ்சி நாடகம்' என்றும் ஆசிரியரால் அழைக்கப் பெறுகிறது. உலாவரும் திரிகூடநாதரைக் கண்டு பெண்ணுக்குப் பெண் மயங்கப் பேடை அன்னம்போல வந்த வன்னமோகினி வசந்தவல்லி காதல் கொண்டதையும், காதல் நிறைவேறும் என்பதைக் குறத்தியால் உணர்ந்ததையும் கூறும் ஒப்புயர்வற்ற நாடகம். திரிகூடராசப்பரின் சொல்லழகும் கவியழகும் நூல் முழுதும் நிறைந்துவழிகிறது. 'பிறர் அறிவை மயக்கும்

ஒரு கருவம் இருக்கும்' மங்கைப் பருவத்தாளான வசந்தவல்லியின் வருணனையும், 'மனம் முந்தியதோ, விழிமுந்தியதோ, கரம் முந்திய தோ எனவே' அப்பைந் தொடி பந்தாடும் பான்மையும் 'கொலைமதர்க்கண் மையெழுதி மாத்திரைக் கோல்வாங்கி, மணிக்கூடை தாங்கி, பொன்வஞ்சி குறவஞ்சி அபரஞ்சி' கொஞ்சி வருகின்ற அழகும், 'கூனல்இளம்பிறை முடித்த வேணி யலங்காரரின்' குற்றாலத் திரிகூடமலையினது வளமும் இக் குறவஞ்சியை ஒருமுறை படிப்போரின் உள்ளத்தை யும் விட்டு அகலாது.

'துவளும் இடை, தவளநகை, பவள இதழ்த்' தையலான குறவஞ்சி தன் நாட்டு வளத்தைக் கூறும் பகுதியில் கவிஞரின் கற்பனை குற்றால மலையாய் உயர் கிறது! கவிச்சுவை அருவியாய்ப் பாய்கிறது! நாட்டு மக்களேயன்றி மரம் செடி கொடிகளும் விருந்துபசாரம் செய்யும் விந்தையைச் சற்றே பாருங்கள்:

"சூழ மேதி இறங்கும் துறையில்
சொரியும் பாலைப் பருகிய வாளை
கூழை வாசப் பலாவினில் பாய
கொழும்ப லாக்கனி வாழையில் சாய
வாழை சாய்ந்தொரு தாழையில் தாக்க
வருவி ருந்துக் குபசரிப் பார்போல்
தாழை சோறிட வாழைகு ருத்திடும்
சந்த்ர சூடர்தென் ஆரிய நாடே"

**பலபட்டடைச் சொக்கநாதப் புலவர் :** இப்புலவர் பாண்டிநாட்டைச் சேர்ந்தவர். இவர் மதுரைத் தலத் திடமும், மதுரை இறைவனிடமும் மாறுப்பற்றுடைய வர். மதுரையைப் பொருளாய்க்கொண்டு பல நூல் களை இவர் இயற்றியுள்ளார். அவற்றுள் மதுரை மும்

மணிக்கோவை, மதுரை யமக அந்தாதி, தேவையுலா, அழகர் கிள்ளைவிடு தூது முதலியவை குறிப்பிடத் தக்கவை.

**தூதின் இலக்கணம்:** தலைவி தன் காதலைத் தலைவனுக்குத் தெரிவிக்கத் தூது விடுவதும், தலைவன் தன் காதலைத் தலைவிக்குத் தெரிவிக்கத் தூது விடுவதும் தூது என்னும் சிற்றிலக்கியமாக அமைகிறது. அன்னம், மயில், கிள்ளை, மேகம், நாகணவாய்ப் புள், பாங்கி, குயில், நெஞ்சு, தென்றல், வண்டு என்னும் பத்தும் தூதுவிடுவதற்குரிய பொருள்கள். வேறு பொருள்களையும் தூது விடுதலும் உண்டு.

**அழகர் கிள்ளை விடு தூது:** திருமாலிருஞ் சோலையில் எழுந்தருளியுள்ள சௌந்தர ராகவப் பெருமாள் பவனி வரும்போது காதல்கொண்ட தலைவி கிள்ளையைத் தூது விட்டதாகப் பாடியுள்ளார் பலபட்டடைச் சொக்கநாதப் புலவர்.

**"பால்குடிக்கும் பச்சைக் குழந்தைநீ யானாலும்**
**கால்பிடிப்பார் கோடிபேர் கண்டாயே—மால்பிடித்தோர்**
**கைச்சிலைவே ளால்வருந்தும் காமநோய் தீர்ப்பதற்கோ**
**பச்சிலை ரூபம் படைத்திருந்தாய்..."**

எனப் புகழும் பகுதி சொல்லும் பொருளும் சிறந்து நிற்பதாம்.

**அருணசலக் கவிராயர்:** "கணிகொண்ட பஞ்சலட்சணமும், ராமாயணக் கடலையும் உணர்ந்த புலவன், கவிராயர் புகழ்கின்ற காழி அருணசலக் கவிராயர்" சோழநாட்டுத் தில்லையாடியில் பிறந்தார். தருமபுர மடத்தில் அம்பலவாணக் கவிராயரிடம் தமிழ் பயின்றார். இவர்தம் புலமையையும் பண்பையும் கண்டு களித்த அம்பலவாணர், "இவ்வாதீனத்தின் தலை

மையை ஏற்கச் சம்மதமா?'' எனக் கேட்டார். அருணு சலக் கவிராயர் அதை ஏற்க மறுத்து இல்லறத்தில் ஈடுபட்டார்.

வாழ்க்கை நடத்த வருமானம் தேவை. அதைப்பெ றக் கவிராயர் காசுக்கடை நடத்திஞர். ஆஞல் கவிதைக் கடையைக் கட்டிவிடாமல் விருத்தி செய்தார். இவரு டைய நண்பரும், சீர்காழி மடத்திற்குக் கட்டளைத் தம்பிரானுமான சிதம்பரம் பிள்ளையின் விருப்பப்படித் தில்லையாடியை விட்டுச் சீர்காழி யடைந்து அங்கேயே எஞ்சிய நாளைக் கழித்தார். எனவே, இவர் சீர்காழி அருணுசலக் கவிராயர் என அழைக்கப் பெற்ருர். இக் கவிராயர் இராம நாடகம், அசோமுகி நாடகம், சீர் காழித் தலபுராணம், அனுமார் பிள்ளைத் தமிழ் முதலிய பல நூல்கள் இயற்றியிருப்பினும், இராம நாடகமே இவரைப் புகழ்க் குன்றில் ஏற்றிவைத்தது. திருமாலின் அவதாரமான இராமனின் கதையை நாடகமாக்கிய இவர், தலையில் தாழ்வடம், இடையில் வெள்ளாடை உடலில் திருநீற்றுப் பூச்சு—முதலிய சிவ சின்னங் கள் பூண்டு சைவப் பண்டார வடிவத்தில் காட்சி யளித்தார்.

**இராம நாடகம்:** இதை 'இராம நாடகக் கீர்த்தனை' என்றும் கூறுவர். பாமர மக்களும் இராம கதையை உணர்ந்து புனிதம் அடைய வேண்டும் என்ற உன்னத நோக்கத்தோடு இவர் இந்நூலை இயற்றிஞர். பெரும் பாலும் கம்பராமாயணத்தைப் பின்பற்றியதாக இருப் பினும், பொதுமக்களுக்கு நன்கு அறிமுகமான சொற்க ளையும் பழமொழிகளையும் அதிகமாகப் பயன்படுத்தி இதனைப் பொதுமக்கள் நூலாக்கிவிட்டார். இராமனின் முடிசூட்டு விழாவைப் பற்றிக் கூனி குறை கூறியதைக்

கேட்டு கைகேயி அவளிடம் சினம் கொள்கிருள். இதைத் தெரிவிக்கும் பாடல்,

**"ராமனுக்கு மன்னன் முடி தந்ததாலே**
**நன்மையுண்டொரு காலே**
**பாமரமே உனக்கென்னடி பேச்சே**
**பழம்நழுவிப் பாலில்விழுந் தாற்போல் ஆச்சே"**

எனத் துவங்குகிறது. சொல்லும், நடையும், அணியும் மக்கள் அறிந்த எளிய தன்மையன. எனவே இது மக்களிடம் பெரும் செல்வாக்குப் பெற்றது. இன்றும் கம்பராமாயாணப் பிரசங்கம் செய்கிறவர்கள் அருணசலக் கவிராயரின் பாடலை எடுத்துச் சொல்லாமல் இருப்பதில்லை.

கவிச்சக்ரவர்த்தி கம்பர் தம் இராமாயணத்தைத் திருவரங்கத்துக் கோயில் மண்டபத்திலே பங்குனி அஸ்தமாகிய திருநட்சத்திரத்தில் அரங்கேற்றினர். அவரைப் பின்பற்றி 'இராமநாடகம்' எழுதிய அருணசலக் கவிராயரும் தம் நூலை அதே கோயிலில் அதே மண்டபத்தில் அதே நட்சத்திரத்தில் அரங்கேற்றினர். கவிராயருக்கு எத்தனையோ செல்வர்கள் இராமநாடகத்திற்காகப் பரிசும் பாராட்டும் அளித்தனர். அவர்களுள் மணலி முத்துகிருட்டின முதலியார் என்னும் வள்ளல் தனக்குக் 'கனம் தந்தான், கனகாபிஷேகம் தந்தான், இனம் தந்தான், ராமகதை எவர்க்கும் தந்தான், எனை ராமாயணக் கவிஞன் எனப் பேர்தந்தான்' எனக் கவிராயரே சிறப்பித்துக் கூறுகிருர்.

**சொக்கப்ப நாவலர்:** இவர் தொண்டை மண்டலத்தைச் சார்ந்த குன்றத்தூரினர். தஞ்சை வாணன் கோவை இயற்றிய பொய்யாமொழிப் புலவரின் மரபில்

வந்தவர் இவர் எனக் கூறுவர். இவர் சிறந்த புலமை பெற்று அட்டாவதானியாகவும் திகழ்ந்தார் என்பர். இவர் பிற்காலத்தில் சேலத்தில் வாழ்ந்தார். சேலம் தலபுராணம், சுகவனநாதர் தோத்திர நூல் ஆகியவற்றை இவர் இயற்றினர். எனினும், தஞ்சை வாணன் கோவைக்கு இவராக்கிய உரையே மிகவும் புகழ் பெற்றது.

# ஐரோப்பியர் காலம்

பதினெட்டாம் நூற்றுண்டின் இடையில் இந்திய வரலாறு அதுவரை கண்டிராத ஒரு மாற்றத்தைக் கண்டது. நமது கலாச்சாரத்திற்கும் அரசியல் கோட்பாடுகளுக்கும் முற்றிலும் வேறுபட்ட ஓர் இனத்தினர் இந்தியாவைத் தங்கள் ஆட்சிக்கு அடிபணியும் ஓர் அடிமை நாடாக ஆளத்தொடங்கினர். தமிழ் நாட்டிற்கும் இந்நிலை ஏற்பட்டதால் தொன்றுதொட்டு வரும் இலக்கிய மரபுகள் தேங்கி நிற்க, ஆள வந்தவர்களின் எண்ணப் போக்கில், நடைமுறை வழக்கங்களில் பயிலப் பெறுகின்ற இலக்கியவடிவங்களைத்தமிழர்கள் கற்கத் தலைப் பட்டனர். அவைகளைத் தமிழ் மொழியில் எடுத்தாண்டு புதிய பாணிகளை அமைக்கத் தொடங்கினர். இதன் பயனாக, நாவல்கள், சிறுகதைகள் போன்ற இலக்கிய வடிவங்களும் செய்தித்தாள் இலக்கியமும் வளரத் தொடங்கின. இருபதாம் நூற்றுண்டில் உரிமை உணர்ச்சி விழிப்படையவே தமிழ் இலக்கியத்தில் அது பிரதிபலிக்கத் தொடங்கியது. இந்தக் கால எல்லையில் பழைய இலக்கிய மரபினை ஒட்டி எழுந்த நூல்களையும் புதுமை நூல்களையும் ஆராய்வோம்.

**சிவஞான முனிவர்:** பாண்டிய நாட்டில் பாவநாசத்தைச் சார்ந்த விக்கிரமசிங்கபுரத்தில் வேளாளர் மரபில் தோன்றினர். இவருக்குப் பெற்றோர் இட்ட பெயர் முக்காளலிங்கர் என்பதாம். ஒருநாள் திருவாவடுதுறை மடத்தைச் சார்ந்த புலவர்கள் ஊருக்குவர, அவர்களைப் பணிந்து இல்லத்திற்கழைத்துச் சென்று அமுதளித்து மகிழ்ந்தார். பின் பெற்றோரிடம் விடைபெற்றுக் கொண்டு அவர்களுடன் சென்ருர். பல தலங்களைக் கண்டு தொழுத பின்பு திருவாவடுதுறை அடைந்து அம்மடத்தின்கண் இருந்த பின்வேலப்ப தேசிகரிடம் சிவதீக்கையும், சைவ சந்நியாசமும், சிவஞான யோகிகள் எனும் சிறப்புப் பெயரும் பெற்ருர்.

இவரிடம் கற்றுச் சிறந்த மாணவர் பலர். இவர் இயற்றிய நூல்களும் எண்ணற்றவை. தொல்காப்பியச் சூத்திர விருத்தி, இலக்கண விளக்கச் சூருவளி முதலிய இலக்கண நூல்களும், சோமேசர் முதுமொழி வெண்பா, திருவேகம்பர் ஆனந்தக் களிப்பு, அமுதாம்பிகை பிள்ளைத் தமிழ், திருத்தொண்டர் திருநாமக் கோவை போன்ற நூல்களும், சிவஞான போத மகா பாடியம், சிவசம வாதவுரை மறுப்பு முதலிய தருக்க நூல்களும் இயற்றித் தமிழின் பெருமையை உயர்த்தினர் சிவஞானமுனிவர்.

**சோமேசர் முதுமொழி வெண்பா:** திருவள்ளுவர் செய்த தமிழ்மறையாம் திருக்குறளிலுள்ள 133 அதிகாரங்களில் அதிகாரத்திற்கு ஒரு பாட்டாக எடுத்து, அதனை வெண்பாவின் பின்னிரண்டு அடிகளில் வைத்து முன்னிரண்டு அடிகளில் அக்குறளின் பொருளைத் தெளிவுற விளக்கும் கதையை அமைத்துப் பாடப்பட்டதே இச் 'சோமேசர் முதுமொழி வெண்பா'. குளத்தூர்

இறைவரான சோமேசரை முன்னிலேப் படுத்தி இரண் டாம் வரியின் மூன்ரும் சீரில் விளிப்பதால் இந்நூல் இப்பெயர் பெற்றது.

அரி, அரன், அயன் எனும் மூவர்ஏவலினுல் நாட்டில் மழை பெய்யாமற் போக, அத்திரி முனிவரின் பத்தினி அனசூயை தன் கற்பின் திறத்தால் மழை பெய்வித்த கதையைத் ''தெய்வம் தொழா அள்...'' என்ற குறளுக்கு முனிவர் எடுத்துக்காட்டியுள்ள பொருத்தம் போற்றற் குரியது.

**''மூவர் தடுப்பவுங்கொண் மூவைப் பணிகொண்டாள்**
**தூய அனசூயை சோமேசா—மேவுபிற**
**தெய்வம் தொழா அள் கொழுநன் தொழுதெழுவாள்**
**பெய்யெனப் பெய்யும் மழை''**

**அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ் :** குளத்தூரில் உள்ள அமுதாம்பிகையின் மீது சிவஞான முனிவர் பாடிய சிற்றிலக்கியமே இப்பிள்ளைத்தமிழ். இதன் கண் முனிவரின் கற்பனைத் திறனைக் காணலாம். அமு தாம்பிகையைக் குறிக்கும் போதெல்லாம் பக்தியும் பைந்தமிழும் பின்னிப் பிணைந்து பேரழகு தரும் விந்தையைக் காணலாம். அமுதாம்பிகையைச் 'சிற் சபையில் நெற்றிவிழி அற்புதனை ஆட்டுமயில்' 'தண்ட மிழ்ச் சுவைகண்ட தென்குளத்தூர் அம்மை' 'பங்கயச் செல்வி தொழும் மங்கையர்க்கரசி', 'அரந்தை துறந்து குளந்தை புரந்தவள்', 'புத்தமிழ் தருத்தி மெய்த் தாயாய் வளர்ப்பவள்'' 'பூரணஞான புராதனி' என் றெல்லாம் அழைக்கும் பெற்றியைப் பாடும் நா அழகு பெறும்; பருகும் செவி அழகுபெறும் எனின், அது மிகையாகாது.

**கச்சியப்ப முனிவர் :** காஞ்சிபுரத்தைச் சேர்ந்த வேளாளர் குடியில் பிறந்தவர் கச்சியப்ப முனிவர். இவர் பின்னர் திருத்தணிகையில் குடியேறினர் என்பர். திருவாவடுதுறையின் திருமடத்துப் பெரியோரிடத்துப் பயின்றவர். சிவஞான முனிவரிடம் தமிழும் வடமொழியும் கற்றுச்சிறந்தவர். இவர் தணிகைப்புராணம், திருவானைக்காப்புராணம், பேரூர்ப்புராணம், விநாயகப் புராணம் முதலிய புராணங்களையும் சென்னை விநாயகர் பிள்ளைத்தமிழ், பஞ்சாக்கர அந்தாதி, கச்சியானந்த ருத்திரேசர் வண்டுவிடு தூது முதலிய சிற்றிலக்கியங்களையும் எழுதியுள்ளார்.

**தணிகைப்புராணம் :** திருத்தணிகையின் சிறப்புகளைக் கூறும் புராணம் தணிகைப்புராணம். கந்தபுராணத்தின் இறுதியில் அமைந்த சங்கர சங்கிதையின் இறுதியில் இத் திருத்தணிகையின் சிறப்புக் கூறப்பட்டுள்ளதென்றும், அதையே ஆசிரியர் இங்கு விரித்துரைப்பதாகவும் கூறுவர். தணிகைப்புராணம், பிற புராணங்களைப் போல வெறும் வரலாற்றை மட்டும் சொல்லாமல், அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப்பொருள்கள் நான்கையும் சிறப்புற உரைக்கும் பான்மையால் இதனைப் பெருங்காப்பியமென்றே கூறுவர்.

வேர்ப்பலா மண்ணுள் மறைந்துநின்றும் அதன் மணம் எங்கும் பரவித் தன் இருப்பிடத்தைப் புலப்படுத்திநிற்கும். இத்தன்மை, கற்பனவற்றைக் கசடறக்கற்றவர் தம்மை மறைத்துக் கொண்டாலும் அவர் தம் புகழ் வையமெல்லாம் பரந்து அவரை வெளிப்படுத்துவது போன்றது என்று ஆசிரியர் கூறும் உவமை மிகச்சிறந்த ஒன்றாகும். இதனை இப்புராணத்

தில் பிரமன் சிருட்டிபெறுபடலத்தில் ஆசிரியர் அமைத்துள்ளார்.

"கரந்து வைகினும் கற்றவர் தம்புகழ்
நிரந்து தோற்றப் படுவது நேர்மனுள்
பரந்த வேர்ப்பலா வின்பழம் யாவர்க்கும்
சுரந்த வாசத்தால் தோற்றுமொர் பாலெலாம்"

**சிவக்கொழுந்து தேசிகர் :** 'வாழி சிவக்கொழுந்தும் பரம்பரையும்வாழி' என வண்டமிழ்ப்புலவரால்வாழ்த்தி வணங்கப் பெறும் பெருமை மிக்கவர் கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர். இவர் கும்பகோணத்துக்கு அருகே உள்ள, கோடீச்சுரம் என அழைக்கப்பெறும் கொட்டையூரில் பிறந்தார். தஞ்சையை ஆண்ட சரபோஜி மன்னர் தம் நூல்நிலையத்தில் பழைய நூல்களைத் தொகுக்கவும், புதிய நூல்களை இயற்றவும் இவரை அழைத்துக் கொண்டார். இவர் மன்னர் விருப்பப்படி, 'சரபேந்திரர் வைத்திய முறைகள்', 'சரபேந்திரர் சன்னிரோக சிகிச்சைகள்', 'சரபேந்திரர் வைத்தியம்' ஆகிய மூன்று மருத்துவ நூல்களை இயற்றினார். இவற்றைத்தவிர, கோடீச்சுரக்கோவை, தஞ்சைப் பெருவுடையார் உலா, ஸ்ரீசரபேந்திர பூபாபல குறவஞ்சி ஆகிய சிற்றிலக்கியங்களையும் இயற்றினார். இவர் சென்னையில் தங்கியிருந்தபோது திருவாசகத்தை முதன்முதலாக அச்சிட்டார் என்பர்.

**சரபேந்திரபூபால குறவஞ்சி:** இவர் இயற்றியநூலில் பெரும் சிறப்புப்பெற்றது இக்குறவஞ்சி. 'திறமும் திருவும் நெறியும்' உறையும் தஞ்சைச் செழுநகரில் 'எவ்வுயிரும் தன்னுயிர் என்று எண்ணு' சரபேந்திரி மன்னர் திருவுலா வர, 'புங்கமுறும் அம்புயத்தைப் பங்கமுற்றது என்னஒளிர் முகத்தினள்' ஆன மதன

வல்லி அவரைக்கண்டு பெருமயலுங் கிறுகிறுப்பும் பெருக, அவரை மருவுதற்குக் காதல்கொண்டு குறத்தி யால் அது கூடும் என உணர்வதை இக் குறவஞ்சி விரித்துரைக்கிறது.

சிவக்கொழுந்து தேசிகரின் எளிய இனிய 39 கீர்த் தனைகளும், வெண்பா, அகவல் முதலிய 32 பாடல் களும் இந்நூலின்கண் உள்ளன. வண்ணமலைக் குறத்தி சொல்லும் வாசல் வளம் தமிழ் நேசர்களின் நெஞ்சை அள்ளும். இதோ அவ்வளத்தின் ஒருபகுதி.

**"வாசலிது வாசலிது மகராஜன் வாசலிது**
**தேசுறுபோ சலகுலத்தைச் செழிக்கவைக்கும் வாசலிது**
**திருமகளும்நாமகளும் சிறந்திருக்கும் வாசலிது**
**வரமுதவும் பெரியோர்கள் வாழ்த்திசைக்கும் வாசலிது**
**நேசமுறு சேனைகட்கு நிதியளிக்கும் வாசலிது**
**பூசுரர்க்கும் புலவோர்க்கும் பொன்சொரியும் வாசலிது**
**இத்தரணி மன்னரெல்லாம் இறைஞ்சிநிற்கும் வாசலிது**
**மொய்த்திடுசீர் மும்முரசு முழங்குமணி வாசலிது"**

**பிறபுலவர்கள் :** மேலே கண்ட புலவர்களைத்தவிரக் குறிப்பிடத்தக்க பெருமை பெற்றோர் பலருண்டு. 'மறைஞானதேசிகர் என்பார் அருணகிரிப் புராணம் இயற்றினர். சீர்காழி வாழ்ந்த சிவநேயச்செல்வர் 'கண்ணுடைவள்ளல்' ஐக்கியவாத நூலாகிய ஒழிவி லொடுக்கம் இயற்றினர். தாசி காளிமுத்து எனும் பெண்மணி 'வருணகுலாதித்தன் மடல்' வரைந்தாள். அரபத்த நாவலர் பரதசாத்திர இலக்கணம் வகுத்தார். வீரமாமுனிவருக்குத் தமிழ் கற்றுத்தந்த சுப்ரதீபக்கவி ராயர் 'கூளப்பநாயக்கன் காதல்', 'விறலிவிடுதூது' முதலிய காமச் சுவைமிகுந்த நூல்கள் இயற்றினர். அபிராமி பட்டர் அபிராமி அந்தாதி பாடினர். அம்பல

வாணர் என்பார் அறப்பளீசுர சதகம் இயற்றினர். பகழிக்கூத்தர் 'திருச்செந்தூர் முருகன் பிள்ளைத்தமிழ் புனைந்தார். சடகோபதாசர் என்னும் வைணவர் 'அரி சமயதீபம்' எழுதினர். அப்புள்ளையார் 'திருவந்தாதி யுரை', 'திருவிருத்தவுரை' முதலியவை இயற்றினர். அழகிய நம்பி, குருபரம்பரை வரலாறு' எனும் நூலை விரிவாக எழுதினர். இவர்களைத் தவிர வேறு பலரும் தமிழ்த்தாய்க்குத் தொண்டாற்றியுள்ளனர்.

## பத்தொன்பதாம் நூற்றுண்டுத் தமிழ் நூல்கள்

ஆங்கிலேயர் ஆட்சி கொடிகட்டிப் பறந்த காலம் பத்தொன்பதாம் நூற்றுண்டு. ஆங்கில மொழியும் கிறித்தவ மதமும் தமிழகத்தில் நுழைந்து செல்வாக்குப் பெற்று விட்டன. தமிழ்ப்புலவர் பலர் ஆங்கில மொழி கற்றுப் புலமை மிக்கவராயினர். ஆங்கிலேயர் தமிழ்மொழியைக் கற்று அதில் நூலியற்றும் திறன் பெற்றுர்கள். ஆங்கில மொழி அறிவாலும் மேனுட்டார் தொடர்பாலும் உரைநடை நூல்கள் பெருகின. சிற்றிலக்கியங்களும், சமயச்சார்பான உரைநடை நூல்களும், உரைநூல்களும், கதை நூல்களும் எழுந்தன. அச்சகங்கள் பல தமிழ்நாட்டில் தோன்றிப் பெருகினமையால், இந்நூற்றுண்டில் எழுதப்பட்ட நூல்களுள் பெரும்பாலானவை அச்சேறின. அதுவரை ஏட்டுச்சுவடிகளாகத் திகழ்ந்த சங்க நூல்களும் அச்சு நூல்களாகப் பதிக்கப் பெற்றன. அவற்றை மக்கள் புத்ம் புதிய நூல்கள் போலக் கருதி வரவேற்றுப் பயன் பெற்றனர். இந்நூற்றுண்டில் வாழ்ந்த பெரும்புலவர்கள் சிலரையும், அவர்கள் ஆற்றிய தமிழ்ப்பணியையும் இங்குக் காண்போம்.

**மீனாட்சி சுந்தரம் பிள்ளை :** ஒரே நாளில் பலநூறு பாடல்கள் பாடும் ஒப்பற்ற புலமை பெற்றவர் திரிசிர புரம் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை. இவர் 1815–இல் தோன்றி 1876–இல் மறைந்தார். இவருடைய மாணவர்களில் பெரும் புகழ் பெற்றவர் டாக்டர். உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள். மகாவித்துவான், திருவாவடுதுறை ஆதீனத்தின் வித்துவானாகத் திகழ்ந் தார்.

இவர் திருநாகைக் காரோணப் புராணம், திருக் குடந்தைப் புராணம், திருமயிலைப் புராணம் முதலிய பதினாறு தலபுராணங்கள் பாடியுள்ளார்; தில்லை யமக அந்தாதி, திருச்சிராமலை யமக அந்தாதி முதலிய பதி னாறு அந்தாதிகள் இயற்றியுள்ளார். பல பிள்ளைத் தமிழ் நூல்களும், மாலைகளும், வேறுபல சிற்றிலக்கி யங்களும் இயற்றியுள்ளார்.

**சேக்கிழார் பிள்ளைத்தமிழ் :** மகாவித்துவான் இயற் றிய நூல்கள் பலவற்றுள்ளும் மிகச்சிறந்தது எனப் போற்றப்படுவது சேக்கிழார் பிள்ளைத்தமிழ் என்னும் நூலாகும். 'பக்திச்சுவை நனிசொட்டச்சொட்டப்பாடிய கவிவலவ'ரின் அருஞ்சிறப்புக்களை மகாவித்துவான் தமிழினிமையில் தோய்த்துத் தருகிறார். தமிழ் மணக் கும் அவர் பாடலுக்கு ஓர் எடுத்துக்காட்டு:

**"சோறு மணக்கும் மடங்களெலாம்**
**தூய்மை மணக்கும் சிந்தையெலாம்**
**சுவண மணக்கும் ஆசையெலாம்**
**தொங்கல் மணக்கும் தோள்களெலாம்**
**சேறு மணக்குங் கழனியெலாம்**
**செல்வம் மணக்கும் மாடமெலாம்**
**தென்றல் மணக்கும் மேடையெலாம்**
**தெய்வம் மணக்கும் செய்யுளெலாம்**

நீறு மணக்கும் நெற்றியெலாம்
நெய்யே மணக்கும் கறிகளெலாம்
நெருப்பு மணக்கும் குண்டமெலாம்
நேயம் மணக்கும் வீதியெலாம்
சாறு மணக்கும் குன்றத்தூர்த்
தலைவா தாலோ தாலேலோ
சகலா கமபண் டிதெய்வச்
சைவா தாலோ தாலேலோ"

**பூண்டி அரங்கநாத முதலியார்:** தொண்டை நாட்டுத் திருவள்ளூருக்கு அருகேயுள்ள பூண்டி என்னும் சிற்றூரில் 1844 ஆம் ஆண்டு தோன்றியவர் அரங்கநாத முதலியார். இவர் சென்னை அரசினர் கல்லூரியில் கணிதப் பேராசிரியராகப் பணியாற்றினர். கணிதமே யன்றி ஆங்கிலம், தமிழ், வரலாறு, தத்துவம் முதலிய பல் துறைகளிலும் வல்லவராய்த் திகழ்ந்தார். தொழுவூர் வேலாயுத முதலியாரால் இவர் இறையருள் உணர்ந்து சிறந்த பக்தரானர். அவரிடமே தமிழையும் கற்றுத் தேர்ந்தார். தமிழ்ப் புலமையும், பக்தியுள்ளமும் கொண்டமையால் இவர் கச்சிக் கலம்பகம் என்னும் நன்னூல் இயற்றினர்.

**கச்சிக்கலம்பகம்:** இந்நூல் காஞ்சிபுரத்தில் எழுந்தருளியிருக்கும் ஏகாம்பரநாதர் மீது பாடப்பட்டது. இந்நூலை அக்காலத்தில் வாழ்ந்த புலவர் பெருமக்கள் சென்னைத் தொண்டை மண்டலம் துளுவ வேளாளர் உயர்நிலைப் பள்ளியில் அரங்கேற்றினர். பலபாடல்களில் தேவாரப் பாடல்களின் தெய்வத் தன்மையும் தேனினிமையும் கலந்திருப்பதால் இக்கச்சிக்கலம்பகத்தைக் கற்றவர் மெச்சிப் புகழ்கின்றனர். அரங்கநாதரின் திறங்காட்டும் ஒருபாடலைக் காண்க:

''காரானைத் தோலுரித்த கருப்பி ஞனைக்
களித்துடலம் நீறணிந்த வெண்மை யானை
வாரானை யூர்ந்திலங்கு செம்மை யானை
வலத்தானை இடப்பாகம் பச்சை யானை
நீரானைச் செஞ்சடையின் நெற்றி யுற்ற
நெருப்பானைப் பொருப்பானைச் சகத்தி ரச்சீர்ப்
பேரானைப் பெரியானைக் கம்பத் தானைப்
பெம்மானை எம்மானைப் பேசு மாறே''

**சரவணப்பெருமாள் கவிராயர்:** இவர் பாண்டிநாட்டு முதுகுளத்தூரில் பிறந்த முத்தமிழ் வித்தகர். முத்து ராமலிங்க சேதுபதியின் அவைக்களப் புலவராய்த் திகழ்ந்தார். வசைபாடுவதில் வல்லவர். இவர் பணம் விடுதூது, அசுவமேதயாகபுராணம், விநாயகர் திருமுக விலாசம் முதலிய நூல்களை எழுதியுள்ளார். இவரை அட்டாவதானம் சரவணப் பெருமாள் கவிராயர் என அழைப்பர்.

**பணவிடுதூது :** இத்தூது இராமேச்சுரம் இராமலிங் கேசர் மீது இயற்றப்பெற்றது. அதனுள் தாசில்தார் இயல்பு, தட்டார்கள் இயல்பு, வணிகர் இயல்பு, வைத் தியர் இயல்பு முதலியன கூறப்பட்டுள்ளன. அன் றைய வித்துவான்கள்,

"மூடரையே கும்ப முனியென்றும் பாழ்த்தகுணக்
கேடரையே வில்லிற் கிரீடியென் றும்—தேடியொரு
காசுங் கொடாதாரைக் கன்னனென்றும் பொய்சொலும்பி
சாசரையே சொல்லிலரிச் சந்த்ரனென் றும்—வீசும்
எழுத்தாணி தேய எழுதிப் பனையுங்
கழுத்தான் எனச்சாய் கழுத்தா—யழுத்தமிட்ட
செந்தமிழைக் கொண்டு தெருக்கள்தெ ருக்கள்தொறும்''

அலைந்து அல்லலுறும் அவலநிலையைச் சித்திரித்துக் காட்டுகிறது, இத்தூது.

**தண்டபாணி சுவாமிகள் :** இவர் திருநெல்வேலி யைச் சேர்ந்தவர். முருகன் அருளாலே விரைந்து பாடு னேயும் பேராற்றல் பெற்றவர். திருச்செந்தூர், பழனி முதலிய தலங்களில் சிலகாலம் தங்கிய இவர், பின்னர் திருவாமாத்தூரில் வாழ்ந்தார். இவரது பிள்ளைப்பெயர் சங்கரலிங்கம். திருப்புகழ்ச்சுவாமிகள் என்றும் இவரை அழைப்பர். வண்ணச்சரபம் தண்டபாணி சுவா மிகள் என்னும் பெயராலே இவர் போற்றப்படுகிருர். இவர் "செந்தமிழ் வண்ணச் சரபமென அவதாரஞ் செய்து செவ்வேல் ஏந்தும், கந்தனு தியதேவர்க்கு ஐம் பதினுயிரங் கவிகள்" பாடியுள்ளார். இவர் இயற்றிய நூல்கள் எண்ணற்றன.

**புலவர் புராணம் :** தண்டபாணி சுவாமிகளின் தண்டமிழ் நூல்களுள் புலவர் புராணம் சிறந்தது. "நிலவு செந்தமிழ் நாட்டிடை திகழ்தருமோர் நிகரிலா மணிவிளக்கென்னப் புலவர் புகழ்ந்திடுசீர்ப் புலவர் புராணம்" அகத்தியர், ஔவையார், திருமூலர், இடைக் காடர், ஆழ்வார்கள், நாயன்மார்கள், பிள்ளைப்பெரு மாள் ஐயங்கார், சத்திமுற்றப் புலவர் முதலிய எழுபத் திரண்டு புலவர்களின் வரலாற்றைக் கூறுகிறது. ஒவ்வொரு வரலாறும் சருக்கம் என அழைக்கப் பெறு கிறது.

> "அகல மாகும் அருந்தமிழ் ஆக்கமும்
> சகலர் காணத் தகா அருள் தன்மையும்
> பகலே நேர்புகழ்ப் பாவலர் ஆண்மையும்
> புகலு மிந்தப் புராணம் உணர்த்துமே"

என்ற பாடலால் நூலின் பயனே ஆசிரியர் உரைக்கின் ருர். புலவரின் பெருமை தண்டபாணி சுவாமிகளின்

செந்தமிழ்ப் பாவில் மும்மடங்கு சிறந்து பொலிவதைப் புலவர் புராணம் படித்தோர் உணர்வர்.

**ஆறுமுகநாவலர்:** பத்தொன்பதாம் நூற்றுண்டில் சைவ சமயத்தின் எழுச்சிக்குப் பெரிதும் உழைத்த பெரும்புலவர், ஆறுமுகநாவலர். இவர் ஈழநாட்டு யாழ்ப்பாணத்தின் கண்ணுள்ள நல்லூரில் 1822-இல் பிறந்தார். இளமையிலேயே புலமை மிக்கவராய் விளங்கினுர் இவர். இவருடைய தந்தையார் ஒரு நாடக நூலைப் பாதி எழுதிவிட்டு இறந்து விட்டனர் என்றும், அப்போது ஒன்பது வயதே நிறைந்தவராயிருந்த இவர் அந்நூலின் மீதியை எழுதி முடித்தார் என்றும் கூறுவர்.

ஆறுமுகநாவலர் தமிழுடன் ஆங்கிலமும் கற்றுச் சிறந்தவர். அதனுல் பார்சிவல் பாதிரியார் என்பார் இவரைக்கொண்டு கிறித்துவரின் மறைநூலான பைபிளை ஆங்கிலத்திலிருந்து தமிழில் மொழிபெயர்க்கச் செய்தார். நாவலரின் தமிழ்பைபிள் அச்சேறி நாடெங்கும் பரவியது. என்ருலும் கிறித்துவர்களின் பிரசாரத்தால் தமிழ்ச்சமயம் மங்குதல் கூடாது என்பதற்காகக் கிறித்துவர்களின் வெளியீடுகள் பலவற்றிற்கு மறுப்புரை எழுதினுர். சைவ சமயத்தின் வளர்ச்சிக்காகச் சொற்பொழிவாற்றுதலை மேற்கொண்டார். பல மணிநேரம் அணைஉடைந்த வெள்ளமெனப் பேசும் ஆற்றல் கண்டே இவரை 'நாவலர்' என அழைத்துச் சிறப்பித்தனர்.

நாவலர் சென்னை மாநகரில் 'வித்தியாநு பாலன யந்திரம்' என்னும் அச்சகத்தை நிறுவி அருந்தமிழ் நூல்கள் பல வெளியிட்டார். ஆத்திசூடி, கொன்றை வேந்தன் ஆகிய சிறு நூல்களுக்கும், திருச்செந்தில்

அந்தாதி, திருமுருகாற்றுப்படை முதலிய நூல்களுக்கும் உரை எழுதினர். நன்னூற்காண்டிகை யுரையும் வெளியிட்டார். பாலபாடம், இலக்கண வினவிடை, சைவ வினவிடை, இலக்கணச் சுருக்கம், திருவிளையாடற்புராண வசனம், பெரியபுராண வசனம் முதலிய நூல்களையும் இயற்றினர்.

**இராமலிங்க சுவாமிகள் :** 'திருவருட்பா' என்னும் தீந்தமிழ் நூலை ஈந்தவர் சிதம்பரம் இராமலிங்க சுவாமிகள். இவர் இராமையப் பிள்ளைக்கும், சின்னம்மையாருக்கும் 1823-இல் சிதம்பரத்துக்கு அருகே உள்ள மருதூரில் பிறந்தார். கல்லையும் கனிவிக்கும் ஆற்றல்மிக்க அருட்பாடல்களைப் பாடிய காரணத்தால் இவர் திருவருட்பிரகாச வள்ளலார் என்று அழைக்கப் பட்டார்.

**திருவருட்பா :** இவர் பாடல்களின் தொகுப்பே திருவருட்பா. இது ஆறு திருமுறைகளாகப் பகுக்கப் பட்டுள்ளது. ஆறுந் திருமுறை ஏனையவற்றினும் அளவிலும் தரத்திலும் சிறந்து நிற்கிறது. உரைநடை, கவிதை, கீர்த்தனைகள் முதலிய பல்துறையிலும் இணையற்றவர் இராமலிங்கர். எளிய சொற்களில் எவருக்கும் விளங்குமாறு எழுதித் தனக்குப்பின்னே வந்த பாரதியாருக்கு முன்னேடியாக விளங்கியவர். செம்மையான சொற்களால் செம்மையான பொருளை மக்கள் உள்ளத்தில் பதியுமாறு பாடியவர். இவர் பாடலைப் பாடப்பாட, பாடுபவரின் வாய்மணக்கும்! கேட்போரின் செவிமணக்கும்! சிந்தையும் மணக்கும்.

**"பெற்ற தாய்தனை மகன்மறந் தாலும்**
**பிள்ளை யைப்பெறுந் தாய்மறந் தாலும்**
**உற்ற தேகத்தை உயிர்மறந் தாலும்**
**உயிரை மேவிய உடல்மறந் தாலும்**

கற்ற நெஞ்சகங் கலைமறந் தாலும்
கண்கள் நின்றிமைப் பதுமறந் தாலும்
நற்ற வத்தவ ருள்ளிருந் தோங்கும்
நமச்சி வாயத்தை நான்மற வேனே''

என்னும் பாடல் திருவாசகத்தைப்போலத் தித்திப்பது. மறைமலையடிகளுக்குத் தனித்தமிழ்ப் பற்று பிறக்க இப்பாடலே காரணமாயிருந்தது என்பர்.

''கலையுரைத்த கற்பனையே நிலையெனக்கொண் டாடும்
கண்மூடி வழக்கமெலாம் மண்மூடிப் போக''

''ஒத்தாரும் உயர்ந்தாரும் தாழ்ந்தாரும் எவரும்
ஒருமையுள ராகியுல கியல்நடத்த வேண்டும்''

''உயிர்க்கொலையும் புலைப்புசிப்பும் உடையவர்கள் எல்லாம்
உறவினத்தார் அல்லரவர் புறவினத்தார்''

என்பன போன்ற பாடல்கள் வள்ளலாரின் உள்ளத்தைக் காட்டுகின்றன. இவர் சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கம் நிறுவினர். அதன் நூற்றாண்டு விழா அண்மையில் சிறப்புற நடைபெற்றது.

**இராமாநுசக் கவிராயர் :** இவர் இராமநாதபுரத்து முகவை என்னும் ஊரைச் சேர்ந்தவர். சிவஞான முனிவரின் மாணவரான சோமசுந்தரம் பிள்ளையிடம் தமிழ் கற்றார். அட்டாவதானம் வீராசாமிக் கவிராயர், திருத்தணிகை விசாகப்பெருமாளையர் முதலிய தமிழரும், தாம்சன் கிளார்க், போப்பையர் முதலிய ஐரோப்பியரும் இவரிடம் தமிழ் கற்றனர். திருக்குறள், நன்னூல் நறுந்தொகை முதலிய நூல்களுக்கு உரை எழுதியுள்ளார். வின்ஸ்லோவின் ஆங்கிலத் தமிழ் அகராதிக்குப் பெரிதும் உதவினார் என்பர். இவர் 'ஆத்மபோத பிரகாசிகை' என்னும் வடமொழி நூலைத் தமிழில் மொழிபெயர்த்துள்ளார்.

**விசுவநாத சாத்திரியார்:** ஈழ நாட்டு அராலியைச் சேர்ந்தவர் இவர். சிலேடை பாடும் திறம் பெற்றவர். வண்ணக் குறவஞ்சி, நகுலமலைக் குறவஞ்சி என்னும் நூல்களை இயற்றியுள்ளார்.

**சேனாதிராயர்:** ஆறுமுக நாவலருக்கு ஆசிரியராகத் திகழ்ந்த பெருமை பெற்றவர் இவர்; நல்லை வெண்பா, நல்லைக் குறவஞ்சி முதலிய நூல்கள் இயற்றியுள்ளார். இவர் ஒரு தமிழ் அகராதியும் தொகுத்தார்.

**அனந்தபாரதி ஐயங்கார்:** தஞ்சையைச் சார்ந்த உமையாள்புரம் என்னும் ஊரில் பிறந்த பெருங் கவிஞர் இவர். பிற்காலத்தைத் திருவிடை மருதூரில் கழித்தார். இவருக்குக் 'கவிராஜ சாமி' என்ற சிறப்புப் பெயரும் உண்டு. இவர் இயற்றிய நூல்கள்: உத்தர ராமாயணக் கீர்த்தனை, யானைமேல் அழகர் நொண்டிச் சிந்து, திருவிடை மருதூர் நொண்டி நாடகம் முதலியன.

**மாம்பழக்கவிச் சிங்கநாவலர்:**பழனியில் தோன்றிய இப் பைந்தமிழ்க் கவிஞர் மூன்றும் ஆண்டில் கண்ணை இழந்தவர். இவருக்கு முத்துராமலிங்க சேதுபதி 'கவிச் சிங்கநாவலர்' என்ற பட்டம் கொடுத்தார். இவர் பல சிற்றிலக்கியங்கள் செய்துள்ளார். அட்டநாக பந்தம், சதுரங்க நாக பந்தம் முதலியவற்றிற்கு இவர் இலக்கணம் வகுத்துள்ளார்.

**தாண்டவராய முதலியார்:** இவர் உரைநடை எழுதுவதில் வல்லவர். பஞ்ச தந்திரம் என்னும் நூலை இவர் வெளியிட்டார். 'கதா மஞ்சரி' முதலிய நூல்களை இயற்றினார். திவாகரம், சூடாமணி ஆகிய நிகண்டுகளையும் வீரமா முனிவரின் சதுரகராதியையும் இவரே முதன் முதலில் அச்சிட்டவர்.

**விசாகப் பெருமாள் ஐயர்:** இவர் திருத்தணிகையில் வாழ்ந்த வீர சைவப் புலவர் ஒருவரின் புதல்வர். சென்னை அரசினர் கலாசாலையில் தமிழாசிரியராகப் பணியாற்றினர். யாப்பிலக்கணத்திற்கும், அணியிலக்கணத்திற்கும் வினு விடை இயற்றியுள்ளார்.

**சரவணப் பெருமாள் ஐயர்:** இவர் விசாகப் பெருமாள் ஐயரின் உடன்பிறந்தார். இராமாநுசக் கவிராயரிடம் கல்வி கற்றவர். பல நூல்களுக்கு உரை வகுத்துள்ளார். அணியியல் விளக்கம், இயற்றமிழ்ச் சுருக்கம், களத்தூர்ப் புராணம் முதலிய நூல்களை இயற்றியுள்ளார். பல நூல்களைப் பதிப்பித்த பெருமையும் இவருக்கு உண்டு.

**கோபால கிருஷ்ண பாரதியார்:** நாகைப் பட்டினத்துக்கு அருகில் நரிமணம் என்னும் ஊரில் தோன்றிய இவர் இசைத் தமிழில் இணையற்றவர். மாயூரம் வேதநாயகம்பிள்ளை, மகா வித்துவான் மீனுட்சிசுந்தரம் பிள்ளை முதலியோரிடம் பழகும் பேறு பெற்றவர். ஏராளமான இசைப் பாடல்களை இயற்றியருளினர். நந்தனர் சரித்திரக் கீர்த்தனை, திருநீலகண்ட நாயனர் கீர்த்தனை முதலிய நூல்களை இயற்றியுள்ளார்.

**பொன்னுசாமித் தேவர்:** இவர் முத்துராமலிங்க சேதுபதியின் உடன்பிறந்தார். இராமநாதபுரச் சிற்றரசில் தலைமை அதிகாரியாக இருந்தார். சிறந்த வள்ளல்; செந்தமிழ்ப்பா புனைவதிலும் வல்லவர். பல பாடல்களை இயற்றியுள்ளார். பல தமிழ் நூல்கள் அச்சேற உதவினர்.

**பாண்டித்துரைத் தேவர்:** இவர் பொன்னுசாமித் தேவரின் புதல்வர். தமிழ்த் தாயிடம் மாருக் காதல்

கொண்டவர். அதனுல் மதுரையில் நான்காம் சங்கம் எனப்பெறும் மதுரைத் தமிழ்ச் சங்கத்தை நிறுவினுர். சைவமஞ்சரி, துதிமஞ்சரி, பன்னூற்றிரட்டு என்னும் தொகை நூல்களை இயற்றினுர். இரட்டைமணி மாலை, இராச ராசேசுவரி பதிகம் ஆகிய நூல்களையும் இயற்றியுள்ளார்.

**பரிதிமாற் கலைஞர்:** இவர் இயற்பெயர் சூரியநாராயண சாஸ்திரி. தமிழ்க் காதலால் அதனைப் பரிதிமாற் கலைஞர் என மொழிபெயர்த்துக் கொண்டார். 'திராவிட சாஸ்திரி' என்பது சி. வை. தாமோதரம்பிள்ளை இவருக்குத் தந்த பட்டம். இவர் நாடகவியல், கலாவதி, மான விஜயம், தனிப்பாசுரத் தொகை, தமிழ்ப் புலவர் சரித்திரம், தமிழ்மொழி வரலாறு முதலிய நூல்களை இயற்றியுள்ளார்.

**சி. வை. தாமோதரம் பிள்ளை:** இவர் யாழ்ப்பாணத்துத் தமிழ்ப் புலவர். நீதிமன்றத் தலைவராய்த் தொண்டாற்றியவர். ராவ்பகதூர் பட்டம் பெற்றவர். இவர் வீரசோழியம், இறையனுர் அகப் பொருள், தொல்காப்பியப் பொருளதிகாரம், கலித்தொகை முதலிய நூல்களைப் பதிப்பித்துள்ளார்.

## இஸ்லாமியரின் தமிழ்த் தொண்டு

இஸ்லாம் என்னும் மதம் அரபுநாட்டில் நபிநாயகம் அவர்களால் ஏழாம் நூற்ருண்டில் தோற்றுவிக்கப் பெற்றது. அதற்குப் பல நூற்ருண்டுகள் முன்பே அராபியர் தமிழ்நாட்டுடன் தொடர்பு கொண்டிருந்தனர்; குதிரைகளைக் கலங்கள் மூலம் கொணர்ந்து தமிழகத்தில் விற்றனர். "நீரில் வந்த நிமிர்பரிப் புரவி" என்று அதனைப் பட்டினப்பாலை குறிப்பிடுகிறது.

கி. மு. 178-இல் தமிழகத்திற்கு அகதார் சைட்ஸ் என்னும் கிரேக்கன் வந்திருந்தான். தமிழகத்து ஊர் ஒன்றில் அராபியர்களுக்கு மிகுந்த செல்வாக்கு இருந்ததாக அவன் குறிப்பிட்டுள்ளான்.* இத்தொடர்பு இஸ்லாம் எழுந்த பின்னரும் நீடித்தது, செழித்து வளர்ந்தது.

கி. பி. பன்னிரண்டாம் நூற்றுண்டில் இம்முகமதியர்கள் தமிழ்நாட்டு அரசியல் பணியிலும் செல்வாக்குப் பெற்றிருந்தனர். கி. பி. 14 ஆம் நூற்றுண்டில் மாலிக்காபூர் தமிழகத்தின்மீது படையெடுத்து வந்தபோது, வீரபாண்டியனின் குதிரைப்படைக்கு ஒரு முகமதியன் படைத்தலைவனுக இருந்தான். மதத்தால் ஒன்றுபட்டவர்கள் என்பதைச் சுட்டிக் காட்டி மாலிக்காபூர் மதுரைப் படைத் தலைவனைத் தன்னேடு சேர்ந்துவிடக் கோரினன். அதைக் கேட்ட குதிரைப் படைத் தளபதி, "நாங்கள் முஸ்லீம்கள்; என்றுலும் பாண்டிநாட்டு மக்கள். இந்நாட்டின் தோல்வி எங்கள் தோல்வி! இஸ்லாம் எங்களுக்குத் துரோகம் செய்யக் கற்றுத்தரவில்லை" என்று கூறி மாலிக்காபூரின் கோரிக்கைக்கு இணங்க மறுத்துவிட்டான். மதத்தால் வேறுபட்டாலும், மொழியாலும் வழியாலும் தமிழராகவே தமிழ்நாட்டு முகமதியர் திகழ்ந்தனர். எனவே தமிழ்த் தாய்க்குத் தொண்டாற்றச் சைவரைப் போல, வைணவரைப் போல முனைந்து நின்றனர். தமிழ்த் தாய்க்கு இஸ்லாம்மத நூல்களைத் தமிழாக்கிச் சமர்ப்பித்தனர். ஏராளமான அரபுச் சொற்களையும் தமிழ்ச் சொற்களைப் போலத் தமிழ்க் கவிஞரும் பயன்படுத்தும் அளவு பழக்கத்தில் கொணர்ந்தனர்.

---

* முஸ்லீம் தமிழ்ப் புலவர்கள்—அப்துற்-றஹீம்.

"குறவர் மகட்குச் சலாமிடற்கு ஏக்கறு
குமரனை முத்துக் குமரனைப் போற்றுதும்"

என்று குமரகுருபரரும்,

"சித்தர், விஞ்சையர் மாதர் சபாசென"

என்று அருணகிரியாரும் சலாம், சபாஷ் என்னும் இரு சொற்களைத் தமிழ்ப் பாக்களில் தமிழ்ச்சொல் போலவே உரிமையோடு சேர்த்துள்ளனர். மக்கள் பேச்சு வழக்கில் எத்தனையோ அரபு, பாரசீகச் சொற்கள் கலந்து விட்டன.

இஸ்லாம் மதத்தைத் தழுவி முகமதியர்களான தமிழ் மக்கள் தமிழ் பேசினர்; எழுதினர்; அத் தமிழிலேயே இலக்கியங்கள் இயற்றியருளினர். தமிழன்னை புத்தணிகள் பூண்டு புதுப்பொலிவு பெற்றாள். அத்தகைய அணிகளை ஆக்கித்தந்த இஸ்லாமியரைப் பற்றி ஈண்டு விரிவாகப் பார்ப்போம்.

**உமறுப் புலவர்:** தமிழுக்குத் தொண்டாற்றிய இஸ்லாமியரைப் பற்றி எண்ணும்போது நம்முன் முதற்கண் நிற்பவர் உமறுப் புலவரே! இஸ்லாமியர் தமிழில் எழுதிய இலக்கியங்களைப்பற்றி நினைக்கும்போது, உமறுப்புலவர் எழுதிய சீறுப் புராணமே முதலில் நம் நினைவுக்கு வரும். முஸ்லீம் தமிழ்ப் புலவர்களுள் முதன்மை பெற்ற உமறுப்புலவர் நறுமணப் பொருள்களை விற்று வாழ்ந்த செய்கு முகம்மது அலி என்பாரின் புதல்வர். எட்டயபுரத்தில் வாழ்ந்தபோது, செய்குமுகம்மது அலி தம் மகனைக் கடிகை முத்துப்புலவரிடம் கல்விகற்க அனுப்பினார். தக்க பருவத்தில் உமறுப்புலவர் கற்பன கற்றுக் குருவையும் மிஞ்சும் திறன் பெற்றார். கடிகை முத்துப் புலவருடன் வாதாட

வாலைவாருதி எனும் பெருங்கவிஞர் ஒருவர் வந்தார். எட்டயபுரத்து அரண்மனையில் அவ் வாலைவாருதியுடன் தம் ஆசிரியர் சார்பில் வாதிடச் சென்றார் உமறுப் புலவர். அப்போது அவருக்கு வயது பதினாறு. எனினும், அமுதகவி ராஜனான உமறுப்புலவர், அவையில் 'உமறு குமுறிடில் அண்டமுகடும் படீர் என்னும்' என்பதை நிரூபித்து வெற்றி பெற்றார்.

'செம்பொன் பிடிபிடியாய் ஓயாது ஈயும்' உள்ளம் பெற்ற வள்ளல் சீதக்காதி எட்டயபுரத்திற்கு வந்த போது உமறுப்புலவரின் அறிவும் திறனும் கண்டு, அவரைத் தம்மூருக்கு வரவழைத்து அங்கேயே தங்கச் செய்தார். அவ்வள்ளலின் விருப்பப்படியே நபிநாயகத்தின் வரலாற்றைப் புலவர் பாடினார். அதுவே, 'ஆராவமுதெனத் தகும்' சீறாப்புராணம்.*

உமறுப்புலவரின் கற்பனைத் திறமும் வருணனை முறையும் கற்றார் இதயத்தைக் களிக்கச் செய்வன. நாட்டின் வளத்தைக் கவிஞர் காட்டும் முறையைப் பின் வரும் பாடல் உணர்த்தும்:

> **"ஏல வார்குழற் கிடுபுகை மஞ்சிநே டிகலும்**
> **சோலை வாய்தொறும் முக்கனித் தேன்மழை சொரியும்**
> **மாலை வாய்தொறும் கரும்புடைத் தாறெடுத் தோடும்**
> **நீல வாய்மலர் வாவிகள் பெருங்கடல் நிகர்க்கும்"**

'எல்லையில் அழகுவாழ்ந்த ஏந்திழை கதீஜா ஈன்ற' வரும், 'மாதர்கள் திலகம் என்ன மாநிலத் துதித்த' வருமான பாத்திமா பருவம் அடைந்ததைக் கவிஞர் கவினுற உரைக்கின்றார்:

---

*சீறா என்பது அரபு மொழிச்சொல். இதற்கு வாழ்க்கை வரலாறு என்று பொருள்.

"வடிவுறுஞ் செம்பொற் பூவில், வாசம்வந் துறைந்த போலும்
கொடிமலர் அதனில் சேர்ந்த, கொழுநறு நிறைந்த போலும்
கடிநெடுங் கழையில் செவ்விக் கதிர்மணி தரித்தல் போலும்
மடிகடல் புதல்விக் கின்பப் பருவம்வந் தடைந்த தன்றே"

சீருப்புராணம் எம்மதத்தாரையும் கவரும் கவி நலம் சிறந்த காவியம் என்பதை மேலே கண்ட பாடல களால் அறியலாம்.

**சேகனுப் புலவர் :** செய்கப்துல் காதிர் நெயினுர் லெப்பை என்ற பெயரைச் சுருக்கி சேகனு லெப்பை என்று அழைத்தனர். சேகனு லெப்பை காயல் பட்டி னத்து இரத்தின வணிகரின் மகன். இளமையில் அறிவு விரிவடையாமல் மந்தபுத்தி உள்ளவராக இவர் இருந்ததைக் கண்டுப் பெற்ரேர் வருந்தினர். எருக்கஞ் செடியின் கீழ்ப் படுத்திருந்தபோது கருநாகம் ஒன்று இவர் நாவைத் தீண்டியது என்றும், உடனே கவிபாடும் புலமை பெற்ருர் என்றும் கூறுவர். அதுமுதல் சேகனு லெப்பை சேகனுப் புலவராஞர். புகழ்பெற்ற ஞானி யான குணங்குடிமஸ்தான் இப்புலவரின் பள்ளித் தோழர்.

சேகனுலெப்பை தன் பரம்பரைத் தொழிலான ரத் தின வியாபாரத்தைத் தொடர்ந்து நடத்திஞர். அதே சமயம் செந்தமிழ்ப் பாக்கள் எழுதி இன்பம் பெறுவ தையும் மறக்கவில்லை. இவர் 'ஷாஹுல் ஹமீது' ஆண்டகையின் வரலாற்றை 2565 பாக்கள் கொண்ட புராணமாக இயற்றிஞர். முகிய்யித்தின் ஆண்டகை யின் வரலாற்றை 1340 பாக்கள் கொண்ட 'குத்பு நாய கம்' என்னும் புராணமாகப் பாடியுள்ளார். நபி இபுரா ஹும் அவர்களின் புனித வரலாற்றை 2044 பாக்களில் பாடியுள்ளார். அதற்குத் 'திருமணிமாலை' என்னும்

பெயர் சூட்டினுர். அந்நூலில் இறைவன் புகழைக் கூறும் பல மாமணிகளில் ஒரு மாமணியை இங்கே காண்போம்:

"பொறிகாவல புலன்காவல புகழ்காவல பிசகா
நெறிகாவல செயல்காவல நினைகாவல வைத்த
குறிகாவல மனேகாவல குடிகாவல என்றன்
அறிகாவல அபயம்பல துயரின்றிய அறிவே"

இவர் 'கோத்திர மாலை', 'சொர்க்க நீதி' ஆகிய நூல்களையும் இயற்றியுள்ளார்.

**காசிம் புலவர் :** இவர் திருவடிக் கவிராயர் என்பாரிடம் கல்வி கற்ருர். தமிழிலக்கியங்கள் பலவற்றைச் சொல்லும் பொருளும் தெளிவுறக் கவிராயர் கற்றுத் தந்தார். அவர் கற்பித்த இலக்கியங்களுள் அருணகிரிநாதரின் திருப்புகழே காசிம் புலவரின் செவியைக் கவர்ந்தது; சிந்தையில் நிறைந்தது. 'அருணகிரிநாதரின் திருப்புகழைப் போன்ற மற்ருெரு திருப்புகழை என்ருல் இயற்ற இயலும்' என்று ஒருமுறை இவர்தன் ஆசிரியப் பெருந்தகையிடம் கூறினுராம், அதனுல் திருப்புகழ் பாட முனைந்து நபிநாயகத்தை வேண்டினுராம். சேக்கிழாருக்குச் சிவபெருமான் அடியெடுத்துக் கொடுத்ததுபோல, நபிநாயகம் இவர் கனவில் காட்சி தந்து 'பகரும்' என்று பகர்ந்து மறைந்தார். உடனே காசிம் புலவர் 'பகரு முருவிலி அருவிலி வெருவிலி' எனத் துவங்கித் திருப்புகழ் பாடத் தொடங்கினுர். பாமழை பெய்தது! காசிம் புலவரின் திருப்புகழ் தேன் வெள்ளமாய் எங்கும் பரவியது.

காசிம் புலவர் சந்தச் சிறப்புள்ள செந்தமிழ்ப்பாக்கள் பல நபிநாயகத்தின் மீது பாடியுள்ளார். அவை 'அருணகிரி நாதர் பாடியவையோ' எனப் பெரும் புலவ

ரையும் ஐயுறச் செய்யும் ஆற்றல் பெற்றவை. அப் பாடலின் தொகுதி 'திருப்புகழ்' என வழங்கப் படுகிறது. காசிம் புலவரின் திருப்புகழில் ஒரு பகுதியை ஓதி மகிழ்வோம்.

**"கடிதோஷ மேநடுக்கல் புரையோடி நீள்புண்வைத்த**
**கனமாவி யாதிமுற்றும் அணுகாதே**
**கருணாக ராஎனக்குன் அபிமான மாயிணைத்த**
**கழல்வீடு சேரமுத்தி தருவாயே**
**மடைவாய் வரால்கடத்த வயலேஇ ருல்குதிப்ப**
**மதகேசு ருஉழக்கி வெடிவாய**
**மடுவூடு மூகநெட்டை நெடுவாளை பூகமொய்த்த**
**மடல்கீறி வாவுமக்க இறசூலே"**

இத்தகைய பாடல்களை இயற்றியதனால்தான், 'கருதி எதிரிடு புலவர் தர்க்கமிடு வாயிலே கல்வி யாப்புக் கடாவும் காலமா ருதமதுர கவி' என்று ஜவாதுப் புலவர் இவரைப் பாராட்டினர்; இவர்மீது பலபாடலும் இயற்றினர். காசிம் புலவர் தம்மை 'மதுரகவிராஜன்' என்று சொல்லிக் கொள்கிறார். திருப் புகழ்த் தேனை அருந்தி மகிழ்ந்த யாரே இதனை மறுப்பர்?

**ஜவாதுப் புலவர் :** "வண்டமிழின் எண்ணே, எழுத்தோ, இசையோ, இயற்புலவர் கண்ணே சவாதுக் கவி" என்று தமிழ்ப் புலவர் ஒருவர் முஸ்லீம் கவிஞரான ஜவாதுப் புலவரைப் போற்றுகிறார். இஸ்லாமைச் சார்ந்த ஒருவரை 'இயற்புலவர் கண்ணே' எனத் தமிழ்க் கவிஞர் கூறவேண்டுமானால், ஜவாதுப் புலவர் எவ்வளவு சிறந்தவராக இருக்க வேண்டும் என்பதை எண்ணிப்பாருங்கள்!

ஜவாதுப் புலவர் செந்தமிழில் வல்லவர். வசைபாடுவதில் காளமேகத்தையும் வென்றவர். அவர் சொன்னல்

சொன்னபடி நடக்குமாம்! அதனால் அவர் பழித்துவிடக் கூடாதே என்று மக்கள் பதைபதைத்தனர். ஜவாதுப் புலவர் மஞ்சூர் சென்றார். அங்கே சேஷையங்கார் என்னும் செல்வரைக்கண்டு பரிசு கேட்டார். சேஷையங்கார் கடைந்தெடுத்த கருமி! எனவே 'வீசம் பணமும் தரமுடியாது' என்று கூறிவிட்டார். விஷநாக்குக் கொண்ட புலவர் சும்மாயிருப்பாரா?

**"வீசம் பணம் கொடுக்காத சேசா**
**விரியம் பாம்பு கடித்துச் சாசா!"**

என்று சபித்துவிட்டுச் சென்றார். முனிவர் சபித்திருந் தால் சேஷையங்கார் அஞ்சியிருப்பார்! தமிழ்ப்புலவன் சொல்தானே என அலட்சியப்படுத்திவிட்டுத் தோட் டத்துக்குச் சென்றார். அங்கே விரியன் பாம்பு ஒன்று அவரைக் கடித்தது. அவர் அங்கேயே மாண்டார். ஜவாதுப்புலவரின் இத்தன்மை கண்டே 'வண்டமிழ் சவாது வாயெலாம் நஞ்சே' என்றார் ஒரு புலவர்.

ஜவாதுப் புலவர் 'நாகைக் கலம்பகம்', 'மதீனத் தந்தாதி', 'முகிய்யித்தீன் ஆண்டவர் பிள்ளைத் தமிழ்' முதலிய சிற்றிலக்கியங்களை இயற்றியுள்ளார்.

முகிய்யித்தீன் ஆண்டவர் பதினெட்டு ஆண்டுகள் காட்டிலே சருகுகள் தின்று வேறெதையும் உண்ணாது உறங்காது தவம் செய்தார். இச்சிறப்பை ஜவாதுப் புலவர் முகிய்யித்தீன் ஆண்டவர் பிள்ளைத்தமிழில் தாலப்பருவத்தில் கூறுகிறார்:

**"தேனும் கனியும் முப்பழமும்**
**திரட்டுப் பாகும் சர்க்கரையும்**
**தெள்ளி வடித்த தெள்ளமுதும்**
**திருவாய் கசப்ப மறுத்தோடும்**

பானும் மதியும் ஒவ்வாத
பனிமா ளிகைவிட் டெழுந்தருளி
பசும்பா சடைத்தீந் தெரியழற்பைங்
காட்டில் சருகுண் டினித்துமனம்
தானும் தனியைத் துணையாக்கித்
தனியாய்ப் பெருந்தா கம்படைத்து
சயனம் ஒழித்துக் கண்மூடிச்
சடத்தை மறந்து வெகுகாலம்
கானம் புகுந்து தவம்செய்த
களிறே தாலோ தாலேலோ
கருணைக் கடலே செய்யிதப்துல்
காதிர் தாலோ தாலேலோ''

இத்துணை அருமையாகப் பாடும் ஆற்றல் பெற்ற "துருவணிகர் முகம்மது மீர் ஜவாது சொற்புலமைக் கெதிர் சொல்ல முடியாதென்று" குமரக்கடவுள் குறிஞ்சியில் ஏறிக்கொண்டான் என்றும் அருணகிரிநாதர் கிளிவடிவம் பெற்றுக்கொண்டார் என்றும் ஒரு புலவர் சிறப்பித்துச் சொல்கிறார்.

**சையிது முகிய்யித்தீன் கவிராஜர் :** நறுமணப் பொருளை விற்பனை செய்யும் கோட்டாற்று முஸ்லீம் குடும்பம் ஒன்றில் தோன்றியவரே இக் கவிஞர். இவர் சேரநாட்டு மன்னனின் அவையில் பெரும் புலவராகத் திகழ்ந்தார். மன்னனுக்கும் மாக்கவிஞனுக்கும் இடையே பூசல் எழுந்தது. 'என்னை விரைந்தேற்றுக் கொள்ளாத வேந்துண்டோ?' என வினவிச் சேர நாட்டை நீத்துப் பாண்டிநாட்டை அடைந்தார். அங்கே திருநெல்வேலிச் சீமையிலே தங்கி வாழ்ந்தார். சிறைப்பட்ட ஒருவனுக்கு மனமிரங்கிப் பிணை நின்றமையால், இவர் பாளையங்கோட்டையில் அரசு செலுத்திய நவாபின் முன் நிறுத்தப்பட்டார்.

'தன்னுடை ஆற்றல் உணரா ரிடையினும் தன்னைப் புகழ்தலும் தகும் புலவோர்க்கே' என்று இலக்கணம் கூறுகிறது. தன்புகழ் அறியா நவாபுக்குத் தான் யாரென்று கூறினார்:

"ஆதிநாள் மூவேழு தலைமுறையின் முதலாக
அதிமதுர கவிதை வண்ணம்
அழகார் உலாமடல் குறவஞ்சி அம்மானை
அவையோடு சந்த மாலை
நீதிசெறி பலபனுவல் செய்தலங் காரமொடு
நீடுபல பாவு ரைப்பேன்
நேசமுடன் எக்கவி களுக்கும்ப்ர சங்கமே
நிகழ்த்திடு சுயத்த புலவன்"

என்று தன்னைப் பற்றிக் கூறி, மனமிரங்கியதால் வந்த வினையையும் தெரிவித்தார். நவாபு கவிராஜரின் கவிதையில் மயங்கி அவருக்குப் பரிசளித்தார்.

கவிராஜர் பின்னர் மேலப்பாளையம் சென்று தங்கினார். அங்கே, முகிய்யித்தீன் ஆண்டவர் திருப்புகழ், 'முகிய்யித்தீன் பிள்ளைத்தமிழ்,' 'மாணிக்கமாலை' ஆகிய நூல்களை ஆக்கியருளினார். தமிழ்ப்புலவர்கள் கவிச்சுவை யறியாச் செல்வரின் செல்வம் வேண்டிச் சென்று சீரழிந்ததைத் தம் திருப்புகழில் கவிராஜர் எடுத்துச் சொல்வதைப் பார்ப்போம்:

"அரிதான நூல்தெரிந்து தமிழ்பாடி யேஉலந்தென்
அகமேபு ணுகிவஞ்சர் தலைவாயில்
அவைதோறு மேநடந்து நிர்மூட லோபர்தங்கள்
அருகேசொ லுமின்பம் அறிவார்போல்
மரியாதை யேபுரிந்தும் இனிநாளை வாருமென்பர்
மறுநாளும் ஏகில்வஞ்ச நினைவாக
மறைவான நீசர்தங்கள் இடமே சுமாநடந்து
வரவோநல் வாழ்விரங்கி அருள்வீரே"

**வண்ணக்களஞ்சியப் புலவர் :** நாகூர் என்னும் நல்லூரில் கன்னல் தமிழில் வண்ணம் பாடும் வன்மை பெற்ற புலவர் ஒருவர் இருந்தார். அவர் பெயர் ஹமீது இபுருகீம். அவ்வூர்த் தமிழ்ப் புலவர்கள் அவர்தம் வண்ணம்பாடும் சிறப்பை அறிந்து, அனுபவித்து அளவிலா மகிழ்ச்சி யடைந்தார்கள். அதனுல் அவரை வண்ணக்களஞ்சியப் புலவர் என வாய்மணக்க அழைத் தார்கள். அப்பெயரே அவருக்கு நிலைத்துவிட்டது.

புரையாற்றுச் செல்வர் ஒருவரின் பொன்னெத்த திருமகளை மணம்புரியப் புலவர் விரும்பினுர். வறுமை யும் புலமையும் பிரியா என்பதறிந்த செல்வர் மறுத் தார். பின்னர் அவரே புலவரின் பெருமையை உணர்ந்து, நாகூர் சென்று புலவரைத் தேடிப்பிடித்து அவர் நாடிய நன்மகளை அவருக்குத் திருமணம் செய்து வைத்தார் எனக் கூறுவர்.

இவர் சுலைமான் நபியின் கதையைக் கூறும் 'இராஜநாயகம்' என்னும் காவியமும், சையிது இபுரு கீம் ஷஹீது வலியுல்லா அவர்களைப் பற்றிய 'தீன் விளக்கம்' என்னும் புராணமும் இயற்றியுள்ளார். 'இராஜநாயகம்' காவியச்சுவைகள் யாவும் நிறைந்த 2240 பாக்களால் அமைந்த இனிய நூல். மரணப் படுக்கையில் கிடக்கும் தாவூதுநபி தன்மகன் சுலை மானுக்கு அறிவுரைகளைக் கூறும் பகுதி அறக்கருத்துக் கள் நிறைந்த அரியபகுதி. "இவ்வுலகில் உள்ள மன்ன வரோ மற்றவரோ செய்யும் உதவியைக் கண்டு மயங்கி அவர்களையே நம்பிவிடாதே. அவ்வாறு நம்புதல், இதுவரை எல்லா நலனையும் செய்த இறைவனைத் தாழ்த்துவதொக்கும்" என்றுகூறி எல்லா நலனும் எப் போதும்தருபவன் இறைவனே, அவனையே நம்புதல்

வேண்டும் என்ற உண்மையை தாவூதுநபி விளக்குவதாக வண்ணக்களஞ்சியப் புலவர் உரைக்கின்றார்.

**"மன்னவர் முதலா யுள்ள மானிடர் எவர்தம் மாலும்
பின்னும்எப் பொருள் களாலும் பெறுபலன் சிறிதை எண்ணி
உன்னுமா தரவு வைக்கும் நம்புதல் ஒழிமின்; வைக்கில்
தன்னிகர் இணையி லான்செய் நலத்தினைத் தாழ்வு செய்யும்."**

**குணங்குடி மஸ்தான்:** மாதவஞ்சேர் மேலோர் வழுத்துங் குணங்குடியான்' என்றும், 'குருவாய் அடுத்தோர்க்கு அருள்சுரக்கும் சோதிக் குணஞ்சேர் குணங்குடியான்' என்றும், 'மாசிலாமணியே, முனிவர்கள் இறையே, வள்ளலாய் வந்த கண்மணியே' என்றும் புலனழுக்கற்ற புலவர் பெருமக்களால் புகழப்பெற்றவர் ஞானி குணங்குடி மஸ்தான் சாகிபு.

மஸ்தான் சாகிபு அவர்களின் இயற்பெயர் சுல்தான் அப்துல் காதிறு. அவர் தனக்குத் திருமணம் நடத்த ஏற்பாடு செய்ததை அறிந்து, மணப்பெண்ணிடம் நேரே சென்று 'உன்னை நான் மணந்து கொள்ளப் போவதில்லை' என்று கூறிவிட்டு வெளியேறினார். கற்பவை கற்றுத்தேர்ந்தபின் முற்றும் துறந்த முனிவராகினார். சதுரகிரி, புருமலை, நாகமலை முதலிய மலைகளிலும் காடுகளிலும் தனித்து வாழ்ந்து, முற்றிய மோனத்தில் ஞானத்தைப் பெற்றார். ஞாலத்தார் அவரை ஞானி எனப்போற்றினர். இயற்பெயர் மறைந்துஅவர் 'குணங்குடி மஸ்தான்' எனும் பெயர் பெற்றார்.

இவர் நாகூர், காரைக்கால் முதலிய இடங்களில் சின்னாள் வாழ்ந்த பின் சென்னைக்கு வந்தார். சென்னையில் இவர்செய்த அற்புதங்கள் எண்ணற்றவை. தன் பாடல்களையும் கீர்த்தனைகளையும் சென்னை நகரத்

தெருக்களில் பாடிக்கொண்டு திரிந்தார். இவர், தம் நாற்பத்தேழாம் வயதில் முத்தியடைந்தார்.

உலகின் உண்மைநிலை உணர்த்தி, என்றும் அழியாப் பேரின்பப் பெருவாழ்வை எடுத்துச் சொல்வன குணங்குடி மஸ்தான் பாடல்கள். இவர், குருநிலை,தவநிலை, துறவினிலை, நியமநிலை, காட்சிநிலை, தியான நிலை, சமாதிநிலை முதலியவற்றைக் குறித்து அரிய பாடல்கள் எழுதியுள்ளார். இவர் 'பராபரக்கண்ணி' 'எக்காலக்கண்ணி', 'மனோன்மணிக்கண்ணி', 'நந்தீஸ்வரக்கண்ணி' முதலியவற்றை இயற்றியுள்ளார். தாயுமானவர், பட்டினத்தார் போன்ற ஞானிகளின் பாடற்பண்பை இவர் பாடல்களில் காணலாம். எடுத்துக்காட்டாக மூன்றுகண்ணிகள் இங்கே தரப்பட்டுள்ளன:

**"எப்பொழுதும் உன்பதத்தில் என்கருத்தே எய்துதலுக்**
**கிப்பொழுதே கைப்பிடித்தாள் இறையே பராபரமே"**

—*பராபரக் கண்ணி: 19*

**"ஆதியின்மேல் ஆசை யடர்ந்தெரித்த அக்கினியின்**
**சோதியினுல் வெந்து சுகம்பெறுவ தெக்காலம்"**

—*எக்காலக் கண்ணி: 2*

**"துவளும் துடியிடையும் தோகை மயில்நடையும்**
**பவள இதழுமென்று பார்ப்பேன் மனோன்மணியே"**

—*மனோன்மணிக் கண்ணி: 16*

குணங்குடி மஸ்தான் பல கீர்த்தனைகள் பாடியுள்ளார். ஒரு காலத்தில் அவர் கீர்த்தனைகள் நாடெங்கும் முழங்கின. இன்றும் பண்டாரங்கள் அவர் கீர்த்தனைகளைப் பாடிப் பரவசம் பெறுகின்றனர். பெண்ணாசையைக் கண்டித்து அவர் பாடிய பாடலின் ஒருபகுதியே கீழே உள்ளது. அப்பாடல் கூறும் பண்புள்ள மனைவி

யர்கள் இன்றும் இருப்பதை, அவர்களால் புண்பட்ட கணவர் உணர்வர்.

**பெண்கொண்ட பேர்பட்ட பாட்டையும் கேட்டையும்**
**பேசுவோமே நெஞ்சமே**
**நாடிக் குருவடி தேடி நடக்கின்ற**
**நற்செய லைக்கசப் பாக்குவாள்—எங்கும்**
**ஓடித் திரிந்தே அலைந்து பணங்கள்**
**ஒருக்காலே தேடென்று தாக்குவாள்—அவன்**
**தேடும் பொருள்தனைக் காணில் உமக்கெதிர்**
**தேசத்தில் யாரென்று தூக்குவாள்—இன்னும்**
**ஆடென்றும் மாடென்றும் வீடென்றும் தேடென்றும்**
**ஆண்டவனைமறப் பாக்குவாள்—பின்பு**
**ஈடொன் றிலாநினை வாக்குவாள்—அந்த**
**கேடிகள் ஆசைவைத் தையையோ வையத்தில் (பெண்கொண்)**

இவர் பாடிய பாடல்களைத் தொகுத்து, 'குணங்குடி மஸ்தான் சாகிபு திருவாய் மலர்ந்தருளிய திருப்பாடற்றிரட்டு' என்ற பெயருடன் வெளியிட்டுள்ளனர். திருத்தணிகை சரவணப் பெருமாளையர் இவர்மீது ஒரு நான்மணி மாலை பாடியுள்ளார். அதில், 'கடல்சூழ்புவியில் உளத்திருளைக் கருணை ஒளியினுற் களைந்து விடல் சூழ் பவரில் குணங்குடியான், மிக்கோன் எனற்கோர் தடையுளதோ?' எனக் கேட்கிருர். உண்டு என உரைப்பார் தமிழுலகில் இல்லை.

**செய்குதம்பிப் பாவலர் :** இருபதாம் நூற்ருண்டின் இணையற்ற பெரும்புலவர் சிலரில் ஒருவர் சதாவதானி செய்குதம்பிப் பாவலர். ஒரே நேரத்தில் நூறு அவதானங்களைச் செய்யும் திறமை பெற்றவர். 1907 ஆம் ஆண்டில் சென்னை விக்டோரியா பப்ளிக் ஹாலில் அவர் சதாவதானம் செய்து காட்டினுர். அன்று வாழ்ந்த

பெரும் புலவர்கள் எல்லோரும் வந்திருந்து கண்டு வியந்து புகழ்ந்தனர். அவருக்குப்பின் அத்தகைய திறன்பெற்ருேர் ஈண்டுத்தோன்றவில்லை.

செய்குதம்பியைப் பெற்றெடுத்த பெருமை மிக்கது நாஞ்சில் நாட்டில் உள்ள இலங்கடை என்னும் ஊர். இவர் சங்கர நாராயணன் என்னும் புலவரிடம் கற்றுத் தேர்ந்தார். இவர் பெருமையைப் பூவுலகம் போற்றியது.

வடலூர் வள்ளலார் இராமலிங்க சுவாமிகள் அருளிய 'திருவருட்பா' எனும்புனிதநூலை எதிர்த்து யாழ்ப்பாணத்துக் கதிரைவேற்பிள்ளை, ஆறுமுக நாவலர் போன்ருேர் பிரசாரம் செய்தனர். பாடப்பாட வாய் மணக்கும் பாடல்களை அவர்கள் அருட்பாக்கள் அல்ல என்றும், அவை மருட்பாக்கள் என்றும் வாதிட்டனர். அருட்பா மருட்பா பூசல் வளர்ந்தது. இப்பூசலின் போது, இராமலிங்கர் பாடியவை அருட்பாக்களே என்பதை நிலைநாட்டும் நற்பணியைச் செய்குதம்பிப் பாவலர் மேற்கொண்டார். பாவலரின் நாவளத்தைக் கண்டு மருட்பா கட்சியினர் மருண்டனர். 'மருட்பா மறுப்பு' என்று அவர்கள் ஒருசிறுநூலை—சிறுமை மிக்க நூலை எழுதி வெளியிட்டனர். அதன் தலைப்பையே பாவலர் எள்ளி நகையாடினுர். "மருட்பா மறுப்பு என்பது நூலின் பெயர். மருட்பாவை மறுத்தால் அது அருட்பா ஆகிவிடும்" என்று கூறி வள்ளலாரின்பெருமையை நிலைநாட்டினுர். பாவலரின் சொற்பெருக்கால் மருட்பா கட்சி கரைந்து மறைந்தது.

பாவலர் மேலப்பாளையத்தில் வாழ்ந்த வள்ளல் ஷம்சுத்தாசீம் என்னும் வணிகர்மீது 'ஷம்சுத்தாசீம் கோவை' பாடினுர். அவர் மனைவியைக் காவின்நடுவே

உள்ள பூங்கொடியாக உருவகித்து அவர் எழுதிய பாடல் இது:

**"மாவே பழுத்து வனசமும் கோங்கும் மருவி அல்லிப்
பூவே பொலிந்து புதுநற வேற்றளி பூண்டுபுகழ்
கோவே எனவரு வோன்ஷம்சுத் தாசீம் குளிர்சிலம்பின்
காவே சிறப்ப நடுவிலோர் பூங்கொடி காக்கின்றதே"**

இவர் திருநாகூர்த் திரிபந்தாதி, திருக்கோட்டாற்றுப் பதிற்றுப் பத்து, நாயக மான்மிய மஞ்சரி, நீதி வெண்பா, அழகப்பக் கோவை முதலிய நூல்களையும் இயற்றியுள்ளார்.

மேலே கண்ட புலவர் பெருமக்களைத்தவிர, ஆலிப் புலவர், சையிது முகம்மது அண்ணாவியார், குஞ்சுமூசுப் புலவர், குலாப் காதிறு நாவலர், தற்கலை பீர் முகம்மது சாகிபு முதலிய முஸ்லீம் தமிழ்ப் புலவர்களும் தமிழ் இலக்கியத்திற்குச் சிறந்த சேவைசெய்து சிறப்புப் பெற்றுள்ளனர்.

## கிறித்தவரின் தமிழ்த் தொண்டு

கி.பி. பதினைந்தாம் நூற்றாண்டில் ஐரோப்பியர் வாணிகம் செய்யும் நோக்கத்தினராய் இந்தியாவிற்கு வந்தனர். போர்ச்சுகீசியர், டச்சுக்காரர், ஆங்கிலேயர், டென்மார்க்கைச் சேர்ந்த டேனிஷ்காரர், பிரெஞ்சுக்காரர் ஆகியோரே இவ்வாறு நுழைந்த ஐரோப்பியர் ஆவர். அவர்களுள் ஆங்கிலேயர் மிகுந்த செல்வாக்குப்பெற்று மெல்ல மெல்லப் பரந்தபாரதநாட்டை அடிமைப் படுத்தி ஆளத்தொடங்கினர்.

வாணிகம் செய்யவந்த ஐரோப்பியர் யாவரும் தம் சமயத்தை இங்கே நிலைநிறுத்த விரும்பினர். அதனால்

தங்களுடன் தொண்டுள்ளம் மிகுந்த பாதிரிமார்களை அழைத்து வந்தனர். அப்பாதிரிமார்கள் தமிழகத்தில் கிறித்தவ சமயத்தைப் பரப்ப விழைந்து தமிழைப் பயின்றனர். வந்தவேலையை மறந்து செந்தமிழ் இனிமையில் ஆழ்ந்து தமிழ்த்தாய்க்குத் தொண்டாற்றினர் சிலர். சிலர் சமயத் தொண்டையும் தமிழ்த் தொண்டையும் அறிந்தோ அறியாதோ செய்தனர். அதனால் தமிழ்பெற்ற நலன் பல. தமிழகம் அச்சுப்பொறி பெற்றது; அகராதி பெற்றது; உரைநடை வளர்ச்சியுற்றது; தமிழ் எழுத்துக்கள் மாறுதல் அடைந்தன; பத்திரிகை பிறந்தது; கதைகள் வளர்ந்தன. கிறித்தவ மக்களால் அருந்தமிழ் பெற்ற பலன்கள் அளவிடற்கரியன. இப்பகுதியில் கிறித்தவத் தொண்டர் சிலர்தம் தமிழ்ப் பணியைக் காண்போம்.

**தத்துவ போதக சுவாமிகள் :** இத்தாலி நாட்டைச் சேர்ந்த இவர், 1606-இல் தமிழ்நாட்டிற்குச் சமயத் தொண்டாற்ற வந்தார். தமிழரைக் கவர இந்து சமய முனிவர்போல வேடங்கொண்டு கிறித்தவ சமயத்தைப் பரப்பினர். 42 ஆண்டுகள் தமிழ் நிலத்தில் தங்கித் தொண்டாற்றினர். இவர் உரைநடைகள் பல எழுதினர். *இவர் தமிழ்-போர்ச்சுகீசு அகராதி ஒன்றைத் தொகுத்தார்.

**வீரமாமுனிவர்:** கான்ஸ்டண்டின் ஜோசப் பெஸ்கி என்னும் இயற்பெயரைப் பெற்ற இவரும் இத்தாலி நாட்டிற் பிறந்தவர். இத்தாலி, லத்தீன் முதலிய மொழிகளைக் கற்ற இவர் 1700-இல் தமிழகம் வந்து பாண்டி

---

*இவரும், பிற கிறித்தவரும் எழுதிய உரைநடை நூல்களைப்பற்றி 'உரைநடை வரலாறு' என்னும் பகுதியில் காண்க.

நாட்டில் தங்கினர். அப்போது தமிழ், தெலுங்கு, வடமொழி முதலிய மொழிகளையும் கற்றார். இவர் சுப்பிரதீபக் கவிராயர் என்னும் புகழ்பெற்ற தமிழ்ச் சான்றோரிடம் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்றார். பின் தமிழ்த்தாய் வியத்தகு சேவை செய்தார்.

**''மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்''**

*(தொல்: எழுத்து: சூ-15)*

**''எகர ஒகரத் தியற்கையும் அற்றே''**

*(தொல்: எழுத்து: சூ16.)*

என்னும் தொல்காப்பியச் சூத்திரகங்கள் எ, ஒ, என்ற குற்றெழுத்துக்கள் புள்ளி பெற்றுத் திகழும் என்பதைக் குறிக்கின்றன. எ, ஒ எழுத்துக்கள் புள்ளி பெறவில்லை எனின், அவற்றை ஏ, ஓ என்று நெட்டெழுத்துக்களாகக் கொள்ள வேண்டும். இந்த வழியை நன்னூலும் கூறுகிறது. 'தொன்னூல் விளக்கம்' என்ற புது இலக்கண நூலை இயற்றிய வீரமாமுனிவர், எ, ஒ ஆகிய குற்றெழுத்துக்களின் மேல் சிறு கோடு போன்ற புள்ளியும், மெய்யெழுத்துக்களின் மேல் சுழித்த புள்ளியையும் வைக்கவேண்டும் என்று கூறினர். இவ்விதியின் படியே பத்தொன்பதாம் நூற்றாண்டில் நூல்கள் வெளியிடப்பட்டன. பிற்காலத்தில் இந்த விதி மெல்ல மாறி, புள்ளியற்ற எ, ஒ, குற்றெழுத்துக்களாகவும், அடியில் சிறு கோடும், சுழியும் பெற்ற ஏ, ஓ எழுத்துக்கள் நெட்டெழுத்துக்களாகவும் கொள்ளப்பட்டன. கே என்ற நெட்டெழுத்தை முன்னர் கெ என்று எழுதினர். கெ என்பது குற்றெழுத்தாக வேண்டுமேல், அதன் மேலே புள்ளியிட்டனர். இம்முறை படிப்போர்க்கு மயக்கம் தந்ததால் இதனை மாற்றினர். கீழே சுழிக்கப் பட்ட கொம்பைக் (ெ) குற்றெழுத்தாக்கி, இருபுறமும்

சுழித்த கொம்பை (ே) நெட்டெழுத்தாக்கினர். இம் மாற்றம் இன்றும் நிலவி வருகிறது.

இவர் எழுதிய நூல்களில் மிகவும் சிறப்புப் பெற்றது **தேம்பாவணி.** இந்நூல் 36 படலங்களையும் 3615 பாக்களையும் கொண்டது. கம்பராமாயணத்தைக் காட்டிலும் சந்த மாறுதல்கள் இக்காவியத்தில் அதிகம். இதனைச் 'சீவக சிந்தாமணிக்கு இணையானதோர் காவியம்' என்று பூரணலிங்கம்பிள்ளை அவர்கள் போற்றியுள்ளார். வீரமாமுனிவர் எருசலேம் நகரம் எத்தகையது என்பதைக் கூறுகிறார். நாமும் கேட்டு மகிழ்வோம்.

**"நீரல்லதும் அலையில்லது நிறைவான்பொருள் இடுவார்**
**போரல்லது பகையில்லது புரிவான்மழை பொழியும்**
**சாரல்லது கறையில்லது கடிகாவலும் அறனல்**
**சீரல்லது சிறையில்லது திருமாநகர் இடையே"**

திருக்காவலூர்க் கலம்பகம், கித்தேரி அம்மாள் அம்மானை, அன்னையழுங்கல் அந்தாதி முதலிய செய்யுள் நூல்களையும், பரமார்த்த குருகதை, வேதியர் ஒழுக்கம், வேதவிளக்கம், பேதகம் மறுத்தல் முதலிய உரைநடை நூல்களையும், சதுரகராதி, தமிழ்—இலத்தீன் அகராதி முதலிய அகராதிகளையும், தொன்னூல் விளக்கம், கொடுந் தமிழ் இலக்கணம் * ஆகிய இலக்கண நூல்களையும் இயற்றியுள்ளார்.

வீரமாமுனிவரின் தொண்டால் தமிழ் புதிய உருவம் பெற்றது; தமிழர் புத்துணர்ச்சி பெற்றனர்.

**ஸீகன் பால்கு ஐயர்:** ஜெர்மனிய நாட்டைச் சேர்ந்த அறிஞர் ஸீகன் பால்கு ஐயர் (Barthalomew Ziegenbalg)

---

* இந்நூல் இலத்தீன் மொழியில் இயற்றப்பட்டது.

1709-இல் இவர் தமிழ்நாட்டின் தரங்கம்பாடிக்கு வந்தார். ஸீகன் பால்கு ஐயர் தமிழ் எழுத்துக்களை ஓலையில் எழுதிப் படிப்பதன் சிரமத்தை உணர்ந்தார். அதனால் செருமனி நாட்டிலிருந்து அச்சுப் பொறியை வரவழைத்துத் தமிழ்ப் புத்தகங்களை அச்சிட்டு வெளியிட்டார். இது இவர் தமிழுக்குச் செய்த சிறந்த பணியாகும்.

**எல்லிஸ் துரை:** சென்னை முதலிய நகரங்களில் கலெக்டராகப் பணியாற்றிய பெருமகனார் எல்லிஸ் துரை (**Francis Whyte Ellis**). இவர் தமிழிலும் வடமொழியிலும் வல்லவர். வீரமா முனிவரின் நூல்களைத் தேடிச் சேர்த்தவர் இவரே. அத்துடன் முத்துசாமிப் பிள்ளை என்பாரைக் கொண்டு வீரமாமுனிவரின் வாழ்க்கை வரலாற்றையும் எழுதச் செய்தார். திருக்குறளின் முதல் பதின்மூன்று அதிகாரங்களுக்கு ஆங்கிலத்தில் உரை எழுதியுள்ளார். இந்நூலை முடிப்பதற்குள் 1819-இல் இறந்து விட்டார்.

**போப் ஐயர்:** தமிழின் பெருமையைத் தரணி அறியச் செய்தவர் போப் ஐயர் (**Rev. G. U. Pope**). இவர் திருநெல்வேலி, தஞ்சாவூர், உதகமண்டலம் முதலிய இடங்களில் தங்கிச் சேவை செய்தார். பின்னர் ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்தில் தமிழாசிரியராகப் பணியாற்றினார்.

கிறித்தவ மதத்தைப் பரப்ப வந்த போப் ஐயர் சைவ நூலான திருவாசகத்தை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார். திருக்குறள், நாலடியார் போன்ற அறநூல்களையும் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார். தமிழ்ச் செய்யுட்கள் பலவற்றைத் தொகுத்துத் 'தமிழ்ச் செய்யுட் கலம்பகம்' எனும் பெயரில் வெளி

யிட்டார். புறநானூறு முதலிய நூல்களிலுள்ள சில பாடல்களையும் இவர் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளார். 'தமிழ் மாணவன்' என்று தன்னைக் கூறிக் கொள்வதில் பெருமையடைந்தார்.

**கால்டுவெல்:** அயர்லாந்து நாட்டினரான கால்டுவெல் அவர்கள் (Robert Caldwell) தமிழுக்கு ஆற்றிய அருந்தொண்டு நிகரற்றதாகும். இவர் திருநெல்வேலி மாவட்டத்தில் சமயப்பணி புரிந்தார். இவர் இயற்றிய **'திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்'** எனும் ஆங்கில நூல் தமிழ் மொழியின் அமைப்பையும் சிறப்பையும் அவனிக்கு உணர்த்தியது. தமிழ்,தெலுங்கு, கன்னடம், மலையாளம் முதலிய திராவிட மொழிகள் ஓரினத்தைச் சார்ந்தவை என்பதை இவரே முதன் முதல் எடுத்துக் காட்டினார். இவர் 'திருநெல்வேலிச் சரித்திரம்' என்னும் ஆங்கில நூலையும், 'நற்கருணைத் தியான மாலை', 'தாமரைத் தடாகம்', 'பாரத புராதனம்' முதலிய தமிழ் நூல்களையும் இயற்றியுள்ளார்.

**பிற தமிழ்த்தொண்டர்:** கிளார்க் (Rev. W. P. Clark) என்பவர் தீர்க்கதரிசன வியாக்கியானம் என்னும் நூலை எழுதியுள்ளார். ராட்லர் (Rev. J. P. Rottler) என்பார் தமிழ்--ஆங்கில அகராதி இயற்றினார். உவின்ஸ்லோ. (Dr. Winslow) என்பாரும் ஓர் அகராதி வெளியிட்டார். துரு (W. H. Drew) என்பவர் திருக்குறளின் சில அதிகாரங்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார். பெர்ஸிவல் (Percival), டெய்லர் (W.Taylor) கிளார்க்(W.Clark) முதலியோரும் தமிழன்னைக்குப் பணி செய்து சிறப்புற்றனர்.

**தமிழ்க் கிறித்தவர்:** கிறித்தவப் பாதிரிமார்களின் பிரசாரத்தால் எண்ணற்ற தமிழ் மக்கள் கிறித்தவ

மதத்தைத் தழுவிக் கிறித்தவராயினர். அவர்களுள் பலர் தமிழ்ப் புலமை பெற்றுப் பல நல்ல நூல்களை இயற்றிச் சிறப்புற்றனர். அவர்களுள் குறிப்பிடத் தக்கவர்கள் எச். ஏ. கிருஷ்ண பிள்ளை, வேதநாயகம் பிள்ளை ஆகியோராவர்.

**கிருஷ்ண பிள்ளை:** திருநெல்வேலி மாவட்டத்துக் கரையிருப்பு என்னும் ஊரில் 1827 இல் தமிழ்ப் புலமை மிக்க வைணவக் குடும்பத்தில் பிறந்தவர் கிருஷ்ண பிள்ளை. மகாவித்துவான் திருப்பாற்கடல் நாதக் கவிராயரிடம் இவர் தமிழ்க் கல்வி கற்ருர். பின் தமிழ்ப் பண்டிதராகப் பணியாற்றினுர். பரம வைணவராக விளங்கிய கிருஷ்ணபிள்ளை, தம் முப்பதாவது வயதில் கிறித்தவராஞர். மதம் மாறியபோது இவர் பெற்ற பெயர் ஹென்றி ஆல்பிரட் (Henry Alfred). கிருஷ்ண பிள்ளை என்ற பெயருக்கு முன்னுள்ள எச். ஏ. என்னும் ஈரெழுத்துக்கள் இப் புதுப் பெயரையே குறிப்பன. மதம் மாறினுலும் மொழி மாறவில்லை; தமிழ்க் காதல் மாறவில்லை. தமிழ்க்கவி இயற்றும் ஆற்றல் பன்மடங்கு அதிகரித்தது. அதனுல் ஜான் பனியன் (John Bunyan) இயற்றிய 'The Pilgrims Progress' என்னும் நூலைத் தழுவி **'இரக்ஷணிய யாத்திரிகம்'** எனும் காவியத்தை இயற்றினுர். 'கிறிஸ்து சாமி செய்ய பொன்னனைய திருவடிக்குச் செந்தமிழ் மாலிகை யொன்று புனைவான் எண்ணி' இந்நூலை இயற்றியதாகக் கவிஞர் கூறுகிருர். இக்காவியம் ஏறத்தாழ நாலாயிரம் கவிதைகள் கொண்டது. இது ஐந்து பருவங்களாகப் பகுக்கப்பட்டுள்ளது.

ஆதி பருவத்தில் பரம ராஜ்யப் படலத்தில், ஜீவநதி பாய்ந்து செல்லும் அழகைக் கவிஞர் படம் பிடித்துக் காட்டுகிருர்:

"நிறைவளம் படுக்கும் தூய நித்திய ஜீவ கங்கை
துறைதொறும் பிரிந்து போந்து தொடுகுளம் மடுத்த டாகம்
குறைவற நிரப்பி யுண்மை குலவுநீள் மருத வைப்பின்
கறையுடைத் திதயம் என்னும் கழனிபுக் களைந்த தன்றே"

'அஞ்சனக் கரு நிறத்து அவுணயாக்கைய'னாகிய அழிம்பன் என்பானின் தன்மையைக் கூறும் பாடலையும் காண்போம்:

"பாபத்தை மணந்தவன்; பழியைப் பெற்றவன்;
சாபத்தைப் படைத்தவன்; தரும நாயகன்
கோபத்தை அடைந்தவன்; குவலயத்தினுக்(கு)
ஆபத்தை விளைப்பவன்; அறத்தைத் தின்பவன்"

மகாவித்துவான் எனப் புகழ்பெற்ற கிருஷ்ண பிள்ளை இந்நூலைத் தவிர 'இரக்ஷணிய சமயநிர்ணயம்' 'இரக்ஷணிய மனோகரம்' என்னும் நூல்களையும் இயற்றியுள்ளார்.

**வேதநாயகம் பிள்ளை**

"வேதனை நாயகர் வேடிக்கை நாயகர்
வீண்கதை நாயகரோ?—அவர்
சாதனை நாயகர் சாத்திர நாயகர்
தண்டமிழ் நாயகரே" ‡

என்னும் புகழுரைக்குப் பொருத்தமானவர் முனிசீப் வேதநாயகம்பிள்ளை. இவர் திருச்சிக்கு அண்மையில் திகழும் குளத்தூரில் பிறந்தவர். நேர்மையாலும், நிர்வாகத் திறனாலும் முனிசீப்பாக உயர்ந்தவர். 'வேதநாயகர் தமிழ்க் காதல் கொண்டவர். மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம்பிள்ளையின் அருமை நண்பர். இவர் தமிழ் மொழிக்கு உரைநடையாலும் கவிமழையாலும்

---

‡ தேன்மழை—கவிஞர் சுரதா.

தொண்டாற்றியவர். தமிழின் முதல் நாவல் எனும் பெருமை பெற்ற **'பிரதாபமுதலியார் சரித்திரம்'** தந்தவர். நீதிநூல், பெண்மதிமாலை, சர்வசமய சமரசக் கீர்த்தனை தேவமாதா அந்தாதி முதலிய பதின்மூன்று தமிழ் நூல்களைத் தந்துள்ளார்.

**நீதிநூல்:** இந்நூற்றுண்டில் எழுந்த தலைசிறந்த அறநூல் இந்நீதிநூல் இந்நூல். 'நிகரில் ஞானச் சோதி நூல்' என்றும் 'இந்நூல் முன் எந்நூலும் சொல்லிற் காநூல்; பாதி நூல்; முக்கா நூல்; உவட்டு நூல்; சிலம்பி நூல்; பருத்தி நூலே' என்றும் மகாவித்துவான் மீனுட்சி சுந்தரம் பிள்ளை புகழ்வதொன்றே, நூலின் பெருமையை நுவலப் போதுமானதாகும். தெய்வம் உண்டெனல், கணவன் மனைவியர் இயல்பு, பொய், கொலை, சோம்பல், கல்விச் செருக்கு, பன்னெறி முதலிய 45 அதிகாரங்களாகப் பகுக்கப்பட்டுள்ளது, இந்நூல். 'மாதரைப் படிப்பித்தல்' என்னும் அதிகாரத்தில், ஆடவர்க்குக் கல்வியறிவு தந்து பெண்டிர்க்குத் தாராமை, ஒருடலின் பாதியை அழகுபடுத்தி மீதியை அழகுறுத்தாது விடுத்தலை ஒக்கும் என்று வேதநாயகர் கூறுகிருர்.

**"நீதிநூல் மைந்தர்க்கு நிகழ்த்தி மென்மலர்**
**ஓதியர்க் கோதிடா தொழித்தல் மெய்யினில்**
**பாதியை யேயலங் கரித்துப் பாதிமெய்**
**மீதினில் அணியின்றி விடுத்தல் ஒக்குமே"**

# தற்காலம்

## நாவல்

சங்க காலத் தமிழகத்தில் கவிதைக்கலே சிறந்த இடத்தைப் பெற்றிருந்தது. அதன் செல்வாக்கு மெல்ல மறைய, அந்த இடத்தை உரைநடை பிடித்துக் கொண்டது. உரைநடையின் வளர்ச்சியால் தமிழ்பெற்ற புத்தம்புது இலக்கியங்களில் நாவலும் ஒன்று. பழைய தமிழகத்தில் காவியம் எவ்வாறு பாராட்டப்பட்டதோ, அதுபோல இன்றைய தமிழகத்தில் நாவல் போற்றப் படுகிறது. ஆம், காவியத்தின் இடத்தை நாவல் கைப் பற்றிவிட்டது. இன்று நாவலே விரும்பாதார் இல்லே. நாவல் அத்துணே சுவைமிக்க இலக்கியமாய்த் திகழ் கிறது. பிரபல நாவலாசிரியரான வில்லியம் தக்காரே அவர்கள், "நாவல்கள் இனிப்புகள்; தரமான இலக்கி யப்பசி கொண்ட அனேவரும் அவற்றை விரும்புகின்ற னர். ஏறத்தாழ எல்லாப் பெண்டிரும் அவற்றை விரும்பு கின்றனர். அவுறிக் கூர்மை மிக்க உழைப்பிற் சிறந்த

பெரும்பாலான ஆடவரும் அவற்றை விரும்புகின்றனர்'' என்று குறிப்பிடுகிருர். †

**வாழ்வும் நாவலும்:** நாவல் என்ற ஆங்கிலச் சொல்லுக்குப் புதுமை என்றுபொருள். எனவே, தமிழ்நாவலை நவீனம் என்றனர். தற்போது புதினம் என்று அழைக்கின்றனர். நாவல் என்பதும் கதைதான். ஆனால் இது சிறுகதையைப் போன்றதன்று. சிறுகதையே நாவலின் முதல்நிலை என்றும் அதிலிருந்தே நாவல் வளர்ச்சி பெற்றிருக்க வேண்டும் என்றும் ஹட்சன் என்னும் திறனாய்வாளர் கருதுகிருர். ஒரு பெரிய மாளிகையின் சாளரம் சிறுகதை என்றால், அதன் உள்ளிடம் முழுதையும் நாவல் என்று குறிப்பிட வேண்டும் என்கிருர் மற்றொருவர்.

ஆசிரியன் தன் வாழ்க்கையில் கண்டுணர்ந்த அனுபவங்களை வெளியிட நாவல் மிகச் சிறந்த கருவி. நாவல் என்பது சரித்திரம் போன்றது என்றும் சொல்லலாம். ஜியார்ஜ்மூர் என்பார், ''நாவல் என்பது சமகாலச் சரித்திரம். நாம் வாழும் காலத்தின் சமூகச் சூழலின் உண்மையான முழுமையான பிரதிபலிப்பு'' என்று கூறுவது அறிக. ‡

ஆசிரியன் சுவையான நிகழ்ச்சிகளைச் சமைத்து அதில் தான் உலவவிடும் கதாபாத்திரங்கள் வாயிலாகத் தன் அனுபவங்களையும், தான் கண்ட, கேட்ட

---

†"Novels are sweets. All people with healthy literary appetites love them — almost all women; a vast number of clever, hard headedmen." —William M. Thackeray.

‡"The novel, if it be any thing, is contemporary history of an exact and complete reproduction of social surroundings of the age we live in." —George Moore.

பிறர் அனுபவங்களையும் வெளியிடுகிறான். அதுவே நாவல். ஒவ்வொருவரின் வாழ்க்கையும் ஒரு நாவல் தான். சில வாழ்க்கை வரலாறுகள் நாவலைவிடச் சுவை யாக இருப்பது இந்தஉண்மையை வலியுறுத்துகிறது. நாமக்கல் கவிஞரின் 'மலைக்கள்ளன்' என்ற நாவலைக் காட்டிலும் அவரது சுயசரிதையான 'என்கதை' சுவை மிக்கதாய் இருப்பது, இதற்கு ஓர் எடுத்துக் காட்டு. சில எழுத்தாளர்கள் புகழ்மிக்கோரின் வாழ்க்கை வர லாறுகளைத் தழுவி நாவல்களை எழுதி முடித்ததும் உண்டு. எனவேதான், ஒவ்வொருவரும் குறைந்தது ஒரு நாவலாவது எழுதிவிடலாம் என்று கூறுகிறார் கள். நாவல் என்பது வாழ்க்கையில் பிறப்பது. வாழ்க் கையே நாவல் என்றும் சொல்லலாம். பலர் வாழ்வில் நிகழ்பவைகளை ஒருவர் வாழ்வில் நிகழ்வனவாக இணைத்து எழுத்தாளன் நாவல் எழுதுகிறான். பிரபல எழுத்தாளர்கள் சிலரின் நாவல்களில் அவர்களே கதாபாத்திரங்களாகத் திகழ்வதையும் காணலாம்.

**நாவலின் பிரிவுகள்:** நாவலில் பலவகைப் பிரிவுகள் உண்டு. கதாபாத்திரங்களின் பண்பு நலனைச் சிறப் பம்சமாகக் கொண்டவை என்றும், நிகழ்ச்சிகள் சிறப் பால் அமைபவை என்றும் இரு முக்கிய பிரிவுகள் உள் ளன. எழுத்தாளன் ஒரு கதைத் தலைவன் இன்ன பண்பு கள் பெற்றவன் என்று வரையறுத்துக் கொண்டு அவனைச் சுற்றிக் கதையைப் பின்னுவது பண்பு நலன் சிறந்த நாவல். சரத் சந்திரரின் நாவல் இவ் வாறு உருவானவை என்பர். நிகழ்ச்சியின் மேல் நிகழ்ச்சியாக அமைத்து, பண்பு நலனுக்கு அதிக முக் கியத்துவம் தராமல் எழுதப்படுபவை நிகழ்ச்சிச் சிறப்பு மிக்க நாவல்களாகும். 'மாயாவி'யின் நாவல் கள் இவ்வகையைச் சார்ந்தவை. பண்பு நலனும்,

நெஞ்சைவிட்டு நீங்காத நிகழ்ச்சிகளும் ஒன்று சேர்ந்த நாவலே சிறப்பாகக் கருதப்படுகிறது.

நாவல் மக்களை மகிழ்விப்பதுடன், அவர்கள் உள்ளத்தைப் பண்படுத்தத் தக்கதாகவும் இருக்க வேண்டும். அ. மாதவையா அவர்கள் கூறுவது போல "மகிழ்வூட்டலை முதற் கருத்தாகவும், அஃது டன் நன்னெறியூட்டலை உட்கருத்தாகவும்" கொண்ட நாவலே சிறந்த நாவலாகும்.

**தமிழில் நாவல்:** தமிழுக்குக் கதை என்பது புதிய தன்று. "கதை என்ற பாக்கியம் நமது ஜம்பத்வீபத் தில்தான் முதல் முதல் உற்பவித்தது என்று ஆங்கி லேய சரித்திரக்காரர்களும் எழுதியிருக்கிறார்கள்" என்று 'தீனதயாளு' என்னும் பழம்பெரும் நாவலின் ஆசிரியர் ச. ம. நடேச சாஸ்திரி கூறுகிறார். ஆனால் அந்தக் கதை மேல்நாட்டு நாவல் வடிவில் இல்லை. கதை வளம் இயல்பாகவே பெற்றிருப்பதால், விரை வில் மேல்நாட்டு நாவலை ஒத்த பல நாவல்கள் தமிழில் தோன்றின.

**முதல் நாவல்:** முதல் ஆங்கில நாவல் 1740 ஆம் ஆண்டு தோன்றியது. முதல் தமிழ் நாவல் 1878ஆம் ஆண்டு தோன்றியது. இதனை எழுதியவர் மாயூரம் முனிசீப் வேதநாயகம் பிள்ளை. இவர் தமிழ் இலக் கியங்களைக் கற்றுத் தேர்ந்தவர். எண்ணற்ற பாடல் களை எழுதிக் குவித்த கவிஞர். கவிஞராகத் திகழ்ந்த வேதநாயகம் பிள்ளை தமிழில் உரை நடை இல்லை என்ற குறையைப் போக்க இந்த நாவலை எழுதினார். 'பிரதாப முதலியார் சரித்திரம்' தமிழில் உரைநடை இல்லை என்ற குறையைப் போக்கியதோடு தமிழில் நாவல் இல்லை என்ற குறையையும் சேர்த்துப்

போக்கிவிட்டது. நாவலின் கதாநாயகரான பிரதாப முதலியாரே தன் கதையைச் சொல்லும் பாணியில்—சுய சரிதை பாணியில் இது அமைந்துள்ளது. நாவலின் நடை படிக்கப் படிக்கத் தெவிட்டாத நடை. பலமுறை படித்தாலும் சுவை குறையாத பழைய நாவல் இது ஒன்றே என்று கூறலாம். பிரதாப முதலியாரும், ஞானம்பாளும் மறக்க முடியாத கதாபாத்திரங்கள். முதல்நாவலே சிறப்பான நாவலாக அமைந்தது தமிழ்த் தாயின் நற்பேறே. இவர் 'சுகுணசுந்தரி சரித்திரம்' என்ற மற்றொரு நாவலையும் எழுதியுள்ளார்.

**பிறநாவல்கள்:** பி. ஆர். ராஜம் ஐயரின் 'கமலாம் பாள் சரித்திரம்' இரண்டாம் நாவலாகக் கருதப்படு கிறது. பிரதாப முதலியார் சரித்திரத்தைக் காட்டிலும் இந்நூல் நாவலின் அமைப்பை முழுமையாகப் பெற் றிருந்தது. இதனைப் படித்தோர் கமலாம்பாளை மறந் தாலும், ஆடுசாபட்டி அம்மையப்ப பிள்ளை என்னும் தமிழ் ஆசிரியரையும், வம்பு வளர்ப்பதையே தொழி லாகக் கொண்ட சுப்பம்மாளையும் மறக்க முடியாது.

ச. ம. நடேச சாஸ்திரியின் 'தீனதயாளு' 1902ஆம் ஆண்டு வெளிவந்த நூல். இதற்கு முன்னரே தமிழ் நாவல்கள் வெளிவந்திருந்தும், ஆசிரியர் தன் முன் னுரையில், "நமது 'தீனதயாளு'தான் தமிழில் முதல் நாவல்" என்று பெருமையுடன் குறிப்பிட்டுக் கொள் கிறார். கதையும், கதையின் அமைப்பும் சிறந்தனவாக இருந்தமையால் இவ்வாறு கூறிக்கொண்டார் போலும். பதினைந்து அத்தியாயங்கள் கொண்ட இந்த நாவல் பிறநாவல்களிலிருந்து மாறுபட்டதுதான். முன்னர் வெளியான 'பிரதாப முதலியார் சரித்திரம்', 'கமலாம் பாள் சரித்திரம்', 'பத்மாவதி சரித்திரம்' முதலியவை

சரித்திரம் என்ற சொல்லைச் சேர்த்துக் கொண்டிருந்தன. ஆனால், நடேச சாஸ்திரி தன் நாவலைத் 'தீன தயாளு சரித்திரம்' என்றழைக்காமல் 'தீனதயாளு' என்றழைத்தது ஒரு புதுமைதானே! ஒவ்வோர் அத்தியாயத்தின் துவக்கத்திலும், உள்ளடங்கிய செய்தியை ஒட்டிய ஒரு பாடலைக் கொடுத்து வெளியிட்டிருக்கிறார். 'தீனதயாளுவின் வறுமை' என்ற அத்தியாயத்தில் ''நெருப்பினுள் துஞ்சலு மாகும் நிரப்பினுள், யாதொன்றும் கண்பா டரிது'' என்னும் திருக்குறளைத் தந்துவிட்டுப் பின்னர் கதையைச் சொல்கிறார். இது நாவல் வகையில் ஒரு புதுமையே. பல்லாண்டுகளுக்குப் பின்னர் வந்த தேவன், தன் நாவல்களின் அத்தியாயங்களை இதேமுறையில் ஆரம்பிக்கும் வழக்கம் கொண்டிருந்தார்.

அ. மாதவையாவின் 'பத்மாவதி சரித்திரம்' பழம் நாவல்களின் வரிசையில் இடம்பெற்ற ஒன்றாகும். இதன் ஆசிரியர் ஆங்கிலத்திலும் தமிழிலும் எழுத வல்லவர். 'தில்லைக்கோவிந்தன்' என்னும் நாவலை ஆங்கிலத்தில் எழுதியிருந்தார். பின்னர், 'சாவித்திரி சரித்திரம்' என்ற நாவலை எழுதினார். அது முற்றுப் பெறவில்லை. அவர் எழுதி முடித்த முதல் தமிழ் நாவல் 'பத்மாவதி சரித்திரம்'.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் தமிழில் தோன்றிய நாவல் இலக்கியம், இருபதாம் நூற்றாண்டில் வளர்ச்சி பெற்றது. இந்நூற்றாண்டின் நாவல்களைத் துப்பறியும் நாவல்கள், சமூக நாவல்கள் சரித்திர நாவல்கள், மொழி பெயர்ப்பு நாவல்கள், தழுவல் நாவல்கள் என்று ஐந்து வகைகளாகப் பிரிக்கலாம். இனி இவற்றைத் தனித்தனியே ஆராய்வோம்.

**துப்பறியும் நாவல்கள்:** படிப்போரின் ஆவலைத் தூண்டி அடுத்து என்ன நடக்குமோ என்று ஏங்கச் செய்வதால் துப்பறியும் நாவல்கள் மக்களிடம் நல்ல செல்வாக்கைப் பெற்றுள்ளன. அதனால், இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் துப்பறியும் நாவல்களே நிறையத் தோன்றின. ஆரணி குப்புசாமி முதலியார், வடுவூர் துரைசாமி ஐயங்கார், கே. ஆர். ரங்கராஜு முதலியோர் எண்ணற்ற நாவல்களை எழுதிக் குவித்தனர். அவை பெரும்பாலும் மேனாட்டுத் துப்பறியும் கதைகளின் தழுவலே. இன்று துப்பறியும் நாவல்கள் எழுதுவோரும் அதேநிலையில் இருப்பது வருந்தத்தக்கது. ஏர்ல் ஸ்டேன்லி கார்டனர், இவான் பிளமிங், அகத்தா கிறிஸ்டி முதலியோரை நம்பியே இங்குள்ளோர் துப்பறியும் நாவல்கள் எழுதுகின்றனர். அதனால், தரமான, சுயமான துப்பறியும் நாவல் தமிழில் தோன்றவில்லை. இன்றுள்ளோரில் சிரஞ்சீவியின் துப்பறியும் நாவல்கள் சிறந்தவை என்று கூறலாம். தேவன் எழுதிய 'ஜஸ்டிஸ்ஜகந்நாதன்' மிகச் சிறந்த நாவல். இது நூல் வடிவம் பெறாதது ஒரு குறையே.

**சமூக நாவல்கள்:** நாம் அன்றாடம் சந்திக்கும் மக்களையும், அவர்கள் பிரச்சினைகளையும் அடிப்படையாகக்கொண்டு எழுதப் பெறுபவை சமூக நாவல்கள். சமுதாயத்தின் குறைகளை முதன்மையாக்கி, அவற்றைக் களையும் ஆர்வத்தோடு எழுதப்பட்ட சமூக நாவல்களைப் பிரச்சார நாவல்கள் அல்லது சீர்திருத்த நாவல்கள் என்று குறிப்பிடலாம். நாராணதுரைக் கண்ணனின் 'நான் ஏன் பெண்ணாய்ப் பிறந்தேன்?', 'வேலைக்காரி', 'வேடதாரி' முதலிய நாவல்களும், வ. ரா. வின் 'சுந்தரி'யும், ரகுநாதனின் 'பஞ்சும் பசியும்' என்ற நாவலும் இத்தரத்தன. பிற சமூக நாவல்

கள் கதைக்கு முக்கியத்துவம் தந்து கருத்துகளுக்கு முக்கியத்துவம் தராதவை. வெறும் பொழுது போக்கு நோக்கத்துடன் நிகழ்ச்சிக் கோவையினையே நாவலாக்கிய எழுத்தாளர்களும் உண்டு.

நாவல் உலகில் கல்கி அவர்கள் சிறந்த இடம் பெற்றுத் திகழ்கிறார். அவரது 'தியாக பூமி'யும், 'அலை ஓசை'யும், இருபதாம் நூற்றாண்டைப் படம் பிடித்துக் காட்டுகின்றன. அரசியல் நிலையையும், சமுதாய நிலையையும் கூட இவற்றால் அறிந்து கொள்ளலாம். 'தியாக பூமி' திரைப்படமாக்கப் பட்டபோது, அதன் அரசியல் கருத்துக்காக ஆங்கில அரசினரால் தடை செய்யப்பட்டது. க. நா. சுப்பிரமணியம் தமிழ் நாட்டின் நாவல் ஆசிரியர்களில் ஒருவர். அவருடைய நாவல்களில் 'பொய்த்தேவு' உண்மையிலேயே சிறந்தது; ந. சிதம்பர சுப்பிரமணியத்தின் 'இதயநாதம்' இசைமேதையைப் பற்றிய அருமையான நாவல். கிட்டு என்னும் கிருஷ்ணபாகவதரிடம் சிஷ்யையாக பாலாம்பாள் என்னும் தாசி வருகிறாள். அவள் தன் ஆசையை பாகவதரிடம் வெளியிடுகிறாள். அதைக்கேட்ட கிருஷ்ண பாகவதர், "நான் நாதத்தை மகத்தான யோகமாகவே அனுசரித்து வந்தேன்; சங்கீதம் மனத்திலே தூய்மையான எண்ணங்களைத்தான் உண்டு பண்ணும் என்று நினைத்தேன். என் பாட்டு, கேவலம் மிருக இச்சையைத்தான் தூண்டுமானால் என் சங்கீதம் பொய். நான் பாடுவதற்கே லாயக்கில்லாதவன்" என்று கூறுகிறார். 'இதயநாதம்' என்ற நாவலின் உயர்வையும் உன்னத லட்சியத்தையும் இதுவே உணர்த்தி விடும்.

அகிலனின் நாவல்களுக்கு மக்களிடம் நல்ல செல்வாக்கு உண்டு. அவர் எழுதிய 'பெண்' நாராயணசாமி

ஐயர் நாவல் போட்டியில் பரிசு பெற்றது. 'நெஞ்சின் அலைகள்' தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் பரிசு பெற்றது. 'வேங்கையின் மைந்தன்' (சரித்திர நாவல்) சாகித்ய அகாடமியின் பரிசு பெற்றது. அகிலனின் நாவல்களின் வெற்றிக்கு ஒரு காரணம் நீரோட்டம் போன்ற தெளிவான இனிய எளிய நடை. "கதைப் படைப்பிலும், பாத்திரப் படைப்பிலும், இலட்சியப் படைப்பிலும், இவற்றிற்கெல்லாம் ஏற்ற தமிழ் நடைப் படைப்பிலும் தம் தனித்தன்மையை அகிலன் பெற்றுள்ளார்" என்று தெ. பொ. மீ. பாராட்டுவர். அவர் நாவல்களில் மிகச் சிறந்தது, 'பாவை விளக்கு'. அகிலன் சிறு கதைகள் எழுதியுள்ளார்; கட்டுரைகள் எழுதியுள்ளார்; நாடகங்கள் ஆக்கியுள்ளார். என்றாலும், அவர் நாவலாசிரியராகவே சிறந்து நிற்கிறார்.

நா. பார்த்தசாரதியின் 'குறிஞ்சி மலர்' ஒரு சிறந்த படைப்பு. இதன் கதாநாயகி பூரணி ஒரு முழுமையான படைப்பு. இவ்வாசிரியர் தான் ஒரு கவிஞர் என்பதைத் தன் நாவல்களின் மூலமும் நினைவுறுத்துகிறார்.

பெண் எழுத்தாளர்களில் அநுத்தமாவும், ராஜம் கிருஷ்ணனும், லக்ஷ்மியும் சிறப்புப் பெற்றவர்கள். அநுத்தமாவின் நாவல்கள் குடும்பப் பிரச்சினைகளையே ஒட்டியவை. அவர் நாவல்களில், 'ஒரே வார்த்தை', 'கேட்டவரம்', 'ஜெயந்திபுரத் திருவிழா' 'மணல் வீடு' ஆகியவை குறிப்பிடத்தக்கன. ராஜம் கிருஷ்ணனின் நாவல்களில் புதுமையைக் காணலாம். இவரது 'குறிஞ்சித் தேன்' நீலகிரியின் பழங்குடி மக்களைப் பற்றியது. பழங்குடியினரின் பழக்க வழக்கங்களும், புதிய நாகரிகத்திற்கும் பழைய பண்பாட்டிற்கும் நடக்கும் போராட்டமும் இதில் நன்கு சித்திரிக்கப்

பட்டுள்ளன. 'மலர்கள்', 'மலையருவி', 'அமுதமாகி வருக' ஆகியவை இவர் தம் சிறந்த நாவல்களில் சில. லக்ஷ்மியின் நாவல்கள் விரும்பிப் படிக்கத் தக்கவை. இவருடைய நாவல்களில் 'பெண்மனம்', 'காஞ்சனை யின் கனவு', 'நாயக்கர் மக்கள்' முதலியவை சிறந் தவை. இவர் நாவல்களில் சில திரைப்படமாக உருப் பெற்றுள்ளன. வை. மு. கோதைநாயகி அம்மையார் நூற்றுக்கு மேற்பட்ட நாவல்கள் எழுதியுள்ளமை குறிப்பிடத் தக்கது.

பிற நாவலாசிரியர்களின் போக்கிலிருந்து மாறு பட்டவர் டாக்டர் மு. வரதராசன். மு. வ. வின் நாவல் கள் தமிழ் மணக்கும் பூக்கள். அவற்றைப் படிக்கும் போது, சிறந்த இலக்கியத்தைப் படிக்கும் உணர்வு தோன்றும். நாவல் அறக்கருத்துக்கள் உணர்த் துவதை உட்கருத்தாகக் கொள்ள வேண்டும் என்பர். அது இவருடைய நாவல்களில் வெளிப் படையாக நடைபெறும். இதையே ஒரு சிலர் குறையாகக் கூறுவதுண்டு. நாவலின் இடையிலே திருக்குறளும், சங்க நூல் கருத்தும், தொடர்களும் இடம்பெற்றுப் பொற்குடத்திற்குப் பொட்டிட்ட பொலிவைத் தருகின்றன. இவர் நாவல்களில் 'பாவை' ஒரு தனிக் காவியம். 'நெஞ்சில் ஒரு முள்', 'கயமை', 'அகல் விளக்கு' முதலியன இவர் தம் சிறந்த படைப் புகள். மு. வ. வின் எழுத்து நூற்றுக் கணக்கான தமி ழாசிரியர்களைத் தூண்டி, அவர்களை எழுத்தாளர்களாக மாற்றியுள்ளது எனில் மிகையாகாது.

மு. வ. வின் பாணியைப் பின்பற்றி வெற்றியடைந் தவர் கு. ராஜவேலு. மாணவராயிருந்தபோதே இவர் நாவல் எழுதி, அதற்குப் பரிசும் பெற்றவர். 'காதல்

தூங்குகிறது', 'மகிழம்பூ', 'இளவேனில்', 'வானவீதி' ஆகியன இவருக்குப் பெருமை தரும் நாவல்கள்.

மேலே கண்டவர்களைத் தவிர, இன்னும் பலர் நாவல்கள் எழுதிப் புகழ் பெற்றுள்ளனர். சங்கரராமின் 'மண்ணாசை', ஆர். வி. யின் 'அணையாவிளக்கு' எஸ். ஏ. பி. அண்ணாமலையின் 'காதலெனும் தீவினிலே' சோமுவின் 'ரவிச்சந்திரிகா', பி, வி. ஆரின் 'நீரோட்டம்', தேவனின் 'லக்ஷ்மி கடாக்ஷம்', ரகுநாதனின் 'புயல்', விந்தனின் 'பாலும் பாவையும்', ஆர். சண்முகசுந்தரத்தின் 'நாகம்மாள்', ஹெப்சிபா ஜேசுதாசனின் 'புத்தம் வீடு' முதலியவை நல்ல நாவல்களில் சில.

இந்த நாவல்களுக்கெல்லாம் சிகரமாக அமையத் தக்க சிறப்புப் பெற்றது 'தில்லானா மோகனாம்பாள்'. இதனைக் கொத்தமங்கலம் சுப்பு 'கலைமணி' என்ற புனைபெயரில் எழுதி வெளியிட்டார். சுதந்திர காலத்துக்கு முற்பட்ட தமிழகத்தை, சிறப்பாகத் தஞ்சாவூர் மாவட்டத்தைப் படம் பிடித்துக் காட்டும் நாவல் இதுவே. தில்லானா மோகனாம்பாளும், சண்முக சுந்தரமும், வைத்தியும், பரமானந்த பரதேசியாரும் மக்கள் உள்ளத்தைக் கவர்ந்தது போல பிற கதாபாத்திரங்கள் கவர்ந்ததில்லை. இஃதோர் உரைநடைக் காவியம் என்றே சொல்ல வேண்டும். ஒப்புயர்வற்ற இந்நாவல் தொடர் கதையாக வந்ததேயன்றி நூல் வடிவம் பெறவில்லை. தமிழுக்குப் பெருமை தரும் தலை சிறந்த நாவல் நூல் வடிவம் பெறாதது தமிழரின் தவக்குறைவு என்றே கூறவேண்டும்.

**சரித்திர நாவல்கள்:** சர். வால்டர்ஸ்காட் என்பவரைப் போல் சரித்திர நாவல்கள் எழுதியவர் கல்கி. சரித்திர நாவல்களில் மக்களுக்கு ஒரு பற்றை உண்டாக்கியவர்

அவரே. ஒரு நாவலை எழுதி முடித்த பின், விட்ட இடத்திலிருந்து மற்றொரு நாவல் எழுதுவதுண்டு. ஆனால் கல்கி 'பார்த்திபன் கன'வை எழுதிய பிறகு அதற்கு முற்பட்ட கதையான 'சிவகாமியின் சபதத்'தை எழுதினார். சிவகாமியின் சபதத்தைப் பெரும்பாலோர் பலமுறை படித்திருப்பர் என்பதில் ஐயமில்லை. கல்கி கற்பனைப் பாத்திரமான சிவகாமியைச் 'சரித்திரமாந்தருள் ஒருவர்' எனச்சரித்திரம் கற்றோரும் கூட மயங்கத்தக்க விதத்தில் படைத்தார். கல்கி, இந்நாவலையும் மிஞ்சும் வண்ணம் 'பொன்னியின் செல்வ'னைப் படைத்தார். அதில் வரும் நந்தினி ஒரு மிகச் சிறந்த பாத்திரப் படைப்பு. கல்கி தமிழர்களுக்குச் சரித்திர நாவலைச் சுவைக்கக் கற்றுக்கொடுத்ததுடன், சுவைக்கேற்ற விருந்தையும் படைத்தார்.

கல்கியைப் போலச் சரித்திரத்தைக் கையாண்டவர்கள் வேறு யாருமில்லை என்றே கூறலாம். என்றாலும் ஈ. பாலகிருஷ்ண நாயுடு, அரு. ராமநாதன் ஆகிய இருவரும் சரித்திர நாவல்கள் புனைவதில் வெற்றி கண்டவர்கள் என்று கூறலாம். பாலகிருஷ்ண நாயுடு 'டணாயக்கன் கோட்டை' என்ற நாவலை எழுதினார். திப்புசுல்தானின் இறுதிக் காலத்தையும், கோவை மாவட்டத்து டணாயக்கன் கோட்டை அழிவையும் சித்திரிப்பது இந்நாவல். அளவில் பெரியதாயினும், ஒரே மூச்சில் படித்து முடிக்கத் தூண்டும் ஆற்றல் பெற்றது. சீரங்கப்பட்டணத்தின் கோட்டையையும், டணாயக்கன் கோட்டையையும் வாசகரின் கண்முன்னே நிறுத்துகிறது. நிகழ்ச்சிகளும், சரித்திர உண்மைகளும் பின்னிப் பிணைந்து வெறுப்போ சலிப்போ ஏற்படுத்தாத அற்புதமான நாவல் இது. அரு. ராமநாதன் சிறந்த சரித்திர நாவலாசிரியர்களுள் ஒருவர். அவருடைய

வீரபாண்டியன் மனைவி'யும், 'அசோகன் காதலி'யும், முதல் வரிசையில் இடம்பெறத் தக்கவையாகும்.

சரித்திர நாவல்களுக்கு மக்களிடம் செல்வாக்கு ஏற்பட்ட ஒரே காரணத்தால், சரித்திரம் இருக்கும் திசையை எட்டிப் பார்க்காதவர்களெல்லாம்கூடச் சரித்திர நாவல்கள் எழுதிக் குவித்துவிட்டனர். தமிழ் நாட்டின் சிறந்த நாவலாசிரியர்கள் பெரும்பாலோர் ஒரே ஒரு சரித்திர நாவலையாவது எழுதியிருப்பார் கள். ஆழம் தெரியாமல் காலைவிட்டவர்களின் நிலையை இவர்கள் அடைந்தனர்.

இன்றைய சரித்திர நாவல்களில் வேணுகோபால னின் 'மருதியின் காதல்', சாண்டில்யனின், 'மலை வாசல்', 'கன்னிமாடம்', ஜெகசிற்பியனின் 'மகரயாழ் மங்கை', 'பத்தினிக் கோட்டம்', அகிலனின் 'வேங்கை யின் மைந்தன்' ஆகியவை குறிப்பிடத் தக்கன.

**மொழிபெயர்ப்பு நாவல்கள்:** பிற நாட்டின் தலை சிறந்த நாவல்கள் எண்ணற்றவை தமிழில் மொழி பெயர்க்கப் பட்டுள்ளன. மாக்ஸிம் கார்க்கியின் 'தாய்' டால்ஸ்டாயின் 'போரும் அமைதியும்', ஹெமிங்வேயின் 'கடலும் கிழவனும்', பேர்ல்பக்கின் 'நல்ல நிலம்', எமிலி ஜோலாவின் 'நாநா', குஸ்தாவ் பிளாபர்டின் 'மேடம் பவாரி', ஹ்யூகோவின் 'ஏழைபடும்படு', வால் டர்ஸ்காட்டின் 'ஐவன்ஹோ' முதலியன அவற்றுள் சில. இந்திய நாட்டின் பிறமொழி நாவல்களும் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. தாகூர், பங்கிம் சந்தி ரர், சரத் சந்திரர் ஆகியோரின் வங்க நாவல்களும், காண்டேகரின் மராட்டிய நாவல்களும், கே.எம். முன்ஷி யின் குஜராத்தி நாவல்களும் தமிழில் வெளிவந்துள்

ளன. மாஸ்தி வெங்கடேச ஐயங்காரின் 'சுப்பண்ணு' என்னும் கன்னட நாவலும், தகழி சிவசங்கரம் பிள்ளையின் 'செம்மீன்' என்ற மலையாள நாவலும் தென்மொழிகளிலிருந்து மொழிபெயர்க்கப் பெற்றவையுள் சிறந்தவை.

**தழுவல் நாவல்கள்:** பிறமொழி நாவல்களை உள்ளவாறே மொழிபெயர்த்தால், அவற்றில் வரும் கதாபாத்திரங்களின் பெயர்களும், இடங்களின் பெயர்களும் பிறமொழி அறியாத் தமிழர்க்குச் சற்றே இடர்தரக்கூடும். எனவே, அக்கதைகளைத் தமிழ்நாட்டுச் சூழலில் அமைத்துத் தமிழ்ப் பெயர்கள் தந்து எழுதிய நாவல்களைத் தழுவல் நாவல்கள் என்கிறோம். தழுவல் நாவல்கள் தமிழில் போதிய சிறப்புப் பெறவில்லை. நாரண துரைக்கண்ணன் டால்ஸ்டாயின் 'அன்னகரினா'வைத் தழுவி எழுதிய 'சீமாட்டி கார்த்திகாயினி'யும், எஸ். எஸ். மாரிசாமி, டிக்கன்ஸின் 'ஆலிவர் டுவிஸ்ட்' என்ற நாவலைத் தழுவி எழுதிய 'அனாதை ஆனந்த'னும் சிறந்த தழுவல் நாவல்களாகும். மூல ஆசிரியரின் பெயரை வெளிப்படுத்தாமல் சொந்த நாவல்கள் போல வெளிவந்த தழுவல் நாவல்கள் பலவும் தமிழில் உள்ளன.

**தொடர்கதை நாவல்கள்:** இன்றைய தமிழ் நாவல்கள் உண்மையில் நாவல்கள் அல்ல, அவை தொடர்கதைகள் என்று சிலர் கூறுவர். தொடர்கதை இதழ்தோறும் வெளிவருவது. ஓர் இதழில் 'தொடரும்' போடும்போது, அடுத்த இதழை வாசகர்கள் எதிர்பார்க்குமாறு ஆவலைத் தூண்டக்கூடிய இடத்தில் கதையை நிறுத்த வேண்டும். இதனால் பலர் வலிந்து சில நிகழ்ச்சிகளைப் புகுத்தி ஆவலையும் பரபரப்பையும் உண்டு

பண்ணுகின்றனர். இதனால் நாவல் தன்மை கெடுவது உண்மையே. தொடர்கதை எழுதுவோர், அதை நூல் வடிவில் வெளியிடும்போது, முற்கூறியவாறு வலிந்து சேர்த்த நிகழ்ச்சிகளை நீக்கிச் செம்மைப்படுத்தி அதை நாவலாக வெளியிட வேண்டும். அவ்வாறு செய்தால் தான் தமிழில் நாவல்கள் பெருகும். இல்லையேல் தொடர்கதைகள் மலிந்துவிடும்.

# சிறுகதை

**சிறுகதை இலக்கியம்:** இலக்கியத்தின் பிரிவுகள் சில பழங்காலந் தொட்டு இருந்து வருபவை; சில இடைக்காலத்தில் எழுந்தவை; சில அண்மையில் தோன்றியவை. அண்மையில் தோன்றிய இலக்கியப் பிரிவுகளுள் ஒன்றே சிறுகதை. இதுவே புதிய இலக்கியப் பிரிவுகளுள் சிறந்தது என்றும், செழித்து வளர்ந்தது என்றும், செல்வாக்கு மிக்கது என்றும் கூறலாம்.

சிறுகதை என்று இன்று நாம் எந்த வடிவத்தைக் குறிப்பிடுகின்றோமோ அதுதான் நமக்குப் புதிது. ஆனால் கதை இலக்கியம் புதியதன்று.மனிதன் பிறந்தவுடனே அவனுடன் கதையும் கற்பனையும் பிறந்து விட்டன. அவை அவனைவிட வேகமாக வளர்ந்துவிட்டன. கதை சொல்லாத, கதை கேட்காத மாந்தர் எங்கும் இல்லை எனலாம். பழந்தமிழகத்திலும் கதைகள் இருந்தன; அவையும் கற்பனைக் கதைகள். உரைநடையின் வகைகளில் ஒன்றாகத் தொல்காப்பியம் கூறும் 'பொருள் மரபில்லாப் பொய்ம் மொழி' (தொல்: பொருள்: 485) கதைகளையே குறிப்பிடுகிறது. ஆனால் இன்று நிலவும் சிறுகதை அமைப்பு நாம் மேல் நாட்டிலிருந்து பெற்றதே.

**சிறுகதையின் இலக்கணம்:** சிறுகதை என்பது எது? அதன் இலக்கணம் யாது? எது சிறந்த கதை? இத்தகைய வினாக்களுக்குப் பல திறனாய்வாளர்கள் விடை கண்டுள்ளனர். என்றாலும், இதுதான் சிறுகதையின் இலக்கணம், இப்படி இருப்பதே சிறுகதை என்று எவரும் வரையறை செய்துவிடவில்லை. அவ்வாறு வரையறுப்பதும் இயலாது. சிறுகதை வளர்ந்துவரும் இலக்கியம். நாளுக்கு நாள் வளர்ந்து புதிய புதிய வடிவங்களைப் பெற்றுப் பொலிவுற்று வரும் இலக்கியம். எனவே, அது குறிப்பிட்ட எல்லைக்கோட்டிற்கு உட்படாதது இயல்பே. எனினும் சிறுகதை என்பது எத்தகையது என்பதை ஓரளவு காண்போம்.

சிறுகதை என்பது சிறிய கதையா என வினவின் உடன்பாட்டில் விடையளிக்கலாம். சிறுகதை சிறியதாக இருக்க வேண்டும். "சிறுகதை என்பது அரை மணியிலிருந்து இரண்டு மணி நேரத்திற்குள் படித்து முடிப்பதாக இருக்க வேண்டும்" என்னும் எட்கர் ஆலன்போவின் கூற்றும் இதையே குறிப்பிடுகிறது. இதன் கருத்து, சிறுகதை என்பது ஒரே மூச்சில் படித்து முடிப்பதாக இருக்க வேண்டும் என்பதுதான். அரைமணிக்கும் குறைவான நேரத்தில் படித்து முடிக்கக்கூடிய கதைகளும் இன்று எண்ணற்றவை உள்ளன. ஒன்று அல்லது இரண்டு நிமிடங்களில் படித்து முடித்து முழு திருப்தி அடையத்தக்க கதைகளும் உள்ளன. விந்தன் அவர்களுடைய 'குட்டிக் கதைகள்' என்னும் நூலில் உள்ளவை இத்தன்மையன.

சிறுகதை என்பது வாழ்க்கையில் நிகழும் ஒரு நிகழ்ச்சியை அல்லது ஓர் உணர்ச்சியை மையமாகக் கொண்டு பின்னப்படுவது. ஏதேனும் ஒன்றை நிலைக்க

ளுகக் கொண்டு அதன் மீது எழுப்பப்படுவதே சிறு கதை. கதையின் குறிக்கோளும் பயனும் கூட ஒன்ரு கவே இருக்க வேண்டும். இந்த வரம்பைக் கடக்கும் கதைகள் சிறுகதை என்ற எல்லையைத் தாண்டி நாவலின் பக்கம் எட்டிப் பார்க்கின்றன என்றே கூற வேண்டும்.

சிறுகதை சிறியது. அதனுல், வீண் வருணனை களுக்கும்,தேவையற்ற நிகழ்ச்சிகளுக்கும் அதில் இடம் இல்லை. சொல் சிக்கனம், சிறுகதையின் சுவையைப் பெருக்கும் அருமையான சாதனம். பயனற்ற சொல் ஒன்று கூட இல்லாமல் அமையும் சிறுகதைகளே சிறந் தவை என்பது திறனுய்வாளர் கருத்து. சிறுகதையின் துவக்கம், வளர்ச்சி, முடிவு-எல்லாமே வாசகனை இழுத் துப் பிடிக்கக்கூடியனவாக இருக்க வேண்டும். சுவை யற்ற முறையில் எத்தனை சிறந்த நிகழ்ச்சியைக் கற் பனை செய்து கூறினுலும் அதனுல் பயன் விளையாது. அதனுல்தான் புதுமைப் பித்தன், "வாசகன் எப்பொ ழுதும் லேசில் பொறுமையை இழக்கக் கூடியவன் என் பதை எழுத்தாளர்கள் மனதில் வைத்துக் கொள்ள வேண்டும்" என்று கூறுகிருர். வாசகன் எடுத்தவேகத் தில் முடித்து விடும் வகையில் கதை சுவையாகச் சொல் லப்பட வேண்டும். கதையின் நடையிலும் ஓர் இனிமை வேண்டும். இதையே 'கதைகள் கவிதை நிரம்பிய வையாய் இருக்க வேண்டும்' என்னும் வ. வே. சு. ஐயர் கூற்று வலியுறுத்துகிறது.

சிறுகதைக்கு இன்றியமையாத ஒன்று முழுமை. ஒருநாள் நிகழ்ச்சியைச் சொன்னுலும், ஒரு மணி நேர நிகழ்ச்சியைச் சொன்னுலும், ஒரு நொடி நேரத்தில் மின்னல் போல் தோன்றி மறையும் நிகழ்ச்சியைச்

சொன்னாலும் அதிலே ஒரு முழுமை—நிறைவு இருத்தல் வேண்டும். முழுமையற்ற நிகழ்ச்சிக் கோவை வெறும் நிகழ்ச்சியே யன்றிச் சிறுகதையாகாது.

சிறந்த சிறுகதை என்பது எது? ஒரு கதையைப் படித்து முடித்ததும், அது வாசகனின் உள்ளத்துக்கு மகிழ்ச்சி தந்தால், உடனே மறந்து போகாமல் ஒரு குறிப்பிட்ட நேரத்திற்காவது அவன் நினைவில் நின்ருல், அதே கதையை மீண்டும் படிக்க வேண்டும் என்னும் விழைவை உண்டாக்குமாஞல், அதைச் சிறந்த கதையாகச் சொல்லலாம்.

**சிறுகதையும் நாவலும்:** சிறுகதை என்பது நாவலின் சுருக்கமன்று. சிறுகதை வேறு; நாவல் வேறு. இரண்டுமே கதைகள் என்ருலும் இரண்டுக்கும் தெளிவான வேறுபாடு உண்டு. அந்த வேறுபாட்டை ராஜாஜி அவர்கள் ஒரு நல்ல உதாரணத்தால் விளக்கியுள்ளார்.

புளியமரம், வேப்பமரம், ஆலமரம் ஆகியவை ஒருவகை இனம். கமுகு, தென்னை, பனை ஆகியவை மற்ருெரு வகை இனம். நாவல் புளி, போன்றது; சிறுகதை தென்னை, பனை போன்றது. இதுவே ராஜாஜி காட்டும் உவமை. புளியும் வேம்பும் ஓர் அடிமரத்தில் துவங்கி, பல கிளைகளாய்க் கிளைத்து, ஒவ்வொரு கிளையிலும் எண்ணற்ற இலைகள் பெற்றுத் திகழ்பவை. நாவல் ஒரு கதைக் கருவிற்குப் பல பாத்திரங்களையும், பல சம்பவங்களையும், பல கருத்துகளையும் கொண்டு சில சமயம் பல தலைமுறையினரையும் படம் பிடித்துக் காட்டும். கமுகும் தென்னையும் ஓர் அடிமரத்தில் கிளைகளின்றி ஒரு சில இலைகளுடன் நிற்கும். சிறுகதை ஒரு

நிகழ்ச்சியின் அடிப்படையில் தோன்றி வளர்ந்து நிற் பது. நாவல் பலர் சேர்ந்து ஆடும் குழு நடனம் என் ருல், சிறுகதை ஒருவர் மட்டும் ஆடும் நடனத்தில் ஆடு பவரின் முகத்தை மட்டும் பெரிதாக்கி அருகே காட்டும் காட்சியை ஒத்தது.

**தமிழில் சிறுகதை:** தமிழருக்குச் சிறந்த சிறுகதை யைத் தந்த முதல்வர் வ. வே. சு. ஐயர். அவருக்கு முன்பு சிறிய கதைகள் பல இருந்தன. அவை இன் றைய சிறுகதையின் அமைப்பைப் பெருதவை. அத்த கைய கதை நூல்களில் முதல் நூல் என்னும் பெருமை வீரமா முனிவரின் ‘பரமார்த்த குரு கதைக’ளேச்சாரும். இது பதினெட்டாம் நூற்ருண்டின் முற்பகுதியில் வெளிவந்த நூல். பின்னர் தாண்டவராய முதலியாரின் ‘பஞ்சதந்திரக் கதைகள்’, செல்வக் கேசவராய முதலி யாரின் ‘அபிநவக் கதைகள்’ முதலிய பல கதை நூல் கள் வெளிவந்தன. ஆனுல் வ. வே. சு. ஐயரின் ‘மங் கையர்க்கரசியின் காதல்’ என்னும் சிறுகதைத் தொகுப்பே சிறுகதை அமைப்பைப் பெற்ற முதல் நூலாகும். இது 1927இல் வெளிவந்தது.

அதற்கு முன்னர் கதைஎழுதியோர் “ஓர் ஊரில் ஒரு குடியானவன் இருந்தான்,அவன்பெயர் முருகன் என்ற பாணியில் எழுதினர். வ. வே. சு. ஐயர் அதை மாற்றிக் கதையின் இடையில் இருந்து ஒரு நிகழ்ச்சியை எடுத்து முதலில் வைத்துக் கதாபாத்திரங்களேத் திடுதிப் பென்று அறிமுகப்படுத்தும் வழக்கத்தை ஏற்படுத்தி ஞர். என்ருலும், அக்கால வாசகர்கள் அதை விரும்பு வார்களா, அது அவர்களுக்குப் புரியுமா என்ற ஐயம் அவருக்கிருந்தது. அதனுல், ஒவ்வொரு கதைக்கு முன்னும் ‘சூசிகை’ என்ற பெயரில் கதையைப் பற்றிய

விளக்கம் கொடுத்திருந்தார். அவருக்குப்பின் வந்தவர்கள் அந்த முறையைப் பின்பற்றவில்லை.

வ. வே. சு. ஐயரின் கதைள் உயிரும் உணர்ச்சியும் பெற்றவை. மேல்நாட்டுக் கதைகளையும், பெயர்களையும், நிகழ்ச்சிகளையும் மிகச் சுவையான முறையில் சலிப்புத் தோன்ருதவாறு கூறும் வல்லமை பெற்றவர் அவர். லைலி மஜனூன், அனுர்கலி எனும் இரு உலகப் புகழ் பெற்ற காதல் கதைகளை அவரே தமிழுக்கு அறிமுகப்படுத்தினுர். ஐயரின் 'குளத்தங்கரை அரசமரம்' அவர் கதைகளில் சிறந்தது. பிற்காலச் சமூக சீர்திருத்தக் கதைகளுக்கு இதுவே முன்னேடி என்றும் சொல்லலாம்.

ஐயரைத் தொடர்ந்து சிறந்த கதைகளைப் பலர் உருவாக்கினர் அவர்களில் கு. ப. ரா., புதுமைப்பித்தன், கல்கி முதலியோர் குறிப்பிடத்தக்கவர்.

கு. ப. ரா.வின் கதைகளில் இன்றைய சிறுகதையின் முழு வடிவத்தையும் காணலாம். அவருடைய கதைகள் பல நூல்களாகத் தொகுக்கப்பட்டு வெளியிடப்பட்டுள்ளன. 'காணுமலே காதல்' என்னும் சிறுகதைத் தொகுதி சரித்திரக் கதைகள் நிறைந்தவை. பிற்காலத்தில் கூட கு. ப. ரா. வின் சரித்திரச் சிறுகதைகளுக்கு இணையானவை தோன்றவில்லை என்று சொல்வது மிகையாகாது.

புதுமைப் பித்தன் சிறுகதை உலகில் ஒரு புரட்சி செய்தவர். அவர் நடை கேலியும் கிண்டலும் மிக்கது. திருநெல்வேலி மாவட்டத் தமிழ் வளமும் மண்வளமும் அதில் நிறைந்திருக்கும். சமுதாயத்தின் கறைகளை அப்பட்டமாகப் படம் பிடிக்கவும் அவர் தயங்

கியதில்லை. அதனால் அவர் கதைகளைக் குறை கூறிய வர்கள் உண்டு. ஆனால் படிக்காமல் இருந்தவர்கள் இல்லை. "ஏழை விபசாரியின் ஜீவனோபாயத்தை வர் ணிப்பதாலா சமூகத்தின் தெம்பு இற்றுப் போகப் போகிறது? இற்றுப் போவது எப்படிப் பாதுகாத்தா லும் நிற்கப் போகிறதா?... நடைமுறை விவகாரங் களைப்பற்றி எழுதுவதில் கௌரவக் குறைச்சல் ஒன் றும் இல்லை" என்பது தன் படைப்பைக் குறை கூறிய வர்களுக்குப் புதுமைப் பித்தன் அளித்த பதில். 'கயிற் றரவு', 'கடவுளும் கந்தசாமி பிள்ளையும்', 'சாபவிமோ சனம்' ஆகியவை இவர்தம் சிறந்த படைப்புகள்.

கல்கியின் கதைகள் பலதிறப்பட்ட மக்களையும் கவர்ந்தன. அவர்தம் கதை நிகழ்ச்சிகள் வாசகனின் நினைவில் நிற்பவை. ஒவ்வொரு கதையிலும் நகைச் சுவை நிறைந்திருக்கும். மதுவிலக்கு, தீண்டாமை ஒழிப்பு போன்ற உயர்ந்த குறிக்கோள்களைப் பிரச் சாரம் செய்யும் கதைகளும் உண்டு. 'கேதாரியின் தாயார்', 'திருடன் மகன் திருடன்', 'காதறாக் கள்ளன்' முதலியன அவர்தம் சிறந்த கதைகளுள் சில.

இன்று சிறுகதை எழுதுவோர் எண்ணற்றவர். வார இதழ்களும், திங்கள் இதழ்களும் பெருகியதால் சிறு கதைகள் பல்கிப் பெருகியுள்ளன. தரமான சிறு கதைத் தொகுப்புகள் பலவும் வெளிவந்துள்ளன. விந்தனின் 'முல்லைக்கொடியாள்', தி. ஜானகிராமனின் 'சிவப்பு ரிக்ஷா', அகிலனின் 'நிலவினிலே', மாயாவி யின் 'அகதி', பி. வி. ஆரின் 'தர்மதரிசனம்', ல. ச. ராமாமிர்தத்தின் 'இதழ்கள்', பி. எஸ். ராமையாவின் 'மலரும் மணமும்', 'ரகுநாதன் கதைகள்', 'அழகிரி சாமி கதைகள்', கி. வா. ஜகந்நாதனின் 'அறுந்த தந்தி'

சோமுவின் 'கல்லறை மோகினி', ஆர்வியின் 'குங்குமச் சிமிழ்', ரா. கி. ரங்கராஜனின் 'பல்லக்கு', ஜெயகாந்த னின் 'ஒருபிடி சோறு' முதலியவை அவற்றுள் சில சிறு கதைத் தொகுதிகளாகும்.

இன்றைய எழுத்தாளர்களில் அகிலன் எளிய மக்களும் புரிந்து கொண்டு மகிழும் வகையில் தெளிவான நடையில் கதைகள் படைக்கிறார். 'கங்கா ஸ்நானம்' 'குறத்தி', 'குழந்தை சிரித்தது' முதலியன அவர்தம் சிறந்த கதைகள். அவர் தற்போது எழுதிய கதைகளைக் காட்டிலும் சுமார் பத்து வருடங்களுக்கு முன்னர் எழுதிய கதைகள் சிறந்து நிற்கின்றன.

தி. ஜானகிராமன் மனித உணர்ச்சிகளை—வெளியே தலைகாட்டாமல் உள்ளுக்குள்ளே ஒடுங்கிக் கிடக்கும் உணர்ச்சிகளை—எழுத்தில் வடித்து வாசகனையும் உணர்ச்சி மயமாக்குவதில் வல்லவர். அவர் கதைகள் அமைதியாகப் படித்து உணரத்தக்கவை. கதை படிக்கப் பத்து நிமிடம் ஆனால் அதன் சிந்தனை, அதைப் பற்றிய விவாதம்—மனத்தைப் பற்றிக்கொண்டு எளிதில் விடுவதில்லை. அவருடைய சிலிர்ப்பு என்னும் கதை எவரையும் சிலிர்க்கச் செய்யும் விந்தை மிக்கது.

ஜெயகாந்தன் எதையும் ஒரு வேகத்தோடும் விறு விறுப்போடும் சொல்வதில் வல்லவர். சேரி மக்களின் வாழ்க்கையை அவரைப்போல யாரும் படம் பிடித்துக் காட்டியதில்லை. கசப்பான உண்மைகளையும் இனிப்பான நடையில் மிக எளிதாக எழுதி விடுகிறார், இவர். 'பிரம்மோபதேசம்', 'டிரெடில்' முதலியன அவர்தம் சிறந்த கதைகள்.

ந. பிச்சமூர்த்தி, ஜெகசிற்பியன், ஆர். சூடாமணி, பூவாளூர் சுந்தரராமன், சி. சு. செல்லப்பா, சுந்தர

ராமசாமி, பிலஹரி, இதயன், பி. சி. கணேசன், சுகி. சுப்பிரமணியம், பூவை. எஸ். ஆறுமுகம் முதலிய பல எழுத்தாளர்களும் சிறு கதை இலக்கியத்திற்குச் சேவை செய்து வருகின்றனர்.

இன்றைய உலகத்தை யந்திர உலகம் என்கிறோம். எதையும் நின்று நிதானித்து அமைதியாய்ச் செய்து முடிக்கப் போதிய ஓய்வு இல்லை. ஒருவித வேகம் நிறைந்த இன்றைய வாழ்வில் காவியத்தை அனுபவிக்கவோ, நாவலைப் படிக்கவோ போதுமான நேரம் இருப்பதில்லை. அதனால் விரைந்து படித்து முடிக்கத் தக்கதும், படித்துப் புரிந்து கொள்ள அதிகமான படிப்போ பயிற்சியோ தேவையற்றதுமான சிறுகதை பெரும் வளர்ச்சி பெற்றுவிட்டது. இலக்கிய மரத்தின் ஒரு கிளையான சிறு கதை, இன்று அதுவே ஓர் ஆல மரம் எனக் கூறுமாறு வளர்ந்து படர்ந்து எதையும் சூழ்ந்து மறைத்து நிற்கிறது. கவிதையைத் தொடாதவர்களையும் நாவல்களை நாடாதவர்களையும் காணக் கூடும். ஆயினும் சிறுகதையைப் படிக்காதவர்களைக் காண்பது அரிதினும் அரிது.

தமிழ்ச் சிறுகதை வெறும் எண்ணிக்கையில் மட்டும் வளர்ச்சி பெறவில்லை. தரத்திலும் வளர்ச்சி பெற்றுள்ளது. உலகத்துச் சிறந்த சிறுகதைகளோடு சரிசமமாகப் போட்டியிடத் தக்க கதைகள் எத்தனையோ உள்ளன. அவற்றின் எண்ணிக்கை நாளுக்கு நாள் வளர்ந்து வருகிறது.

# தற்காலத் தமிழ்க் கவிதை

'கவிதையே கலைகளின் அரசி' என்று கூறுகிறார் தாமஸ் ஸ்ப்ராட்*. மனத்தை மகிழ்விக்கும் ஆற்றல் உரைநடையினும் பாவுக்கே மிகுதியாக உண்டு† என்றும், கவிதை என்பது இறைவன் மனிதனுக்கு வழங்கிய தெய்வீக மருந்து‡ என்றும் ஜான் கெப்பிள் என்பார் கூறுகிறார். இந்த உண்மையைச் சங்க காலத் தமிழர்களே நன்குணர்ந்திருந்தனர். அதனால் உரைநடையை ஒதுக்கிக் கவிதைக்கு உயர்வளித்தனர். எதையும் கவிதையாக்கி இன்பம் பெற்றனர். பழந்தமிழரின் மூச்சிலும் பேச்சிலும் கவிதையே நிறைந்திருந்தது.

காலம் மாறியது. மனிதன் கலையை ஆய்ந்து அறிந்து அமைதியாய்ச் சுவைத்து ஆனந்திக்கும் நிலை மறைந்தது. யந்திரமோடு யந்திரமாய் இயங்கும் ஒரு வித வேக வாழ்க்கையை மனிதன் மேற்கொண்டான். அவனால் கவிதையை அமைதியாய் ரசிக்க முடியவில்லை. அதன் வெளிப் பொருளையும் உட்பொருளையும் விளங்கிக் கொள்ளவும், விளங்கிக் கொண்டபின் வியப்புற்று நிற்கவும் மறந்தே போனான். மனிதன் கவிதைக்குத் தந்த மதிப்பைக் குறைத்துக் கொண்டான். ஆனால் கவிதை தன் மதிப்பை இழந்துவிடவில்லை. இன்றும் கவிதையே கலைகளின் அரசி! கவி

---

* Poetry, the queen of Arts —Thomas Spart

† Verse has more powers to soothe than prose.

‡ Poetry, a kind of medicine, divinely bestowed upon man. —Rev. John Keble

தையே மனத்துயர் நீக்கும் மாமருந்து! கவிதையே மனித மனத்தில் புனித எண்ணங்களை எழுப்பி இன்பந் தரும் ஏற்றம் பெற்றது.

இருபதாம் நூற்றுண்டில் எதிலும் கவிதை, எங்கும் கவிதை என்ற நிலை இல்லை. ஆனுல் கவிதை இருக்கிறது. அதன் ஆற்றல் அழியவில்லை. உரைநடை அரசோச்சும் இன்றைய தமிழகத்தில் ஆயிரத்திற்கு மேற்பட்டோர் கவிஞராகத் திகழ்கின்றனர். கவிஞர்களுக்காகவே ஒருபெரு மன்றம் இருக்கிறது. கவிதைக்காகவே பல இதழ்கள் நடத்தப்படுகின்றன. எந்தச் சிறந்த விழாவும் கவியரங்கம் இன்றி முழுமை பெறுவதில்லை.

இருபதாம் நூற்றுண்டில் கவியரசர்களாகத் திகழ்ந்து மறைந்தவர்களில் பாரதியார், பாரதிதாசன், கவிமணி ஆகிய மூவரும் சிறந்தவர்கள். அவர்களைப் பற்றியும், வாழும் கவிஞர்கள் சிலரைப் பற்றியும் இப்பகுதியில் காண்போம்.

**பாரதியார் :** ''என்று தணியும் இந்தச் சுதந்திர தாகம்? என்று மடியும் எங்கள் அடிமையின் மோகம்'' என்று ஏங்கியபோது தாகத்தைத் தீர்க்கவும் மோகத்தைப் போக்கவும் சுப்பிரமணிய பாரதியார் தமிழகத்து எட்டயபுரத்தில் 1882-இல் தோன்றினுர். 'வானமளந்தது அனைத்தும் அளந்திடும் வண்மொழி'யாம் தமிழையும்; வடமொழியையும், எந்தக் கல்வியால் 'நலம் ஓர் எட்டுணையும் கண்டிலேன்; இதை நாற்பதினுயிரம் கோயிலில் சொல்லுவேன்' என்று சத்தியம் செய்தாரோ அந்த ஆங்கிலக் கல்வியையும் கற்றுத் தேர்ந்தார். பதினேராவது வயதிலேயே 'பாரதி' என்ற பட்டத்தை எட்டயபுர சமஸ்தான புலவர்கள் இவருக்குச்சூட்டினர்.

விடுதலை வேட்கையை உண்டுபண்ணி, அது தீர வழிகாட்டிய முதல் தமிழ்க் கவிஞர் பாரதியாரே. துப்பாக்கிக்கு அஞ்சாத ஆங்கிலத் துரைத்தனம் பாரதியின் பாடலைக்கண்டு அஞ்சியது; அதை அச்சிடாதே என்று தடை செய்தது. பாரதி திலகரையும், வ.உ. சிதம்பரனாரையும், வாழ்விக்க வந்த காந்தி மகானையும் பாடினார்.

> "சொந்தநாட்டில் பரர்க் கடிமை செய்தே
> துஞ்சிடோம்—இனி—அஞ்சிடோம்
> எந்த நாட்டினும் இந்த அநீதிகள்
> ஏற்குமோ—தெய்வம்—பார்க்குமோ"

என்று முழங்கினார்.

> "அச்சமில்லை அச்சமில்லை அச்சமென்பதில்லையே
> இச்சகத்து ளோரெலாம் எதிர்த்துநின்ற போதிலும்
> அச்சமில்லை அச்சமில்லை அச்சமென்பதில்லையே"

என்ற பாரதியின் பாடலைப் பாடிய கூனர்கள் தலை நிமிர்ந்தனர். கோழைகள் வீரராயினர்.

வீரத்தையும் காதலையும் புறமென்றும் அகமென்றும் புகன்றனர். இந்த இரண்டு திணைகளையும் இணைத்துப் பாரதி பாடிய வேலன் பாட்டுச் சிறப்பு மிக்கது.

> "வில்லினை யொத்த புருவம் வளைத்தனை
> வேலவா! — அங்கோர்
> வெற்பு நொறுங்கிப் பொடிப்பொடி யானது
> வேலவா!
> சொல்லினைத் தேனில் குழைத்துரைப்பாள்சிறு
> வள்ளியைக்—கண்டு
> சொக்கி மரமென நின்றனை தென்மலைக்
> காட்டிலே!

முதல் இருவரிகளில் வீரத்தின் வன்மையும், பின்னிரு வரிகளில் காதலின் மென்மையும் இணைந்து படிப் போர்க்கு இன்பம் அளிக்கிறது, இவ்வேலன் பாட்டு.

'எழுதுகோல் தெய்வம்; இவ்வெழுத்தும் தெய்வம்' என்ற பாரதியார்,

> "நமக்குத் தொழில்கவிதை நாட்டிற் குழைத்தல்
> இமைப் பொழுதுஞ் சோரா திருத்தல்"

என்று தன் இலட்சியத்தை எடுத்துச் சொல்கிருர். வேறுவேறு பாஷைகள் கற்று வீட்டு வார்த்தை கற்கா தவனைப் போ, போ, போ என்று விரட்டினர். ஒளி படைத்த கண்ணும், உறுதி கொண்ட நெஞ்சும், களி படைத்த மொழியும், கடுமை கொண்ட தோளும் பெற் றவரை வா, வா, வா என்று வரவேற்ருர்.

ரஷ்யாவில் புரட்சி எழுந்த சமயத்தில் புல்லர்கள் வீழ்ந்தபோது பாரதியார் பூரித்துப்போனர். ஜார் அர சன் வீழ்ந்த செய்தியை உணர்ச்சியின் உச்சநிலையில் நின்று கவிஞர் உரைக்கின்ருர்:

> "இமயமலை வீழ்ந்ததுபோல் வீழ்ந்துவிட்டான்
> ஜார் அரசன் இவனைச் சூழ்ந்து
> சமயமுள படிக்கெல்லாம் பொய்கூறி
> அறங்கொன்று சதிகள் செய்த
> சுமடர்சட சடவென்று சரிந்திட்டார்
> புயற்காற்றுச் சூறை தன்னில்
> திமுதிமென மரம்விழுந்து காடெல்லாம்
> விறகான செய்தி போல"

எங்கோ இருக்கும் பீஜித்தீவின் கரும்புத் தோட்டங் களில் இந்தியப் பெண்கள் ஏங்கி அழுங்குரல் பாரதி யின் செவிகளில் கேட்கிறது; கவிஞர் உள்ளம் கதறு கிறது:

"நாட்டை நினைப்பாரோ—எந்த
நாளினிப் போயதைக் காண்பதென்றே அன்னை
வீட்டை நினைப்பாரோ—அவர்
விம்மி விம்மி விம்மி விம்மியழுங்குரல்
கேட்டிருப்பாய் காற்றே—துன்பக்
கேணியிலே எங்கள் பெண்கள் அழுதசொல்
மீட்டும் உரையாயோ—அவர்
விம்மி யழவும் திறங்கெட்டுப் போயினர்
(கரும்புத் தோட்டத்திலே)

கவிதையைப் படித்தால் நம் செவியிலும் பீஜித் தீவுப் பெண்டிரின் அவலக்குரல் கேட்கிறது. இதுவே கவிதையின் வெற்றி.

பாரதியின் சிறப்பையெல்லாம் சொல்லி முடியாது. பாம்பறியும் பாம்பின் கால் என்ற பழமொழிக்கேற்ப ஒரு கவிஞரின் பெருமை முழுவதையும் மற்றொரு கவிஞரே அறிய முடியும். பாரதியின் சிறப்பைப் பாரதிதாசன் எடுத்துரைப்பதைக் காண்போம்:

"பைந்தமிழ்த் தேர்ப்பாகன்! அவனொரு
செந்தமிழ்த் தேனி! சிந்துக்குத் தந்தை!
குவிக்கும் கவிதைக்குயில்; இந்நாட்டினைக்
கவிழ்க்கும் பகையைக் கவிழ்க்கும் கவிமுரசு!
நீடுதுயில் நீக்கப் பாடிவந்த நிலா!
காடு கமழும் கற்பூரச் சொற்கோ!
கற்பனை ஊற்றும் கதையின் புதையல்!
திறம்பாட வந்த மறவன்; புதிய
அறம்பாட வந்த அறிஞன்..."

பாரதியின் சிறப்பையெல்லாம் மேலே கண்ட பாடல் தெரிவித்துள்ளது. 'தமிழால் பாரதி தகுதி பெற்றதும், தமிழ் பாரதியால் தகுதி பெற்றதும்' உலகம் அறியும்.

**பாரதிதாசன் :** ''பெருக்கெடுத்தோடும் மலையருவியின் வேகம், மின்னலின் விரைந்து தாக்கும் கூர்மை, உண்டதும் உயிர்ப்பிக்கும் உயிர்ப் பண்பு, பனிநீரின் தூய்மை, கொம்புத் தேனின் இனிமை, மயக்கும் மலர் மணம், தாழா நகைச்சுவை—இவற்றின் இன்பச் சேர்க்கையே புரட்சிக்கவி பாரதிதாசனின் கவிகள்'' என்று நெ. து. சுந்தரவடிவேலு அவர்கள் கூறுகிருர். பாரதிதாசன் பாடற்பண்பை அவர் கூற்று சீரிய முறையில் தெரியப்படுத்துகிறது.

தமிழுக்கு ஒரு புதுவாழ்வு தந்த இக்கவிஞர் புதுச்சேரியில் 1891-இல் பிறந்தார். பாரதியின் தொடர்பால் சிறந்தார். சமுதாயத்தின் கறைகளையும், குறைகளையும் களைந்தெறியக் கனல்கக்கும் கவிதைகளைச் சமைத்து சாகா வரம் பெற்ருர். 'மூடப் பழக்கத்தின் முடை நாற்றம் வீசுகின்ற காடு மணக்கவரும் கற்பூரப் பெட்டக'மானுர். மானிடரின் தோளின் மகத்துவத்தைக் காட்ட வந்த மாக் கவிஞர் இவர். வேண்டாத சாதி இருட்டு வெளுப்பதற்குத் தூண்டா விளக்காய்த் தோன்றியவர் இக்கவிஞர்.

'புரட்சிக் கவிஞர்' என்று போற்றியவர்கள் 'பாவேந்தர்' என்று இன்று அழைக்கின்றனர். இந்த நூற்ருண்டில் பாரதியாருக்கு அடுத்தபடி புகழ்பெற்ற கவிஞர் இவரே. இவருடைய கவிதை நூல்கள் விற்பனையானது போல வேறு எவருடைய கவிதை நூல்களும் விற்றதில்லை. இவர் எழுதிய பலவகைப் பாடல்கள் 'பாரதிதாசன் கவிதைகள்' என்ற பெயரில் தொகுக்கப்பட்டுள்ளன. 'பாண்டியன் பரிசு' ஒரு பைந்தமிழ்க்காவியம். 'குடும்ப விளக்கு' புதுமையான, தற்காலத்துக்குப் பொருத்தமான அகத்திணை நூல். இயற்கை எழில்

முழுவதையும் 'அழகின் சிரிப்'பில் அடக்கித் தந்துள்ளார். இன்னும் 'இருண்ட வீடு', 'தமிழ் இயக்கம்' 'காதல் நினைவுகள்' முதலிய பல கவிதை நூல்களை இயற்றியுள்ளார்.

தமிழைப் பற்றிப் பாரதிதாசன் பாடியதைப் போல வேறுயாரும் பாடவில்லை.

> "தமிழுக்கும் அமுதென்று பேர்—அந்தத்
> தமிழ் இன்பத் தமிழ்எங்கள் உயிருக்கு நேர்"
>
> "தமிழ் எங்கள் உயிர் என்பதாலே—வெல்லும்
> தரமுண்டு தமிழருக் கிப்புவி மேலே"
>
> "எங்கள் வாழ்வும் எங்கள் வளமும்
> மங்காத தமிழென்று சங்கே முழங்கு"

என்றெல்லாம் இவர் பாடிய பாடல்கள், பிற மொழி மோகம் கொண்டாரையும் தமிழ்ப் பித்தராக மாற்றின. தொழிலாளர்களின் உழைப்பால், ஊரும், ஆறும், வீடும், தோட்டமும் எழுகின்றதைப் பாரதிதாசன் சொல்லும் வேகத்தைப் பார்ப்போம்.

> "சிற்றூரும் வரப்பெடுத்த வயலும் ஆங்கே
> தேக்கியநல் வாய்க்காலும் வகைப்படுத்தி
> நெற்சேர உழுதுழுது பயன்வி ளைக்கும்
> நிறையுழைப்புத் தோள்களெல்லாம் எவரின்
> தோள்கள்?
> கற்பிளந்து மலைபிளந்து கனிகள் வெட்டிக்
> கருவியெலாம் செய்துதந்த கைதான் யார்கை?
> பொற்றுகளைக் கடல்முத்தை மணிக்குலத்தைப்
> போய் எடுக்க அடக்கியமூச் செவரின் மூச்சு?"

தொழிலாளர் உழைப்பை நல்க, உழைக்காத ஒரு சிலர் உல்லாச வாழ்வு வாழ்வது பொருந்துமா? உழைப்

பாளிகள் சீறி எழுந்தால் என்ன நேரும் என்பதையும் சுட்டிக் காட்டுகிறார்:

**ஊரிலேனும் நாட்டிலேனும் உலகிலேனும் எண்ணினால்**
**நீர்நிறைந்த கடலையொக்கும் நேர் உழைப்ப வர்தொகை**
**நீர்மிதந்த ஓடமொக்கும் நிறைமுதல்கொள் வோர்தொகை**
**சூறை ஒன்று மோதுமாயின் தோணி ஓட்டம் மேவுமோ?**

பொது உடைமை பரவ வேண்டும்; உலகம் 'எல் லார்க்கும் எல்லாம் என்றிருப்பதான இடம்' நோக்கி நகர வேண்டும்; உழைக்கிறவர் அடங்கிக் கிடக்காமல் உறுமி எழுந்தால் நாட்டில் சமத்துவம் ஏற்பட்டுவிடும் என்றும் கவிஞர் கூறுகிறார்:

**"ஓடப்ப ராயிருக்கும் ஏழை யப்பர்**
**உதையப்ப ராகிவிட்டால் ஓர்நொ டிக்குள்**
**ஓடப்பர் உயரப்பர் எல்லாம் மாறி**
**ஒப்பப்பர் ஆய்விடுவார் உணரப் பாரீர்!"**

புரட்சிக் கவிதைகள் படைத்த கவி, பூப்போன்ற குழந்தைக்குத் தாலாட்டும் பாடியுள்ளார்:

**"சோலை மலரே சுவர்ணத்தின் வார்ப்படமே**
**காலையிளஞ் சூரியனைக் காட்டும் பளிங்குருவே,**
**அன்னத்தின் தூவி அனிச்ச மலரெடுத்துச்**
**சின்ன உடலாகச் சித்திரித்த மெல்லியலே,**
**வெண்முகத்தில் நீலம் விளையாடிக் கொண்டிருக்கும்**
**கண்கள் உறங்கு! கனியே உறங்கிடுவாய்!"**

குழந்தைகள் அளவோடிருந்தால் பெற்றோர் பாசத் தைப் பொழிந்து தாலாட்டுவர்; சீராட்டுவர்! குசேலருக் குப் பிறந்ததுபோல எண்ணற்ற குழந்தைகள் பிறந் தால் என்ன செய்வர்? வறுமை பெற்றுப் பொறுமை இழந்து அருமைக் குழந்தைகளிடம் அன்பைச் செலுத்

26

தாது ஆத்திரங் கொள்வர்! உணவுப் பஞ்சமும் வறுமையும் தீரக் குடும்பக் கட்டுப்பாடு வேண்டும் என்று இன்று கூறுகிறார்களே, அதே கருத்தைச் சுமார் முப்பது ஆண்டுகளுக்கு முன்னரே பாரதிதாசன் கூறிச் சென்றார். 'கருத்தடை' என்னும் பாடலின் முடிவில்,

**"காதலுக்கு வழிவைத்துக் கருப்பாதை சாத்தக்**
**கதவொன்று கண்டறிவோம். இதிலென்ன குற்றம்?**
**சாதலுக்கோ பிள்ளை? தவிப் பதற்கோ பிள்ளை?**
**சந்தான முறைநன்று தவிர்க்குமுறை தீதா?"**

என்று கேட்கிறார். இது பிரச்சாரக் கவிதை அல்லவா எனக் கேட்கலாம். பாரதிதாசன் பிரச்சாரம் செய்வதற்குப் பின் வாங்காத கவிஞர். அவர் கவிதைகள் யாவுமே பிரச்சாரக் கவிதைகள்தாம்! அவற்றின் கருத்துகளைக் கண்டு முகம் சுளித்தோர் உண்டு! அவர் கவிதைகளைப் படித்து, படிக்கப் பக்கம்நின்று கேட்டு, முகம் சுளித்தவர்கள் இல்லை. கட்சி, கொள்கை என்ற எல்லையை மறந்து அனைவராலும் பாராட்டப் பட்ட மாபெருங் கவிஞர் பாரதிதாசன்.

அவர் கவிதைகள் ஊன் கலந்து, உயிர்கலந்து உவட்டாமல் இனிப்பவை. எனவேதான் பாரதிதாசன் கவிதைகளைக் 'கவிக்காக ஒருமுறை, கருத்திற்காக ஒரு முறை, கொள்கைக்காக ஒரு முறை, உணர்ச்சிக்காக ஒரு முறை, இனிமைக்காக ஒரு முறை, எழிலுக்காக ஒரு முறை படித்தேன்' என்று கி. ஆ. பெ. விசுவநாதம் கூறுகிறார்.

**தேசிக விநாயகம் பிள்ளை:** தென்றலின் குளிர்ச்சி, தெளிந்த நீரோடையின் அமைதி, மழலையின் இனிமை முதலியவற்றை அனுபவிக்க வேண்டுமாயின் கவிமணி

தேசிக விநாயகம் பிள்ளையின் பாடல்களை நாட வேண்டும். கவிமணியின் கவிதைகள் அழகானவை; அமைதி நிறைந்தவை; குழந்தைக்கும் புரியும் எளிமை பெற்றவை. இவர் தேரூரில் பிறந்தவர். 'பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ் மொழியில் பெயர்த்தல் வேண்டும்' என்னும் பாரதியின்கனவை இவர் நனவாக்கினர்.

கவிமணியின் கவிதைகள் மலரும் மாலையும் என்னும் நூலாகத் தொகுக்கப்பட்டுள்ளன. பெண்களின் உரிமைகள் என்ற பாடலில் பெண்களின் பெருமைகளைச் சொல்லிப் பெண்ணுகப் பிறந்தமைக்குப் பெருமை கொள்ள வைக்கிருர்.

"மங்கைய ராகப் பிறப்பதற்கே—நல்ல
மாதவஞ் செய்திட வேண்டுமம்மா!
பங்கயக் கைநலம் பார்த்தலவோ—இந்தப்
பாரில் அறங்கள் வளரும் அம்மா!"

தீண்டாமையைப் போக்கக் கவிமணி தன் கவிதையால் தொண்டாற்றியுள்ளார்.

"கண்ணப்பன் பூசைகொளும்
கடவுள் திருக் கோயிலிலே
நண்ணக்கூ டாதோ நாங்கள்
நடையில்வரல் ஆகாதோ?"

எனத் தீண்டாதார் விண்ணப்பஞ் செய்வதாகக் கூறுகிருர். தீண்டாமையைப் பேயாகக் கூறி அதன் சேட்டைகள் முற்றும் தெரியப் படுத்துகிருர். இந்தப் பேய் எங்கே இருக்கும் தெரியுமா?

"பிள்ளைமார் வீட்டிலும் தங்கும்—உயர்
பிராமணர் வீதியில் எங்குமே சுற்றித்

துள்ளி விளையாடி நிற்கும்—அவர்
சோமன் புடவைகளிற் சுற்றிக் கிடக்கும்
மண்கலத் துள்ளே இருக்கும்—அதில்
வைத்த பண்டத்தில் மறைந்தும் இருக்கும்
வெண்கலம் வெள்ளிபொன் கண்டால்—உடன்
வெட்கம் அடைந்து வெளியேறிப் போகும்''

வெண்கலம், வெள்ளி, தங்கம் ஆகியவற்றால் ஆன பாத்திரங்களுக்குத் தீட்டில்லை என்பதைக் கவிமணி எள்ளி நகையாடும் அழகே அழகு! காந்தியடிகள் இறந்தபோது,

''உடம்பனைத்தும் வாயாக அழுதாலும்
உறுதுயரம் ஒழிந்தி டாதால்
இடம்படைத்த உலகாளும் இறையேநீ
எங்கொழிந்தாய் இந்நாள் ஐயா''

என்று கவிமணி புலம்பினார். இந்திய மக்களின் துயர வெள்ளத்தின் அளவைக் கவிமணியின் இப்பாடல் காட்டுகிறது.

கவிமணியின் 'ஆசிய ஜோதியும்' 'உமார்கய்யாம்' பாடல்களும், மொழிபெயர்ப்பு நூல்கள். பச்சைப் புல்லைத் தின்ற பசு வெள்ளைப் பாலைத் தருவது போன்ற அற்புதத்தை இம்மொழிபெயர்ப்பு நூல்களில் காணலாம். மகனிழந்த தாயின் துயரத்தை 'ஆசிய ஜோதி' யில் கவிமணி கற்போரின் உள்ளம் கனிந்துருகக் கூறுவதைக் காண்போம்.

''வாய் முத்தம் தாராமல்
மழலையுரை யாடாமல்
சேய்கிடத்தல் கண்டெனக்குச்
சிந்தைதடு மாறுதைய்யா!

'பின்னி முடிச்சிடம்மா
பிச்சிப் பூ சூட்டிடம்மா'
என்னும் மொழிகளினி
எக்காலம் கேட்பனையா?
தாயாகி உள்ளம்
தருக்கி இருந்தது போய்ப்
பேயாக இன்று
பிணந்தூக்கி நிற்பேனோ?''

பாரசீகக் கவிஞர் உமார் கய்யாமின் கவிதைகளை 'உமார்கய்யாம் பாடல்கள்' என்ற பெயரில் கவிமணி தமிழ்ப்படுத்தியுள்ளார். பெரிய தத்துவங்களை இத்தனை எளிய முறையில் இனிமையாகக் கூறல் இயலுமா எனப் பிறர் வியக்கும் முறையில் அமைந்தவை இப் பாடல்கள். தன் சொர்க்கம் எது என்று கவிஞர் உமார் வரையறுத்துச் சொல்வதைக் கவிமணியின் தமிழ்க் குரலில் கேளுங்கள்:

''வெய்யிற் கேற்ற நிழலுண்டு
வீசும் தென்றல் காற்றுண்டு
கையில் கம்பன் கவியுண்டு
கலசம் நிறைய மதுவுண்டு
தெய்வ கீதம் பலவுண் டு
தெரிந்து பாட நீயுண்டு
வையம் தருமிவ் வனமன்றி
வாழும் சொர்க்கம் வேறுண்டோ?''

**நாமக்கல் கவிஞர்:**

''பலே, பாண்டியா! பிள்ளை!
நீர் ஒரு புலவன் ஐயமில்லை''

என்று பாரதியாரால் பாராட்டப் பெற்றவர் நாமக்கல் கவிஞர் என அழைக்கப் பெறும் நாமக்கல் வெ. இராமலிங்கம் பிள்ளை. தேசியப் போராட்டத்தில் பங்கு

கொண்டு, 'சிந்தையினுல் வாக்கதனுல், செய்கைதன்னுல் தேசத்திற் கோயாது தொண்டு' செய்தார். அவர் தொண்டுகளில் சிறந்ததும், தூய்மைமிக்கதும் தமிழ்த் தொண்டாகும். உரையிலும் பாட்டிலும் ஏறத்தாழ முப்பது நூல்கள் எழுதியுள்ளார். இவர், கவிதைகளை எல்லாம் ஒருங்கு திரட்டி 'நாமக்கல் கவிஞர் பாடல்கள்' எனும் நூலாக வெளியிட்டுள்ளனர்.

'தமிழன் இதய'த்தைக் கவிஞர் தெளிவாகப் படம் பிடித்துக் காட்டுவது காண்க:

"தமிழன் என்றோர் இனமுண்டு
தனியே அவற்கோர் குணமுண்டு
அமிழ்தம் அவனுடை வழியாகும்
அன்பே அவனுடை மொழியாகும்
மானம் பெரிதென உயிர்விடுவான்
மற்றவர்க்காகத் துயர்படுவான்
தானம் வாங்கிடக் கூசிடுவான்
'தருவது மேல்' எனப் பேசிடுவான்"

தமிழ்நாட்டில் உப்பு சத்தியாக் கிரகத்தின்போது, தொண்டர்கள் பாடிச் செல்ல ஒரு வழிநடைப் பாட்டை ஆக்கித் தந்தார்.

"கத்தியின்றி ரத்த மின்றி
யுத்தமொன்று வருகுது!
சத்தியத்தின் நித்தியத்தை
நம்பும் யாரும் சேருவீர்"
"ஒண்டி அண்டிக் குண்டு விட்டிங்
குயிர்பறித்த லின்றியே
மண்ட லத்தில் கண்டிலாத
சண்டையொன்று புதுமையே!"

காந்தி என்ற சாந்தி மூர்த்தி கண்டுபிடித்த அறப் போரின் சிறப்பைக் கவிஞர் உலகுக்கு எடுத்துச் சொன்னர். இப்பாடல் மூலமே நாமக்கல்லாரின் நாமம் நாடெங்கும் பரவியது.

காந்தியடிகளுக்கு மிகவும் பிடித்த 'வைஷ்ணவ ஜனதோ' என்ற பாடலைத் தழுவி "வைஷ்ணவன் என்போன் யாரெனக் கேட்பின், வகுப்பேன் அதனைக் கேட்பீரே" எனத் துவங்கி ஒருபாடல் இயற்றினர்.

**"பிறருடைத் துன்பம் தனதென எண்ணும்**
**பெருங்குணத் தவனே வைஷ்ணவனும்**
**உறுதுயர் தீர்த்ததில் கர்வங் கொள்ளான்**
**உண்மை வைஷ்ணவன் அவனுகும்"**

என்று வைணவனின் இலக்கணங்களைக் கூறிச் செல்கிறர். இவருடைய சிறப்புகளை அறிந்தே இந்தியா உரிமை பெற்றபின் தமிழ்நாட்டு அரசாங்கம் அவரை அரசவைக் கவிஞராக்கிப் பெருமை பெற்றது.

**ச. து. சு. யோகியார் :** பாலபாரதி ச. து. சுப்பிரமணிய யோகியார் அண்மையில் காலமான அருந்தமிழ்க்கவிஞர். புதிய கற்பனைகளையும் புதிய உணர்ச்சிகளையும் புத்தம்புதிய கவி நடையில் அளித்துச் சென்றவர் அவர். அவர் பாடல்கள் 'தமிழ்க்குமரி' என்னும் நூலில் உள்ளன.

கவிஞரின் வேகத்தை உணர, 'திக்குகள் எட்டும்' எனும் பாடலில் ஒரு பகுதியைப் பார்ப்போம்:

**"அண்டங்கள் யாவுங் குலுங்கிடக் கிண்கிணி**
**ஆட்டங் காட்டிடுவாள்**
**கொண்டல் நடுவில் குளிர்ந்த மதிவைத்த**
**கோலம் விளக்கிடுவாள்**

**கண்டு மகிழ்ந்தவர்க் கின்ப வெறியில்**
**கவிதை மொழிந்திடுவாள்**
**பெண்டு பிள்ளைகுட்டி யாவரும் வாழ்ந்திடப்**
**பேரருள் செய்திடுவாள்"**

கவிஞரின் சோகத்தைப் பார்ப்போம். தம் குழந்தை இறந்தபோது குமுறிப் பாடிய 'கண்மணி ராஜம்' என்னும் பாடலின் ஒரு பகுதி கீழேயுள்ளது:

**"சின்னஞ் சிறுகுழந்தை**
**சிங்காரப் பெண்சிறுமி**
**என்னெஞ் சமுதூற்றும்**
**இனிமைஎங்கு போனதுவோ**
**காலையிலே கண்விழித்துக்**
**கடும்புயலில் அகப்பட்டு**
**மாலையிலே வாடி**
**வதங்கியதோர் மலரைப்போல்**
**ஆண்டு இரண்டுங்கூட**
**நிறையாத ஆயுளுடன்**
**மாண்டு விட்டாள் என்னுடைய**
**மன்னுயிராம் பெண்பாவை**
**கண்கொடுத்துக் கண்பிடுங்கக்**
**கடவுளுக்குக் கண்ணில்லையோ**
**பெண்கொடுத்துப் பெண்பிடுங்கப்**
**பிழை என்ன செய்தேனோ?"**

இவரும் உமார் கய்யாம் பாடல்களைத் தமிழில் மொழி பெயர்த்துள்ளார்.

**சுரதா :** பாரதியாருக்குத் தாசனாகத் திகழ்ந்தவர் பாரதிதாசன். பாரதிதாசனுக்குப் பல தாசர்கள் உண்டு. அவர்களுள் கவிஞர் சுரதா சிறப்புப் பெற்றவர். சுப்புரத்தினதாசன் என்ற பெயரின் சுருக்கமே சுரதா. சுரதாவின் இயற்பெயர் இராசகோபால்.

சுரதாவின் கவிதை பிறர் கவிதைகளினும் சிறந்து திகழ்வதற்கு முதற்காரணம் உவமை. இவர் புதிய உவமைகளைப் பொருத்தமான இடங்களில் கையாள்வார். எனவே, இவரை உவமைக் கவிஞர் என்றழைக்கின்றனர். கவிஞரின் உவமைகளில் இரண்டனைக் காண்போம்:

பாவேந்தர் பாரதிதாசனின் பாடலில் தடங்கல் இருக்காது. இதைச் சொல்லவரும் கவிஞர்,

> **"தடைநடையே அவர்எழுத்தில் இல்லை! வாழைத்**
> **தண்டுக்கா தடுக்கின்ற கணுக்கள் உண்டு?"**

என்று கேட்கிறார். கணுவற்ற தண்டை, தடையற்ற தமிழ் நடைக்கு உவமையாக்கும் சிறப்பு எண்ணி மகிழத் தக்கது. தண்டைத் தொட்டால் கணு தடுக்காது. அது மட்டுமா? எத்தனை குளிர்ச்சி! எத்தனை இன்பம்! பாரதிதாசன் புனைந்த பாவில் தடையில்லை; தண்மை உண்டு. பாவைப் பயிலும் நா குளிரும் என்பதையும் உவமை உணர்த்துகிறது.

பாண்டிய வேந்தரின் மீசை எப்படி இருக்கும் தெரியுமா? இதோ கவிஞர் கூறுகிறார்:

> **"படுத்திருக்கும் வினாக்குறிபோல் மீசை வைத்த**
> **பாண்டியர்கள்........."**

கேள்விக் குறியைப் படுக்க வைத்தாற் போல் மீசை இருக்கிறதாம்! முறுக்கி விட்ட மீசை கண்முன்னே நிற்கிறதல்லவா? இப்படிப் புதிய உவமைகளை அள்ளித் தருவதில் இவர் வள்ளலாய்த் திகழ்கிறார்.

'சொல் விளக்கக் கவிதைகள்' சுரதாவின் புதிய படைப்புகள். சொல்லின் பொருளை நிகண்டுகளில் அடுக்கிக் காட்டினார்கள். பொருளுக்கு அப்பெயர் ஏன்

வந்தது என்பதைச் சுவையாகக் கவிதையில் விளக்கிய முதல்வர் இவர் என்றே சொல்லலாம். கலப்பை என்னும் பொருள் நமக்குத் தெரியும். அதற்குக் கலப்பை என்ற பெயர் ஏன் வந்தது என்பதைக் கவிஞர் தெரிவிக்கிறார்.

"நிலத்திலுள்ள மேல்மண்ணைக் கீழ்மண் ணோடு
நீண்டுள்ள கூர்முனையால் ஒன்று கூட்டிக்
கலப்புதனை உண்டாக்கும் கார ணத்தால்
கலப்பையென்று பெயரிட்டார்; கலப்பை மூலம்
நிலத்தில்நாம் உண்டாக்கும் கலப்பை மாந்தர்
நெஞ்சத்தில் உண்டாக்கி விடுவோ மாயின்
கலப்புமணம் உருவாக வழியுண் டாகும்
கலப்புமணத் தால்சாதி செத்தே போகும்!"

கவிஞர் சொல்லை விளக்கினார்; அத்துடன் கலப்பு மணத்தின் தேவையையும் பயனையும் தெரிவித்து விட்டார். சுரதாவின் சுவையான கவிதைகள் 'தேன்மழை' என்னும் நூலாகத் தொகுக்கப்பட்டு வெளிவந்துள்ளன.

**கண்ணதாசன் :** இன்றைய கவிஞர்களில் எல்லோருக்கும் தெரிந்தவர் கண்ணதாசன். அதற்கு முக்கிய காரணம், அவர் பாடல்கள் திரைப்படங்களில் இடம் பெறுவதே. குழவி முதல் கிழவர்வரை கண்ணதாசனின் பாடலை முணு முணுத்தவாறு இருக்கும் காட்சியை எங்கும் காணலாம். இசைப் பாடல்கள் மட்டுமன்றி இலக்கியமாய்ப் போற்றத்தக்க புதுப்பாடல்களும் புனைந்துள்ளார். அவர் எழுதியவை 'கண்ணதாசன் கவிதைகள்' என்ற பெயரில் வெளிவந்துள்ளன.

தமிழ்சிறக்கப் போரிடவும் தமிழன் துணிய வேண்டும் என்கிருர்கவிஞர். போரில் இறந்துவிட்டால்அவன் விட்டபணியை அவன் மகன் தொட்டுத் தொடருவான். தமிழ்நாடு பிழைக்கும் என்கிருர் கவிஞர்.

''ஏறு நீ ஏறு!
எடு வாளை! தொடு போரை!
மாறும் வரைக்கும்
வாடாதே! மாண்டுவிட்டால்
பேர் சொல்வான் பிள்ளை
பிழைக்கும் தமிழ்நாடே!''

நாதசுரவித்துவான் டி.என்.இராசரத்தினம் மறைந்த போது கவிஞர் அவர்தம் இசையின் மேன்மையையும் இழப்பின் கொடுமையையும் இரங்கற்பாவில் எடுத்து உரைத்தார்:

''கையிலே இசையா? பொங்கும்
காற்றிலே இசையா? துள்ளும்
மெய்யிலே இசையா? மின்னும்
விழியிலே இசையா என்றே
ஐயநின் இசையைக் கேட்டோர்
அனைவரும் திகைப்பர் இன்று
கையறு நிலையிற் பாடக்
கருப்பொருள் ஆனய்; ஓய்ந்தாய்.''

'ஆட்டனத்தி ஆதிமந்தி' என்று ஒரு சிறு காவியம் இயற்றியுள்ளார் கவிஞர். பழைய கதையைப் புதிய தமிழில் யாவரும் புகழும் முறையில் கவிஞர் கூறியுள்ளார். அத்தி ஒரு வஞ்சியான். வஞ்சியான் என்ற சொல்லுக்கு என்ன பொருள்? இதோ கவிஞர் விளக்குகிருர்.

"வஞ்சியான் என்றால் அன்னன்
வஞ்சியின் மன்னன் என்றும்
வஞ்சியான் பிறரை என்றும்
மன்னவன் கரிகாற் சோழன்
வஞ்சியை மணந்தான் என்றும்
வகைப்படும் பொருள்கள் தோன்றும்
வஞ்சியான் வஞ்சி நெஞ்சில்
வாழ்ந்ததே நமது காதை!"

தென்பாண்டி மண்டலத்தின் சிறப்பைக் கவிஞர் ஓர் இசைப் பாடலில் கூறுகிறார். தென்பாண்டி மண்டலம் தமிழ் வளர்த்துச் சிறந்த பெருமையைக் கீழே காண்க.

"மலையில் பிறந்து தென்னன் மடியில் கிடந்து—சங்கத்
துணையில் வளர்ந்த தமிழ் ரத்தினமே—சந்தப்
புலவர் சபை புகுந்து புதுமைக் கவிகள் கண்டு
பொலிந்ததும் தென்பாண்டி மண்டலமே"

கண்ணதாசன் முன்னோரின் சொல்லையும், பொருளையும், சொற்றொடர்களையும் பொன்னேபோல் போற்றித் தன் பாக்களில் பொதித்துவைக்கும் தன்மை பெற்றவர். பழைய கருத்துகளும் சொற்களும் புது அழகு பெறும் விந்தையை இவர் பாக்களில் காணலாம்.

இன்றைய தமிழகத்தில் ஆயிரங் கவிஞர்களுக்கு மேற்பட்டோர் உள்ளனர். அவர்கள் கவிதைகள் நூல்களாகவும் இதழ்களிலும் வெளிவந்துள்ளன. அச்சேறும் வாய்ப்புப் பெறாத அருமையான கவிதைகள் எத்தனையோ! அரங்கேறும் வாய்ப்புக் கிடைக்காத கவிஞர்களும் ஏராளமாக இருக்கின்றனர். கம்பதாசன், வாணிதாசன், முடியரசன், நாரா. நாச்சியப்பன், பெரி. சிவனடியான், பொன்னிவளவன், வேழவேந்தன், சோமு,

மின்னூர் சீனிவாசன், வல்லம் வேங்கடபதி, வாலி, எஸ். டி. சுந்தரம், மா. லெ. தங்கப்பா, துரை. மாணிக்கம், கோவேந்தன், தெசிணி, கொத்தமங்கலம் சுப்பு, கா. மு. ஷெரீப், சுரபி, தமிழழகன், கோமுகி வேலன், தே. ப. பெருமாள், அ. ஜ்வாலா, ஆலங்குடி சோமு, என். எஸ். சிதம்பரம், சுப்பு ஆறுமுகம், எழில்முதல்வன், வே. லட்சுமணன் முதலிய பல கவிஞர்கள் இன்று புகழ் பெற்றுள்ளனர்.

வருங்காலத்தில் கவிதை, தான் இழந்த செல்வாக்கைப் பெற்றுவிட்டாலும் நாம் வியப்பதற்கில்லை. கலைகளின் அரசி மிகவிரைவில் பழையபடி அரியணையில் அமர்ந்து ஆட்சி செய்யத் தமிழ்க் கவிஞர்கள் ஆவன செய்வார்கள் என்பதில் ஐயமில்லை.

## நாடகம்

என்று பிறந்தது என்று உணர முடியாத இயல்புடைய நம் தமிழை முத்தமிழ் எனக் குறிப்பிடுவர். தமிழ் மொழி இயல், இசை, நாடகம் என்னும் முப்பிரிவுகள் உடையது என்பது யாவரும் அறிந்த ஒன்று. தொல்காப்பியத்தில் நாடகம் என்ற சொல் இடம் பெற்றுள்ளது. சிலப்பதிகாரத்தை நாடகக் காப்பியம் எனக் குறிப்பிடுவது மரபு. சிலப்பதிகார உரையிலிருந்து நாடகங்கள் பல இருந்தன என்றும் நாடக இலக்கணங்கள் பல இருந்தன என்றும் அறிகிறோம்.

நாடகம் நமக்குப் பழமையானது என்பது உண்மையே. ஆனால் பழங்காலத்து நாடகம் இன்றைய நாடகத்தைப் போல இருக்கவில்லை. ஆடல் என்பது

ஒரு கலை. கதை தழுவிய ஆடலை நாடகம் என்றனர் நம் முன்னோர். ஆடல், பாடல், அழகு-மூன்றிலும் சிறந்த நாடக நங்கை மாதவியை 'நாடகமேத்தும் நாடகக் கணிகை' என்று குறிப்பிடுவது இதனால்தான். இன்று நாம் நாட்டிய நாடகம் என்று எதை அழைக்கிறோமோ அதைத்தான் பழங்காலத்தவர் நாடகம் என்றனர். அந்த நாடகத்தில் ஆடலும் பாடலும் இருந்தன. உரைநடை இல்லை; காட்சி அமைப்பு இல்லை. என்றாலும் நடன மேடையைச் செம்மையுற அமைத்திருந்தனர். பதினெட்டாம் நூற்றாண்டிற்குப் பின்னரே உரையுடன் கூடிய நாடகம் பிறந்தது.

**நாடகம் பற்றிய நூல்கள்:** சிலப்பதிகாரம் நாடக அரங்கம் பற்றியும் அதில் உள்ள திரைகளைப் பற்றியும் நன்கு கூறுகிறது. அடியார்க்கு நல்லார் இந்நூலுக்கு எழுதிய உரைமூலம் பரதம், அகத்தியம், பரதசேனாபதீயம், மதிவாணர் நாடகத் தமிழ் முதலிய நாடகம் பற்றிக் கூறும் நூல்கள் இருந்தன என்று அறிகிறோம். பல் கலை வல்ல பரிதிமாற் கலைஞர், 'நாடகவியல்' என்று ஒரு நூலை எழுதி நாடக இலக்கணம் முழுவதையும் விளக்கினார். விபுலானந்தர் எனும் தமிழறிஞரும் 'மதங்க சூளாமணி' என்னும் நாடகம் பற்றிய ஓர் நூலை ஆக்கியளித்துள்ளார். இவையே நாடகத் தமிழ் பற்றி நமக்குக் கூறும் நூல்களாகும்.

**இருவகை நாடகம்:** நாடகத்தை வேத்தியல், பொதுவியல் என்று இருவகையாகப் பிரித்திருந்தனர், நம் முன்னோர். உயர்ந்தோர் காணும் நாடகம் வேத்தியல்; இழிந்தோர் காணும் நாடகம் பொதுவியல். இப்பிரிவே பிற்காலத்தில் நாடகம் என்றும் கூத்து என்றும் அழைக்கப்பட்டது. உயர்ந்தோர் காண்பது நாடகம்,

இழிந்தோர் காண்பது கூத்துஇன்றும் கூத்து கிராமப் புறங்களில் நடைபெறுகிறது. அதை ஏழை மக்கள் திறந்த வெளியில் நடத்துகின்றனர். ஏழை மக்கள் வெறுந்தரையில் அமர்ந்து காண்கின்றனர். உயர்வு, தாழ்வு இன்றும் மறையவில்லை என்றே கூறலாம்.

**இடைக்கால நாடகங்கள்:** தமிழ்நாட்டுக் கோவில் களில் நாடகங்கள் நடத்தப் பட்டன என்றும் அதற் காக மானியங்கள் நல்கப் பட்டன என்றும் கல்வெட் டுகளால் உணர்கிறோம். இராஜராஜ சோழனைப் பற்றிய 'இராஜராஜ விஜயம்' என்னும் நாடகம் தஞ்சைக் கோவிலில் நடத்தப்பட்டதாகத் தெரிகிறது. திருநெல் வேலி மாவட்டத்திலுள்ள ஸ்ரீவில்லீசுரத்துக்கல்வெட்டு ஒன்றினால் உய்யவந்தாள் யசோதை என்பாள் ஆண்டு தோறும் திருவிழாக் காலத்தில் நாடகங்கள் நடித்து வந்தாள் என்றும், அதற்காக மானியம் அளிக்கப்பட் டது என்றும் அறிகிறோம். *

பதினெட்டாம் நூற்றாண்டில் திரிகூடராசப்பக் கவிராயரின் குற்றாலக் குறவஞ்சியும், மாரிமுத்துப் பிள்ளையின் நொண்டி நாடகமும், அருணாசலக்கவிராய ரின் இராம நாடகமும் வேறுபலவும் நடிக்கப்பட்டன. இவையாவும் பாடல்கள் நிறைந்த நாடகங்கள்.

**பத்தொன்பதாம் நூற்றாண்டு நாடகங்கள்:** பத் தொன்பதாம் நூற்றாண்டில் ஏராளமான நாடகங்கள் எழுதப்பட்டு நடிக்கப்பட்டன. அவற்றுள் சில அச் சேறியுள்ளன. வி. ஜீ. கோவிந்த கவிராயர் எழுதிய 'ஒட்ட நாடகம்', சுப்பராயலு முதலியார் எழுதிய 'சோகி நாடகம்', கிருஷ்ணசாமி செட்டியார் எழுதிய

---

* இலக்கிய மரபு–டாக்டர். மு. வ.

'காராளர் கார்காத்த நாடகம்' ஆகியவை சாதியைப் பற்றிய நாடகங்கள். 'சித்ராங்கி விலாசம்', 'மதுரை வீரன் விலாசம்', 'ஆரவல்லி சூரவல்லி நாடகம்' முதலியன நம்நாட்டில் வழங்கிய கதைகளைத் தழுவி எழுதப்பட்டவை. 'சோழவிலாசம்', 'தேசிங்கு ராஜவிலாசம்' ஆகியவை வரலாறு தழுவிய நாடகங்கள். இராமாயணம், மகாபாரதம் என்னும் இரு காவியங்களைத் தழுவி எழுதப்பட்ட நாடகங்கள் ஏராளமானவை. 'சீதா கலியாணம்', 'குசலவ நாடகம்', 'பாரத விலாசம்', 'கீசக விலாசம்' ஆகியவை அவற்றுள் சில. பெரிய புராணக் கதைகளைத் தழுவி 'சிறுத்தொண்டர் நாயனார் விலாசம்', 'அங்கம் பூம்பாவை விலாசம்' முதலிய நாடகங்கள் எழுதப்பட்டன. 'அப்பாசு நாடகம்', 'அல்லி பாதுஷா நாடகம்' ஆகியவை இஸ்லாமியரின் நாடகங்கள். கிறித்தவர் 'ஞானசௌந்தரியம்மாள் நாடகம்', 'அர்ச்சிய எஸ்தாக்கியர்' நாடகம் முதலியவற்றை எழுதினர்.

இதே நூற்றாண்டில் ஷேக்ஸ்பியர் நாடகங்கள் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டு நடிக்கப்பட்டன. நாராயணசாமிப் பிள்ளை 'வேனிற்காலத்து நள்ளிருட் கனவு' நாடகத்தையும், சரசலோசன செட்டியார் 'சிம்பலின்' நாடகத்தையும், வேணுகோபாலாச்சாரியார் 'வெனிஸ் வணிகன்' நாடகத்தையும் மொழிபெயர்த்தனர். 'டம்பாச்சாரி', 'கலியாண நாடகம்' முதலிய சமூக நாடகங்களும் எழுந்தன. இவை யாவும் பத்தொன்பதாம் நூற்றாண்டுத் தமிழ் நாடகங்களே.*

---

*தெ. பொ. மீ. எழுதிய 'பத்தொன்பதாம் நூற்றாண்டின் தமிழ் நாடகங்கள்' எனும் கட்டுரையைக் காண்க.

**நாடகக் காப்பியம்:** இதே நூற்றுண்டில் தோன்றிய நாடகக் காப்பியமே **'மனேன்மணீயம்'** இது கவிதை நூல். The Secret Way என்ற லிட்டன் பிரபுவின் ஆங்கில நாடகத்தைத் தழுவிப் பேராசிரியர் சுந்தரம்பிள்ளை அவர்கள் எழுதினர். இன்றுவரை யாவராலும் போற்றப்படும் நாடகம் இ∴தொன்றே. இதனைக் கவிதை வடிவில் நடிக்காவிடினும், உரைநடை நாடகமாக்கிப் பலர் நடித்துள்ளனர். இது திரைப்படமாகவும் உருப் பெற்றது. தற்போது நாட்டிய நாடகமாகவும் நடத்தப் பெறுகிறது. மனேன்மணீயத்தின் சிறப்பிற்கு இவை தக்க சான்றுகள். பரிதிமாற் கலைஞர் 'ரூபாவதி', 'கலாவதி' என்னும் நாடகங்களை இயற்றியுள்ளார்.

பாடல்கள் நிறைந்த நாடகத்தைச் சீர்திருத்தி இன்றைய நாடக அமைப்பைப்பெற உழைத்த முதல்வர் நவாப் கோவிந்தசாமிராவ்*. சங்கரதாஸ் சுவாமிகளும், பம்மல் சம்பந்த முதலியாரும் இந்நூற்ருண்டு நாடக வளர்ச்சிக்குப் பெரிதும் உதவினர்.

**இருபதாம் நூற்ருண்டு நாடகங்கள்:** இந்நூற்ருண்டு நாடகங்களைப் புராண நாடகங்கள், சமூக நாடகங்கள், நகைச்சுவை நாடகங்கள், சரித்திர நாடகங்கள், துப்பறியும் நாடகங்கள், தழுவல் நாடகங்கள் என ஆறு வகைகளாகப் பிரிக்கலாம்.

**புராண நாடகங்கள்:** கன்னைய நாயுடு, நவாப் ராஜமாணிக்கம் ஆகியோர் புராண நாடகங்களை அரங்கேற்றி மக்களைப் பக்தி வெள்ளத்தில் மிதக்கச் செய்தனர். 'தசாவதாரம்', 'ஐயப்பன்', 'பகவத் கீதை', 'ராமதாஸ்' முதலிய நாடகங்களில் கடவுளர் தோன்றும்

* நாடகத்தமிழ்-பம்மல் சம்பந்த முதலியார்.

போது மக்கள் கை எடுத்து வணங்கினர். தற்போதும் 'புரந்தர தாஸ்', 'திருநாவுக்கரசு', 'ஞானப்பால்' முதலிய பக்தி நாடகங்கள் தமிழுலகில் வெற்றி பெற்றுள்ளன. பி. எஸ். ராமையா எழுதிய 'தேரோட்டி மகன்' மிகச் சிறந்த நாடகம்.

**சரித்திர நாடகங்கள்:** சரித்திர நாடகங்களில் காட்சிகளும் ஆடை அணிகலன்களும் பழங்காலத்தைப் பிரதிபலிப்பதாக இருக்க வேண்டும். அதனுல் செலவும் சிரமமும் நடிப்போருக்கு அதிகம். என்றுலும், நல்ல சரித்திர நாடகங்கள் பல அரங்கேறியுள்ளன. டி. கே. எஸ். சகோதரர்கள் நடித்த 'இமயத்தில் நாம்', 'இராஜ ராஜ சோழன்', சிவாஜிகணேசன் நாடகக் குழுவினர் நடித்த 'வீரபாண்டிய கட்ட பொம்மன்', மனேகர் குழுவினர் நடித்த 'காடக முத்தரையன்' முதலியவை இன்றைய சரித்திர நாடகங்களுள் சிறந்தவை. இவற்றுள்ளும் அரு. ராமநாதன் எழுதிய 'இராஜராஜ சோழன்' நாடகம் நாடக உலகில் ஒரு புரட்சியை உண்டாக்கியது; சரித்திர நாடகங்களுக்கு ஒரு மதிப்பைப் பெற்றுத் தந்தது. அண்ணுதுரை எழுதிய 'சந்திரமோகன்' சரித்திர–பிரச்சார நாடகமாகும்.

**சமூக நாடகங்கள்:** சென்ற நூற்றுண்டிலேயே சமூக நாடகங்கள் வெளிவந்து விட்டன. இன்றைய நாடகங்களுள் பெரும்பாலானவை சமூக நாடகங்களே. டி. கே. எஸ். சகோதரர்கள் அற்புதமான சமூக நாடகங்களை அரங்கேற்றியுள்ளனர். நாரண துரைக்கண்ணனின் 'உயிரோவியம்', ப. நீலகண்டனின் 'முள்ளில் ரோஜா', நா. சோமசுந்தரம் எழுதிய 'இன்ஸ்பெக்டர்', அகிலன் எழுதிய 'வாழ்வில் இன்பம்' ஆகியவை இவர்தம் நாடகங்களில் சிறந்தவை. தி. ஜானகிராமன் எழுதிய

'வடிவேலு வாத்தியார்', 'நாலுவேலி நிலம்' ஆகிய நாடகங்களை சகஸ்ரநாமம் அரங்கேற்றினர். அண்ணு துரை எழுதிய சீர்திருத்த நாடகங்களான 'வேலைக் காரி', 'ஓரிரவு', 'நீதிதேவன் மயக்கம்' ஆகியவற்றைக் கே. ஆர். ராமசாமி அரங்கேற்றினர். இவற்றைத் தவிர 'நாம் இருவர்', 'ஸ்பைத்தியக்காரன்', 'அந்தமான் கைதி', 'மல்லியம் மங்களம்', 'மேஜர் சந்திரகாந்த்', 'அமர தாரா' முதலிய நாடகங்களும் அரங்கேற்றப்பட்டன.

**தழுவல் நாடகங்கள்:** பிறமொழிக் கதைகளை அல்லது நாடகங்களைத் தழுவித் தமிழ் நாடகங்களை அமைத்தோர் பலராவர். வங்காள நாவலைத் தழுவி 'குமாஸ்தாவின் பெண்' என்ற நாடகத்தை டி. கே. முத்துசாமி இயற்றினர். கால்ஸ் ஒர்த்தியின் நாடகம் ஒன்றைத் தழுவி 'இருளும் ஒளியும்' என்ற நாடகம் உருவாகியது. தாகூரின் கதையைத் தழுவிய 'கண்கள்' நாடகமும் நடத்தப்பட்டது. ரஷ்ய நாவல் ஒன்றைத் தழுவி 'பிரசிடெண்ட் பஞ்சாக்ஷரம்' நாடகம் எழுதப்பட்டது. 'மணிமகுடம்', 'யார் எவர்', 'மனம் ஒரு குரங்கு', 'நாணல்' முதலிய பல நாடகங்கள் தழுவல் நாடகங்களே.

**நகைச்சுவை நாடகங்கள்:** நாடகப் பேராசிரியர் சம்பந்த முதலியாரின் 'சபாபதி' மிகச்சிறந்த நகைச்சுவை நாடகம். அதைப்போலச் சிரிக்க வைக்கும் நாடகம் பின்னர்த் தோன்றவில்லை. தேவனின் 'துப்பறியும் சாம்பு' நாடகமும், அவர் எழுதிய பிற நாடகங்களும் நகைச்சுவை நாடகங்களே. கே. பாலச்சந்தர் எழுதிய 'சர்வர் சுந்தரம்', 'எதிர் நீச்சல்' ஆகிய இரண்டும் சிறந்த நகைச்சுவை நாடகங்களாகும். 'சோ'வின் நாடகங்கள் யாவும் நகைச்சுவை நாடகங்களே.

**துப்பறியும் நாடகங்கள் :** துப்பறியும் நாடகங்கள் பெரும்பாலும் மேல்நாட்டுக் கதைகளைத் தழுவியே எழுதப்பட்டவை. 'சதுரங்கம்' 'இம்பெர்பெக்ட் மர்டர்' முதலியன இவ்வகையைச் சார்ந்தவை.

**ஒருகாட்சி நாடகங்கள் :** குறைந்த செலவில் நாடகம் தயாரிக்கச் சிறந்தவழி ஒருகாட்சி நாடகங்களை அரங்கேற்றுவதுதான். தமிழ் நாட்டில் ஏராளமான ஒரு காட்சி நாடகங்கள் அரங்கேற்றப் பட்டுள்ளன. இவ்வகையில் கே. பாலச்சந்தர் எழுதித் தயாரித்த நாடகங்கள் வெற்றிப் பெற்றுள்ளன.

**நாடகப் பெயர்கள் :** பதினெட்டாம் நூற்றாண்டில் நாடகப் பெயர்கள், குறவஞ்சி நாடகம், நொண்டி நாடகம் என்பன போல 'நாடகம்' என்று முடிந்தன. பத்தொன்பதாம் நூற்றாண்டில் 'அரிச்சந்திர விலாசம்' 'சித்ராங்கி விலாசம்' என்பனபோல 'விலாசம்' என்று முடிந்தன. மகேந்திரவர்மன் எழுதிய வடமொழி நாடகத்திற்கு 'மத்த விலாச பிரகசனம்' என்று பெயர். அப்பெயரிலுள்ள 'விலாசம்' என்ற சொல்லைப் பின்பற்றி இந்நாடகங்கள் பெயர் பெற்றிருக்கக்கூடும் என்று கருதப் படுகிறது. இருபதாம் நூற்றாண்டில் நாவல்கள் போல நாடகங்களும் சிறந்த பெயர்களைப் பெற்றன. அண்மையில் 'If I get it', 'Imperfect Murder', 'Who is who', 'Under Secretary' என்பனபோல ஆங்கிலப் பெயர்களைச் சூட்டினர். இது மிகவும் வருந்தத் தக்கது. தற்போது இப்பழக்கம் மாறிவருவது ஓரளவு மகிழ்ச்சியளிக்கிறது. தமிழ் நாடகம் தமிழ்ப் பெயர் பெற்றிருப்பது இன்றியமையாத தொன்றாகும்.

**நாடகமும் திரைப்படமும் :** நல்ல நாவல்கள் நாடகங்களாக உருப்பெறுகின்றன. நல்ல நாடகங்கள்

திரைப்படங்களாக மாறுகின்றன. திரைப்படம் நாடகத்தை அழித்துவிடும் என்று முதலில் கருதினர். பல தொழில் நாடகக்குழுக்கள் கலைக்கப்பட்டமை இதற்குச் சான்றும். என்றாலும், முத்தமிழுள் ஒன்றான நாடகத் தமிழைத் தமிழர்கள் வளர்த்து வருவது பெருமைக்குரிய செய்தியாகும்.

# உரை நடை வரலாறு

ஒரு மொழியில் முதலில் தோன்றியது உரைநடையா, கவிதையா என்று பல பெருமக்கள் ஆய்ந்துள்ளனர். கவிதையே முதலில் தோன்றியதென்றும், பின்னர்க் கவிதையைப் போன்ற, ஆனால் கவிதையின் இலக்கணம் முழுமையும் பெறாதஉரைநடை தோன்றியதென்றும் கூறுவர். ஒவ்வொரு மொழியிலும் உள்ள மிகப் பழமையான நூல் கவிதை நூலாகத் திகழ்வது இக்கூற்றை அரண் செய்கின்றது.

கவிதைக்குப்பின் தோன்றியது உரைநடை. இது கவிதையின் சிதைந்த வடிவம் என்று சொல்லலாம். காலரிட்ஜ் என்னும் அறிஞர் கவிதைக்கும் உரைநடைக்கும் உள்ள வேற்றுமையை நன்கு விளக்கினர். உரைநடை. என்பது சொற்களைச் சிறந்த இடத்தில் அமைப்பது என்றும், கவிதை என்பது சிறந்த சொற்களைச் சிறந்த இடத்தில் அமைப்பது என்றும் கூறினர்.* உரைநடையிலும் கவிதையின் அழகு தேவை. ஓசை

*Prose : Words in the best order.
Poetry . the best words in the best order—Samuel Taylor Coleridge

நயம் வேண்டற்பாலது. எனவேதான், 'உம் உரை நடையின் இடையே கவிதைத் தன்மையைப் பிணைத்து அதை அழகு படுத்து' என்று வில்லியம் கூப்பர் கூறினர்.†

கவிதையின் கட்டுப்பாடின்றி, அதன் அழகை மட்டும்பெற்ற உரைநடையே என்றும் எம்மொழியிலும் சிறப்புற்றுத் திகழும். கருத்துகளை எளிதில் சொல்வ தற்கேற்ற சிறந்த கருவி உரைநடையே. படிப்போரும் உரைநடையை எளிதில் புரிந்து கொள்வர். இதனல். உரைநடையே இன்று எம்மொழியிலும் செல்வாக்குப் பெற்றுத் திகழ்கிறது. இன்று வெளிவரும் நூல்களில் நூற்றுக்குத் தொண்ணூற்றைந்து, உரைநடை நூல் களாக இருக்கக் காணலாம்.

இருபதாம் நூற்ருண்டில் அரசோச்சும் உரைநடை தமிழுக்குப் புதியதன்று. சங்க காலத்துக்கு முற்பட்ட தொல்காப்பியர் காலத்திலேயே அது சிறந்திருந்தது.

"பாட்டிடை வைத்த குறிப்பி னானும்
பாவின் றெழுந்த கிளவியானும்
பொருளொடு புணராப் பொய்ம்மொழி யானும்
பொருளொடு புணர்ந்த நகை மொழி யானுமென்று
உரைவகை நடையே நான்கென மொழிப

என்னும் தொல்காப்பியச் சூத்திரம் உரைநடையின் நான்கு வகைகளைக் கூறுகிறது. இதனல் உரைநடை பயன்படுத்தப் பட்டமை தெரிகிறது.

"தொன்மை தானே,
உரையோடு புணர்ந்த பழைமை மேற்றே"

† With poetic trappings, grace thy prose—William Cowper

என்னும் தொல்காப்பியச் சூத்திரம், உரையும் பாட்டும் கலந்து செய்யப்பட்ட பண்டை நூல்களைப் பற்றிக் குறிப்பிடுகிறது. எனவே, பழந்தமிழகத்தில் உரை நடை இருந்தமை உறுதியாகிறது.

**இளங்கோவின் உரைநடை :** சிலப்பதிகாரம் எனும் முத்தமிழ்க் காப்பியத்தை 'உரையிடை யிட்ட பாட்டுடைச் செய்யுள்' என்று அந்நூலின் பதிகம் பகர் கிறது. என்றாலும், சிலம்பில் ஒரு சிறு பகுதியேஉரை நடையாகத் திகழ்கிறது. 'வாழ்த்துக் காதை'யின் துவக்கத்தில் வரும் உரைப்பாட்டு மடையின் ஒரு பகுதியே கீழ்வருவது:

"குமரியொடு வடவிமயத் தொருமொழிவைத் துல காண்ட சேரலாதற்குத் திகழொளி ஞாயிற்றுச் சோழன்மக ளீன்ற மைந்தன் கொங்கர் செங்களம் வேட்டுக் கங்கைப் பேர் யாற்றுக் கரைபோகிய செங்குட்டுவன்......"

இச்சிலம்பு போலவே பாரத வெண்பா, தகடூர் யாத் திரை என்னும் இரு நூல்களும் உரைநடையிட்டபாட்டு டைச்செய்யுளால் அமைந்த நூல்களாகும்.

**நக்கீரர் நல்கிய உரைநடை :** சிலப்பதிகாரம் கி.பி. 2-ஆம் நூற்றுண்டைச் சேர்ந்த நூல். இதற்கடுத்து நமக்குக் கிடைப்பது உரையாசிரியர்கள் எழுதிய உரை நடையே. இறையனுர் அகப்பொருள் என்னும் நூல் சங்க காலத்தில் தோன்றியது என்பர். சங்கச் சான் ருேர் மதுரைக் கணக்காயனுர் மகனுர் நக்கீரனுர்இதற்கு உரைவகுத்தார். அவ்வுரை வழிவழியாய் வந்து, கி.பி. எட்டாம் நூற்றுண்டிற்குப் பின் ஏட்டில் எழுதப் பெற் றது. இவ்வுரையே களவியல் உரை என வழங்கப் பெறுகிறது. களவியல் உரையே காவியம் போலச்

சுவைதரும் பண்பு மிக்கது. எல்லோர்க்கும் புரியும் உவமைகளைக் கொண்டு உயர்ந்த உண்மைகளை நக்கீரனார் உணர்த்துவதைப் பன்முறை படித்து இன்புறலாம். நூலின் பயனைப் பற்றியும், அன்பின் ஐந்திணை பற்றியும் நக்கீரர் கூறுவதைக் காண்போம்:

"இனிப் பயன் என்பது, 'இதுகற்க இன்னது பயக்கும்" என்பது 'இதுகற்க இன்னது பயக்கும்' என்பதறியேன்; யான் நூற்பொருள் அறிவல் என்னுமே யெனின், 'சில்லெழுத்தினான் இயன்ற பயனறியாதாய், பல்லெழுத்தினான் இயன்ற நூற்பொருள் எங்ஙனம் அறிதியோ பேதாய்!' எனப்படுமாகலின், இன்னது பயக்குமென்ப தறிதல்வேண்டும்."

"அன்பின் ஐந்திணை என்றவிடத்து 'அன்பு அறிந்தேனாயினன்றே அன்பினுடைய ஐயந்திணையும் அறிவது?' எனின், அது குடத்துள் விளக்குந் தடற்றுள் வாளும் போல 'இது காண் அன்பு' என்று தந்து காட்டலாகாது"

**தொல்காப்பிய உரைகள் :** களவியலுரைக்கு அடுத்துத்தொல்காப்பிய உரைகள் நமக்குக்கிடைக்கின்றன. இவ்வுரையாசிரியர்களின் உரைநடை சிலம்பில் கண்ட உரைப்பாட்டு மடை போன்றோ, களவியல் உரை போன்றோ பெரும்பகுதி கவிதைப் பாணியில் அமையவில்லை. இவ்வுரையாசிரியர்கள் பத்தாம் நூற்றாண்டிற்குப் பின் தோன்றியவர்கள் என்பதே இதற்கு முதற் காரணம். இலக்கணத்தை மக்களுக்கு விளக்கப் புகுந்தவர்கள் அவர்கள். எனவே அக்காலத்தில் எளிமை என்று கருதப்பட்ட நடையில் உரையமைத்தனர். உரையாசிரியர்களின் உரைகளுக்கு எடுத்துக் காட்டாக இளம் பூரணரின் உரைப் பகுதியைக் காண்போம்:

**இளம் பூரணர் உரை :** தொல்காப்பியத்திற்குஉரை வகுத்த முதல்வர் இவர். 'உரையாசிரியர்' என்றுசிறப்

பிக்கப்பட்டார். பொருளதிகாரத்திற்கு இவர் எழுதிய உரையில் ஒரு பகுதியைக் காண்க.

**"இவ்வறுவகைப் பருவமும் அறுவகைப் பொழுதும் இவ் வைந்திணைக் குரியவாறென்னை யெனின், சிறப்பு நோக்கி என்க. என்னை சிறந்தவாறு எனின், முல்லையாகிய நிலனும் வேனிற்காலத்து வெப்பம் உழந்து மரனும், புதலும் கொடியும் கவினிழந்து கிடந்தன புயல்கள் முழங்கக் கவின்பெறுமாகலின், அதற்கது சிறந்ததாம். மாலைப்பொழுது இந்நிலத்திற் கின்றியமையாத முல்லை மலரும் காலமாதலானும், அந்நிலத்துக் கருப்பொருளாகிய ஆநிரை வரும் காலமாதலானும், ஆண்டுத் தனியிருப்பார்க்கு இவை கண்டுழிவருத்தம் மிகுதலின் அதுவும் சிறந்ததாயிற்று."**

**(அகத்திணை: சூ: 12 உரை)**

இலக்கியங்களுக்கு எழுந்த உரைகள் பல. அவற்றுள் திருக்குறளுக்குப் பரிமேலழகர் செய்த உரையும், சிலப்பதிகாரத்திற்கு அடியார்க்கு நல்லார் ஆக்கிய உரையும், சீவக சிந்தாமணிக்கு நச்சினர்க்கினியர் செய்த உரையும் சிறந்தன.

**மணிப்பிரவாள நடை:** உரையாசிரியர்கள் தமிழ் உரைநடையைச் செம்மையாக்கி வளர்த்துச் சென்ற போது, மணிப்பிரவாளம் என்னும் புதிய நடை தோன்றியது. மணி என்பது முத்து. பிரவாளம் என்பது பவளம். வெண்ணிறத்து முத்தும் செந்நிறத்துப் பவளமும் மாறிமாறித் தொடுத்த மாலை காட்சிக்கு அழகாய்த் தோன்றும். அதுபோல வண்டமிழ்ச் சொல்லும் வடமொழிச் சொல்லும் சரிக்குச் சரி கலந்து எழுதும் நடை செவிக்கு அழகாய்த் திகழும் என்று கருதினராம், தமிழ்நாட்டை யடைந்த பிற சமயத்தார். எனவே மணிப்பிரவாளம் தமிழில் தோன்றியது. இந்நடை

கி. பி. 13–ஆம் நூற்றுண்டில் தோன்றியது; பதினேழாம் நூற்றுண்டுவரை வாழ்ந்தது. இந்நடையை வளர்த்து இதற்கு வாழ்வளித்தவர்கள் சமணரும் வைணவரும் ஆவர். தமிழில் தோன்றியது போன்றே மலையாள மொழியிலும் மணிப்பிரவாள நூல்கள் எழுந்தன என்றும், ஆனால் பிற திராவிட மொழிகளான கன்னடத்திலும் தெலுங்கிலும் இத்தகைய மணிப்பிரவாள நூல்கள் தோன்றவில்லை என்றும் தமிழறிஞர் வே. வேங்கடராசுலு குறிப்பிடுகிறார்.*

இக்கலப்பு நடையில் பலநூல்கள் பிறந்தன. ஸ்ரீபுராணம் என்பது சமணர்கள் இயற்றிய மணிப்பிரவாள நூல்களில் சிறந்தது. இதனை மண்டல புருடர் இயற்றினர் என்பர். இதனை மறுப்போரும் உண்டு. ஸ்ரீபுராணத்தின் மணிப்பிரவாள நடைக்கு ஓர் எடுத்துக்காட்டுக் காண்போம்:

**“கேளீர் குமாரர்காள், யான் பகவானுடைய மூலதாஸன்; நாகலோகத்து வஸிப்பேன்; ‘நமக்கு பக்தராகின்ற இந்தக் குமாரர்கட்கு வேண்டும் விபவங்களைக் கொடுப்பாயாக’ என்று பகவான் அருளிச் செய்ய, யான் உங்கட்கு வேண்டும் விபவங்களைத் தருவான் வேண்டி வந்தேன். போதுவீராமின்”**

**ஸ்ரீ புராணம்—ஆதிபுராணம்**

சமணர்கள் தோற்றுவித்த இம்மணிப்பிரவாள நடையை வைணவர்கள் கைக்கொண்டனர். வைணவ நூல்களுக்கு உரை வகுத்த பெரியவாச்சான் பிள்ளை, வடக்குத் திருவீதிப் பிள்ளை முதலியோர் மணிப்பிரவாள நடையில் உரை வகுத்தனர்.

---

***ஸ்ரீபுராணம் முன்னுரை காண்க.**

மணிப்பிரவாளம் என்னும் இக்கலப்பு நடையைக் கன்னித்தமிழ் நடை என்று தமிழர் கொண்டிலர். எனவே மணிப்பிரவாள நடை பிற்காலத்தில் மறைந்தது.

## ஐரோப்பியரின் உரைநடை

மணிப்பிரவாள நடை மறைந்த நேரத்தில் ஐரோப்பியர் இந்நாட்டுக்கு வந்தனர். வந்தவர், செந்தமிழ் மொழியைக் கற்றனர். தமிழில் எதுவும் கவிதையில் இருப்பது கண்டு வியப்பும் திகைப்பும் கொண்டனர். அவர்கள் தம் சமயக் கருத்துகளை மக்களிடையே பரப்ப முயன்றனர். அப்போது தமிழ்ப் பாணியைப் பின்பற்றி யாவற்றையும் கவிதையில் எழுதாமல் உரைநடையில் எழுதினர். அவரது நடை பழைய தமிழ் நடையைப் போல நீண்ட சொற்றொடரான் அமைய வில்லை. கூறும் கருத்திற்கேற்பச் சொற்றொடர் சிறியதும் பெரியதுமாக அமைந்தது. பத்துக் கேள்விகளைக் கேட்டுப் பத்து விடைகள் தரப்பட்டதை உரையாசிரியர்கள் ஒரே சொற்றொடராக அமைத்தனர். இம் மேல்நாட்டார் அதனை இருபது தொடர்களாக அல்லது பத்துத் தொடர்களாக அமைத்தனர். இம்முறை, படிப்பதற்கும் உணர்வதற்கும் எளிதாக இருந்தது.

**தத்துவ போதகரின் தமிழ் நடை:** கி. பி. பதினேழாம் நூற்றாண்டின் முற்பகுதியில் தத்துவ போதக சுவாமிகள் என அழைக்கப்பெறும் இத்தாலியர் தமிழ் நாட்டிற்கு வந்தார். அவர் இயற்பெயர் இராபர்ட் டி நொபிலி (Robert De Nobili) என்பதாம். அவர் பத்துக்கு மேற்பட்ட தமிழ் நூல்கள் எழுதினர். பேச்சுத்

தமிழையும் பழமொழிகளையும் கலந்து இவர் உரை நடை எழுதினர். அவரது 'மந்திர வியாக்கியானம்' என்னும் நூலின் ஒரு பகுதியைக் காண்க:

"அன்றன்றுள்ள எங்களப்பம் எங்களுக்குத் தாரும். இந்த வாக்கியத்துக்கு உண்டான அர்த்தத்தைக் கண்டுபிடிக்கும் படிக்கு இதில் அறிய வேண்டிய தாற்பரியமாவது: அப்ப மானது போசனமாகும்: போசனமோவென்றுல் மனுஷன் பிழைக்கிறதுக்குக் காரணம் என்று சொல்லப்படும். இதிப்படி யிருக்கையிலே, மனுஷனுடைய ஆத்மமானது பிழைக்கிற துக்கு யாதொன்று காரணமாயிருக்குமோ அதுக்கு அப்ப மென்கிற நாமஞ் செல்லுமென்று சொல்லத் தகும்"

**வீரமா முனிவர் உரைநடை:** தத்துவ போதகரின் உரைநடையினும் பண்பட்டது வீரமாமுனிவரின் தமிழ் நடை. இவர் வேதியர் ஒழுக்கம், வேத விளக்கம், பேதக மறுத்தல், ஞானம் உணர்த்தல், திருச்சபைக் கணிதம், வாமன் கதை, பரமார்த்த குருகதை ஆகிய உரைநடை நூல்களை எழுதியுள்ளார். இவரது உரை நடையின் தன்மையறிய 'வாமன் கதை'யிலிருந்து ஒரு பகுதியை இங்கே தருகிருேம்.

"ஊரண்டையிலிருக்குஞ் சுடுகாட்டுக்குப் போயங்கே யுருண்டுருள வெறிந்த கபாலங்களை யுற்றுப் பார்க்க. உன்னை மயக்குவிக்கு முகமதுவே; பவளத் துறையிற் கோத்த முத்து வடம் போற் செவ்வுதட்டுள்ளே நிரையாய்த் தோன்றின பல்லுமதுவே; வான்மீன் போல விளங்கியெறியேல் போலே சினந்துன் னெஞ்சுள் ளுருவித்தைத்த விருகண்ணிருந்த விடமி துவே; அருவருப்புள்ள கிடங்கு பள்ளமதுவே; நீ யபேட்சித்த வில்லெனவளைந்தபுருவமும், பிறையென வொளிர்ந்தநுதலும் செந்தாமரையென மலர்ந்த வாயு மிதெல்லா மெங்கே? இந்த முகத்திலேதா னிருந்ததன்ருே? நீ யபேட்சிக்கு மழகிய முகமு மித்தன்மைத்தாவது நிச்சயமாகி லிதற்கோ வுயிர்கெடப்

பொருளற மானங் குறைய மிருகத்தோடொத்த வின்பத்துக் காசை படுகிருய்? இதற்கோருபாயம் பாராமற் கல்வி யுண ராம லுறுதிகொள்ளாம லொருதுணிவின்றி மயங்கிக் கிடக் கின்ருய்?''

**கால்டுவெல் தமிழ் நடை:** மொழியியல் துறையில் சிறந்த பணியாற்றிய கால்டுவெல் அவர்கள் உரை நடை வரைவதிலும் வன்மை பெற்றவர். அவர் நற் கருணைத் தியான மாலை, பரத கண்ட புராதனம் என் னும் நூல்களையும் பல்வேறு கட்டுரைகளையும் எழுதி யுள்ளார். கீழ்வரும் பகுதி 'பரதகண்ட புராதனம்' என்னும் நூலில் 'மாபாரதத்தைப் பற்றிச் சொல்லியது' என்னும் பகுதியிலிருந்து எடுக்கப்பட்டது.

''பாரதம் என்கிறபேர் பரதன் என்னப்பட்ட பூர்வீக இராஜாவின் பேரால் உண்டாயிற்று. அந்தப் பரதன் சந்திர குலத்தான். அவன் முதலாஞ் சக்கரவர்த்தியாகி சகல இராச்சியங்களையும் ஒரே குடையின் கீழ் அரசாண்டவனுகும். அவனுடைய பெயரால் இந்து தேச முழுமைக்கும் பரதகண் டம் என்ற பேர் பாட்டில் வழங்குகிறது. அந்த பரதனுடைய சந்ததியாருக்குப் பாரதர் என்று பேர். மகாபாரதமென்ருல் கௌரவர் பாண்டவராகிய பாரத வேந்தருக்குள்ளே நடந்த மாயுத்தம் என்று அர்த்தம்.

**போப்பையரின் தமிழ்நடை:** ஜி. யூ. போப் அவர் களும் தமிழுக்குத் தொண்டு செய்த கிறித்தவர்களுள் குறிப்பிடத்தக்கவர். இவரது உரைநடை தெளிந்த நீரோட்டம் போன்றது. 'இங்கிலாண்டு தேச சரித்திரம்' என்னும் சிறந்த வரலாற்று நூலை இவர் எழுதியுள் ளார். 'பிரித்தனில் உரோமர் ஆளுகை செய்தது' என் னும் பகுதியில் சில வரிகளைப் பார்ப்போம்.

''நாள்வட்டத்தில் உரோமை இராச்சியத்திற் பலவகை யான கலகங்களும் கலக்கங்களும் உண்டானதால், தங்கள்

சொந்த தேசத்தைக் காப்பாற்றும் பொருட்டுப் பிரித்தனி லிருந்து தங்கள் சேனைகளையெல்லாம் உரோமர் அழைப்பிக்க வேண்டியதாயிருந்தது. ஆகிலும், உரோமர் அத்தீவை அர சாண்ட காலத்திற் பிரித்தனியருடைய சௌரியம் மெத்தவும் குறைந்து போனதுமல்லாமல் அவர்களுடைய வாலிபரில் அநேகர் உரோமருடைய தண்டுகளில் சேர்ந்து அன்னிய தேசங்களில் யுத்தம் பண்ணப் போயிருந்தார்கள். ஆதலால் உரோமர் அத்தேசத்தை விட்டு நீங்கியபின் பிரித்தன் தீவின் வடபாகத்திலிருந்து பிக்தியரும், (Picts) ஸ்கொத்தியரும் (Scots) அங்கே கட்டியிருக்கிற ஆவரணங்களைக் கடந்து தேச மெங்கும் கொள்ளையிட வந்த சமயத்தில் இவர்களை எதிர்ப்ப தற்குப் பிரித்தன்னியருக்குப் பலமில்லை, தைரியமில்லை"

போப் அவர்களின் இங்கிலாண்டு தேச சரித்திரத் தைப் படிக்கும் இன்றைய மக்களும் அதைப்போலத் தெளிவான குழப்பமற்ற இங்கிலாந்து நாட்டு வர லாறு தற்போதும் வரவில்லை எனத் துணிந்து கூறு வர். இதுவே தமிழில் வெளிவந்த முதல் இங்கிலாந்து வரலாறு எனக் கருதப்பெறுகிறது.

## தமிழர் வளர்த்த உரை நடை

ஐரோப்பியர் உரைநடை நூல்கள் எழுதி அதை உயிர்ப்பித்தனர். அவர்கள் கொணர்ந்து அறிமுகப் படுத்திய அச்சுப்பொறி உரைநடையின் வளர்ச்சிக்குப் பெருந்துணை புரிந்தது. தமிழ்ப்புலமை பெருத சாதா ரண மக்கள் கவிதைகளைப் புதிர் என்று கருதிக்கொண் டிருந்ததால், உரைநடையை விரும்பினர். எழுவாய் பயனிலைகள் எங்கே உள்ளன என்று தேடவேண்டிய அவசியம் உரைநடையில் இல்லை. அவர்கள் செய்யு ளைச் சற்றே ஒதுக்கி வைத்து விட்டு உரைநடையை

அணைத்து மகிழ்ந்தனர். அதனால் இம்மென்னும் முன னம் இருநூறு கவிபாடும் திறன்பெற்ற புலவர்களும் உரைநடை எழுதத் துவங்கினர். பத்தொன்பதாம் நூற்றாண்டுத் தமிழ்ப்புலவர்களுள் பலர் உரைநடை எழுதினர். இவ்வாறு உரைநடை, கவிஞர்களையும் ஆட்கொண்டது. தரமான உரைநடை எழுதியவர்களுள் குறிப்பிடத் தக்கவர்கள் சிவஞான முனிவர், இராம லிங்க சுவாமிகள், ஆறுமுக நாவலர்.

**"ஆன்மா வாணவ மலத்தைப் பிடித்தான்; அதுகன்மத் திலே விருப்பத்தைக் கொடுத்தது, என்றார். ஆன்மா வாணவ மலத்தைப் பிடிப்பானாகிற் பின்னொருகால் விடுவதுஞ் செய் குவன்; அதற்கொரு கர்த்தா வேண்டுவதில்லை. ஒருவனின் புளதைப் பிடிப்பானொழியத் துன்புளதைப் பிடியான்: அன்றியும் மலத்தைப் பிடித்தவன் சிவத்தையும் பிடிப்பா னென்றுசொல்லவும் வரும்; ஆன்மா மலத்தைப் பிடிப்பதற்கு முன் என்னாகவிருந்தானென்று கேட்கவும் வரும்"**

இப்பகுதி சிவஞான முனிவர் எழுதிய 'சிந்தாந்த மரபு கண்டன கண்டனம்' என்னும் நூலிலிருந்து எடுக்கப்பட்டது. சீரிய புலமைமிக்க சிவஞான முனி வரின் தமிழ் நடை வட சொற்கள் நிறைந்ததாகக் காணப்படுகிறது. சமய தத்துவங்களை விளக்குவதே இதற்குக் காரணம் எனலாம்.

**இராமலிங்கர் உரைநடை:** இராமலிங்க சுவாமிகள் கவிதைகளை நிறைய இயற்றினாலும் உரைநடைக்குத் தொண்டாற்ற மறக்கவில்லை. 'மனுமுறை கண்ட வாச கம்', 'ஜீவகாருண்ய ஒழுக்கம்' என்ற உரைநடை நூல் களை இவர் எழுதியுள்ளார். இவற்றைத் தவிர பல உரைநடைக் குறிப்புகள், கட்டுரைகள் வரைந்துள்ளார். இவர் நூலுள் மனுமுறை கண்ட வாசகம் சிறந்தது.

காஞ்சிபுர மகாவித்துவான் சபாபதி முதலியார் அவர்கள் சிறுவர்கள் படிக்கத்தக்க நூல் ஒன்று எழுதுமாறு இராமலிங்கரிடம் கூறினர். அதற்கிணங்க எழுதப் பட்டதே இந்நூல். இந்நூலின் சொற்றொடர் நீண்டதாய் இருக்கிறது என்பர் சிலர். எனினும், சிறுசிறு சொற்றொடர்களும் இந்நூலில் உண்டு. அப்படிப்பட்ட ஒரு பகுதியே பின் வருவது:

**“ இந்தக்கன்று எங்கே பிறந்ததோ? எங்கே வளர்ந்ததோ? எங்கே போக எண்ணியதோ? இங்கே வந்து இறக்க நேரிட்டதே! சுந்தரமுள்ள இக்கன்று இறந்ததைக் கண்டு எனக்கே இவ்வளவு துக்கமுண்டாயிருக்கிறதே. இதை ஈன்ற தாய்ப் பசு கண்டால் என்ன பாடுபடுமோ? இச்செய்தியை என் பிதாவானவர் கேட்பாரானல் ஏதாய் முடியுமோ?”**

**ஆறுமுக நாவலர் உரைநடை:** இராமலிங்கரின் சம காலத்தவர் நாவலர். இவர் சிறுவர்க்கும் பெரியோருக்குமாகப் பல உரைநடை நூல்கள் இயற்றியருளினர். இவருடைய நடையில் ஆங்கிலச் சொற்களும் கலந்திருப்பதைக் காணலாம். வடசொற்கள் நிறைந்த இவர் நடை பின்னர்ச் செந்தமிழ் நடையானது. இவர் இயற்றிய 'யாழ்ப்பாணச் சமய நிலே' என்னும் கட்டுரையின் ஒரு பகுதியை இங்குக் காண்போம்.

**“ சில காலத்துக்கு முன்னே கவர்ண்மெண்டார் இத்தேசத்திலே சில இங்கிலீசு பள்ளிக் கூடங்களேத் தாபித்துச் சில வருஷம் நடத்தினர். அவைகளிலே கிறிஸ்துசமய புத்தகமொன்றும் படிப்பிக்கப்பட வில்லே. அநேக சைவசமயப் பிள்ளேகளெல்லாரும் விபூதி தரித்துக் கொண்டே படித்து வந்தார்கள். அதைக் கண்ட பாதிரிமார்கள், கவர்ண்மெண்டுப் பள்ளிக் கூடங்கள் நிலேபெற்றுல் தங்கள் கருத்து வாய்க்காது என்று நினேத்து இங்கிருந்த துரைமாரைத் தங்கள் வசப்படுத்**

திக் கவர்ண்மெண்டுக்கு வேறு நியாயங் காட்டி எழுதுவித்து, அப்பள்ளிக்கூடங்களை எடுப்பித்துவிட்டு, அவைகளுக்குக் கவர்ண்மெண்டார் செலவழிக்கும் பணத்தைத் தங்கள் பள்ளிக் கூடங்களுக்கு ஆக்குவித்துக் கொண்டு, அநீதியாகிய தங்கள் கருத்தையே நிறைவேற்றிக் கையாண்டு வருகிறுர்கள்'' *

—யாழ்ப்பாணச் சமயநிலை

## இருபதாம் நூற்றுண்டு உரைநடை

பத்தொன்பதாம் நூற்றுண்டில் பண்படுத்தப்பட்ட உரைநடை இருபதாம் நூற்றுண்டில் செழித்து வளர்ந்திருக்கும் ஈன்று எதிர்பார்ப்பது இயற்கையே. ஆனல் இராமலிங்கரும் நாவலரும் வளர்த்த நல்ல தமிழ் நடையின் தரம் இந்நூற்றுண்டில் குன்றியது. வடமொழிச் சொற்களுடன் ஆங்கிலச் சொற்களையும் பேரளவு கலந்து சிலர் எழுதினர். சிலர் பேசுவது போன்றே கொச்சைத் தமிழில் எழுதினர். ஒரு புதுமையான மணிப்பிரவாளம் மீண்டும் வந்து விடுமோ என்ற நிலை எழுந்தது. அப்போதுதான் மறைமலையடிகள் தனித் தமிழ் இயக்கம் தொடங்கினுர். தூய தமிழில் எழுதினுர். தமிழல்லாத சொல் ஒன்றேனும் இடம்பெருவாறு எழுதினுர். முன்னர் எழுதியவற்றில் இடம்பெற்ற பிறமொழிச் சொற்களைக் களைந்தெறியவும் அவர் தயங்கவில்லை. இதனைத் தமிழ்வெறி என்றும் குறுகிய நோக்கம் என்றும் குறை கூறியோர் உண்டு. மறைமலையடிகளின் 'தமிழ் வெறி'யும் 'குறுகிய நோக்கமு'மே இன்று ஓரளவாவது நல்ல தமிழ்நடை வழக்கிலிருப்பதற்குக் காரணமாம். முற்றிலும் தனித் தமிழ்நடை என்று அவர் துவங்கிய

* ஆறுமுக நாவலர் பிரபந்தத் திரட்டு — முதற்பாகம்.

பணி, கூடியவரையிலாவது தமிழில் எழுதவேண்டும் என்ற உணர்வையும், பிறமொழிச் சொற்களைப் பேரளவு கலப்போர் வெட்கும் சூழ்நிலையையும் உண்டாக்கியது. மறைமலையடிகளின் தனித்தமிழ் நடைக்கு இதோ ஓர் எடுத்துக்காட்டு:

"வளைந்து வளைந்து ஓடும் எண்ணிறந்த கான்யாறுகளாலும் தெளிந்த அருவியோட்டங்களாலும் நீர் ஊட்டப்படும் பூக்கள் நிறைந்த வெளிநிலங்களும், இனிப்பான பழங்கள் நிறைந்த தோப்புகளால் மூடப்பட்ட மேட்டு நிலங்களும், காட்சிக்கு மிக இனிய பசும்புல் செழிப்பாய் வளர்ந்திருக்கும் பள்ளத்தாக்கான நிலங்களும், படைகள் செல்வதற்கு இசையாமல் இடர்பயப்பனவாயிருந்தாலும் அமைதியாக வழி நடைப் பயணம் போகின்றவர்களுக்குப் பெரு மகிழ்ச்சி தருகின்ற மலைகளின் இடையிலுள்ள இடுக்கு வழிகளும், வானில் மீன்கள் விளங்குதல் போலப் பல்லாயிரம் பூக்களால் அழகுறுத்தப்பட்டிருக்கும் மென்புனல் வளர்ந்து உயர்ந்த பொற்றைகளும், பஞ்சு, சணல், நார்ப்பட்டு முதலியன மண்டி வளர்ந்து காற்றால் அலையுங் கொல்லைகளும் ஆங்காங்குக் காணப்படுகின்றன."

—குமுதவல்லி அல்லது நாகநாட்டரசி

மறைமலையடிகளின் காலத்திலும், அவருக்குப் பின்பும் வாழ்ந்து மறைந்தோரில் உரைநடைக்குப் பணியாற்றிய பெருமக்கள் பலராவர். அவர்களுள் சிலர் திரு. வி. க., பண்டிதமணி கதிரேசஞ் செட்டியார், சோமசுந்தர பாரதியார், தி. செல்வகேசவராய முதலியார், ந. சி. கந்தையா பிள்ளை, ந. மு. வேங்கடசாமி நாட்டார், நீலாம்பிகை அம்மையார், ஈ. த. ராஜேசுவரி அம்மையார், கா. சு. பிள்ளை, மு. இராகவய்யங்கார், இரா. இராகவய்யங்கார், சதாசிவப் பண்டாரத்தார்,

உ. வே. சாமிநாத ஐயர், வையாபுரிப் பிள்ளை, வ. ரா, ரா. பி. சேதுப்பிள்ளை முதலியோராவர்.

இன்று நல்ல உரைநடையை வழங்குவோர் எண்ணற்றவர் உள்ளனர். அவர்தம் உரைகளைக் கூறின் பெருகுமாதலின், உரைநடையாளரின் பெயர்களை மட்டும் இங்கே காண்போம்: தேவநேயப் பாவாணர், வெ. சாமிநாத சர்மா, அழகரடிகள் (இளவழகனார்), ஜெகவீரபாண்டியன், இராஜாஜி, மயிலை. சீனி. வேங்கடசாமி, கா. அப்பாத்துரை, அ. சிதம்பரநாதன், ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை, ம. பொ. சி., தெ. பொ. மீ., மு. வ., மா. இராசமாணிக்கம், வி. ஆர். எம். செட்டியார், சோமலெ, அ. மு. பரமசிவானந்தம்.

உரைநடை வளர்ச்சியுற்றதால், பொருளியல், மருத்துவம், அரசியல், வரலாறு, அறிவியல் முதலிய பல துறைகளிலும் நூல்கள் வெளிவந்துள்ளன. 'தமிழ் வெளியீட்டுக் கழகம்' இத்தகைய நூல்களை வெளியிட்டுள்ளது. இந்நூற்றாண்டின் முற்பகுதியில் தனித் தமிழ் நடைக்கும், பிறமொழிச் சொற்களும் கொச்சைச் சொற்களும் கலந்த ஒருவிதக் கலப்பு நடைக்கும் போர் மூண்டது. இரண்டும் வெற்றிபெறவில்லை. ஆனால் இவ்விரண்டிற்கும் இடைப்பட்ட ஒரு தமிழ் நடை தோன்றியது. பெரும்பாலோர் அந்த நடையில் தான் எழுதுகிறார்கள். ஆனால் அந்த நடையும் சிறிது சிறிதாகத் தனித்தமிழ் நடையை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறது என்பதில் ஐயமில்லை. நறுந்தமிழ் கமழும் இன்றைய உரை நடைக்கு எடுத்துக் காட்டாக டாக்டர் மு. வரதராசன் எழுதிய 'அறமும் அரசியலும்' என்னும் நூலிலிருந்து ஒரு பகுதியை இங்கே தருகிறோம்.

"புகைவண்டியில் ஏறுங்கள்; ஆனால் எங்கே போக வேண்டும் என்று சொல்லும் உரிமை உங்களுக்கு இல்லை; வண்டி ஓட்டும் உரிமையும் உங்களுக்கு இல்லை" என்று சொல்வதே முடியாட்சி முறையாகும்; அதுவே தடியாட்சி முறையுமாகும்.

"புகைவண்டியில் ஏறும் உரிமை உங்களுக்கு உண்டு; எங்கே போகவேண்டும் என்று முடிவு செய்யும் உரிமையும் உங்களுக்கு உண்டு; இன்னார் ஓட்டவேண்டும் என்று தேர்ந்தெடுக்கும் உரிமையும் உங்களுக்கு உண்டு" என்றுசொல்வதே குடியாட்சி முறை.

ஆனால் இந்த இரண்டும் கெட்டஒரு முறையே இப்போது பல நாடுகளிலும் வாழ்கின்றது"

தென்றலாய்க் குளிரும் தேனாய் இனிக்கும், பசுமரத்தாணியாய்ப் படிப்போர் உள்ளத்தில் பதியும் பைந்தமிழ் நடை இன்று உருவாகிறது; இனி இந்நன்னடை உயருமே தவிரத் தாழாது!



# பிழை திருத்தம்

| பக்க எண் | வரி எண் | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 110 | 29 | குறள் வென்பா | குறள் வெண்பா |
| 149 | 3 | செம்பையர்கோன் | சென்பையர்கோன் |
| ,, | 22 | சௌந்தரியலகிரி | சௌந்தரியலகரி |
| 151 | 2 | திருவாதலூர் | திருவாமூர் |
| 154 | 7 | தில்லைப்பதியில் | திருவாரூரில் |
| 177 | 22 | நிகந்திருக்க | நிகழ்ந்திருக்க |
| 179 | 23 | திருப்பாவை | திருவெம்பாவை |
| 188 | 16 | அட்டமுக்கி | அரட்டமுக்கி |
| 293 | 7 | பலபெருள் | பலபொருள் |